# பொருளடக்கம்

# மூன்று ஆண்டுகள் முடிந்தன !

உலகம் இருண்டு மூன்றாண்டுகளாகிவிட்டன. நாலாவதாண்டு ஆரம்பமாகிறது! இந்த ஆண்டாகிலும், விமோசனம் கிடைக்குமா! உலகம் போர்க்களமாகி 3 ஆண்டுகளாகி விட்டன. அமைதியும் சாந்தியும் இந்த ஆண்டின் அறுவடையாக இருக்குமா! உலகம், ரணவளக்காளியின் கூத்து மேடையாகி, கோரக் கொலைக்களமாகி, சித்திரவதைக்கு ஆளாகி, செந்நீர் ஆறுபுரளும் காடாகி, பிணக்குவியல் தொட்டியாகி, மூன்று ஆண்டுகள் முடிந்தன. இனியேனும் உலகம், மக்கள் வாழுமிடமாக வேண்டாமா! உலகில், கலை, கவிதை, காவியம், காதல், காட்சி அறிவு வளர்ச்சி, ஆராய்ச்சி, தொழில் வளர்ச்சி, வாணிபம், முன்னேற்றம், முதலியன வற்றுக்கு மூன்றாண்டுகளாகத் தடைகள், தளைகள் ஏற்பட்டுவிட்டன. உலகு, நாலாவது ஆண்டிலாகிலும் விடுதலைபெற வேண்டும்.

போர்! பயங்கரம்! திகில்! திகைப்பு! மக்கள் மாள்வது! மணிபுரிகள் மண்மேடாவது, குடும்பம் குலைவது! குலை நடுக்கம்! கூக்குரல்! கோரம்! இவையே, மூன்றாண்டுகளாக உலகினரின் செவியைத் துளைத்து வந்தன! ஆனந்தகீதம், உலகினரின் செவிபுக, இந்த ஆண்டாகிலும், வசதி கிடைக்கவேண்டும்.

காளைகள் களத்தில், கன்னியர் தொழிற்சாலையில், கிழவர் வீட்டில், விண்ணிலே குண்டுபொழியும் விமானம், வீதிகளிலே பீதி, மன்னர் மாளிகை முதல் பாட்டாளியின் குடில்வரையிலே பதைப்பு, தூக்கமிழந்து, துயரில் உழன்று, ஏக்கத்தால் தாக்கப்பட்டு, உலகம் மூன்றாண்டுகளாக அவதிப்பட்டுவருகிறது. போதாதா இந்தக் கொடுமை! இன்னும் எத்தனை நாட்கள் உலகில் இருள் சூழந்திருப்பது. வெற்றி ஒளி இவ்வாண்டாகிலும் வீசவேண்டும்.

பணிந்த பிரான்சு, பிடிபட்ட பெல்ஜியம், நொந்த நார்வே, திடுக்கிட்ட டென்மார்க், சித்திரவதைக்காளான செக்கோ, பொசுக்கப்பட்ட போலந்து, கருகிய கிரீட், காடாக்கப்பட்ட கிரீஸ், பயந்த பல்கேரியா, பிணைபட்ட பின்லாந்து, யுக்தியை இழந்த யுகோஸ்லேவியா, ரணகள ரஷியா - இவ்வளவையும் கொத்தித் தின்று ஏப்பமிட எண்ணும் வெறிகொண்ட ஜெர்மனி,

அதற்கு வெள்ளாட்டியாகிய இத்தாலி, சாமரம் வீசும் ஸ்பெயின் - இது ஐரோப்பா கண்டத்தின் காட்சி இன்று! சுற்றிலும் களமிருப்பினும், சுடுசொல் பாயினும், சுதந்திரச்சுடர் ஒளியுடன், ஸ்வீடன், ஸ்விட்ஜர்லாந்து, துருக்கி, ஆகியவைகள் மட்டுமே, களம்புகாது உள்ளன! பாலைவனத்து நீரோடைகள்!!

வார்கா, ராட்டர்டாம், இவை நகரங்களின் பெயர் மட்டுமல்ல! நாஜியின் நாசம் எத்தன்மையது என்பதை விளக்கும் உருவங்கள்!!

கவண்ட்ரீ, இலண்டன், பிரிட்டிஷ் நகரங்களாக மட்டுமில்லை இன்று. நாஜித்தாக்குதல் எனும் தணலில் வெந்த தங்கக் கோட்டைகளாக விளங்குகின்றன.

டோவர், பிரிட்டிஷ் துறைமுகமாக மட்டுமில்லை இன்று - 21 மைலுக்கு அப்பால் உள்ள எதிரியை, ஜெர்மன் படைகளை, நோக்கிச் சிரித்துக் கொண்டிருக்கும் வீரர் கோட்டமாக விளங்குகிறது!

விச்சி, ஒரு நகரின் பெயரன்று இன்று, நாடி நடுங்குபவரின் நயவஞ்சகக் கூடமாக இருக்கிறது.

பெட்டெயின், ஒரு நாட்டுப் பரிபாலன கர்த்தாவின் பெயரன்று, வயோதிகத்தால் வளைந்து, சுயநலத்தால் சோர்ந்து, சோரம் செய்தேனும் வாழவேண்டுமென்ற சொரணை கெட்ட தனத்துக்கு, சுருக்கமான பெயராக விளங்குகிறது.

லவால் ஓர் ஆண்மை யாளனின் பெயராக இன்று இல்லை. அதிகாரலாகிரியால் மதிமயங்கி, மக்களைக் கூளமாகக் கருதும் கோணற்குணங் கொண்டோனின் பெயராகிவிட்டது.

குவிஸ்லிங் குவலயமெங்கும், குடிகெடுக்கும் குணத்தான், நாட்டைவிற்று எதிரியை நத்திப்பிழைக்கும் நாசகாலன், என்பதைக் குறிக்கும் சொல்!

ஐரோப்பா கண்டம், இன்று, கோரக்காட்சியும், கோணற்குணங் கொண்டோரின் கூத்தும் நிறைந்த கொட்டகையாகி விட்டது. மூன்று ஆண்டுகளாகிவிட்டன, இத்தகைய இழிவைத்துடைக்க, பிரிட்டன் கிளம்பி! நாலாவதாண்டு பிறந்தது! நாசம் நின்று, பழிக்குப்பழி,

இரத்தத்திற்கு இரத்தம் என்னும் தத்துவம் வென்று, உலகு, மீண்டும் உல்லாசத்தைப் பெற வேண்டும்.

1939ம் ஆண்டு, செப்டம்பர் 3ந்தேதி, மாலை 4-45க்கு, பிரிட்டன், ஜெர்மனிமீது போர் தொடுத்தது. மூன்று ஆண்டுகளாக, பிரிட்டனுக்கு இருந்து வந்த இடுக்கணும் இடையூறும் அளவிட்டுரைக்க முடியாததாகும்.

கடலிலே கப்பல்கள் மூழ்கடிக்கப்பட்டன, நகரங்கள் குண்டுமாரியால் நாசமாயின, டன்கர்க் முதலிய சம்பவங்கள் நேரிட்டன, கிரீட் தீவை இழந்திட நேரிட்டது. ஆப்பிரிக்காவிலே அலைச்சல், டோப்ரூக்வரை மீண்டும் எதிரிவசமாகிவிட்டது. மால்ட்டா தீவின்மீது, மட்டற்ற வஞ்சம் வைத்து, எதிரிகள் குண்டு பொழிந்தவண்ணம் இருக்கின்றனர். ஜிப்ரால்டர்மீது எதிரிக்கு நாட்டமிருக்கிறது. ஈஜிப்ட்டை பிடித்து, சூயசைச் சூறையாடிட சுவஸ்திகக் கொடியோனுக்கு எண்ணமிருக்கிறது. அதுமட்டுமா? இந்தியாவை விழுங்கவும், நீர் ஊறும் வாயுடன் நிற்கிறான்.

அவனது கிழக்கத்திக் கூட்டாளி ஜப்பான், மலாய், சிங்கப்பூர், பர்மா, அந்தமான், ஆகிய இடங்களைப் பிடித்துக்கொண்டு, சீனாவிலே சித்திரவதை செய்து, வருகிறான், சிலோனைத் தாக்கினான், விசாகையிலும் குண்டுகளை வீசினான், வங்கக்கடலைக் கலக்கினான், வங்காளத்தின் எல்லையிலே அவனது வாடை இன்றும் வீசியபடி இருக்கிறது.

6.9.1942

# தூது நீ சொல்லி வாராய் !

``தூது நீ சொல்லி வாராய்- பெண்ணே

குற்றாலா முன்போய்த் தூது நீ சொல்லி வாராய்!

ஆதி நாட் - சுந்தரர்க்குத் தூது போனவர் முன்னே (தூதுநீ)

வந்தாலிந்நேரம் வரச்சொல்லு- வராதிருந்தால்

மாலையாகினும் வாச...- நுற்றலாதம்..

கந்தாலென நொஞ்சைத் தரச்சொல்லு- தராதிருந்தால்

தான் பெண்ணாவிய, பெண்ணை நானாவிடேனென்று (தூது)

``கன்னியரென்ன, கல்லுங்கரையுமே, `நான் சொல்லி வருவேன் தூது என்று முன் வருமே! என்ன இனிமை! எவ்வளவு உருக்கம்! என்ன எழில்! தேசிகரின் தீந்தமிழ் இசையின் திறனைக் கேட்ட பிறகும், தமிழிலே இசை தகுமோ, கூடுமோ என்று பேசுவோரும் கிளம்ப முடியுமோ'' என்றனர் தமிழர் அன்று. குயில், சோலையின் ரம்மியத்தைக் கண்டால் கூவுமாம்! மேகத்தின் மனோதாங்கண்டு மயில் ஆடுமாம்! அன்று தேசிகர் சோலைக் குயிலானார்! தமிழர் சோலை! முகமெலாம் மலர்கள்! விழியெலாம் ஒளிதான்! பேச்சும், மூச்சும் தமிழ் மயம், தமிழ் மணம் கமழும், திருநாளன்று, ``நாளைப் போகமலிருப்பேனோ'' என்றாறாமே கந்தன், அந்த வேடத்தில், தமிழ் நாட்டவரை விரைவில் மகிழ்விக்கப் போகும் (நந்தனார்- தமிழ்ப் படக் காட்சி மூலம்) பண்பாட்டை பணி தேசிகர் அவர்கள் குற்றாலக் குறவஞ்சியிலிருந்து மேலே தந்த பாடலை மணிரங்கில் மதுரமாகிப் பாடி, மக்களை மகிழ்வித்தார். ``இவ்வாறு இனிமையான தமிழ்! இசைக்குப் பொருத்தமானதப்பா இனிய தமிழ்! என்பதைத் எடுத்துப் பொழிந்த பின்னர், தாங்கள் தமிழ் மொழி கற்கண்டு! என்று உரிமையோடு, உள்ள எழுச்சியோடு, உவகை யோடு, உற்றார் முன் உள்ளோம் என்ற உணர்ச்சி யோடு, வாழுமிடம் தமிழுலகம் என்ற பூரிப்போடு பக்கத்திலே வீற்றிருப்பவர், தமிழர் தலைவர் பெரியார் என்ற பெருமைகளை உணர்ந்து உற்சாகங் கொண்டு, ஆடும் சிரமமும், பாடும் பார்வையுங்கொண்ட மலர் முகச் சோலை, மதிவளர்ச் சாலையா? கலைக் கோயில்... எண்ண மும் தோன்றிட்ட மன்றத்திலே பாடுகிறோம் என்ற பரிவுடன், தேசிகர் பாடினார்.

குற்றால நாதருக்குத் தூது கூறினார்களோ இல்லையோ நானறியேன், பக்திப் பிரபாவ விஷயத்தைத் தெரியேன், ஆனால் தூது சொல்லி வரப் பெண்கள் மட்டுமா, ஆண்களும் கூட அன்று சித்தமாயிருந்தனர். குற்றாலத்தாரிடமல்ல, தமிழ் நாட்டிடம், மாலை தரச் சொல்லியவல தமிழரின் செங்கோலை!

தமிழரிடம் செங்கோல் இருந்த காலையில், என்னென்ன எழில்கள் இருந்திருக்குமென் பதற்கு எடுத்துக்காட்டாக இருந்தன, காட்சிகள், காஞ்சியில்.

முவேந்தர் மும்முரசு கொட்டி முத்தமிழ் வளர்ந்த காலையிலே, தேசிகரைப் போன்ற இசை அரசுகளே, மன்றங்களிலே இருந்திருக்க முடியும்! எங்கள் தமிழ் கற்கண்டு, என்று மார் தட்டிக் கூறி இருக்க முடியும். ``இன்பத் தமிழின் வெள்ளத்திலே, நீந்தி விளையாடித் தமிழர் வாழ்ந்த நாள் ஒன்றுண்டு! அந்த வாழ்வு இன்று இல்லை! நாளை வாராது போனால் தந்தால் அவ்வாழ்வைத் தரச் சொல்லு தராவிட்டால் மீளாத் துக்கம் மேலும் தரச் சொல்லு என்று தமிழர் யாவரும் கேட்டுக்கொள்ளும் நாள் இது.

* * *

நான் இசைவாணனல்ல; தமிழன்! தமிழ் வெறும் பேச்சு மொழியல்ல, பாட்டு மொழி! எனவே இசைவாணராக இராது போயினும் தமிழர், பாடலின் ரசத்தைப் பருகிட முடியும்! பாடலின் ரசம், தமிழின் (சுவையாக) இருக்க வேண்டுமானால், தமிழ் (தமிழ் மொழி) வேண்டும். தமிழைத் தமிழிலே தமிழர் முன்னிலையில் தமிழ் மணமன்றத்தில் தமிழர் தந்தார். தேசிகரின் இசையைக் கேட்டு இன்பத்தன்றோ இசை அரசே! என்று அன்பு ததும்ப அன்று சென்னை கோகலே மண்டபத்திலே நமது செல்வம் அழைத்தான். அந்த `இசை அரசு'வின் இனிய தமிழ் இசையை நமது மாகாணத்தின் பற்பல பாகங்களிலிருந்து வந்த தமிழர்கள் கேட்டுக் களித்தனர். கானம், காட்சி, கருத்துரை, கனிவு இவ்வளவும் பெற்று மகிழ்ந்த தோழர்களை பார்த்து தான் நான் சொல்லுகிறேன். தூது சொல்லி வாரீர் என்று. வாராதிருந்தோருக்கு, வந்திருந் தோர்

சொல்லுங்கள், தமிழ் வளர்ச்சி கொள்ளுங்கள், மற்றதைத் தள்ளுங்கள், தடை நீக்கிடுங்கள், வாகை சூடுங்கள் என்று கூறுகிறேன். தங்க வேலரை நான் தருணமறியும் தங்கவேலர் என்று அழைத்திருக்கிறேன் ஒரு முறை, கனிவுடன் மட்டுமல்ல, காரணத்தோடு. அதை உறுதிப் படுத்தி விட்டார் இப்போது.

வெப்பம் வாட்டும்போது, குளிர்ச்சியான காற்று வீசப் பெற்றால் மீனம் குளிர்வது போல், சுருதியில் சேராக் கீதம் காதைக் குடைந்து கெடுத்த காலை குழல் ஓசை கிளம்பி செவிக்கும், சிந்தனைக்கும் செந்தேனைப் பெய்வது போல, வறியருக்கு வாழ்வுப் பசை கிடைத்திடும் வகை தோன்றுவது போல், தண்டவாளப் பெயர்த் தெடுப்பு, பாதை அடைப்பு, தீமுட்டுந் திருவிழா, தெருக் கலகம், வீணாட்டம் ஆகிய காரியங்கள் நடைபெறுவது கேட்டுக் கேட்டு நொந்த உள்ளத்துக்கு, இரண்டு நாட்கள், இனிய தமிழ் மணம் கிடைக்கச் செய்தார் தருணமறிந்து. தனது செல்வக் குமாரனுக்குத் திருமணம், அது தமிழ் முறையாகச் செய்து தமிழ் மணம் கமழ்ந்து தமிழர் மனமெலாம் பூரித்திட வழி செய்தார். தருணமறிந்து செய்தவர், தமிழ் இசையின் சுவையறிந்துதான் தேசிகரை அழைத்திருந்தார். இசை விருந்து அளிக்கவாரீர் என்று.

தமிழர் தளபதி தோழர் ஏ.கே.தங்க வேலரின் புதல்வர் தோழர் சாம்பசிவத்திற்கும், தோழியர் மங்கையர்க்கரசியாருக்கும் தமிழ்த் திருமணம் காஞ்சிபுரத்தில் மிக விமரிசையாக, ஞாயிற்றுக் கிழமை காலை 8.30 மணிக்கு, காஞ்சிபுரம் கோட்ராமபாளையம் கந்தன் இல்லத்தில் நடந்தேறியது.

அன்னாளிரவே, வெளியூர்களிலிருந்து தமிழர் சங்கத் தலைவர்களும், தோழர்களும் வந்து சேர்ந்து, வெளியூர் அன்பர்களுக்கென இருந்த விடுதிகளில் தங்க வைத்து உபசரிக்கப் படடனர். முகமும் மனமும் மலர, விருந்தினர்கள் ஏராளமாகக் கூடினர்.

ஞாயிறன்று காலையில், கதிரோனும், தமிழரும் கண் மலர, தோழர் சக்திவேல் கோஷ்டி யினரின் பூபாளம் ஆரம்பித்தது.

மாஜி மந்திரி தோழர் எஸ்.முத்தைய்யா முதலியார் சி.டி.இ. அவர்கள் தலைமையில், தமிழர் முறைப்படி திருமணம்

நடந்தேறியது. கந்தன் இல்லத்தினெதிரே போடப்பட்டிருந்த அலங்காரப் பந்தலில், மாகாணத்தின் பல பாகங்களிலுமிருந்து வந்த தோழர்களும், தாய் மார்களும் குதுகலத்துடன் வீற்றிருந்தனர். உள்ளூர் பிரமுகர்களும், தாய்மார்களும் சந்தோஷத்துடன் திருமணத் தம்பதிகளை வாழ்த்தலாயினர்.

தலைவர் முத்தைய்யா முதலியார், தமிழறிஞர் திருஞான சம்பந்தனார், பெரியார், அண்ணாத்துரை ஆகியோர் மணமக்களை வாழ்த்தியும், திருமணம் தமிழ் முறையில், பார்ப்பனரை நீக்கி நடத்தப்பட்டதைப் பாராட்டி யும், சொல்லும், செயலும் ஒத்து விளங்கும் தங்கவேலரின் அருங்குணங்களைப் போற்றியும் சொற்பொழிவுகள் நிகழ்த்தினர்.

கந்த விலாசு ஜவுளி கடையினர், வாலாஜா பாத் இந்து மத பாட சாலையினர், மற்றும் பல கழகங்கள் சார்பாக மணமக்களுக்கு வாழ்த்துப் பத்திரங்கள் வாசித்தளிக்கப்பட்டன. தோழர் தங்க வேலர், விருந்தினருக்கு வந்தனங் கூறினார்.

12 மணிக்கு விருந்து துவங்கிற்று. ஐந்தாறு இடங்களிலே விருந்து வசதிகள் செய்யப்பட்ட தால், வந்திருந்து ஏராளமான அன்பர்களுக்கு உபசாரம் குறையாது நடந்தது. சுமார் ஐயாயிரம் ஏழை மக்களுக்கும் உணவளிக்கப்பட்டது.

மாலை 5 மணிக்கு, ரயில் ரோடில், தோழர் தங்க வேலர் புதிதாகச் கட்டி, பொதுமக்களுக்கு இனாமாக வழங்கியுள்ள கந்தன் பூஞ்சோலைத் திறப்புவிழாவும், தங்கவேல் கழகம், தங்கவேலர் படத் திறப்பு விழாக்களும், சிறப்புற நடந்தேறின. வைபவத்திலே காஞ்சிபுரம் தோழர் கெங்காசுரம் இனிய இசை விருந்தளித்தார். நகர சபைக் கமிஷனர் தோழர் எஸ்.மீனாட்சி சுந்தரம் அவர்கள் தங்கவேல் கழகத்தைத் திறந்து வைத்து, தோழர் தங்கவேலரின் பொது நலத் தொண்டின் ஆர்வத்தைப் பாராட்டினார். பெரியார், தங்கவேலரின் குணாதிசயங்களையும், தமிழர் பணியாற்றும் திறனையும் விடுத்துரைத்து, தங்கவேலரின் உருவப் படத்தைத் திறந்து வைத்தார். இந்த விழாவிலும், ஏராளமான மக்கள் கலந்து கொண்டனர்.

இரவு 6.30 மணியிலிருந்து 9.30 மணி வரையிலே இன்பத் தமிழை, இசையை, இனிமையை, தென்றலை, தேனைப் பெய்து, தமிழரின்

உள்ளத்தை உருக்கினார். இசை அரசு தண்டபாணி தேசிகர். வீதியெங்கும் மக்கள் கூட்டம், விழிகளிப்புமயம், தமிழரின் உள்ளம் குளிர்ச்சி மயமாக இருந்தது, தேசிகரின் தீந்தமிழ் இசையால்.

பெரியார், தேசிகரைப் பாராட்டி, அவருடைய இசைத் திறனைப் புகழ்ந்து, தமிழ் இசையை அவர் ஆதரிக்கும் அன்பினைப் போற்றியுரைத்து விட்டு, தேசிகரைத் தமிழர், குறிப்பாகத் தமிழ் செல்வான் மகள் மேன்மேலும், ஆதரிக்க வேண்டுமென்று கேட்டுக் கொண்டு, தமிழ் இசை பற்றிய விளக்கமும் உரைத்தார். இரவு 10-மணிக்கு மேல், காஞ்சிபுரம் திருமதி சரஸ்வதி அம்மையாரின் கானம் நடந்தது.

திங்களன்று, தமிழரின் மற்றோர் திருநாள் காலை 9 மணிக்கு காஞ்சிபுரம் கண்ணன் டாக்கீஸில், திராவிட நாடு பிரிவினைக் கமிட்டிக் கூட்டம் தோழர் எஸ்.முத்தையா முதலியார் தலைமையில் நடந்தது. தலைவரும், பெரியார் டி.பி.வேதாசலம், ஏ.கே.தங்கவேலர், சி.என்.அண்ணாதுரை ஆகியோர் திராவிட நாடு பிரிவினை சம்பந்தமாக மேற்கொண்டு செய்ய வேண்டியதனைப் பற்றிப் பேசினர். பல தீர் மானங்கள் நிறைவேறின.

அடுத்த மாநாடு, டிசம்பரில், திருச்சியில் நடத்துவதென்றும், அதற்கு பிரபல முஸ்லீம் லீக் தலைவர்களை அழைப்பதென்றும் முடிவு செய்யப்பட்டது, தோழர் தங்கவேலரின் வந்த னேபாசாரத்துடன் 12 மணிக்குக் கமிட்டி கலைந்தது. விமரிசையான விருந்துக்குப் பிறகு, மாலை 4 மணியிலிருந்து 6 மணி வரை திருவாடு துறை, சக்திவேல் கோஷ்டியின் நாதஸ்வரக் கச்சேரி நடந்தது.

6.30 மணியிலிருந்து 9.30 மணி வரை, தமிழ் உலகின் இசை ஏறாக இருந்து, தொண்டை நாட்டின் தொல்சிறப்பை மற்றை நாட்டினருக்கு விளக்கி, விருதுபல பெற்று, சங்கீதச் சக்கரவர்த்தியாக விளங்கிய காஞ்சிபுரம் நயனாப் பிள்ளையின் குமாரர், இசைச் செல்வர், தோழர் ரத்தினசாமியின், இசை இன்பத்தில் ஏராளமான மக்கள் இன்புற்றனர். காஞ்சித் தோழர்கள் ராதா, சுந்தரேசன், முறையே பிடில், மிருதங்கம் வாசித்தனர்.

மூன்று நாட்களாக முத்தமிழ், முக்கனி, இனிமைக்கொப்ப, வைபவத்தில் கலந்திருந்தனர் தமிழர், களித்தனர், வாழ்த்தினர்.

திருமண வைபவத்தின்போது, வாலாஜா பாத் இந்து மத பாடசாலைக்குத் தோழர் தங்கவேலர் ஐம்பது ரூபாய் நன்கொடை வழங்கினார்.

எல்லா நிகழ்ச்சிகளுக்கும் ஒலிபெருக்கி ஏற்பாடாகி இருந்தது. மூன்று நாட்களும், காஞ்சி யிலே தமிழர் முரசே தழிழர் செவியில் கேட்ட வண்ணம் இருந்தது.

(திராவிட நாடு - 6.9.1942)

# இருட்டறையில் கண் சிமிட்டி !

அமெரிக்காவிலே, வாஷிங்டன் நகரிலே, முப்பத்தெட்டு நாட்டு மாணவர்களின் பிரதிநிதிகள் கூடிய மாநாட்டிலே, இந்திய மாணவர் பிரதிநிதியாகவும், காங்கிரஸ் வாதியாகவும் சென்றிருந்த சந்திரசேகரர் என்ற தோழர் இந்த மாதம் ஐந்தாம் தேதி பேசுகையிலே, "நான் பிரிட்டனின் நண்பன். பிரிட்டனை ஆதரிப்பவன். ஜெர்மன் ஆதிக்கத்தைவிட பிரிட்டிஷ் ஆதிக்கத்தின் கீழ் இந்தியா சுதந்திரம்பெற அதிக வசதியுண்டு. ஆனால், இந்தியாவிலுள்ள 39 கோடி மக்களுக்கு அவ்விஷயம் தெரியாது" என்று சொன்னாராம். வெளிநாட்டார் நம்மைப்பற்றி என்ன எண்ணிக்கொள்வார்கள்! நமது நாட்டுப் பெரும்பான்மையான மக்களுக்குள்ள அறிவுசூன்யத்தை, அமெரிக்காவிலே போய்ப் பேசுகிறார், ஒரு காங்கிரஸ்வாதி. 'எனக்குத் தெரியும் என் மக்கள் அறியார் என்றுரைக்கிறார்' நாட்டு மக்களுக்கு இந்த நல்லறிவு இல்லையே என்று நொந்து கொள்கிறாரோ, நையாண்டி செய்கிறாரோ நாமறியோம், ஆனால் வெளிநாட்டவர் பலர்கூடிய மாநாட்டிலே, நம் நாட்டவரைப்பற்றி ஏளனம் பிறக்கும் விதத்திலே பேசுவோரை, நாம், நாட்டுக்குரிய நண்பனென்று கருதிடோம். பிரிட்டிஷ் ஆட்சியின் கீழிருந்து சுயாட்சி பெறுவது சுலபம், ஜெர்மன் ஆட்சியிலே அது முடியாது என்பதை காங்கிரஸ் மாணவர் நம்புகிறாரே, மற்ற 39 கோடி மக்கள் அதனை நம்ப மறுக்கிறார்கள் என்றும் கூறுகிறாரே, ஏன் இவர், நாட்டு மக்கள் இதனை நம்பும்படி பிரசாரம் செய்யவில்லை என்று நாம் கேட்கிறோம். இதே கருத்தைக் கூறிடும் லீகினரை, ஜஸ்டிஸ்காரரை, நாக்கில் நரம்பின்றி திட்டுவதையே பாரதமாதாவின் திருப்பள்ளி யெழுச்சியென்று கருதும் நண்பர்களே! கேளுங்கள், ஒரு காங்கிரஸ்வாதி, கடல் கடந்துசென்று, நமது நாட்டு மக்களின் அறியாமைபற்றி அங்கு பேசுகிறார். ஆனால், இங்கு அந்த அறியாமையை வளர்க்கும் திருப்பணியையே சந்திர சேகரர்கள் சதாகாலமும் செய்து வருகிறார்கள். மக்களின் மடமையைப் போக்குவதைத் தம் கடமை என்று கருதும் அறிவுடமை பிறக்காதவர்கள் மக்களை அடிமை மனப்பான்மையோராக்கு கின்றனர், என்று நாம் கூறுவதில் தவறுண்டா, சொல்லுங்கள். தேசீயத்தின்பேரால், கடவுளின் பெயரால், சன்மார்க்கத்தின் பெயரால், தோழர் சந்திரசேகரர் குறிப்பிட்ட 39 கோடி மக்கள் மனதிலே புகுத்தப் பட்டுள்ள மூடக்கருத்துகளை என்னென்று விவரிப்பது! ஆபாசக் களஞ்சியம்! அஞ்ஞானப் பெட்டகம்! சூட்சிச்சூழலில் சிக்கியதாக வன்றோ மக்களின் மனம்

ஆக்கப்பட்டுவிட்டது. இதனைச் செய்தவர்களை, இதற்கு உடந்தையாக இருந்தவர்களை, இதற்குத் தத்துவார்த்தம் கூறமுற்பட்டு, தான் தோன்றிகளைத் தட்டிக் கொடுத்தவர்களை, ஆபாசம் தெரிந்தும் ஏனோ தானோவென்று இருந்தவர்களை இவர்களையே நாம், நாட்டைக் காட்டிக் கொடுத்தோர், நயவஞ்சகர், என்று கூசாது கூறுவோம். குன்றேறிச் சொல்வோம், குற்றுயிராக இருக்கும்போதுங் கூறுவோம், கொடியவர் இவரே என்போம். அவர்களுடன் பிறக்கநேரிட்டதை எண்ணி வெட்கத்தால் தலை குனிவோம்.

மக்களை, மாட்டுச்சாணத்தை மகத்துவமானது என்று நம்பும்படி செய்து, மடத்தனத்தை மதமெனக்கொண்டு மனமயக்கில் ஆழ்த்திய, கயவர்களின் கபடத்தை காலம் ஓரளவுக்கு வெளிப்படுத்திவிட்டது என்ற போதிலும், நாட்டு மக்களிலே பெரும்பான்மையினர், தெளிவு பெறவில்லை. நாட்டுத்தலைவர்கள், காட்டுத்தீயைக் கிளறிவிடுவதுபோல், வாலிபர் உள்ள எழுச்சியைக் கிளப்பிவிட்டு, ஓட்டு வேட்டைக்கு உபயோகித்துக் கொள்கின்றனரேயன்றி, இத்தகைய ஆபாசம் அழிந்துபட, மூடமதி முறியடிக்கப்பட்ட, வைதீகம் வீழ, இன்றுவரை, தமது சிறுவிரலை அசைத்தனரோ! வெள்ளையராட்சி ஏன்? வீண் செலவு ஏன்? கவர்னருக்குப் பங்களா ஏன்? கலெக்டருக்குக் கொள்ளைச் சம்பளம் ஏன்? என்று பேசிடும் கனல் கக்கிகள், வைதீகத்திற்கு இத்துணை திமிர் ஏன்? மடாதிபதிகளுக்கு ஊரை வளைத்துக்கட்டிய மாளிகை ஏன்? சங்கராச்சாரிக்கு பாதகாணிக்கையும் பரிவாரமும், பல்லக்கும் ஏன்? என்று கேட்டதுண்டா?

ஜாதித்திமிர் கூடாது என்று ஜப்பான் பிரசாரம் செய்கிறது. எனவே, பிரிட்டன், இந்திய ஜாதிக்கு அதிகாரத்தைத் தரவேண்டும் என்று இன்றும் மித்திரன் வாதாடுகிறதேயொழிய மனுமாந்தாதா காலமுதற்கொண்டு தன் இனத்தவர், சொந்தக்காரரை, நயவஞ்சகத்தால், நசுக்கியதுபற்றி ஒரு வார்த்தை கூறுமா! ஆங்கில ஆட்சி போய்விடவேண்டும் என்று ஆர்ப்பரிக்கிறதேயொழிய ஆரிய ஆதிக்கம் அழியவேண்டும் என்று கூறுகிறதா? இல்லை! கூறாது! கூறும் அளவு தெளிவு ஏற்படவில்லை என்று நாம் கூறோம். கூரிய மதி உண்டு மித்திரன் இனத்தவருக்கு! எனவே அவர்கள் மக்களின் கூன் உள்ளம் நிமிர்ந்துவிட்டால், தமது நிலை குலையும் என்பதை அறிந்தே வைதீகத்தை வளர்த்து வருகிறார்கள், போலி மார்க்கத்தைப் புகுத்துகிறார்கள், கோல்கொண்டோன் முன் நின்றாடும் குரங்குபோல் மக்கள் - நாம் - திராவிடர் ஆரியர்முன் அஞ்சிநின்று ஆடவேண்டும்

என்ற கருத்து, மித்திரன் இனத்தவருக்கு மெத்த உண்டு. அவர்களின் நித்திய கர்மானுஷ்டாமை இதற்கே நடைபெறுகிறது.

நாட்டு மக்களுக்கு, வெள்ளையராட்சியிலே விடுதலைக்கு மார்க்கமுண்டு என்பது தெரியவில்லை என்று கூறினாரே ஒரு விவேகி வாஷிங்டனிலே, அவரைக் கேட்க ஆசைப்படுகிறோம் அகப்பட்டால், நாட்டு மக்களுக்கு உலகம் உருண்டை என்பதும் தெரியாத அளவு அஞ்ஞானத்தை, ஆயிரந்தலைகொண்ட ஒரு பெரும் பாம்பு இந்தப் பூமியைத் தாங்குகிறது ஏன்? கட்டுக்கதையை, தேவரும் மூவரும் ஏதேதோ திருவிளையாடல்கள் புரிகிறார்கள் என்ற தீயகதையை புகுத்தியவரகள் யார் எதற்காகப் புகுத்தினர், என்பதையும் நம்மக்கள் அறியமாட்டார்கள்

13.9.1942

# பலி பீடத்திலே !

இருட்டறையிலே இருந்துழலு வோர்முன் விளக்கொளி காட்டுவது, விவேகமா, தீதா! நோய் கொண்டோருக்கு, மருந்தூட்டுவது முறையா, தவறா? சாந்ததால் உலகம் தழைக்கவேண்டு மென்றுரைப்பது அழகா, அநீதியா! மதஏடுகளிலே காணப்படும் ஆபாசங்களை எடுத்து விளக்கி, மணியின் மாசுபோகத் துடைப்பது போல், மார்க்க சம்பந்தமாக உள்ள மாசுகளை அறிவுக்கோல் கொண்டு துடைப்பது தானே கடமை? என்றெல்லாம் இன்று கேட்டால், “ஆம்! தடை என்ன? செய்யத்தான் வேண்டும். வைரம் ஜொலிக்க வேண்டுமானால் சாணை பிடிக்கத்தான் வேண்டும் வெட்டி எடுத்துச் சுத்தம் செய்து கனலிலிட்டுக் காய்ச்சி அடித்து எடுத்தால் மட்டுமே, தங்கம் தகதகவெனப் பிரகாசிக்கும்” என்று பலர், பதில் கூறுகூர், மனமாறக் கூறாவிடினும், வாயாற வாகிலும் கூறிடுவர். இந்த அளவு கேட்கும் உரிமையை உலகம் பெற்றது, வாயில்லாப் பூச்கிளாக பெரும் பான்மையினர் இருந்தபோது, வந்தது வரட்டும் என்று துணிந்து தண்டனைகளைக் கண்டு திடுக்கிடாது, தீயில் குதித்தேனும் தீட்டுவென் திருப்பாதை என்று தீரமாகப் புகன்றதாலேயே யாகும்.

ஆமாம், ஆபாசந்தான், அறிவுக்கு ஏற்றதாகவும் இல்லை வாதத்திற்கு நிற்காது, இருந்தாலும், ஆதிநாளிலே ஏற்பட்ட தாயிற்றே. பலப்பல காலமாக உண்மை என்று மக்கள் நம்புகின்றனரே அந்தக் கொள்கைகளைக் காப்பாற்றக் கட்டுப்பட்டுள்ள கோட்டைகள் பல உள்ளனவே அந்தக் கோட்டைகளைச் சுற்றிக்காவல் புரிவோர் அனேகர் உள்ளனரே அவர்களுக்குக் கேடயமாக அதிகாரம் இருக்கிறதே நாம் என்ன செய்ய முடியும்? என்று வாதிட்டு, சமாதானம் பெற்று, ஆமைகளாக இன்றும் பலர் இருப்பது போல, எல்லோருமே இருந்து விட்டிருந்தால், கருத்து வளர்ச்சி காட்டு மிராண்டிக் காலத்திலேயே இருந்திருக்குமன்றோ! மனதில் உண்மையெனக் கொண்ட கைக் கூறிடுவோம், அதைத்தடுக்க எத்தனை பட்டாளங்கள் கூட்டி வரப்பட்டாலும் பயங்கொள்ளோம், என்றுரைத்த வீரர்கள், அறிவுத்துறையிலே அவ்வப்போது கிளம்பியதால் மட்டுமே, அறிவு வளர்ச்சி இவ்வளவு கிடைத்தது! ஏர் உழுத பிறகுதானே விதை தூவமுடியும்! ஏர்உழுத ஏறுகள், பட்டகஷ்டம் கொஞ்சநஞ்சமல்ல!

நாத்தீகம் பேசினாலும், “அவன் தண்டிக்கட்டும்” என்று விட்டு

விடும் அளவு, மதவாதிகள் இதுகாலை தமது இருதியை இறக்கிக்கொண்டனர். ஆனால் ஆரம்பத்திலே, அவர்களின், உக்கிரம், இவ்வளவு அவ்வளவு என்று அளவிட முடியாததாகவே இருந்தது. ஆண்டவனைப் பற்றியோ, அவனடியார்களைப் பற்றியோ, கூறப்பட்டுள் பல அற்புத நிகழ்ச்சிகளைப் பற்றி, இன்று அறிவாளிகள், தத்துவார்த்தமே கூறுகன்றனர். இத்தகைய தத்துவார்த்த விளக்கமும், கண்டிக்கப்பட வேண்டிய குற்றமாக பிரிட்டிஷ் நீதி மனன்றத்திலே கருதப் பட்டகாலம் உண்டு! நினைப்பிற்கெட்டாத காலத்திலல்ல! 1728-ல் நடந்தது இந்த சத்ய சம்பவம்.

தாமஸ் உல்ஸ்டன் என்பவர், ஆத்தீகர், கிருத்தவர், அறிவாளி, பாதிரி அவர் நூலொன்று எழுதினார் 1726-ல். அதிலே அவர் ஏசுநாதர் செய்து காட்டியதாகக் கூறப்படும் அற்புதங்களைப் பற்றி ஆராய்ச்சி செய்து காட்டி, அலைகளைத் தத்துவார்த்த மாகக் கொள்ள வேண்டுமே தவிற, அப்படியே நடந்தனவென்று கொள்ளக் கூடாது, அவ்விதங்கொள்வது பகுத்தறிவாகாது, அறிஞர் எள்ளி நகையாடுவர், என்று விளக்கினார். வேதத்திற்கு விவேக விளக்கமுரைத்தார்! இதுதான் அவர் செய்த பெரும் பிழை!

அந்த நாலுக்கு மக்கள் பெருத்த ஆதரவளித்தனர். 30,000 பிரதிகள் விற்றன! பாதிரிகளின் உலகம் பதைத்தது! இவனோர் நாத்தீகன்! ஆண்டவனின் விலைகளைப் பற்றிக் கேலி கூறியவன். இழித்துப் பழித்து எழுதி மக்கள் உள்ளங்களைப் பாழ்படுத்துகிறான். ஆத்தீக்கத்தை அழிக்கிறான். அறிவு எனும் சம்மட்டி கொண்டு, மதக்கோட்டையை இடிக்கத் துணிகிறான். இவனை ஒழித்தாகவேண்டும், என்று மத ஆதீக்கக் காரர்கள், மாரடித்துக் கொண்டனர்! மதவாதியின் மதிவழியே மன்னர்கள் செல்வது முறையன்றோ! எனவே, உல்ஸ்டன், மீது வழக்குத் தொடரப்பட்டது. நீதிபதி “ஆம்! இவன் தேவ நிந்தனனையே செய்தான். தண்டனைக்கு உரியவனே!” என்று தீர்ப்பளித்தார். 1729-ம் ஆண்டு மார்ச்சுமாதம், தத்துவார்த்த விளக்கம் எழுதிய குற்றத்திற்காக தாமஸ் உம்ஸ்ட்டன், ஓராண்டு சிறைத்தண்டனையும், 100 பவுன் அபராதமும் தரப்பட்டதுடன், 2000 பவுன் சொந்த ஜாமீனும், 1000 பவுனுக்கு இருவரும், 500

பவுன் வீதம் நால்வரும் ஜாமீன் கொடுத்து, நன்னடக்கைக்கு உத்திரவாதமளிக்கவேண்டும் என்றும் இல்லையேல். ஆயுள்வரை சிறையிலே இருக்கவேண்டு மென்றும் தீர்ப்பு அளிக்கப்பட்டது! ஜாமீன் கட்டப் படவில்லை. ஆயுள்வரை சிறையிலே இருக்கவேண்டு மென்றும் தீர்ப்பு அளிக்கப்பட்டது! ஜாமீன் கட்டப்படவில்லை. ஆயுள்வரை சிறை கிடைத்தது, சிலத்தைப் புகுத்த, சொந்த அறிவுடன், அற்வுதங்களுக்குத் தத்துவார்த்த உரை எழுதிய அறிவாளிக்கு. நாலு ஆண்டுகள் சிறையில் கிடந்து, சிறையிலேயே மாண்டார். ஏசுவைச் சிலுவையில் அறைந்தனர் ரோம் நாட்டு அதிகாரிகள்! ஏசுவின் விசுவாசிகள், செய்தது என்ன? அறிவுக் கண் கொண்டோரை, சிறையில் இடத்தயங்கினரோ! இல்லை!

1945-ம் ஆண்டிலே ஒரு யூதர் எலிசாடி பாஜ் என்பவர், தமது உயிலின்படி, 12000 பவுன் தர்மத் தொகையாக வைத்து, யூதர்களின் மார்க்கக் கொள்கையைப் பற்றிய படிப்பகம் ஏற்படுத்த வழி செய்தார், நாத்தீக போதனைக்கல்ல! ஆனால், கிருஸ்தவ மார்க்கமே அரச மார்க்கம். யூதமார்க்க போதனை அடுக்காது என்றாராம் ஹார்விக் பிரபு! 1200 பவுன் பறி முதல் செய்யப்பட்டதாம்! கிருத்தவமார்க்கத்தைக் காப்பாற்றுவதிலும், அதன் மீது அறிவுக்கணைகள் பாய்வதைத் தடுப்பதிலும் மட்டுமல்ல, வேறுமார்க்க போதனை புரிவதைத் தடுப்பதிலும் கூட அவ்வளவு அக்கரை இருந்தது! எவ்வளவு முள்வேலி, எத்தனை சுற்றுசுவர், எவ்வளவு அகழிகள், அந்தமதக்கேரட்டையைச் சுற்றி! ஏன் அவ்வளவு அச்சம்!!

புத்தகம் ஏழுதுவது வெளியிடுவது மட்டுமல்ல, விற்பதற்கும் தண்டனை! தாமஸ் பெயின் எனும் தீவிரவாதி எழுதிய மனீதனின் உரிமைகள் என்ற புத்தகத்தின் இரண்டாம் பாகத்தில் ஒரே ஒரு பிரதி விற்ற ஒரு ஏழைபுத்தக வியாபாரி மீது சட்டம் பாய்ந்தது! 1797இ ஜூன் மாதம், தாமஸ் வில்லியம்ஸ் என்ற கிழவன் மீது கடுங்கோபங் கொண்டனர், “சூகடுகளையும் கழகம்” என்ற சங்கத்தினர். புத்தக வியாபாரி மீது வழக்குத் தொடுத்தனர். கழகத்தின் சார்பாக, தாமஸ் எர்ஸ்க்கைன், எனும் வழக்கறிஞர் ஆஜராகி, வாதம் புரிந்தார்.

கென்யான் பிரபு, நீதிபதி. அவர், இத்தகைய நிர்தனைக்காரனின் நீசப்புத்தகத்தை விற்றவனைத் தண்டிப்பதே முறை என்று கருதினார். தீர்ப்புக் கூறுவதற்குச் சின்னாட்களுக்கு முன்பு, வழக்கறிஞர் எர்ஸ்க்கைன், உலவச் செல்கையிலே, ஒரு மூதாட்டி, அவரை இழுத்துக்கொண்டு போய், நோய் வாய்ப்பட்டு நொந்து கிடந்த தாமஸ் வில்லியம்ஸ் என்ற புத்தக வயாபாரியையும், அம்மை நோயால் தாக்குண்டு தவித்துக்கிடந்த அவனது மக்களையம் காட்டினாள். எர்ஸ்க் கைனின் மனம் இளகி, கேடுகளையும் கழகத்தாருக்கு, வழக்கை வாபீஸ் வாங்கிக் கொளள வேண்டுமென்றும், இத்தகைய ஏழையினிடம் இரக்கங் காட்டுவதே கிருஸ்தவ மார்க்கமாகும்மென்றும் ஒர கடிதம் எழுதினார். கருணை! கிருஸ்தவ மார்க்கத்தின் மூலத்தை முறியடிக்கும் ஏட்டை விற்றவனுக்கா இரக்கங்காட்டுவது, முடியாது-என்று கழகத்தார் கூறி விட்டனர். அங்கனமாயின், வழக்கை நடதத நான்வாரேன்." என்றார் வழக்கறிஞர். வழக்கு நிற்கவில்லை! நீதிச்சக்கரம் அந்த நோயாளி, நொந்த உள்ளத்தான் மீது ஓடாமலுமில்லை. ஓராண்டு சிறைத் தண்டனை தரப்ட்டது. நன்னடக்கைக்காக ஓராயிரம் பவுன் சொந்த ஜாமீன் கேட்கப்பட்டது. அந்த ஏழை ஓராயிரம் பவனைக் கண்டதுமில்லை ஒடிந்த உள்ளத்துடன் சிறையிலே வாடிக்கிடந்தான்.

தாமஸ் பெயின் என்பவர் எழுதிய மனித உரிமைகள் என்ற புத்தகத்தை விற்றதற்காக, 1871-ல் சார்லைல், என்ற புத்தக வியாபாரி, அவர் மனைவி, அவர் குடும்பத்தினர், பிறகு அவரது நண்பர்கள், பன்னர் அவரது ஆதரவாளர்கள், ஆகியோர், 150 பேர்கள் தண்டிக்கப்பட்டனர், கடுமையாக மார்க்க சம்பந்தமாக இவ்வளவு கட்டுதிட்டத்தைத் காத்துரட்சித்த பிரிட்டன், வீரர்கள் வீவேகத்தால் பெருகிய இரத்த ஆறுபாய்ச்சப் பட்ட, பிறகு சுதந்திர மலர் பூக்கும் பண்ணையாயிற்று! இதை மன்னன் மணவினை இன்ன விதமாகத்தான் இருக்க வேண்டும் என்று கூறிடும் உரிமை அந்நாட்டு மக்கள் பெற்று உள்ளனர்.

அரசாள்வோன் ஆண்டவனின் பிம்பம். அவனைத் திருத்துவது,

தண்டிப்பது, ஆண்டவனின் உரிமை, மக்கள் குறுக்கிடுவது கூடாது, என்ற தத்துவத்தைப் பேசினதற்காக, முதலால் சார்லஸ் மன்னனுக்கு தூக்கு மேடைக்கு இழுத்த பிரிட்டன், இரண்டாம் ஜேம்ஸ் அரசரை, நாட்டைவிட்டே ஓடச்செய்த பிரிட்டன், முதலில், மார்க்கத்துறையிலே, சுதந்திரமாகக் கருதிடும் உரிமை கோரியோருக்கு குறிக்கோல் காட்டிற்று. அதைப் பொறுத்துக் கொண்ட வீரர்களே இன்று, அறிவு உலகில், கீர்த்தி நிறப்பப் பெற்றவர்கள் என்று போற்றப்படுகின்றன.

(திராவிடநாடு - 20.9.42)

# காட்டாட்சி !

“அடிப்போம், மடல் கொடுப்போம்!
முகத்திடிப்போம், குடம் எடுப்போம்!
இடுப்பு ஒடிப்போம், சிரம் உடைப்போம்!
பொடிபொடிப்போம், வசை துடைப்போம்!
உயிர் குடிப்போம், வழிதடுப்போம்!
பழி முடிப்போம், இனி நடப்போம்”

நாற்படைகளுக்கு, மன்னன் ஜீவகன், மாற்றானை இன்னவிதமாகச் செய்வோம் என்று முரகு கொட்டி, தோள்தட்டி, புறப்படுக, என்று வீரஉரை புகன்றான், என்று ஆசிரியர் சுந்தரம் பிள்ளை, மனோன் மணீயம் எனும் நறுமலர்த் தேனினுமினிக்கும் நாடகத்திலே தீட்டியுள்ளார்.

நாட்டுக்கு ஆபத்துஎன்றால், நாட்டுப்பற்றுடமை, ஆண்மை, தன்மானமுடமை கொண்டோர், இங்கனமே கூறிடுவர், சீறிடுவர், போரிடுவர்.

நாட்டபிமானம் மூட்டிடும் தீ, வீரர்களை எஃகுக் கம்பங்களாக்கிவிடும்! அத்தன்மையினருக்கு, மூச்சு நாட்டுப்பற்றே, பேச்சு அதைப்பற்றியதே, வாழ்வு, அதன் பாதுகாப்பின் பொருட்டே! வலிமை, இளமை, உடைமை, திறமை, உயிர், ஆகிய எதுவும், அதற்கே செலவிடப்படவேண்டும் என்றுரைப்பர், ஆண்மையறிவினர்! அலி இயல்பினரோ, ஆகுமோ என்று அயர்வர், அஞ்சிடுவர், வாழ்ந்திட வளைவர், தமிழ் இயல்பை இழப்பர்.

நாட்டுப்பற்று, மற்றையச்சமயங்களிலே, வெளிப்படுவதைவிட, அதிகமாக, நாட்டுக்கு எதிரியின் வேட்டுபாயும் என்ற நிலை வந்திடுங்காலை, வெளிப்படும்! மாஸ்கோவுக்கு ஆபத்து, என்றசெய்தி கேட்டதும், சென்ற ஆண்டு சினந்தெழுந்தனர் வீர ரஷியர்! ஸ்டாலின் கிராடுக்காக நடுக்கம் சமரிலே, சளைக்காது நின்று, மலைக்கு உளிபோல், மாற்றாரை மாய்த்து, மானத்தைத் தேய்த்துவிடும் மடத்தனத்தை மணக்கோ மென்றுரைத்து, மார்த்தட்டினர் அம்மக்கள்!

இத்தகைய வீரர்களின் வரலாறு, என்றும் அழியாப்புகழ்பெறும்!

“ஜப்பான் இந்தியாவைத்தாக்க அநேகமாகத் தயாராகிவிட்டது. இன்னம் 3-அல்லது 4-வார காலத்தில் தாக்குதல் ஆரம்பமாகவிடுமென நான் நிச்சயமாக எண்ணுகிறேன்” என்று அமெரிக்காவிலுள்ள இந்தியா லீக்தலைவர் சர்தார் ஜே.ஜே, சிங் செப்டர்பம் 13 தேதி தெரிவித்துள்ளார்.

காகசசைக்கடந்து, இந்தியாவில் கால் ஊன்றிக் கொள்ள ஜெர்மாயியரும், அசாமில் புகுந்த இந்தியாவை இறைகொள்ள ஜப்பானியரும், என்று நாள் கிட்டுமோ என்று ஆவலுடன் பசிநிறைந்த கண்களுடன், படைப்பலத்துடன் நிற்கும் நேரம்! வாரக்கணக்கோ மாதக்கணக்கோ, அன்றி நாள் கணக்கோ மணிக்கணக்கோ, கூறிட இயலாது, ஆனால், ஆபத்து வட்டமிட்ட வண்ணம் இருக்கிறதென்பதைத் திடமாகக் கூறிடலாம், மறுக்கார் மதியுடையோர், ஆனால் மண்டியிடார் மானத்திலே அக்கரை கொண்டோர் குதர்க்கர்கள், கோமாளிக்காரணங் கூறுவர், குடிலர்கள், கெடுமொழி பேசுவர், கோழைகள் கும்பிட்டு நிற்பர், நாட்டுப்பற்றுடையோர், மன்னன் ஜீவகன் மொழிவழி நிற்பர்! படைதிரட்டுபவர், பாசறை அமைபர், அணிவகுப்பர், போரிடுவர்.

இந்தியாவுக்கு ஆபத்து என்பதற்காக, இன்று நாட்டுப்பற்றுக்கு நாங்களே நாயகர்கள் என்று நாவின்றிடும் தோழாகளே, எதிரிவருகிற நேரமாயிற்றே என்பதனை எண்ணிடாது, தன்னாட்சித் தீவர்த்தி பிடித்துக்கொண்டு, தகர்ப்போம், இடிப்போம், எறிப்போம் புடைப்போம், என்று கூவிக்கொண்டு, உள்நாட்டில் கலகத்தீயை மூட்டிவிட்டனர்.

தன்னரசுத் தீவட்டியைத் தபாலாபீசில் வீசுவோரும், போலீஸ் ஸ்டேஷனைப் பொசுக்கி, அதில் கிளம்பும் புகையிலே “சுயறாஜ்ய சுகந்தரம்” காண்போரும், தந்திக்கம்பிகளை அறுத்துவிட்டு, பிரிட்டிஷ்காதி பத்தியமெனும் அடிமைச் சங்கிலி அன்னை பாரக தேவியின் அடிகளிலிருந்து அறுத்தெரியப்பட்டது என்று கருதி அகமகிழ்வோரும், இன்று, “இந்திய விடுதலை வீரர்களாக”ப் பேசப்படும் அளவு, பித்தம் நாட்டிலே சத்தமிட்டு வாழ்கிறது! எவ்வளவு ஆபத்து தலைமீது! எத்தகைய கூத்து நாட்டிலே! ஜப்பானை தடுக்க இதுவா வழி?

நாட்டினிடம் காட்டும் பற்று இதுதானா! இதற்கா, சுதந்திரப்போர் என்று பெயர் போக்குவரத்துகளைத் தாக்குவது, முதல்தரமான ஐந்தாம்பட்டாள வேலை! எதிரியிடம் கைக்குலிவாங்கினோரி, ஐரோப்பாவிலே, பலஇடங்களில், இதனைச் செய்தனர், இன்று நாஜி இடுக்கியிலே சிக்கி, இழிவும் துயரும் மிகுந்து வாடுகின்றனர்! அந்தக்காரியத்தை இங்கு செய்வோரை, நல்லறிவு படைத்தோர், எங்கனம் ஆதரிக்கமுடியும்! நாட்டுக்கு ஆபத்து சூழும் வேளையிலே, நாசவேலையில் இறங்குவதா! வெள்ளம் வருகிற வேளையிலே, அணையை அழிப்பதா! விவேகத்தானா? நாட்டுப்பாதுகாப்பு கெட்டு, போக்குவரத்துச் சாதனம் சிதைந்து, யுத்தமுயற்சி கெட்டால் பிரிட்டனுக்கா, நமக்கா, நஷ்டமும் கஷ்டமும், பீதியும் தொல்லையும், ஆபத்தும் அலைச்சலும் என்பதனை கூட எண்ணிப்பார்க்க நேரம் இல்லையா! ஏனோ கெடுமதி!

கலகத்தைக் கிளப்புவது கடினமான காரியமல்ல அதிலும் கருத்துகனியாத உள்ளங்கொண்டோரிடம் கபடர்கள் செல்வாககு பெற்றிருந்தால், கலகத்தை கிளப்புவது, மிகமிகஎளிது! விளைவு, விபரீதமாகும்.

சாதாரண காலத்திலாகிலும், விளைவுபற்றி கவலை கொள்ளாதிருக்கக்கூடும். உலகின் இன்றைய நிலையிலே, நாட்டுக்கு இதுபோது வந்துள்ள ஆபத்தான சமயத்திலே, கலகத்தின் விளைவு, எதிரிகளின் கதவைத் திறந்திடுவதாகவே இருக்கமுடியம். எனவே தான் வீரத்தோடு விவேகமும் கொண்டோர் இன்றையக் காந்தீயக் கிளர்ச்சியிலே கலக்கவில்லை.

“இவர்களுக்கு நாட்டு விடுதலையிலே அக்கரை இல்லை” என்று தூற்றிடும் தோழர்கள், தமது செயலைச் சரியெனக் கருதும் தவறை இழைப்பதோடு, மற்றைதாளே மறியல் நடந்தால். தொல்லைவளர்ந்தால், இந்துரைமார் சர்க்கார், சுயறாஜ்யம் கொடுக்காமல் போவார்களா? அதுதான் சூட்சமம்!” என்று கூறு.

தந்திக்கம்பியை அறுத்தால் நமக்குத்தானே நஷ்டம் இது சுயறாஜ்யமாதரும்?” என்று தந்திக்கம்பி அனுப்பவனைக் கேட்டால், “சூட்சுமம் இதிலேதான் இருக்கிறது. தந்தி அறுத்தால், சேதிபோகாது; சேதி போகாவிட்டால் சர்க்கார் நடக்காது’ சர்க்கார் நடக்காவிட்டால், பேசாமல் சுயறாஜ்யம் கொடுப்பார்கள் என்று கூறுவான்.

இவைகள் சட்டத்திற்கு விரோதம்; பொதுமக்களுக்குப் பாதகம்; ஆகவே தண்டனை தரப்படும்" என்ற உடனே, உரிமை உடுக்கைகள் என்று விளம்பரம் பெற்ற பத்திரிகைகள், "பரிதாபம்! சர்க்கார், அடக்குமுறைகொண்டு சுயராஜ்யக் கிளர்ச்சியை அடக்குகின்றனர்" என்று எழுதுகின்றன. நாசவேலை செய்பவர், செய்யும் காரியத்தை சுயராஜ்யக்கிளர்ச்சி என்று சொல்லிவிட்டது, மித்தரன் எழுதிவிட்டது எனவே, மேலும் செய்வோம்" என்று எண்ணிக் கின்றனர்.

ஏத்தக்குடியிலே சாஸ்திரிகள் வீட்டிலே கொள்ளை அடித்தவர் நாளைக்கு, "கொள்ளை அடித்தது சட்ட விரோதமா? சரி! நான் சர்க்காருக்குத் தொல்லைகொடுத்ததுதனால், சுயராஜ்யம் பெறவே, இதைச் செய்தேன் என்றும் கூறலாம் போலும்! அதற்கும் ஆதரவுகாட்ட, "சுதந்திரவேட்கை கொண்ட ஏடுகள்" முன்வரும் போலும்!!

கிளர்ச்சி இவ்வளவு கோணலாக இருக்கும் என்பதையும், கிளர்ச்சியின் விளைவுகள் வேதனைதருவனவாக இருக்குமென்பதனையும், தன்னாட்சிக்கு வழி செய்வதை விட, காட்டாட்சி

யைக் கூட்டிவரும் என்பதையும் உணர்ந்தே, லீகும் நீதிக்கட்சியும், கிளர்ச்சியில் கலக்க மறுத்துவிட்டன. மக்கள், நாட்டு நிலைமை மோசமாகி, எங்கும் ஏத்தக்குடிகள் தோன்றாமுன்னம், சட்டம் நிலவ உதவி செய்யவேண்டும், நாசகாரியம் செய்வோரை அடக்கவேண்டும் என்று எச்சரிக்கிறோம்.

(திராவிடநாடு - 20.9.42)

# வாலை சுருட்டிக் கொண்டு ...

பரதா! ஒரு நல்ல கோல் வேண்டும்.

என்னிடம் எழுதுகோல் தானே வீரா, இருப்பத அதுவா தேவை.

அது ஏனப்பா எனக்கு? ஆடிக் கறக்கும் மாட்டை ஆடிக் கறப்போம், அடித்துக் கறக்க வேண்டிய மாட்டுக்கு அடிக்கத்தானே வேண்டும்.

வேண்டாமப்பா விபரீத யோசனை. கோல் கொண்டு யாரையும் தாக்கப் புறப்படாதே.

நான் கோல் கேட்டது, அதற்கல்ல, கோலாடக் குரங்காடும் என்பார்களே பழமொழி, அதன்படி கோல் எடுத்துக்கொண்டு போக வேண்டும் என்று எண்ணினேன்.

எங்கே, போக உத்தேசம்?

ஆனந்த விகடன் ஆபீசுக்கு!

விளையாடாதே வீரா! அங்கே என்ன வேலை? கோல் ஏன்? ஒரு ஆசிரியரிடம் எப்படி நடந்து கொள்வது என்பது கூடத் தெரிய வில்லையா உனக்கு.

ஆசிரியரிடமல்ல பரதா, நான் போய்ப் பேசப் போவது, ஆனந்த விகடன் ஆசிரியர் ராஜீய நிருபராக ஒரு குரங்கைத்தானே. வேலைக்கு வைத்துக் கொண்டிருக்கிறார். அதைப் போய் காண வேண்டும். கையிலே கோலிருந்தால் குரங்கு சொன்னபடி ஆடும். அதற்கே, கோல் கேட்டேன்.

அடடா! அந்த ராஜீய நிருபரிடம் போக, கோல் வேண்டாமப்பா. இரண்டொரு வாழைப் பழத் தோல் இருந்தால் போதும். அதை வீசினால், சொன்னபடி கேட்கும், கிடக்கட்டும். அந்த வாலரிடம் ஏன் வம்பு! உன்னை என்ன செய்தது?

என்னை என்ன செய்யும்? குரங்கின் சேட்டை தெரியாதா! உயர உட்கார்ந்து கொண்டு `உர் உர்' என்னும், இளிக்கும், கீச்செனக்

கத்தும்,....

சாதாரணக் குரங்கு இவை செய்யும். ஆனந்த விகடனின் ராஜீய நிருபர், செய்தது என்ன?

ராஜீயம் என்றால், ஆனந்தவிகடன் கொண்டுள்ள வந்தது எப்படி இருக்கிறதென்பது, ராஜீய விஷய செய்திகளைச் சேகரிக்க, வரும் குரங்கை நிருபர் எனக் கொண்டிருப்பதைப் பற்றிப் பெருமையுடன், பூரிப்புடன், சித்திரந் தீட்டியும் காட்டுகிறாரே, அதிலிருந்தே தெரிகிறது பார். குரங்கு சேட்டைக்குப் பேர் போனது! திருட்டுக்கும் ராஜா! தாவிக் குதிக்கும். தடி கண்டால் ஓடும்! பிடிபட்டால், ஆட்டி வைக்கிற படி ஆடும். குரங்குக் குணம் என்பதே ஏளன மொழி! குரங்கு எனக்கு ராஜீய நிருபராக இருக்கிறார் என்று ஒரு ஆசிரியர், தமது பத்திரிகையிலே படம் போட்டுக் காட்டுகிறாரே, இதன் ஆபாசம் அவருக்குத் தெரியவில்லையா?

தெரியாதா! அது தவறென அவர் கருத வில்லை. அவர்களின் பரம்பரையே கருதாது. ஏன்? ஆரிய இராமனுக்கு அனுமார் தானே தூதன், தோழன், படைத் தலைவன், அதுபோல் ஆனந்தவிகடனுக்கு இருப்பதிலே தப்பில்லை.

உண்மைதான், பரதா!ஆனால், அந்தக் குரங்கு கூறுவதை ராஜீயம் என்று தமிழர்கள் படிக்க வேண்டுமோ! அதற்காகத்தான், கோல் கொடு, போய்க் கேட்கிறேன் அந்தக் குரங்கை, என்று உன்னிடம் வந்தேன்...

வீரனுக்கும், எனக்கும் நடந்த உரையாடல் மேலே நான் தந்தது. நான் கோல் தரவுமில்லை, வீரன் வாழைப் பழத் தோலுடன், விகடனாலயம் செல்லவுமில்லை, ஆனந்த விகடனிலே, அரசியல் உலகம் என்ற பகுதியிலே, ராஜீய நிருபர் சரடு என்ற கட்டுரை, தமிழ்த் தலைவர் களைத் தாக்கவும், நையாண்டி செய்யவும், நிந்திக்கவும், பலமுறை பயன்படுவதுண்டு. சென்ற இதழிலே, சர். முகம்து உஸ்மான் மீது பாய்ந்தது, குரங்கு! பேட்டி கண்டாராம், அந்த நிருபர்! சர் உஸ்மானிடம் பேசினதில், அவருக்குப் பதவி மீது உள்ள மோகம் நன்கு தெரிந்து விட்டது போலும். அதை ராஜீய நிருபர், ஆரியரசத்தைக் கலந்து, அளிக்கிறார். அதைக் கண்டே, வீரன் வெகுண்டான்.

ராஜீய நிருபர், சர். முகமது உஸ்மானிடம் போய் பின்னால் நின்றாராம்! முன்னால் வர, பயம் போலும்!! பின்னால் நின்றுகாண்டு, ``சலாம் வருகிறது'' என்றாராம்.

சர், உஸ்மான், யார் என்றாராம். ``கொஞ்சம் பின் பக்கம் திரும்பிப் பாருங்கள்'' என்று விகடனின் குரங்கு கூறியதாம்!

``முடியாது! முன்னால் வா!'' என்றாராம் சர். முகம்மது!

ஆமாம்! வருகிற வக்கிரம், முன்னாலே வருவது தானே! பின்னாலே நின்றால், இதைச் சட்டை செய்து கொண்டு, திரும்பிப் பார்த்து திருஷ்டிக் கழிக்கவா, முன் வருவார்! பார்க் வந்தது சர். முகம்மது உஸ்மானின் முகத்தைத் தானே! அவருக்குப் பின்புறம் நின்றால், முகமா தெரியும் குரங்காருக்கு! ஆகவேதான் போலும் முகமது, ``வா, முன்பக்கம்'' என்று அழைத்தார்.

டாக்டர் முகர்ஜியின் முயற்சி பலித்து, புதிய நிர்வாக சபை அமைக்கப்பட்டு விட்டால், புது சபைப் பதவியும் போய், பழைய வைஸ்சான்ச லரும் போய் நடு ஆற்றில் கைவிடப்பட்டது போல் தவிப்பதா என்று சர். உஸ்மான் கூறினாராம்.

குரங்குக்குக் கவனம் வேறிடத்திலே பாய்ந்திருக்க வேண்டும், அதனால்தான், சர். உஸ்மான் இவ்விதஞ் சொன்னார் என்று கூறுகிறது. சர். உஸ்மான் போன்றவர்களை, உத்யோகங்கள் வேட்டையாடுகின்றன, ராஜீய நிருபராக உள்ள குரங்கனாரின் எஜமானர் கூட்டமோ உத்யோகத்தை வேட்டையாடி அலுத்து, மேல் மூச்சு வாங்கிக் கிடக்கிறது. ``இருந்த பிரதம மந்தி வேலையும் போச்சு! வைசிராய் நிர்வாக சபையிலே இடங்கிடைக்கும் என்ற ஆசையிலும் மண் விழலாச்சு, இரண்டுங் கெட்டு, மாம்பலத்திலே கிடக்கலாச்சு'' என்று ஆச்சாரியார் அழுகிறார் என்று சொன்னால் பொருத்தமாக இருக்கும்! சர். உஸ்மான் ஏன் ஏங்கப் போகிறார்! மாகாண கவர்னர் பதவி வரையிலே, அவருடைய மடியிலே தவழ்ந்தது. பதவிக்காக வேண்டி அவர் பார் வேட்டைக்குப் புறப்பட வேண்டிய நிர்ப்பந்தமில்லை. ஆரியத் தலைவர்கள் இன்று அந்த அவசியத்திலே இருக்கிறார்கள்!

என் நண்பர் ஒருவர், சிறு பிராயத்திலே, பாட்டியிடம் பணம் பறிக்க, தந்திரம் ஒன்று செய்வதுண்டு. பணம் கேட்பார். இல்லை என்றால், உடனே `இதோ பார் கிணற்றிலே விழுந்து உயிரை விடுகிறேன்' என்று கூறிக் கொண்டே, புறக் கடைப் பக்கம் போவார். ஒரே பேரப் பிள்ளை, செல்லம். ஆகவே பாட்டி, ``வேண்டாமடா கண்ணா, பொன்னா' என்று கெஞ்சுவார்கள். என் நண்பன், தன் தந்திரம் பலிக்கிறது என்று கண்டதும், கிணற்றிலே, இறங்கவே ஆரம்பிப்ப துண்டு, சர்வ ஜாக்கிரதையுடன் கெட்டியாகக் காலைக் கிணற்றுப் படிக்கட்டுகளில் ஊன்றிக் கொண்டு! ஒரு படி இறங்கினால், பத்து தண்ணீரிலேயே போய் நின்றால், கேட்கிற அளவு! உயிரை விட்டு விடுவேன் என்று பயமுறுத்தி னால், பணந் தரப் பாட்டி இருந்ததால் இது முடிந்தது.

அந்த என் நண்பர் போல், ஆரியத் தலைவர்கள், பிரிட்டிஷ் பாட்டியிடம் பதவி பெற, இதோ கிணற்றிலே விழுகிறேன் என்று என் நண்பர் பால பருவத்திலே மிரட்டினாரே அதுபோல, ``இதோ சத்யாகிரகம். இதோ பஹிஷ்காரம், இதோ சிறைவாசம்'' என்று ஒவ்வாரு படிக்கட்டாக இறங்கி இறங்கி, பதவி கேட்டுப் பார்க்கின்றனர். பிரிட்டிஷ் பாட்டி, என் நண்பனுக்கு இருந்த அம்மையைப் போல், பேரனின் நெஞ்சாழமும் கிணற்றின் நீராழமும் தெரியாத பெயர் வழியல்ல! எனவே, கிணற்றிலே இறங்கினால், நீந்தப் பழகலாம், அல்லது நீர் நோய் பெறலாம், என்று பிரிட்டிஷ் பாட்டி கூறிடக் காண்கிறோம்.

எனவே ஆரியத் தலைவர்கள், அழ வேண்டுமேயொழிய, சர். உஸ்மான் அழ வேண் டிய அவசியமே இல்லை. வைசிராய் நிர்வாக சபை, மாகாண சபைகள் யாவுமே ஆரியத் தலைவர்கள் மயமாகிவிட்டது என்றே வைத்துக் கொண்டாலும் அதுபோதும் சர். முகமது போன்றவர்களுக்கு அந்த நிலை வரும்போது, சர். முகம்மதுகளுக்கு, கவர்னர், வைசிராய், முதலிய பீடங்கள் அமர்ந்திருந்து ``ஆரியரே! ஆட்சிசி செய்யும் முறை தவறாது நடமின்!'' என்று கூறிடும் நிலைமை வரும் காட்சியைக் காண்போம். எனவே, ஆனந்த விகடனின் அரசியல் நிருபர், அழுகுரல் சர். முகம்மதுவிடம் கிளம்பியதாகச் சரடு விடுவது பொருளற்றது என்பேன்.

வேறு பல பேசிவிட்டு, விகடனிடம், வேலைக்கு அமர்ந்துள்ள குரங்கர்,

ஆபிசுக்கு வருகிறார்.

சர். முகம்மது உஸ்மானைக் கண்டு பேசி, கிண்டல் மொழிந்து வந்ததன் பலன் என்ன வென்று எண்ணுகிறீர்கள். ``வாலை என்னால் ஆட்ட முடியவில்லை. வாலைச் சுருட்டிக் கொண்டு, உட்கார்ந்திருந்தேன்'' என்று கூறுகிறது, ராஜீய நிருபராக உள்ள குரங்கு.

ஆனந்தவிகடனின் ராஜிய நிருபரின் இந்தச் செய்தி பாடப் புத்தகத்திலே சேர்க்கப் பட்டு, ஆரிய நிருபர்களுக்குத் தரப்பட வேண்டும் என்று ஒரு யோசனை கூறுகிறேன், அவசிய முள்ளோர் அவசரமாகக் கவனிக்க வேண்டு கிறேன்.

சர். முகமது போன்றோரிடம், ஆரிய நிருபர்கள், சென்று கிண்டல் பேசினால், `வாலைச் சுருட்டிக் கொண்டு, வாலை அசைக்க முடியாமல், வாலில் வலி தாங்க முடியாமல்' கஷ்டப்பட வேண்டித்தான் நேரிடும்! சில வேளைகளிலே வால் நொறுக்கப்பட்டும் விடும்!! ஆ.வி.னின், ராஜீய நிருபரின் வாலில் வலி ஏற்பட்டதன் காரணம், சர். உஸ்மான், பேசிக் கொண்டிருக்கை யில், அதன் வாலின் மீது உட்கார்ந்து கொண்டிருந் தாராம், அதனால்தான் வலி தாங்க முடியவில்லை யாம்.

அந்த நிருபரோ, சிறிய உருவம்! சர். முகமது கெம்பீரன்! எனவே, அவருடைய கால் மட்டுமே வாலின் மீது இருந்திருக்குமென்று நான் எண்ணு கிறேன். முழு உஸ்மான் உட்கார்ந்திருந்தால், நிருபரின் வாலைத் தரையிலிருந்து பிறகு, வழித்து எடுக்க வேண்டும், கூழாகிவிட்டிருக்கும். சர். முகமதுவின் காலடியிலேதான், ராஜீய நிருபரின் வால் சிக்கியிருக்கும்! வலிக்குக் காரணம் அதுதான்! உண்மையிலேயே, சர் முகம்மது போன்றாரிடம் வாலை நீட்டினால் இத்தகைய வலி தான் வரும்.

இனியேனும், அந்த நிருபர், வாலைச் சுருட்டிக் கொண்டு, தமது வாழ்க்கையை நடத்தி வந்தால், வாலுக்கு வலி வராது இருக்கும். அதன் வாலிடம் அதற்கல்லவா அக்கரை இருக்க வேண்டும், நமக்கென்ன!

இவ்விதம் வால் சுருட்டிக் கொள்வதும், வாயை அடக்கிக் கொள்வதும், ஆரியத் தலைவர் களுக்கே அடிக்கடி ஏற்பட்டு விடுகிறது. தலைவர்கள் கதியே அதுவெனில், வாலர்கள் கதியைக் கூறவும் வேண்டுமா?

எங்கள் காந்தியார் அஹிம்சாமூர்த்தி, அவரடியார்களாகிய நாங்கள் அஹிம்சை யையே மூச்சாக்கிக் கொண்டிருக்கிறோம் என்றார்கள் முன்னம். ``உங்கள் நோக்கம், அஹிம்சையாக இருக்கலாம். திட்டங்கூட அதுவாக இருக்கலாம், ஆனால் விளைவு, இம்சையாகத்தான் முடியும்!'' என்று விவேகிகள் சொன்னபோது, கேட்க மறுத்தனர். இன்று நாட்டிலே காந்தீயம், எவ்வளவு இம்சைக்கு இடமுண்டாக்கி விட்டதெனப்தைக் கண்டபிறகு, வாய் அடைக்காமல், என்ன செய்வார் ஆளுந்திறன், ஆறு காத தூரம் வரை அகோரக் கூச்சலிடச் கற்றுக் கொண்டதால், ஏற்பட்டு விடாது. அதற்கு அறிவாற்றல் வேண்டும், அத்தகைய அறிவாற்றலை பெற்றவர்களை, அழுத்தமுற்பட்டால் நடவாது. அவர்களின் உயர்வை, ஏற்றத்தைத் தடுக்க முடியாது என்று எத்தனையோ முறை விஷயம் தெரிந்தவர்கள் எடுத்துரைத்தனர்.

(திராவிட நாடு - 20.9.1942)

# பொது உடைமையும் , பெர்லின் மடமையும்

போர்முனையிலே உள்ள தோழர் களுக்கு உதவி செய்ய வாருங்கள்! குளிர் காலம் பிறக்கிறது. உடை வேண்டும், உணவு வேண்டும், உற்சாகம் வேண்டும், நீங்கள் உறுதியுடன் இருந்தால்தான், களத்திலே உள்ள உங்கள் காளைகள் களித்து, வாழ முடியும் என்று ஹிட்லர் பேசினாராம். ஜெர்மன் மக்களிடையே அது அவரது சொந்த ஜோலி! தேவையுங்கூட, மாறி மாறி பிரிட்டிஷ் அமெரிக்க, ரஷிய விமானங்கள், பெர்லின் மீதும், வேறு பல நகரங்கள் மீதும் குண்டு பொழிவதால், குளிர் காலம் பிறப்பதற்கு முன்பே, ஜெர்மன் மக்களின் குலை நடுங்கி விட்டது. காரசாரமாகப் பேசி, நடுங்குவோருக்கு, நாவு முறுக்கேற்றப்பார்க்கிறார். செய்து பார்க் கட்டும்!

ஆனால் பொது உடைமை எனும், பயங்கரமான கொடுமையினின்றும் உலகை விடுவிக்கவேதான் பாடுபடுவதாக, பெர்லின் நாஜிப் பாதிரியார் பேசுவது கேட்டே, நான் ஆத்திரமடைகிறேன்.

மண்ணையும், விண்ணையும் கடலையும் கட்டி ஆள்கிறாயோ என்று பிரிட்டனைப் பார்த்துக் கேட்கிறபோது, எனக்கு பெர்லினில் கேட்கிற பொச்சரிப்புப் பேச்சு சிரிப்பை ஊட்டுகிறது. சீற்றம் எழவில்லை.

ஐரோப்பாவிலே, அவ்வப்போது கிளம்பும் வல்லரசுகள் கடற் கோட்டையாம் பிரிட்டனை யும், அதன் கொடி, குவலயத்திலே பல இடங் களிலே பறப்பதையங் கண்டு, இதுபோலவே பேசிட்ட தாகச் சரிதம் சாற்றுகிறது.

பிஸ்மார்க் பேசினார், கெய்சர் கொதித்துக் கூவினார், இன்று ஹிட்லரும் பேசுகிறார், பரம்பரை பேச்சு அது!

ஆனால் பொது உடைமைப் பேயர்களை நான் அடக்குகிறேன், என்று ஹிட்லர் கூறுவது கேட்க, நெஞ்சு பொறுக்குதில்லையே, என் செய்வது! பிரிட்டன், கடற் கொள்ளைக்காரனாம், அமெரிக்கா ஆசை பிடித்த மாமனாம், ரஷியா, பொது உடைமைப் பேயனாம், இந்தப் பரம சாது, மட்டுமே, தேவதூதனாம். மக்களை வாழ்விக்க வந்த மகரிஷியாம். என்ன மடமை!

பொது உடைமைப் பேய், என்ன செய்தது? பெர்லின் மீது பாய்ந்ததா? பாசீசத்தை ஒழிக்க முதலில் முளைத்ததா? ஜெர்மனிக்குச் சொந்த மான பூமி மீது நாட்டங் கொண்டதா? வியாபாரத் துறையிலே, ஜெர்மனியுடன் போட்டிக்கு வந்ததா? காரல் மார்க்சின் ஜென்ம பூமியிலே, கசடர் ஆட்சி ஏற்பட்டதைக் கவிழ்ப்பேன் என்று கூறிற்றா? என்ன தீங்கு இழைத்தது பெரிலினுக்கு! உலகுக்குந்தான் ரஷியா என்ன கேடு செய்தது? எதற்கு உளம் எரிந்தவர் போல் உளறுகிறார் ஹிட்லர். பொது உடைமை, பேயாம், பாசிச நேயரின் விஷவாயின் வாடை அது, விவேகிகள் அதனை மதியார்.

ஐரோப்பா கண்டத்திலே, அழுகிக் கிடந்த ஒரு நிலப் பரப்பை, வல்லவராக்கியதும், பேய்த் தன்மையா? எதிரியின் சுரங் கண்டதும் சிரம் வளைக்கும் மக்களை, உயிரைத் தந்தேனும் உரிமையைப் பெறுவோம் என்று உத்தம வீரர் களாக்கியது, பேய்த்தன்மையா! உண்டு களித்து ஒரு சிலரும், பசித்துப் பதைத்து பலரும், பாழான, பயங்கரமான, பாதகமான, நெடுஞ்சுவரை இடித்துத் தள்ள மதமுள் வேலியை அறுத்தெரிந்து, ஜாரிசம் எனும் குழியைத் தூர்த்து, அதன்மீது, மக்களாட்சி எனும் மனோ ரம்மியமான மாளிகையைச் கட்டியது, பேயின் செய்லென்று பெர்லின் கருதுகிறது!

வயிறார உணவு, உடலார உடை, இருக்க இன்பமான இடம், அறிவாற கல்வி, நோய் தீர மருந்து, நல்கி, மக்களுக்கு வாழ்வு தந்தது, பேயின் சேட்டையென்றா பெர்லின் எண்ணுகிறது!

பொது உடைமை எனும் தீட்டுக் கோல் கொண்டு, வரையப்பட்டுள்ள சோவியத் சித்திரம், பேய்ச்செயலாக பெர்லின் கண்களுக்குப் படுகிறது! கண் பழுதா? கருத்து பழுதா? மூளைக் கோளாறா? ஏன் இந்த மடமை?

காடு, பூங்காவாயிற்று! கொடுங்கோல், செங்கோலாயிற்று. சிறைக்கூடம், சிங்கார மண்டபமாயிற்று. பாலைவனம், நீரோடையா யிற்று! வரண்ட வயல், வளமிகுபண்ணையாயிற்று! இருள் நீங்கி ஒளி கிடைத்தது, மருள் மாண்டது, அறிவு துலங்கிற்று, சோவியத் சித்திரம் சோபிதத்தின் சிகரம்! அதை உணர, ஜெர்மன் நாஜிக்கு முடியவில்லை!

பிடி! சுடு!! என்று ஒருவன் கூறிட பிணங்கள் கீழே வீழ்வதுமாக உள்ள இடம் பேய்க்காடு! மக்கள் செக்கு மாடுகள் போல் உழைத்து உழைத்து

அலுத்து, உண்டிக்கும் உடைக்கும் அலைந்து, அவதிப்படும் இடம், பேயர் பிரதேசம். கொழுத்து வாழும் முதலாளிகளின் கோணக் குணத்துக்குக் கோல்கொண்டோன் கூவி கொண்டு, காப்பு அளிக்குமிடம், பேய்ப் பிரதேசம்! வணங்க, வாழ்த்த, பின்பற்ற, பேசாதிருக்க, பாடம் போதிக்கப்பட்டு, மக்கள் வாயில்லாப் பூச்சிகளாக் கப்படும் இடம் பேயர் கூடம்! தங்கச் சீமான்! மது வகை விற்ற சீமான்! என்று சீமான்களைக் சிருஷ்டித்து, சைத்தான்களைத் தாண்டவமாட விட்டு, அவர்களிடம் தரகு பெற்று, உரத்த குரலான், ஊர்க்குடி கெடுத்தோன், உலுத்தன் ஆகியோரை ஏவலாகக் கொண்டு, ஆணவ ஆட்சி நடத்தும் பெர்லின், பேயர் மடம்! மாஸ்கோ, மக்களின் மணிபுரி! வாட்டமுறுந் தோழர்களுக்கு வழிகாட்டி! ஆணவக்காரரின் இருதயத்துக்கு ஈட்டி! உலகியலே சமதர்மமே உண்மை நெறி என்று முரசு கொட்டும் தோட்டி! புது உலகச் சிற்பியின் பூங்கா! நொந்த ரஷியாவுக்கு திடகாத்திரத்தைத் தந்த மூலிகை வளர்ந்த தோட்டம்! பாட்டாளியின் வாழ்வுக்குப் பண்புதரும் பச்சிலை உள்ள இடம்! அத்தகைய தோட்டத்தை பேயர் இடம் என்று பேசிட, கூசாது முன் வந்தோரை குவலயம் எப்போது தண்டிக்கப் போகிறது!

ஜாரின், காலத்திலே, பெர்லின் தலைவனின் வணக்கத்திற்குரிய அந்தத் தேவன் திருவிளை யாடலை நடத்தியபோது, பஞ்சம் எவ்வளவு, பிணி எவ்வளவு, பாடு எவ்வளவு, அறியாமை வெள்ளத் திலே வீழ்ந்து ஆணவ அலைகளால் தாக்கப் பட்டு, முதலாளித்வ முதலையிடம் சிக்கியோ, சதிகாரர் எனும் சூழலில் அகப்பட்டோ, மக்கள் சிதைந்தனர். தொழிற்சாலைகள் உண்டா? கல்வி நிலையங்கள் உண்டா? வைத்திய சாலைகள் உண்டா? வாழ்வில் இன்பம் உண்டா? கர்வம் சூன்யமாம் ஜகத்! என்றன்றோ இருந்தது. நீதிக்கு இடமேது! நேர்மையாளருக்கு இடமேது! நன்னெறிக்கு மதிப்பேது! நாட்டிலே, நாணயம் ஏது! ஆறுகள், மாரிக் காலத்திலே கரை புரண்டோடி, ஊரை அழிக்கும், பிறகோ வரண்டு, வயலை வெளியாக்கி, வேதனை ஊட்டும்! பாலங்களோ, கண்ணீரால் கரைத்துவிடக்கூடிய அளவு இளைத்துக் கிடக்கும், பள்ளியோ, பஞ்சைகள் கூடும் பரிதாபச் சாலைகளாக இருக்கும். வைத்திய சாலை என்ற பெயர் வழங்கப்பட்

டிருந்த இடங்களோ, செத்தவரின் கணக்கைப் பாதிரிமார் எடுத்து, பாவமன்னிப்பு தந்து, பணம் பறிக்கும், பரிவர்த்தனைப் பீடங்கள்! வழிபடும் இடங்களிலோ, ரஸ்புட்டின் லீலைகளை மறவாத வர்கள், ரமணிகளுக்கு, மதரசத்தை மனங் கொண்ட மட்டும் தரும், குச்சுகள்! பேய், ரஷியாவிவிலே புகாமுன்பு இருந்த பெருமை இது! பேய், வந்த பிறகு, நேரிட்ட கேடு எவை? பெர்லின் பேசுமா அவை பற்றி!

இதோ புள்ளி விவரம். 1941ம் ஆண்டு ஜுன் மாதம் (அமெரிக்கா) நியூயார்க் ஆராய்ச்சிக் கழகத்தினர் வெளியிட்ட அறிக்கை, ரஷியச் சரக்குக் கூட அல்ல, அமெரிக்கத் தயாரிப்பு.

ஜனத் தொகை

1913ல் - 13,900 இலட்சம்.

1940 - 19,300 இலட்சம்

நாட்டு வருமானம்

1913-ல் 24 பில்லியன் ரூபிள்

1940ல் - 125 பில்லியன் ரூபிள்

வைத்திய சாலையில் படுக்கைகள்

1913ல் - 17,500

1940-ல் - 84,00

கல்வி (ஆரம்பம்)

1913ல் - 700 இலட்சம் பேர்

1940ல் - 3,500 இலட்சம் பேர்

உயர்தரக் கல்வி

1913ல்- 11,200 பேர்

1940-ல் 62,000 பேர்

மாதர் சுக நிலையம்

1913ல் - 9

1940ல் - 4,384

எஃகு உற்பத்தி

1913ல்- 4,200 இலட்சம் டன்

1940ல்- 18,400 இலட்சம் டன்

நிலக்கரி உற்பத்தி

1913ல் - 2,900 இலட்சம் டன்

1940-ல் 16,400 இலட்சம் டன்

இவ்விதமாகவே, ``பேய்'' பீடத்திலே அமர்ந்த பிறகு, சோவியத் நாட்டிலே, ஏற்பட்ட முற்போக்கு, சுகவிருத்தி, சுபிட்சம், செல்வ வளர்ச்சி, மக்கள் மன வளர்ச்சியும், குளிர்ச்சியும் ஆகியவற்றைக் கூறினால் அந்தப் `பேய்' இங்கும் வரவேண்டும் என்று ஜெர்மானியரும் இதரரும் கூறுவரேயன்றி, ஹிட்லர் போல், அந்ந்தப் பேயை அழிப்பேன் என்றுரைக்க மாட்டார்கள்.

களவாடினது உண்மைதானே?

ஆம்! களவாடினேன்.

ஏன் களவாடினாய்.

பசி! பிழைப்பு இல்லை!

கடுங்காவல் தண்டனை உனக்கு ஓராண்டு.

திருடினாயன்றோ, உண்மையைக் கூறு?

உண்மை ................

முன்பு ஜெயிலுக்குப் போயிருக்கிறாய் அல்லவா, இதே குற்றத்துக்காக?

ஆமாம், போனேன்.

மறுபடியும் திருடினாய், உனக்கு மூன்று வருடம் தண்டனை, போ.
* * *

நீதிமன்றத்துக்கு இந்த வேலை ஓயவில்லை. சிறைக்கூடத்தில் இடம் காலியாக இருப்பதில்லை. சட்டமும், கட்டுத்திட்டமும், நீதி மன்றமும், நெடுஞ்சுவற் அமைந்த கற் கோட்டை களான சிறைக்கூடங்களும் இருந்தும், வளர்ந்தும், பசிப் பிணி, பஞ்ச நோய், வேலையில்லா வேதனை உள்ள இடத்திலே, கொள்ளையும், கள்ளத்தனமும், இருந்தே வரக் காண்கிறோம். ``இல்லை! ஆகவே இதனைச் செய்தேன்'' என்று குற்றம் புரிந்தோர் சொல்லக் கேட்கிறோம். பசிவந்திடப் பத்தும் பறக்கும் என்ற பாட்டி மொழியும் படிக்கிறோம். ஆனால, நோயின் மூலத்தைக் கண்டறிந்து சிகிச்சை செய்ய உலகில் முடியவில்லை, ஒரே ஒரு நாடு மட்டுமே, ஏழை என்றும், அடிமை என்றும், எவனுமில்லை. ஜாதியில் என்பதனையும், புனல் நிறைந்த தொட்டி போன்ற சீமான்கள் ஆடலழகிகள் போலாடவும், எச்சில் இலைக்கலமான ஏழைகள் புழுப் போல் துடிக்கவுமாக இருந்த பேதத்தை நீக்கி, இங்குள்ளோர் ஒப்பப்பர் என்ற உயர்நிலை தந்தது. திருட, பொய்யுரைக்க, வஞ்சகம் பேச, கொள்ளை யிட, கபட வேடம் புனைய, காரணமேயில்லாத படி செய்து, சமுதாயமெனும் பண்ணையிலே முளைத்துக் கிடந்த பல களைகளைக் கவ்வி எடுத்து எறிந்துவிட்டனர்.

இதைப் பேய்ச் செயல் என்று தேவதூதன் திருவாய் மலர்ந்தருளுகிறார் போலும்! என்ன தூய்மை. அவரது உள்ளத்திலே! எவ்வளவு வாய்மை அவர் உரையிலே! உலகை, ஏமாளி களின் இடமாக எண்ணினார் போலும்!

பொது உடைமை ஆட்சிக்குப் பிறகு, மக்களின் வாழ்க்கையிலே வஞ்சகம், சூது, சூழ்ச்சி, கள்ளம், கபடம் ஆகியவை இருக்க இடமேயின்றிப் போய் விட்டது.

திருட்டு என்ற பதத்துக்கே பொருளின்றிப் போய் விட்டது திருந்திய ரஷியாவிலே. யார் சொத்தை யார் திருடுவது? சொத்து, பொது! உழைப்பு, சகலருக்கும்! உரிமை, யாவருக்கும்! எனவே, ஒருவருடைமை என்றொன்று மில்லை! இருந்தால்தானே அபகரிக்க!

ஜார்கால ரஷியாவிலே, 100க்கு 73 மக் களுக்குப் படிப்பு கிடையாது.

இன்று சோவியத் ஆட்சியின் சோபிதத் தின் பயனாக எழுத்தறியாதார் இல்லை எனலாம்! பேயின் வேலை, பெர்லின் அகராதிப்படி!

முதியோர்கள், படிப்பு வாசனையே அற்றுக் கிடந்தனர் ஜார் காலத்தில். சோவியத் சர்க்கார் ஏற்பட்டு, இடைவிடாது, முயன்று 40,000,000 முதியோருக்கும் அறிவுக் கண்ணைத் திறந்து வைத்தது.

1933லிருந்து 1938க்குள் ஐந்தாண்டுகளிலே சோவியத் சர்க்கார், 20,607 புதுப் பள்ளிக் கூடங்கள் அமைத்தனர்.

1937ம் ஆண்டு, கல்விக்காகச் செலவிடப் பட்ட தொகை 6,179,000,090 ரூபிள்கள்.

அபிவிருத்திக்கான அருமையான திட்டங் கள் இன்று அடால்ப்ஹிட்லரின்அக்ரமத்தின் பயனாக, ரஷியாவிலே நடைபெறுவதற்கின்றிப் போய்விட்டன.

(திராவிட நாடு - 20-9-1942)

# தோழர் சோமசுந்தர பாரதியாரும் ராவ்சாகிப் வெ . ப . சுப்பிரமணிய முதலியாரும்

பெரியவர் ஈ.வெ.ராமசாமி கம்பராமாயணம் ஒழிக்கப்படவேண்டிய நூல் என்று சொன்னவுடன், கம்பராமாயணப் பிரசங்கிகளும், பித்தக வியாபாரிகளும் பார்ப்பனலல்லாத பகுத்தறிவு மக்களிடத்தில் சிறிது செல்வாக்குள்ள சில அறிஞர்களைப் பிடித்து சில அறிக்கைகள் வெளியிடச் செய்துவிட்டார்கள்.

இதனால் இப்பிரசங்கிகள் தாங்கள் கம்பஇராமாயணத்தைக் காப்பாற்றிவிட்டதாக மனப்பால் குடிக்கிறார்கள்.

தோழர் சோமசுந்தர பாரதியாரவர்கள் இப்புராணப் புலவர்களுக்கு இரங்கி ஒரு புதுக்கரடியை உண்டாக்கிவிட்டார். இந்தக் கரடி கம்பராமாயணத்தை ஒழிக்கவேண்டும். என்கின்றவர்களை விழுங்குமோ அல்லது அக்கரடியை உண்டாக்கினவர்கனையே பார்த்து உறுமுமோ என்பது இனி போகப் போகத்தான் தெரியும்.

இப்படித்தான் பெரிய புராணத்தையும் திருவிளையாடல் புராணத்தையும் காப்பாற்ற தோழர கா.சுப்பிரமணியப் பிராமணர் (அந்தணர்) என்று பார்ப்பனரல்லாதவர்களில் ஒரு கூட்டமிருந்தது என்றும், நான்கு வேதம் (மறை) என்று தமிழில் நாலு மறைகள் இருந்தன என்றும், யாகம் (வேள்வி) என்பதாக தமிழர்க்கள் சில செய்கை இருந்தன என்றும், ஆதலால் பெரியபுராணம், திருவிளையாடல் புராணம் முதலிய சைவ நூல்களில் வரும் நான்கு வேதம், பிராமணர், யாகம் என்பவைகள் ஆரியர் சொல்லுவதும், ஆரியர்கள் சாஸ்திரம், ஸ்மிருதி, புராணங்கள் ஆகியவைகளில் வருவதுமான வேதம், யாகம், பிராமணர்கள் அல்ல என்ற ஒரு புதுக்கரடியை உண்டாக்கி பெரியபுராண வியாபாரிகளும், புலவர்கள், பிரசங்கிகள் ஆகியவர்களுக்கும் மூடநம்பிக்கைச் சைவர்களுக்கும் காப்பளித்தார். கடைசியாக இந்தக் கரடி அவரையே விழுங்க ஆரம்பித்துவிட்டது என்றால் இது அடியயோடு கற்பனை ஆகாது.

அதுபோலவே கம்பராமாயணத்தையும் கம்ப இராமாயணப் புத்தக வியாபாரிகள், பிரசங்கிகள், புலவர்கள் ஆகியவர்களையும் ஆதரிக்க

பாரதியார் அவர்கள் இராமாயணத்தில் வரும் குரங்குகள், இராவணன் முதலிய அரக்கர்கள் முறையே மனிதர்களுமல்ல திராவிடர்களுமல்ல. மனிதர்க்கும் குரங்குக்கும் மந்தியில் உள்ள ஒரு பிராணி என்றும் இராவணன் ஒரு வகை ஆரியன் என்றம் ஒரு புதுக்கரடியை உண்டாக்கி இருக்கிறார் என்ற சொல்ல வேண்டி இருக்கிறது. ஏனெனில் இப்படி கரடியை உண்டாக்கினவர் சற்று கருணை வைத்து அதற்க ஆதாரம் இன்னது என்ற காட்டி இருப்பார்களானால் கம்பராமாயணத்தை ஒழிக்க அவண்டுமென்பவர்கள் அந்த ஆதாரத்துடன் தங்கள் போராட்டத்தை துவக்கப் போய் விடுவார்கள். இப்போது அக்கரடிக்குத் தோழர பாரதியார் அவர்களே ஆதாரமாய் இருப்பதால் ஒழிக்கவேண்டியவர்களின் நிலைமையை பாரதியார் தர்மசங்கடமாக ஆக்கிவிட்டார், என் செய்வது? தோழர் பாரதியாரைவிட மூப்பெய்தியவரும் பாரதியார் அவர்களுக்கு மேம்பட்டவராய் இல்லாவிட்டாலும் சமானமாகவே பாரதியாருக்கும் முற்பட்ட ஆராய்ச்சியாளருமாய் அறிஞருமாய் கொண்டாடி வருபவருமான தோழர் ராவ்சாகிப், வெ.ப.சுப்பிரமணிய முதலியார் 40 ஆண்டுகளுக்கு முன் வெளியிட்ட கருத்தை இப்போது இதன் கீழ் வெளியிடுகிறோம். வாசகர்கள் ஊன்றிப் பார்த்து கம்பராமாயணம் ஒழிக்கப்படவேண்டியதா? காக்கப்பட வேண்டியதா? என்பதைப் பற்றி சிந்திப்பார்களாக:- வெ.ப.சு.

தோழர் ராவ்சாகிப் வெ.ப.சுப்பிரமணிய முதலியார் அவர்களால் 1906-ல் எழுதப்பட்ட இராமாயண உள்ளுரைப் பொருளும் தென் இந்திய சாதி வரலாறும் என்ற ஒரு ஆராய்ச்சிப் புத்தகத்தில் குறிப்பிடப்பட்டிருக்கும் வாசகங்களாவன:-

## பக்கம் 3 வரி 6 முதல் 14 முடிய

இராமாயணத்தில் கூறும் அனாரியர் யாரெனில் வாலி முதலான தென் இந்திய வாசிகளும் இராமாயணதி இலங்கை வாசிகளுமாம். வாலி சுக்கிரீவன் ஆகியோர் குரங்குகள் என்று ஆரிய கவியால் கூறப்பட்டிருந்தாலும அவர்கள் கடவுளால் அவ்வாயர்களைப் போலவே மனிதர்களாகப் படைக்கப்பட்டவர்களே. இராவணனாதியர் இராக்கதர் என்று கூறப்பட்டிருந்தாலும் அவர்களும் ஆரியரைப்போல மனிதரே. இவ்விரு வகுப்பு (குரங்கு, இராக்கதர் என்று கூறப்படும்) மனிதரும் நமது முன்னோராகிய திராவிடரே என்றும்,

பக்கம் 12: வரி 9 முதல் 12 முடிய இராவணன் அனுமான் முதலியவர்கள் கல்வித் திறத்தைப் பற்றிய புகழ்ச்சியால் (அக்காலத்திய) திராவிடர்களின் கல்வி கேள்விகளின் மேம்பாடு குறிக்கப்பட்டிருக்கின்றது என்றும்

பக்கம் 14: வரி 7 முதல் 10 முடிய

வாலி தன்னைப் போலவே திராவிடராசனாவும், தனக்கு பழகிய நட்பாளனாகவும் உள்ள இராவணனை என்றும்

பக்கம் 17: வரி 22 முதல் 25 முடிய இராவணன் தன் சாதிக்க சத்துருக்களாகி தேவரென்ற ஆரிய சாதியருக்கு இடுக்கண் செய்தானென்று என்றும்

பக்கம் 19: வரி 20 முதல் 25 முடிய

புதிய வரவினராகிய ஆரியர்களுக்கு அனுகூலராயும் பிரதிகூலராயும் இருந்த திராவிடப் பெருஞ்சாதி வகுப்பினரை (இராமாயணத்தில்) ஆரிய கவி அரக்கர் என்றும் குரங்கினம் என்றும் இழித்துக் கூறியது அவர்க்குரிய சாதித் துவேஷம், செய் நன்றி கொல்லல் ஆகிய குணதோஷத்தைக் காட்டுகிறது என்றும்.

பக்கம் 20: வரி 15 முதல் 17 முடிய

இராமயண காலத்தில் தெற்கே மைசூர்ப் பிரசேசம் வரை உள்ள நாடுகள் நீலன், சுக்கிரீவன், வாலி முதலிய சிறந்த திராவிட அரசர்களால் ஆளப்பெற்றன என்றும்

பக்கம் 30: வரி 11 முதல் 13 முடிய பரத்துவாசர் ஆச்சிரமத்தில் இராமராதி ஆரியரும் விபீடனராதி திராவிடரும் உடனிருந்து விருந்துண்டனரென்று இராமாயணம் கூறுகிறது.

என்று கூறியிருக்கிறார்.

இன்னும் இப்படிப்பட்ட பல அப் புத்தகத்தில் காணப்படுகின்றன.

ஆகவே இதைப் படித்தவர்களுக்குத் தோழர் பாரதியார் ஆதாரம் காட்டும் வரை தோழர் சுப்பிரமணிய முதலியார் கூற்று சரியா? என்ற சங்கடம் பிறக்கலாம்

தோழர் பாரதியார் கூற்றுக்குப் பாரதியார் ஆதாரம் காட்டும்வரை தோழர் சுப்பிரமணிய முதலியார் கூற்றுதான் செல்லுபடியுள்ளதாகும். ஏனெனில் முதலியார் கூற்றக்கு முதலியாரைவிட பாரதியாரைவிட முன்கூட்டி ஆராய்ச்சி செய்த அறிஞர், ஆராய்ச்சியாளர்கள், நடுநிலமையாளர்கள், எவ்வித சொந்த உணர்ச்சியிலும் சம்மந்தப்படாதவர்கள் ஆகிய பல நூற்றுக்கணக்கானவர்களின் ஆதாரங்கள் இருக்கின்றன. இதில் மற்றொரு பெரிய ஆதாரம் என்னவெனில் தோழர் முதலியாரின் மேற்கண்ட கூற்றுகள் முதலியாருடைய ஆராய்ச்சி மாத்திரமல்லாமல் திருவனந்தபுரம் மகாராஜா காலேஜ் புரபசர் பி.சுந்தரம் பிள்ளை அவர்களது ஆராய்ச்சி முடிவென்றும், அதிலிருந்தும் புரபசர் சுந்தரம் பிள்ளை அவர்களிடம் நேரில் கேட்டுத் தெரிந்ததிலிருந்தும் அவர் வைத்துவிட்டுப் போன ஆராய்ச்சிப் பொக்கிஷத்தில் இருந்தும் தெரிந்தவைகளாகும் என்று தோழர் முதலியார் அவர்களே ஆதாரத்தோடு தனது முன்னுரையில் குறிப்பிட்டிருப்பதாகும்.

இப்புத்தகம் சென்னை பவழக்காரத்தெருவு சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தில் 0-8-0 விலைக்கு விற்கப்படுகிறது.

இப்படிக்கு,

கம்பராமாயணம் ஒழிக்கப்படவேண்டும் என்னும் பேரவாவிற்பட்டோன்

(திராவிடநாடு - 27.09.1942)

# பானிபட் ! பிளாசி ! எது தேவை ?

பரதா! எந்த மை மிக்க சிலாக்கியம் என்றார், ஒரு தேசியத் தோழர் என்னை.

கட மை என்றேன் நான். அவர் திருப்தி அடையவில்லை. தலையை அசைத்தார் இல்லை என்பது தெரிய.

வேறு பல மை சொன்னைன். திருப்திப்படவில்லை என் நண்பர். சரி! நீயே கூறு! மை சிலக்கியமானது என்று நான் கேட்டேன்

எல்லா மைகளையும் விட ஒற்று மை இருக்கிறதே அது மிக மிக மகத்துவம் வாய்ந்தது. அது இப்போது அவசியமாக வேண்டும்! அதைப் பெறறே, அரும்பாடுபடுகின்றனர் தலைவர்கள் என்றால் என் நண்பர்.

எந்தத் தலைவர்கள்? என்று கேட்டேன். எமது தலைவர்களல்ல! சில தலைவர்கள் என்று பதில் கூறி, எமது தலைவர்கள் சிறையிலே உள்ளனர் என்று கூறி ஏங்கினார். ஒற்றுவை தேவைதான். அதற்காவன செய்வதுதானே! என்று கேட்டேன். ஜனாப் ஜின்னாவிடந்தானே, துருப்புச்சீட்டு இருக்கிறது என்று கூறிவிட்டு நண்பர் பெருமூச்சுடன் என்னை உற்றுநோக்கினார். துருப்புச்சீட்டு அவரிடமா! அவரை நீங்கள் பேஸ்த்தாக்கி விடுவீர்களென்று சொன்னார்களே என்று நான் கேட்டேன், சிரித்துக்கொண்டே.

அவர் சாதுர்யமான சீட்டடட்டக்காரராக இருக்கிறார் என்றார் நண்பர்.

சரி! ஜனாப் ஜின்னா என்ன செய்யவேண்டும். இப்போது அதைச் சொல்லு என்று நான் விசாரித்தேன்.

என்ன செய்வதா? மகாத்மாவைப் போய்ப் பார்த்து ஏதாவது சமரசமாவது என்றார் நண்பர் கோபத்துடன்.

நீ சொல்வதைப் பார்த்தால் ஜின்னா - காந்தி சண்டை நடக்கிறது போலத் தோன்றுகிறதே. இது என்னப்பா வேடிக்கை. உங்க ஆட்கள்,

ஊராள்பவனிடம் சண்டையிடுவதாகச் சொன்னீர்களே! அதற்கு ஜின்னா காந்தி சமரசம் மாற்று மருந்தா? என்று கேட்டேன்.

பரதா! சர்க்காரிடமிருந்து அதிகாரம் பெறத்தானே இந்தப் போர். சர்க்காரே, சமரசம் உண்டாக்கு என்று சொல்கிறது. சமரசம் பேசவோ, காந்தியார் வெளியே இல்லை. ஆகவே ஜனாப் ஜின்னானே அந்தக் காரித்தைச் செய்யவேண்டும் என்று நண்பர் வாதிட்டார்.

ரொம்ப சரி! ஜெயிலுக்குப் போவதற்கு முன்பு, காந்தியார், கொண்ட கருத்து, இப்போது மாறிவிட்டதா? முன்புதான் அவர் திட்டமாகச் சொல்லிவிட்டாரே, கடைசிப்போர் வெள்ளையருடன் என்று. இதிலே சமரசம் என்ன செய்வது? சமரசம் வேண்டுமென்றால், பெளியே உள்ள காகிரஸ் தோழர்கள், கட்டுப்பாடாகக் கூடி, ஜனாப் ஜின்னாவின் கோரிக்கைகளை ஒப்புக்கொள்ளத்தான் வேண்டும் என்று தீர்மானித்துப பொதுமக்களிடமும் பேசி, புகை கிளப்பும் பேர்வழிகளையும் அடக்கி, நாட்டிலே நிம்மதியை உண்டாக்கவேண்டும். குழப்பம் தீர்ந்தால் கும்பல் பூராவும் வெளியே விடப்படும். வெளியே வந்ததும், காந்தியாரிடம் காங்கிரசால் முறையிட வேண்டும். சமரசம் வேண்டும. பாகிஸ்தானை ஏற்றுக்கொள்வோம் என்றுரைத்திட வேண்டும். பிறகு சமரசம் பிறக்கும். ஆகால் நீங்களோ, அழிவு வேலை கூடாது என்றும் சல்கிறீர்கள். அழிவு வேலை செய்பவரைச் சர்க்கார் அடக்க முற்பட்டால், அடக்குமுறை கூடாது என்று கூறுகிறீர்கள். ஆனால், போர் எதிர்ப்புப் பிரசாரம் புரியும் தலைவர்களை வெளியே விட்டால்தானே போர் திறமையாக நடக்கும் என்று பேசுகிறீர்; தேசீய சார்க்கார் தேவை என்று துடிக்கிறீர்; இஸ்லாமியர் இந்நாட்டவரே என்ற சொந்தம் பேசுகிறீர்; எமக்கோர் பாகம் பொடும் என்று இஸ்லாமியர் கேட்டால், இதை இப்புக்கொள்ள முடியாது என்று கூறுகிறீர்! ஒன்றிற்கொன்று முரண்படுகிறதே என்று நான் சொன்னேன்.

நாட்டை நாசமாக்கும், பாகிஸ்தானை நாங்கள் ஒப்புக்கொள்ளத்தான் வேண்டுமோ என்ற கேட்டார் ஆத்திரத்துடன்.

தற்கொலைக்கு ஒப்பான, ஏற்பாட்டிற்கு முஸ்லீம் தலைசாய்க்கத்தான் வேண்டுமா? என்று நான் கேட்டேன், என் நண்பர், கொஞ்ச நேரம் உட்கார்ந்துவிட்டு, வெளியே சென்றுவிட்டார்.

முஸ்லீம்களுடன் இணங்கிப் போக மனமில்லை! முஸ்லீம் தலைவர், இவர்களின் ஆதிக்கத்தை வளர்க்க, இவர்கள் சார்பாக, பிரிட்டிஷாரிடம் போரிடவாவது வேண்டும். இல்லையேல், சமரசம் ஏற்படுத்தவாவது முற்படவேண்டும். வாதத்தின் இலட்சணத்தைப் பாருங்கள்!

நெல் மூட்டைகள் களவு முதற்கொண்டு, டில்லி சட்டசபை முன் மறியல்வரையிலே கிளர்ச்சி நடந்திருக்கிறது. தபால்பெட்டி களவு முதல், தனியாகச் சிக்கிக்கொள்ளும் அதிகாரியைத் தீயிலிடுவது வரையிலே நடைபெறுகிறது; ஒரு கோடி ரூபாக்குமேல், அழிவு வேலையின் பயனாக, நஷ்டம், நாட்டவர்க்கு! இதைக் கண்டிக்க, அடக்க, முனையக்காணோம். தலைவர்களைச் சிறையிலே அடைத்தார்களே என்ற ஆத்திரத்துடன் தலைவர்களை விடுதலை செய்யவேண்டும் என்று சர்க்காரை வற்றுத்த, பொதுமக்கள், இவைகளைச் செய்கிறார்களாம். ஆகவே இதற்கு அடக்கும் முறைகள் கூடாதாம்! எவ்வளவு நேர்த்தியான வாதம்!

சிந்து மாகாணத்திலே, பகாரோ பீர் எனம் முஸ்லிம் மதத் தலைவர் சிறையிலே போடப்பட்டார். அவருடைய பக்தர்கள் என்று கூறப்படும் ஹர் வகுப்னிர், சயிலைக் கவிழ்த்தனர், கொள்ளையிட்டனர், கொலை புரிந்தனர். சர்க்கார், அவர்களை அடக்க, இராணுவச் சட்டம் பிறப்பித்தனர். துப்பாக்கியால் சுட்டனர். காடுகளிலே உள்ள அந்த ஹர் வகுப்பாரின் இடங்களை விமானங்களிலிருந்து எறி குண்டு வீசி அழித்தனர். பாராசூட் உபபோகித்தனர். பலுருக்குத் தூக்குத் தண்டனை, பலருக்கு ஆயுள் தண்டனை. சர்க்கார் சட்டத்தை நிலைநாட்ச் சளைக்கவில்லை. ஹர் வகுப்பார், பகாரோவீர் எனம் தமது தலைவரைத் தமது மகாத்மாவாகக் கருதுவதும், அத்தகைய மகாத்மாவைச் சிறையிலே தள்ளியிருப்பது கண்டு மனந்தாளாது. குழப்பம் விளைவித்து, அழிவு வேலை செய்து பயங்கர நிலைமையை உண்டாக்கினால், சர்க்கார் தமது மகாத்மாவை, வெளியே விட்டுவிடுவார்கள் என்ற கருதுவதும், சரி என்று, காங்கிரஸ் எழுதுகோலரும், நாவினரும் இதுவரை கூறினதுண்டா! நாங்கள் அஹிம்சைக்காரர். எங்கள் வேலையல்ல நாசகாரியம்! அது மனம் நொந்த மக்கள் தாமாகச்

செய்யும் காரியம் என்று காங்கிரஸ்காரர் கூறுவதுபோல், நாங்கள் ஹர் காரியத்தை ஆதரிக்கவில்லை. ஆனால் அவர்கள்மீது அடக்குமுறை வீசுவதைக்கண்டு மனம் பதறி முலிம்கள், அழிவு வேலையிலே இறங்கிவட்டனர் என்ற இஸ்லீம்லீக் இதுவரை கூறிற்றா! ஹர் வகுப்பார் நடத்தியதற்கும், இப்போது நாட்டிலே இந்தத் திருக்கூட்டம் நடத்தும் நாசகாரியத்துக்கும் என்ன வித்தியாசமிருக்கிறது! ஹுர தொல்லை ஒழிக்க, சர்க்கார் தக்க நடவடிக்கை எடுத்துக்கொள்ள வேண்டும் என்று காங்கிரஸ் தலைவர்களும் தாள்களம் தூபமிடவில்லையா; எடுத்துக் கொண்ட நடவடிக்கைகளைச் சரியென்று கூறவில்லையா! அது கொலை, கொள்ளை, கொடுமை! அதே காரியத்தை இவர்கள் செய்தால், அதற்குப் பெயர், ஆத்திரம், கொதிப்பு ஆறாத்துயரம், தீராத விடுதலை விடாய் என்று பெயராம்! யோசியுங்கள்!

அழிவு வேலையையும் கண்டத்துவிட்டு அடக்கு முறையையும் கண்டித்து, அல்லாபக்ஷின் அறிக்கைகள் வெளியிடுகின்றன. ஜனாப் ஜினனா, சமரசத் திறவுகோலைக் காட்டவேண்டும் என்று நீட்டிப் பேசுகின்றன. சமரசத்திறவு கோல் தானே தேவை! இதோ, அதைப் பெற வழி! மனமிருக்கிறதா, மார்க்கம் தேடுபவருக்கு! முஸ்லீமுடன் ஒணங்கி, வெள்ளையரைச் சுயராஜ்யம் தந்தாகவேண்டும் என்று கேட்பது சரியா? முஸ்லீமின் கோர்க்கையைக் கவனியாதே! இதோ நாட்டிலே நடப்பதைப் பார்! இதுதான் என் சொரூபம்! ஆகவே என் இஷ்டப்படி நட என்ற பிரிட்டிஷாரை மிரட்டுவதும் அதன் பயனாக அடக்குமறை கிளம்பினால், ஐயனே! ஜின்னாவே! அபயம்! என்று வருவதா? எது அழுகு? எது முறை? எது யுக்தி? எது நேர்மை? பாகிஸ்தான் சொடுப்பது சுயராச்யம் பெறுவதுற்குத் துணை செய்யும் என்பது தெரிந்தும், பாகிஸ்தான் தரமாட்டொம் என்று கூறுவது அறிவுடைமையா?

1961-ம் ஆண்டு நடந்தது மூன்றாவது பானிபட் யுத்தம் - இந்துக்களின் இரட்சகர்கள் என்ற கிளம்பிய மராத்தியருக்கும், இஸ்லாமியருக்கும்.

கிளைவின் படைகளுக்கும் இந்தியருக்கும் நடந்தது பிளாசி யுத்தம்.

எது மீண்டும் தேவை? மீண்டுமோர் பானிபட் வேண்டுமா அன்றி, வெள்ளையருக்கும் இந்தியருக்கிமிடையே பிளாசி நடந்து, இந்தியருக்கு வெள்றி என்ற குதூகலச் செய்தி கிடைக்கவேண்டுமா, என்பதனையே இளைஞர்கள், எண்ணிப் பார்க்கவேண்டும். ஆயுதமின்றி, அறிவைக்

கொண்டு, ஆங்கிலேயரிடமிருந்து போரில்லாப் புது பிளாசி மூலம் பெற மார்க்கம் இருக்கிறது.

பாகிஸ்தான் பிரச்னையை மறுப்பதும், மழுப்புவதும், பிறகு பார்ப்போம் என்றுரைப்பதும், நாலாவது பானிபட் யுத்தத்திற்கு விதை போடுவதாகவே எனக்குத் தென்படுகிறது. வெள்ளையர் போய்விட்டால், இந்துக்களின் எண்ணிக்கையைக் கண்டு, அஞ்சி, இஸ்லாமியர்கள், இந்து ஆட்சியிலே அடங்கிவிடுவார்கள் என்ற எண்ணுவது, ஏமாளிகளின் உரிமையாக இருக்கட்டும். இன இயல்புகளைத் தெரிந்து, இனப்போர்க் காதைகளைப் படித்துத் தெரிந்து கொண்டுள்ள விவேவிகள் கூறட்டும, அது நடக்கக் கூடிய காரியந்தானா என்று!

சோம நாதரே! உமக்குச் சொர்ணாபிஷேகம் செய்கிறோம். சோடசோபசாரம் செய்கிறோம் சுகந்தம் பூசி, சாமரம், வீசி சிந்துகள் பாடி, செந்தேன் பெய்கிறோம்.

ஆடலழகிகள், அலங்காரவதிகளாகி, ஆடுவர், காணீர், களிப்பீர்.

சூடம் கொளுத்துவோம். துந்துபி முழக்குவோம், மலர் பொழிவோம், மகேஸ்வரா! பூஜை பல புருவோம்! இந்த மிலேச்சர்களை முறியடித்துத் துரத்து. அவர்கனின் நீசமார்க்கம் எமது ஜென்ம பூமியிலே, வராதபடி தடுத்து எம்மை ஆடகொள்வாய் தயாபரா! உன், பசி ததும்பும் கண்களைத் திற! கோபக்கனலைக் கிளப்பு. கொக்கரிக்கம் துருக்கரை சுட்டுப் பொசுக்கு.

வைரமும் வைடூரியமும, முத்தும பவழமும், பச்சை நீலமும், பலப்பல உமக்காகச் சேமித்திருக்கிறோம். பாற்குடங்கள், தங்கத்தால் பளிஞ்கு மண்டபங்களம், பஞ்சணைகளும் உள்ளன. உமது பக்தர்களின் காணிக்கை.

சோமேசா! உனது கோயில் கோபுர வாயிலில் வரும்போது, அந்த அல்லாவின் ஆட்கள் அடியற்ற மரமெனக் கீழே விழுந்து, ஆவிசோர்ந்து போகக் கடாட்கிப்பாயாக!

கஜனி முகமதுவின், குதிரைப்படையும் காலட்படையும், சோம

நாதபுரத்தைத் தாக்க, தூள் வானத்தைத் தழுவும்படி கடுவேகமாக வந்து கொண்டிருந்தன. சோமநாதபுரத்துக் கோயிலிலே கூடினர். தெந்தி தீரர்கள், நொந்தனர், நைந்தனர், நோன்பிருந்தனர்!

இலட்சம் பக்தர்கள்கூடும் கோட்டம்! ஆயிரம் பிராமணர்கள், ஆராதனைக்காக அமர்ந்திருந்த ஆலயம். நூற்றுக்கணக்கான சம்பைகள் ஆடிப்பாடிடும் அலங்காரபுரி! அத்தகைய தேவ தேஜசும், பிரம்ம தேஜசும் தாண்டவமாடிய, சோமநாதபுரத்திலே திருக்கோயில் கொண்டு எழுந்தருளியிருந்த சோமேசரிடம் ஆரியர்கள் முறையிட்டனர்.

சோமேசர், வாயையோ, கண்ணையோ திறந்தாரில்லை. கஜனிமுகமதுவின் படைகள், ஊரைப் பிடித்து, எதிர்த்தோரை முறியடித்து, பொக்கிஷம், ஆயத்திலே குவிந்திருப்பது தெரிந்து, கோயிலில் புகுந்து, பிராமணர்கள் உண்டு கொழுக்க, கட்டிக் காத்திருந்து செல்வத்தைச் சூறையாடின.

சோமேசரும், அவரைப் பூஜித்த சர்மாக்களும், அன்று தோற்றதுடன், அவர்களின் ஆதிக்கம் அந்தப் பகுதியிலே மீண்டும் எழவேயில்லை.

ஏ.டி.711-ல் அரவுத் தலைவன் மகமத்பின் காசீம், சிந்துவில் ஜெயக்கொடி நாட்டினான். கஜனீமுகமது 1001 லிருந்து 1030-க்குள் 30 முறை ஆரியவர்த்தத்தின் மீது படை எடுத்தான். மகமத் கோரியின் படை எடுப்புகள் மற்றோர் படலம். 1221-லிருந்து செங்கிஸ்கானின் படைகள் சீறிப் பாய்ந்து வந்து ஆரிய பூமியைச் சிதைத்தன. 1526-ல் பாபர் படை எடுத்தார். மொகலாட்சி மலர்ந்தது. 1738-ல் நாதிர்ஷாவின் படையெடுப்பும், 1761-ல் அகமத்ஷா அப்தாலியின் படை எடுப்பும் நடந்தேறின.

இந்த 762 ஆண்டு சரிதம், எதைக் காட்டுகிறது? இந்தப் பகுதியிலே, ஆரியப் பூண்டே அழிந்தொழிந்து, ஆரிய வாடை அகற்றப்பட்டு, ஆரிய பூமியாக இருந்தது. பாகிஸ்தானாக்கப்பட்டதைத்தானே! இன்னமும் இந்த வட்டாரம், ஆரியவர்த்தம் என்றும், இந்துஸ்தானம் என்றும் கூறிக்கொள்வதிலே பொருள் உண்டா!

வடஇந்தியா ஆரியர் வசப்பட்டு ஆரிய பூமியான பிறக, இஸ்லாமியப் படையெடுப்புகளால் இடுப்பு முறிக்கப்பட்டு, 762 ஆண்டுகள், பிடித்தவனுக்கெல்லாம் பெண்டாகும் பிரதேசமாயிற்றே என்று இந்துக்கள் ஓலமிடும் நிலையை

அடைந்தபிறகு இன்ற, அங்கே பெருவாரியாக முஸ்லிம்கள் நிந்திருந்தும், மினாரட்டுமூ மசூதியும் எங்கும் வானை அளாவி இருந்தும், குதப்மினாரும் ததாஜ்மஹாலும், ஜும்மா மசூதியும் ஹுமாயூன் தோட்டமும், காலத்தின் பேரையும் சமாளித்துக் கொண்டு காட்சி தந்தும், மணர்வெளியும் கோதுமைப் பயிரும, ஒட்டகங்களும் உருவத்தில் உயர்ந்து கெம்பீரர்களும், உருட்டும் பார்வையும், நிலம், இனம், இருக்கும் இயல்பு மற்ற பகுதிக்கு மாறுபட்டது என்பதைத் தெளிவாகக் காட்டியும், அந்த இடமும், இந்துஸ்தானமே, அங்கும் இந்து ஆட்சியே நிலைபெற வேண்டும். மத்திய ஆடசியின் கீழே, அந்த வட்டாரமும், ஒரு மாகாணமாக இருத்தல் வேண்டும். அது தனிஅரசாகாது என்று கூசாது வாதிடுவது அழகா என்று கேட்கிறேன். டாக்டர் அம்பேத்கர் இந்த வட வட்டாரத்தை, ஒரு அயில்வே வாகினுக்கு ஒப்பிடுகிறார்; அழகாக, பொருததமாக. எப்படி எந்த என்ஜினுடன் இணைக்கப்படுகிறதோ அதன் போக்கின்படி இணைக்கப்படும் வாகின் செல்கிறதோ, அதுபோல், இந்த வட வட்டாமும், எந்தெந்தச் சமயத்திலே, எவரெவர் வலுத்து இபத்தனரோ, அவ்விதம் சென்றது, அந்த ஆட்சியிலே இருந்தது. கஜனி முகமது காலத்திலே இது கஜனியின் சாம்ராச்யத்திலே ஒரு பகுதி. கஜனியைத் தலைநகராகக் கொண்டு, முகமது இந்த வடவட்டாரத்தை ஆண்டு வந்தான். பூகோளத்திலே, இந்தியா! சரிதத்திலே கஜனி ஆட்சியில் சேர்ந்திருந்தது. முகமது கோரி, லாகூரில் முகாம் அமைத்துக்கொண்டு இதனை ஆண்டார். இங்ஙனம், வட வட்டாரம், ரயில்வே வாகனாக இருந்தது. அதனைப் பாகிஸ்தான் என்ஜினுடன் சேர்த்தால் என்ன குற்றம்? அதன் பாதை அதுதான்! இதனை உணர மறுத்தால், உள்நாட்டுப் பிரச்னை தீராது. மேலும, இந்த வட்டாரம், வீரத்தால் பிடிக்கப்பட்டதே தவிர தண்டகாரண்யத்துத் தவசிகளை உளவாளி களாகக் கொண்டு, பர்ணசாலைகளைச் சதிபீடங்களாக்கி, வஞ்சகத்தால், திவிடத்தை ஆரியர் சிதைத்தனரே அதுபோல், வஞ்சகத்தால், பிடித்தாரில்லை!

அதுமட்டுமா! இந்த வட்டாரத்திலே இன்றிருக்கும் இஸ்லாமியர்கள், இந்நாட்டவர், பெரும்பகுதி. இனத்தின் இயல்பு, வாழ்க்கைத் திட்டம், அதற்கு அடிப்படையான மார்க்கக் கட்டளை, அக்கட்டளைகளைக் காத்து ரட்சிக்கும் அரசமைஙபபி ஆகியவற்றால் உண்டாக்கப் படுகிறது. இஸ்லாம், இகத்திற்கும் பரத்துக்கும் கட்டளைகளிட்டது. இகத்தின் கட்டளைகள், இஸ்லாமியரின் வாழ்க்கைத் திட்டமாயிற்ற. அந்த வாழ்க்கைத் திட்டம் அவர்களுக்கெனச் சில இயல்புகளைக் கொடுத்தது. அந்த வாழ்க்கைத் திட்டத்தை, பல நூற்றாண்டுகள் பரிபாலனம் புரிந்த இஸ்லாம்ய அரசர்கள் ரட்சித்தனர். எனவே, வட வட்டாரத்து மக்கள், ஒரு காலத்தில்,ட ஓங்கார பூஜைக்காரராகவோ அகம்பிரமம் என்று பேசினோராகவோ இருந்தவர்களின் மக்கள் என்ற போதிலும், தமது வாழ்க்கைத் திட்டத்தையே மாற்றிக்கொண்டு, அதன் பயனாகப் புது இயல்புகள் பெற்றுவிட்டனர். அந்த இயல்புகள், இஸ்லாமிய மார்க்கத்தை எவரெவர் அனுஷ்டிக்கிறாரோ, அவர்கள் யாவருக்கும், மெக்க முதல் மேட்டுபாளையம் வரை கராச்சி முதல் கான்ஸ்டான்டி நோபில் வரை, பரவி இருக்கிறது. ஒரே வேதம்! ஒரே வழிகாட்டி! ஒரே மார்க்கம்! எனவே இந்த இன இயல்பைப் பெற்று, பெருவாரியாக, தொடர்ச்சியாக உள்ள ஒரு நிலப் பரப்பிலே இருப்பவரிடம், அரசைத் தருவதிலே மேஷம் இருஷபம் சும்மாவா இருந்தனர்! சண்டைகள் எழுவில்லையா! சச்சரவு பார்ப்பதும், உதட்டு உறுவு பேசுவதும், உக்கிர சொரூபம் காட்டுவதும் ஏன் என்று கேட்கிறேன். அக்பர் எவ்வளவு அகன்ற மனப்பான்மை கொண்டிருந்தார். சமரச ஞானவாதியாக இருந்தாரே! அவுரங்கசீப் தானே பிறக முரட்டுத்தனமாக ஆண்டார் என்ற பேசுகிறார்கள். சமரச மனப்பான்மைக்காரராக அக்பர் ஆண்டார் என்பதை எண்ணி அவர் ஆட்சிக் காலத்திலே, இந்துக்கள் சும்மாவா இருந்தனர்! சண்டைகள் எழவில்லையா! சச்சரவு நடைபெறவில்லையா! அக்பர் ஆண்டாலென்ன, அமர்சிங் ஆண்டாலென்ன, இருவரும் இந்தியரே என்று பேசிய, யோக்கியர் எவராவது உண்டா? இந்துக்கள் தமது சதிகளைத் துட்ட அக்பராட்சியைத் திறையாகக் கொண்டகர். அதன் விளைவே அவுரங்கசீப்! இதனை அறிய மறுப்போருக்கு நான் எந்தப் போதகரை அமர்த்துவது. பட்டப் பகலிலே விளக்குக் கேட்டால், நான் என்னென்பேன்!

இப்போதும் நான் சொல்கிறேன். அக்பர் போன்ற ஜனாப் ஜின்னாவை அவுரங்கசீப் ஆக்குவதே இந்து மகாசபைக்காரரின் கிளர்ச்சியின் விளைவாக இருக்கப் போகிறது. இரு இனங்களும், நேசர்களாக வாழவேண்டும என்பதிலே ஜனாப் ஜின்னாவுக்கு இருக்கும் நல்லெண்ணத்தை நசுக்கம் நடவடிக்கைகளே, நாட்டிலே இன்று நடைபெறுகின்றன என்பேன். கட்டுப்பாடான முஸ்லிம் லீக், கற்றுத் தெளிந்த, கனிந்த உள்ளம் படைத்த, ஜனாப் ஜின்னாவின் தலைமையில் இருக்கும் இந்த நாளிலே, இந்து, மஸ்லிம் சமரசம் ஏற்பட வழி வகை செய்து கொள்ளாது போனால், எதிர்காலத்திலே, இந்தியாவிலுள்ள இஸ்லாமியரின் சரிதத்திலே, நாலாவது பானிபட்டு யுத்தம் என்ற அத்தியாத்தைச் சேர்க்கம் சந்தர்ப்பத்தை உண்டாக்கியவர் ஆவோம் என்பதை, உரத்த குரலிலே, சுயராச்யம் கேட்கும் சுடுசொல்லர்கள் மனதிலிருத்த வேண்டுகிறேன். இனத்திற்கோர் இடம் என்ற இன்றியமையாத கொள்கை, பானிபட் மூலம், தீர்க்கப்படுவதே சிலக்கியமென்பதை எவரும் மறுக்க மாட்டார்கள் என்ற நம்புகிறேன். தேரைவிட்டுக் கீழே குதிப்பேன் என்று இந்து சல்லியர்கள் புறப்பட்டால் நான் என்ன சொல்ல முடியும். புறப்பட்டுப் பார்க்கட்டும் என்று விட்டுவிட வேண்டியதுதான்!

ஐயா மாளவ்யாஜீ! மூன்றாம் பானிபட் யுத்தத்திலே, அகமத்ஷா அப்தாலியின் படைகள், மராட்டியரைத் தோற்கடித்ததை மறக்கிறீர்கள் - தோல்வியிலும் ஓர் வெற்றி என்று வாதாடுகிறீர்ளே. மூன்றாம் பானிபர் போரிலே, யார் தோற்றது, யார் வென்றது என்ற சந்தேகம் இருப்பின், நான் ஓர் யோசனை சொல்கிறேன். அதன்படி செய்தால், சந்தேக நிவர்த்தி ஏற்பட்டுவிடும். அதன்படி செய்தால், சந்தேக நிவர்த்தி ஏற்பட்டுவிடும். 1761-ல் நடந்த அந்த மூன்றாம் பானிபட் யுத்தத்தின்போது அகமத்ஷா அப்தாலியுடம்ன 1இலட்சம் போர் வீரர்களே இருந்தனர். மராட்டியரிடம் 6 இலட்சம் பேராம். அது கிடக்கட்டும். இப்போது நாம், பரீட்சார்த்தமாக, நாலாம் பானிபட் யுத்தம் என்றோர் வீர விளையாட்டு அமைப்போம்; நீங்கள் குறிப்பிடும் தேதியிலே, பழைய பானிபட் யுத்தம் நடந்த களத்திலே நான் 700 இஸ்லாமியருடன் வருகிறேன். 7 கோடி பேர் இஸ்லாமியர் கோடிக்கு நூறு பிரதிநிதி வீதம்! இந்துக்கள் 22 கோடியாமே, அவர்கள் 2200 பேர் வரட்டும்! பழய மராட்டிய சந்ததியிலுள்ள, யாராவது ஒரு விஸ்வநாத் ராவ், இந்துப் படைக்குத் தலைமை வகிக்கட்டும நீர் வேடிக்ககை பார்க்க வாரும். வாள், வில், ஈட்டி, சூலம் முதலிய ஆயுதங்களுடனே போர் நடக்கட்டும. அந்த நாலாம் பானிபட் போரின் முடிவு, உமக்குச்

சந்தேகத்தைத் துடைக்கும் இன்றைய சிக்கலையும் போக்கும். நான் கொண்டுவரும் 700 இஸ்லாமியரில், ஒரு பட்டாணியோ, ஆபகனோ இருக்கமாட்டாரென்று உறுதி கூறுகிறேன். அவர்களிடம் உமக்கு அச்சம் அதிகமாயிற்றே! இந்த ஏற்பாட்டுக்குத் தாங்கள் சம்மதிக்கிறீரா? என்று 1925-ல், நாஜிபாபாத் மௌலானா அக்பர்ஷா கான் என்பவர், பண்டித மாளவியாவுக்கு ஓர் அறைகூவல் விடுத்திருந்தார்! முஸ்லிம்லீக் முரசு திக்கெட்டும் கிளம்பாமுன்னம், நாலாவது பானிபட் நடத்தவும் தயார் என்ற கூறம் நம்பிக்கை இருந்ததென்றால், ஜனாப் ஜின்னாவின் நாதம், நரம்புகளுக்க முறுகேற்ற, லீக் கீதம் இரத்தத்தைக் கொதிக்கச் செய்ய, தேள் தட்டி, பிறை ஏந்தி, பாகிஸ்தான் எமது பறப்புரிமை, அதைப் பெற்றே தீருவோம் என்று இடிமுழக்கமிடும் இஸ்லாமியர்கள் ஏறுபோலுள்ள இந்நாளிலே, நாலாம் பானிபட் நடந்தால், முடிவு எப்படி இருக்கும் என்பதை நண்பர்களே! நினைத்துப் பார்க்க வேண்டுகிறேன்.

2200 இந்து ஒ 700 முஸ்லிம்! ஏன் இங்ஙனம் அந்த மௌலானா கூறினார்! 700 முஸ்லிமும் ஒரே இனத்தவர் என்ற உணர்ச்சி இருக்கிறதே அது, பேதமற்ற தன்மை இருக்கிறதே அது, அவர்களை எஃகு வீரர்களாக்கும்! 2200 இந்துக்களிலே, எத்தனை குலமோ, எத்தனை ஜாதியோ, மதபேதம் எத்துணையோ, குலப்பகை எவ்வளவோ இருக்கும். எனவே களத்திலே 2200 இருப்பினும், கட்டு இராகு, கூட்டு எண்ணம் எழாது. குனியாதிருக்கும் போக்கு இராது. இதையறிந்தே மௌலானா அங்ஙனம் கூறினார். முறைத்துப் பார்த்துப் பயன் என்ன? முகத்தைச் சுளித்துக் கொண்டு பயன் என்ன? நான் உள்ளதைச் சொன்னேன்!!

பானிபட் வாடை வீசிக் கொண்டிருந்தால், பழைய பிளாசி நிற்குமே தவிர, விமோசனத்துக்கு வழி பிறக்காது.

(திராவிட நாடு - 04.10.1942)

# விவேக சிந்தாமணி மட்டும் போதாது !

மண் எங்கும் இரத்தம்! விண் புகை மயம்! வீதிகளில் டாங்கிகள், வீடுகளில் பிணங்கள்! ஸ்டாலின்கிராட், இடிந்த கட்டடங்க்ள், கருகிய இடங்கள், கண்ணை மருட்டும் கோரமும் காதைக் குடையும் வேட்டொலியும் கொண்ட பயங்கர தகராக, பழிவாங்கும் பட்டினமாக, பலிபீடமாக, பசி தீராப் புலியாக இன்று இருக்கிறது. ஒரு தெருவேனும் உருவாக இல்லை. ஒரு வீடேனும் முழுதாகக் கிடையாது. ஒரு நிமிடமாவது போல் நடவாமல் இருப்பதில்லை. ஆயிரம் நாஜி விமானங்கள் அந்த எஃகுக்கோட்டையைத் தாக்கி வருகின்றன; இடிந்த கட்டடங்களிலே ரஜிய வீரர்கள் பதுங்கிக்கொண்டு, நுழையும் நாஜியை நையப் புத்தபடி உள்ளனர். புகை, சுருண்டு சுருண்டு, சுடுநாற்றத்தையும் பிணவாடையையும் எங்கும் பரப்பி, நெஞ்சையும் நாசியையும் பாழாக்குகிறது; நேருக்கு நேரி நின்று, நாஜிகளுடன், நில்லு! என்னைக் கொல்லு! பிறகே இந்த இடம் உனக்கச் சொந்தம்! என்று கூறும் செஞ்சேனைச் சிங்கங்கள், சீறிப் போரிடுகின்றன. ஒரு தெருவைப் பிடிக்க, 200 டாங்கிகளுக்குமேல் தேவைப்படுகிறதாம் நாஜிகளுக்கு; இவ்வளவு பலிகொடுத்துப பெற்றாலும், மறுபடியும், அதே வீதியிலே வீரப்போரிட்டு ரஜியர்கள் வெற்றிக்கொடி நாட்டுகின்றனராம். ஸ்டாலின் கிராட்சமர், சரிதம் இதுவரை காணதவிதமானது. கடந்த ஜெர்மன் சண்டையின்போது, வெர்டூன் போரை, வீரர் செயல் என்று வியந்தனர். ஸ்டாலின் கிராட்சமரைக் கண்டோரும் கேட்டோரும், இனி, வெர்டூன் வெறும் விளையாட்டு என்ற கூறுவர். அத்தகைய உக்கிரப் போர் நடக்கிறது. அங்கு நாஜிகளே எதிர்பார்த்தது இதுவல்லவே! எங்கிருந்தோ இந்தச் செஞ்சேனை கிளம்புகிறதே என்று ஆச்சரியப்படுகின்றனர்.

ஸ்டாலின் கிராட் மக்களே! பணிந்துவிடுங்கள். போரிட்டுப் பயன் இல்லை. பாய்ந்து வருகிறோம் பாரீர் என்று, நாஜி விமானங்கள் குண்டுக் கடிதங்களை வீசி, வாரங்களாகி விட்டன. பின்னர் குண்டும் வீசினர்; கொடுமை புரிந்தனர். ஸ்டாலின்கிராட் சளைக்கவில்லை! நேச நாட்டுப் பொருள், வட ரஜிய துறைமுகத்திலே வந்து சேர்ந்தன. மார்ஷல் டிமோஷெங்கோ, ஸ்டாலின் கிராடைத் தாக்கும் நாஜிப படைகளை விலாப் பக்கமும் தாகுகிறார். உலகமே வியந்து போற்றுகிறது. அந்த வீரர்கள் போரிடும் விதத்தைக் கண்டு. வெண்டல் வில்க்கி கூறியபடி, பல இலட்சம் ரஷியர்கள் படுகளத்தில் மாண்டனர். பல இலட்சம்

ரஷியர்கள் நாஜிகளின் கைதிகளாயினர். பொருள் நஷ்டம் அபாரம்! ஆயினும், தன்னந் தனியே நின்று போரிடும் ரஷ்யா தலைகுனியவில்லை! எவ்வளவோ இன்னல்! குளிர்காலம் பிறக்கிறது. நல்ல உணவு, போதுமான உடை குளில் போக்கும் கரி, மரம் முதலியவையும் தேவையான அளவு ரஷியருக்குக் கிடையாது. குளிரையும் கொடுமையையும் சகித்துக்கொண்டு, ஐரோப்பாவின் அடிமை நாடுகள் தரும் பெரும் உதவியைக் கொண்டு, ஹிட்லர் தன் முழு சக்தியுடன் தாகுகுவதையும் தடுத்து நின்று, தன்னிகரற்ற தனிப்பெரும் வீரனாய் விளங்குகிறது ரஷியா! வாழ்க ரஷியா! வெல்க சோவியத்!

ஸ்டாலின் கிராடை நாஜிகள் பிடித்தாலும் பயனில்லை! சுடுகாடுதான் கிடைக்கும். சுந்தரமான நகரம் போய்விட்டது. நாஜிகள் ஆர்ப்பரிப்புச் சுருதியும் குறைந்துவிட்டது. ஹிட்லரின் படையும் அலுத்துவிட்டது. குளிரும் கூத்தாடத் தொடங்கிவிட்டது.

வீர ரஷியரைப் பாரீர்! தீரமிக்க சீனர் புகழ் கேளீர்! சாலமன் தீவிலே அமெரிக்கா பெற்ற வெற்றியைக் காணீர்! மடகாஸ்கரிலே மாற்றான் மண்டியிட்டான் அறிவீர்! ஜெர்மன் நகர் மீது குண்டு சினோம், குதூகலிப்பீர்! ஜெர்மன் நகர் மீது குண்டு வீசினோம், குதூகலிப்பீர்! என்று பிரிட்டிஷ் பிரமுகர்கள் பேசுகின்றனர். பத்திரிகைகள் எழுதுகின்றன. நாஜி பலத்தின் பெரும்பகுதி ரஷிய களத்திலே நசுக்கப்பட்டுவிட்டது என்றுரைக்கின்றனர். நமது பலம் வளர்ந்துகொண்டே வருகிறது. நமது துருப்புகள் துடிக்கின்றன. நமது தலைவர்கள் தயாராக உள்ளனர். நமது கடற்படை கெம்பீரமாகக் கடலிலே உலவுகிறது என்று கூறுகின்றனர். தக்க சமயம் வந்ததும் - அந்தச் சமயம் வந்துகொண்டே இருக்கிறது - நாங்கள் இரண்டாம் போர்முனை துவக்கத்தான் போகிறோம் என்று நம்பிக்கை தருகின்றனர். இங்கு, ஜெனரல் வேவல், இழந்துவிட்ட பர்மாவை மீட்கவேண்டுமென்பது, என் திட்டம் என்று கூறுகிறார். உலகம், அப்படியா! அப்படித்தானா! என்ற கேட்டுக் கேட்டுக் களைத்துவிட்டது. கடும்போர் ஓரிடத்திலே, காகிதக்கணை மற்றோர் புறத்திலே

என்று கூறவேண்டிய நிலைமையில் ஒருக்கிறோம். குளிர்காலம் பிறந்ததும், இரண்டாம் போர்முனை ஏற்பட்டால் ஜெனரல் வேவலின் படைகள் பர்மாவுக்குள் புகுந்து, ஜப்பானியப் படைகளைத் தாக்கினால், தினமும் ஆயிரம் விமானங்கள் பெர்லின்முது குண்டு மாரி பொழிந்தால், அமெரிக்க பறக்கும் கோட்டைகள் டோக்கியோவைத் தாக்கினால், உலகம், கேட்டு உவகை கொள்ளும், ரஷிய களத்திலே, வீரர்கள், பன்மடங்கு அதிகரித்த உற்சாகத்துடன் போரிடுவர். ஹிட்லரும், இருமுனைகளிலே படைகளைப் பிரித்து ஏவி, இடையே நின்று, இங்கு என்ன நிலை? அங்கு என்ன நடக்கிறது? என்று கேட்டுக் கேட்டுக் கலங்கி, இரு நெருப்பின் இடையே சிக்கிய ஒநாய்போல் ஓலமிட்டுக் கிடக்க நேரிடும்.

இரண்டாம் போர் முனையைத் துவக்கவேண்டும் என்று எங்களை யாரும் குத்திவிட வேண்டியதில்லை என்று கூறுகிறார் பிரிட்டிஷ் துணை முதலமைச்சர் மிஸ்டர் அட்லி. அவசரப் படேல் என்ற பல்லவியைப் பல பிரிட்டிஷ் பிரமுகர்கள் பாடுகின்றனர். அவசரப்பட்டுக் களத்திலே குதித்து, முன்பு டன்கர்க்கிலே பின்வாங்கி ஓடினதுபோல், நேரிட்டுவிடக்கூடாது. ஆகவேதான் சகல ஏற்பாடுகளையும் சரியாகச் செய்துகொண்டு, சக்தி அத்தனையையும் பூரணமாகத் திரட்டிக்கொண்டு, களத்திலே கால் வைப்போம். புகுந்தால், பெற்றி கிடைக்கம் என்னும் நிலைமை தோன்ற வேண்டுமே என்று விளக்கமுரைக்கின்றனர். போர்முனை துவக்கும் விஷயமாக ராணுவத் தலைவர்கள் கூறுவதையே கேட்கவேண்டும். வெறும் பேச்சு உதவாது என்று விளம்புகின்றனர்.

இவை அத்தனையும் விவேகமாக இருக்கலாம். அதிலே நமக்குச் சந்தேகமில்லை. இந்த விவேகசிந்தாமணியை மட்டும் பிரிட்டிஷார் பதிப்பித்துக் கொண்டிருந்தால், விற்பனை குறையும் என்று மட்டும் கூற ஆசைப்படுகிறோம். வரட்டும், வரட்டும என்று காத்துக்கிடக்கும் போக்குதான், இதுவரை வம்பாக முடிந்ததன் காரணம். வந்து பார்க்கட்டுமே சிங்கப்பூருக்கு. நெருங்கட்டும டோப்ரூக் அருகே என்று

கூறிக்கொண்டு இருந்தது. பின்னர் வேதனையே தந்தது, அச்சு நாட்டினர், அவசரக்காரர். ஆத்திரங்கொண்டோர். கஷ்ட நஷ்டம் பற்றிய கவலையற்றோர். திடீரெனப் பாய்வர். திக்கெட்டும் திரும்புவர். தன்வலி மாற்றான் பலியைத் திராசிட்டுப் பார்த்துவிட்டே துருப்புகளைச் செலுத்தவேண்டும் என்ற திட்டங்கொண்டோரல்ல. அவர்களை அழிக்க, விவேக சிந்தாமணி மட்டுமே போதாது. இரவு நெடுநேரம் வரையிலே நிபுணர்கள் விழித்திருந்து விவாதிப்பது போதாது. பொருள் உற்பத்திப் பெருக்கம் கண்டு, பெருமைப்படுவது போதாது. பெரிய பெரிய படை புறப்படுகிறது என்று பேசுவது போதாது. இரத்தத்தைச் சிந்தவேண்டும். ஹிட்லரின் கன்னெஞ்சமும் கலங்குமளவு, நாஜிப்படை நடுங்குமளவு, இரத்தத்தைச் சிந்தவேண்டும். அந்த செந்நீரே, பிடிபட்ட நாடுகளுக்கு இன்றுள்ள அடிமை அழுக்கைப் போக்கி, சுதந்திரத்தைத் தரும். அந்த வெள்ளமே, கள்ளச் சிந்தனைகொண்ட சள்ளைக்காரரைச் சாய்க்கும். ஆம்! நாஜியையும் அவனது கிழக்கத்திக் கூட்டாளையையும் நசுக்க, விவேகசிந்தாமணியுடன் வீர வெண்பவும் வேண்டும். பல செபாஸ்டபூல்கள் நேரிட்டும் கவலையில்லை. வெற்றிக்காக அத்தகைய விலை கொடுக்கத் தான் வேண்டும. வேதனையும் நஷ்டமும் பிறக்கட்டும். பீதி கொள்ளத் தேவையில்லை. நந்தவனத்திலே நாரியர் நறுமலர் கொய்வதுபோல், வெற்றியைப் பெற முடியுமா! பல இலட்சம் பேர் பலியாகலாம்! பாதகமில்லை. இருந்தும் இறந்தோராக உலகினரை விட்டுவிடுவதைவிட பல கோடி மக்கள் பதட்டத்தோடு வாழ சில இலட்சம்பேர் மாள்வதிலே, உலகக்கு உண்மையில் நஷ்டமில்லை. உலகம் இதைத்தான் இன்று விரும்புகிறது. நாலாம் ஆண்டு இது! இதுவரை நடந்தவை, நம்மவருக்கு நாக்கில் நீரின்றிச் செய்துவிட்டது. இவ்வாண்டும். விவேக சிந்தாமணியையே வெளியிட்டால், உலகம், உவகையுடன் அதனைக் கேட்டுத் திருப்தி பெறாது.

பிரிட்டிஷ் விவேகசிந்தாமணி இங்ஙனம் இருக்க, அங்கே, அகில உலகும் ஆசசரியப்படும் ரஷியாவிலே, சூரர்கள் வாழும் சோவியத்திலே,

ஸ்டாலின் ஆளும் நாட்டிலே, பொதுஉடைமைப் பூமியிலே நாஜியின் நாட்டமத்தனையும் பாய்ந்துள்ள இடத்திலே ஓயாத சண்டை, உக்கிரப்போர், உள்ளம் குலுங்கும் இரத்த வெள்ளம், பிணக்குவியல், போர்ப்புயல்! விவேகம், பிரிட்டனிலே முடிசூட்டிக்கொண்டிருக்கலாம்; சோவியத் நாட்டிலே இத்தகைய விவேகசிந்தாமணி வெளியிட நேரமில்லை! பேச ஆள் இல்லை! விவாதிக்க நிபுணர்கள் இல்லை! பிரமுகர்கள் வேறு வேலை செய்தபடி இருக்கின்றர்! நேரம் பூராவும், நினைப்பு பூராவும், நாள் பூராவும், நாடு பூராவும், போர், போர், போர்! எதிரியைத் தாக்கு! எதிர்த்துப் போரிடு! எங்கும் போர்புரி! இறக்கும்வரை போர்! என்பதே பேச்சாகிவிட்டது. கப்பல் நஷ்டத்துக்கும் கப்பல் உற்பத்திக்கும் உள்ள புள்ளிவிவர பேத விளக்கத்துக்கோ, பிறவற்றுக்கோ சோவியத் நாட்டிலே நேரமில்லை!

ஸ்டாலின் கிராடிலே எத்தனை படை? இன்னம் எவ்வளவு வேண்டும்?

லெனின் கிராடிலே எதிரி எவ்வளவு தூரம் பின் வாங்கினான்?

காகசசிலே கணவாய்களிலும் மலைப் பகுதியிலும் காசாக் வீரர்கள் கண்காணித்து வருகின்றனரா?

காலினின் முனையிலே ஜெர்மன் கடைகள் களைத்துக் கிடைக்கின்றனவா? வாரனேஷில், ரிஜாவில், நமது படைகள் முன்னேறினவா? என்று கேட்டுக் காரியத்தைக் கவனிக்கவே. ஸ்டாலினுக்கு நேரமிருக்கிறது. இவ்வளவு வீர வேகங்கொண்டு, வெறிபிடித்த ஜெரிமனியரை விடாது விலா நொறுக்கிவரும் ரஷியா, நேச நாடுகளிடமிருந்து, எதிர்பார்ப்பது என்ன? நீங்களும் பேரிடுங்கள்! இரண்டாம் போர் முனையைத் துவக்குங்கள். எல்லா பாரத்தையும் எமது தலைமீதே இருக்குமாறு விடாதீர். இந்தச் சமயத்திலே இரண்டாம் போர்முனை ஏற்படுத்தினால், நாஜிகளின் படைபலம் பினவுறும். நாங்கள் அந்தச் சமயத்திலே சரியான சவுக்கடி தந்து. எதிரியைச் சாய்ப்போம் என்றே ரஷிய களத்திலே சாகும் ஒவ்வோர் நாஜியும், உடையும் ஒவ்வோர் விமானமும், ரஷியா மட்டும் ரணகளச் சூரனாக இல்லது போயிருந்தால், நேசநாடுகள் மீது ஏவப்பட்டிருக்கும் என்பதில் சந்தேகமில்லை!

துள்ளிக் குதித்தவனைத் துவள வைத்துவிட்டது ரஷியா! பாந்தோடி

வந்தவனைப் பயப்படச் செய்துவிட்டது. கொக்கரித்தவனைக் குமுறச் செய்துவிட்டது. நாஜியை நாணமுறச் செய்துவிட்டது!

இதனை ரஷியா எங்ஙனம் செய்தது? இரத்தத்தால் களத்தை மெழுகி, ரஷியக் காளகைளைக் கழுகு கொத்திட பலி தந்து, ரஷிய செல்வத்தைச் செலபிட்டு, வீரப்போர் புரிந்து! இதுவரை இதனால் ரஷியாவுக்கு எற்பட்ட நஷ்டம், பலப்பல டன்கர்க்குகளுக்குச் சமானமாக இருக்கும். யுக்ரைன் போனாலென்ன? கோதுமை இராது சரி! வேறு இடத்திலே கோதுமை கிடைக்கும். மானம் பறிபோகவிடலாமோ, என்றன்றோ எண்ணினர் சஷியர். செபாஸ்டபூல் போனாலென்ன? அங்கு நாஜி அடைந்த நஷ்டம் போதும்! என்று கூறியன்றோ, வேறு களத்திலே வீரத்துடன் ரஷியர் போரிடுகின்றனர். அவர்கள் சலித்தனரா, இவ்வளவு சமர்கண்டு! களைத்தனரா, இத்தனை கடும் போருக்கும்! இளைத்தனரா, ஏங்கினரா, இவ்வளவு இடம் போயிற்றே. இத்தனை இலட்சம் வீரர் மாண்டனரே என்பதை எண்ணி! போரில் புகுந்தோம், போரிடுவோம்! என்பதன்றி வேறென்ன எண்ணுகின்றனர். ஊருக்கோர் படை வீதம், உலகெங்கும் திரட்டினாலும், இந்த உத்தம வீரர்களுடன் நின்று போரிட்டு, இவர்கள் களத்திலே பிணமாக விழும்போது. கூடக் கீழே வீழ்ந்து இறப்பதைப் பெருமையாகக் கருதும் இளைஞர்கள், எத்தனை எத்தனையோ இலட்சம் உண்டு என்போம். இத்தாலியிலும், ஜெர்மனியிலும் கூட இருப்பர் என்போம்.

வீர ரஷியர்கள், இத்தனையும் கேட்டாரில்லை. ரஷிய மண்ணுக்கு, மற்ற நாட்டாரின் குருதியைக் கொட்டிடக் கூறவில்லை. பொது எதிரியை நீங்களும் ஒரு புறம் தாக்கக் கூடாதா என்று மட்டுமே கேட்கிறது. வீரனின் வேண்டுகோள் அது, கோழையின் கூக்குரல் அல்ல! நேசநாடுகள், இந்த வேண்டுகோளை, எப்போது நிறைவேற்றும்? கேட்டால், குத்தாதீர் என்பார் அட்லி, கேளாவிட்டால் மறவாதீர் என்பார் போலும். ஆனால் ஹிட்லரின் ஆணவப் பேச்சுக்கு 2 ஆம் போர்முனை தவிர வேறு என்ன பதில் உண்டு!

(திராவிடநாடு - 04.10.1942)

# அந்த வெண்கலச்சிலை !

விளாடிவாஸ்டாக் நகரிலே, வீரர்களின் கண்களுக்கும் கருத்துக்கும் விருந்தாக, புரட்சிக்கருத்தினருக்கு எழுச்சி தரும் விதத்திலே, வெற்றிவீரன், விதியை வென்ற தீரன், மதிகொண்டு மதத்தை மாய்த்த மறவன், சோவியத் சிற்பி, சோர்விலாச் சிங்கம், லெனின் உடைய உருவமொன்று, வெண்கலச்சிலையாக அமைந்திருக்கிறது. கெம்பீரமான தோற்றத்துடனுள்ள அந்த வெண்கலச்சிலை, பசிபிக்கடற்பக்கம் இருப்பவரை பற்றி ஒரு வெளிநாட்டுத் தோழர், அதோ அந்தப் பசிபிக் கடலிலே, முக்கியமான போர் முடிவுகள் நடத்தப்படும்" என்று வெண்கலச் சிலை, சுட்டிக் காட்டுவது போலிருக்கிறது என்று கூறுகிறார்.

விளாடி வாஸ்டாக்கிலே உள்ள வெண்கலச்சிலை, இதைக் கூறுவதுடன், ஜப்பானியர்களின் கூடாரமான டோக்கியோவையும் சுட்டிக்காட்டி, "இந்த மண்ணாசைக்காரர்கள் கடலைக்கலக்கி, விண்ணைக்கருக்கி, நிலத்தைக் குலுக்கி வலுவிழந்துள்ள இனத்தவரைவெட்டி வீழ்த்துவர், உஷார்!" என்று உலகிற்கே சுட்டிக்காட்டுகிறதோ வென்று நாம் கருதுகிறோம். ஏனெனில், வீரன் லெனின், இந்தியா எனும் இந்த நிலப்பரப்பு, நெடுங்காலமாக, நெஞ்சைப் பறிகொடுத்த, நெறியை மறந்த, நாடி முறுக்கிழந்த, நாச நினைப்பைப் பெற்ற, நானாவிதக் கூட்டத்தினரின் சாவடிபோன்று இருந்துவருவதையும், சாத்திரங் கூறிமக்களின் ஆத்திரத்தை அடக்கிடும் சழுக்கரும், மடத்தனத்தைப்புகுத்தி மனமருளை உண்டாக்கும் மதபோதகர்களும், கட்டுக்கதைகளைக்கூறி மக்களின் கருத்தைக் கெடுக்கும் குடிலரும், சாமபேததான தண்டமெனும் சதுர்வித உபாயங்கற்று, சிண்டு முடிந்துவிடும் சாணக்கியரும், மலிந்த இடமாக இருந்து வருவதையுங்கண்டு, இந்தப் பூபாகத்தின் மீது பாயவும் இறைகொள்ளவும், கடல் அலைபோல் கபடக்கருத்து மனதில் கொந்தளிக்கும் ஜப்பானியர் ஒரு நாள் கிளம்புவர் என்பதையும் முன்கூட்டியே தெரிந்து கொண்டேயிருப்பார்.

வேறு தலைவர்கள் அந்தராத்மாவைத் துணைகொண்டனர், மருளே கண்டனர், லெனின் துணைகொண்டது அறிவை, எனவே, இவ்வுண்மையை அறியாமற் போகவில்லை. வெண்கலச்சிலை, விளம்பிடுவது இதுவாகத்தான் இருக்கும். இன்று நிலைமை அந்த அளவுக்கு வந்துவிட்டது. அசாம் மாகாணத்திலே, ஜப்பானிய விமானங்கள் குண்டுகளை வீசத்தொடங்கி விட்டன. ஏறக்குறைய நூறுவிமானங்கள் வட்டமிட்டனவாம், குண்டு பொழிந்தனவாம், நேசநாட்டு விமான நிலையங்களையும் சென்ற வாரம் தாக்கினவாம். ஆனால் அசாம் அஞ்சவில்லை! அசாம் அஞ்சிடத் தேவையுமில்லை!! அச்சமே, இன்று ஜப்பானியரை, அசாம்மீது பாயச்செய்கிறது. அசாமிலிருந்து கிளம்பும், நேசநாட்டுப்போர் முழக்கம், பர்மாவிலே பாசறைகள் அமைத்துக்கொண்டுள்ள ஜப்பானியரின் செவியைக் குடைகிறது! ஜப்பானிய ராணுவ ஏற்பாடுகள் பிரிட்டிஷ் அமெரிக்க விமானத் தாக்குதலால் பர்மாவிலே குலைந்துவருகிறது. சீன மண்ணிலே, சீறிடும் சியாங்கின் படைகள், செக்கியாங்கிலேயிருந்து சிதறிடித்து விட்டன ஜப்பானியப் படைகளை, சாலமன் போரிலே, ஜப்பானின் ஜம்பம் சாயவில்லை. பக்க மேளத்தின் கதி இதுவெனில், பிரதமபாடகர், அங்கு, ஸ்டாலின்கிராடிலே, இருப்புக் கோட்டையிலே, இரத்த ஆற்றிலே, முகாரி பாடுகிறார்.

ஸ்டாலின் கிராட்! சரிதத்திலே ஒரு தனிச்சிறப்புள்ள சம்பவம்! உலகப்போர் வீரர்கள் கண்டு களித்து, கேட்டுக்களித்து, வீர உணர்ச்சி பெற வேண்டிய கோட்டமாக விளங்குகிறது. டாங்கிப் படைகளால் உடைக்கப்பட முடியவில்லை! விமானப் படையினால் நொறுக்கப்பட முடியவில்லை! தரைப்படையினால் தகர்க்கப்பட முடியவில்லை! ஸ்டாலின்கிராடை எதிர்த்து எதிர்த்து ஜெர்மன் படைகள் சளைக்கின்றனவேயன்றி, ரஷியர் சளைக்கவும் சாயவும், சோர்ந்து போகவும் பயந்து ஓடவும் மறுக்கின்றனர். ஸ்டாலின்கிராட், அச்சுநாட்டினரின் கொட்டத்துக்கு ஒரு சவக்குழி!

அதைக்கண்டு, அச்சுநாட்டுக் கீழ்க்கோடி பங்காளி அஞ்சா திருக்க முடியுமோ! மேலும், இனி பலமான முன்னேற்பாடுகளுடன் சீனா மூலமாகவும், இங்கிருந்தும், நேசநாட்டுப் படைகள், கிளம்பி, பர்மாவைத் திருப்பிப் பிடிக்க ஏற்பாடு பூர்த்தியாகி இருக்கிற செய்தியும்

கிலிமூட்டிவிட்டது. மற்றும், பலம் பொருந்திய பிரிட்டிஷ் கடற்படையொன்று, இந்துமகாசமுத்திரத்திலே இருக்கும் செய்தியும் ரோமலின் ரணகளத்திலே, பிரிட்டிஷ் வெற்றி முரசும் கெட்டியாகக் கேட்பதும், ஜப்பானை மருட்டிவிட்டிருக்கும். எனவேதான் மருண்ட ஜப்பான், அசாமின்மீது பாய்கிறது. மருளாது அசாம்! இந்தியாவிலே, அச்சு நாட்டினரின் கைக்கூலிகளின் ஆர்ப்பாட்டத்தைக்கண்டு அயராமல், யுத்த ஏற்பாடுகள் அமோகமாகி விட்டன. கடலோரப் பாதுகாப்பும், ராணவ முஸ்தீப்பும், ஏ.ஆர்.பி. திட்டமும் இவை போன்றவையும் நேர்த்தியான முறையிலே உள்ளன. இனி அஞ்ச வேண்டாம்! அந்த வெண்கலச்சிலையின் வீரமொழிகளை ரசமாகக் கொள்வோம், விரோதிக்கூட்டத்தின் குடலை அறுப்போம், ஸ்டாலின்கிராட் என்ற வீரமொழியைப் பூஜிப்போம், வீரராவோம் - வெற்றி நமதே!!

1.11.1942

## ஆரியக் கடவுள்கட்கு ஓர் அறைகூவல் !

மூவரே! தேவரே! சூரியசந்திராதியரே! இந்திரனே, வாயு வருண அக்னியாதிகளே! கந்தா, விநாயகா! காளி! வீரபத்திரா! நாரதா! மற்றுமுள்ள ஆரியக் கடவுள்களே! உங்கள் அனைவரையும், சுயமரியாதைக்காரர்கள், கண்டிக்கிறார்கள், மூடமதியிலே முளைத்த காளான்கள் என்று கூறுகின்றனர், ஆரியருக்காக கற்பிக்கப்பட்ட கரையான்கள் என்று செப்புகின்றனர், மக்களுக்குள் பேதத்தையும் பிளவையும் உண்டாக்கி, ஓர் இனம் உண்டு கொழுத்து ஊராள உற்பத்தி செய்யப்பட்ட உதவாக்கரை கருத்தோவியங்கள், என்று உங்கள் அனைவரையும் உரைக்கின்றனர்.

உங்களுக்கும் உக்கிரம் பிறக்கக்கூடுமானால், ஓடி வாருங்கள் பூலோகத்துக்கு, காளைமீது ஏற, கருடனைத் தேடு, அன்னத்தை நாடு, மயிலைப்பிடி, காக்கையைக் கூப்பிடு, என்று உங்கள் ஒவ்வொருவருக்கும் உள்ள வாகனாதிகளை வர்ணிக்க இங்கு காகிதாதிகள் இல்லை. ஆகவே, தத்தம் வாகனமேறி தயக்கமின்றி வாருங்கள்! பாருங்கள், அசாமிலே குண்டு விழுந்து விட்டது! நீங்களோ, நெருப்பைக் கக்கும் கண், நீண்ட சூலம், சக்கரம், கதை தண்டம், வாளாயுதம் வேலாயுதமாகிய ஏதேதோ தாங்கி நிற்பதாக ஏடுகள் கூறுகின்றன. எடுங்கள் உமது ஆயுதத்தை, விடுங்கள் ஜப்பானியர் மீது! ஆமாம்! பிரிட்டிஷாருக்கும், அமெரிக்கருக்கும், சீனருக்கும், இந்நாட்டுச் சேனையினருக்கும், ஏன் வீண் சிரமம், கிளம்பி வாருங்கள், வானவீதியிலே நின்று உமது ஓங்காரக் கூச்சலைக் கிளப்புங்கள், ஓட்டுங்கள், வேட்டுக்காரரை!

இல்லையேல், பிரிட்டிஷ் அமெரிக்க சீன, இஸ்லாமிய, திராவிட நாட்டவரின் வேட்டுகள் வேலைசெய்து, அதன்பின்னர் விரோதி ஓடிய பிறகு, நீங்கள், அதிர்வேட்டு கிளப்பு, அக்கார வடிசல் போடு, ஆடும் அணங்குகளைக் கொண்டுவா, ஆறுகால பூசையைச் செய்து வா, ஆனைவாகன உற்சவம் செய், ஆபரணாதிகளைப் பூட்டு, என்று மட்டும் கேட்டு, ஆரியரை எதிரிகளை ஓட்ட என்ற அவசரத் தபாலை எழுதி, தரலோகம், பிரம்மலோகம், இந்திர லோகம், கைலாயம், வைகுண்டம் என்ற விலாசமிட்டு தபால்களிலே

சுயமரியாதைக்காரர்கள் போட்டால், இப்படி ஊர்களும் இல்லை, பேர்களும் கிடையாது என்று போஸ்ட் மாஸ்டர் கூறி, குப்பையில் போட்டார் கடிதத்தை. ஆனால் குளித்து முடித்ததுமோ, குளத்தங்கரைக்குப் போகும்போதோ, குளிக்கும் முன்போ, குடல்சரியத் தின்றபிறகு "சம்போ மகாதேவா! முருகா! விநாயகா!" என்று அவரே அழைக்க அப்படி ஓர் ஆசாமியும் இல்லை, இருப்பதாகக் கூறப்படுவதும் கிடையாது என்பது அறியாமையா? என்று சுயமரியாதைக் காரன் கேட்பல் வேதசாஸ்திர இதிகாசங்கள், படித்துவாழும் வேதியக்கூட்டம் என்ன பதில் கூறும்?

(திராவிடநாடு - 8.11.1942)

# தூங்கியா விட்டார்கள் !

குறட்டைச்சத்தம் பலமாகத்தான் கேட்கிறது. ஆசாமி தூங்கியே போனான் சந்தேகமில்லை. இனி நமக்கு வேட்டைதான்! என்று கள்ளன் எண்ணிக்கொண்டான். குஷியாக உள்ளே நுழைந்தான். கூடத்திலே படுத்துத் தூங்கிக்கொண்டிருந்த வீட்டுச் சொந்தக்காரனை ஒருமுறை அலட்சியமாகப் பார்த்துவிட்டு, அவனைத் தாண்டிக்கொண்டு, ரூமுக்குள் நுழைந்து பெட்டி பேழையைத் தேடி! வீட்டுச்சொந்தக்காரன் தூங்குவதாக பாவனை செய்து கொண்டிருந்தானே தவிர, உண்மையில் தூங்கிவிடவில்லை. குறட்டைச் சத்தத்தைக் கேட்டு, ஏமாளி, தாராளமாக உள்ளே நுழைவான். பிறகு நையப்புடைக்கலாம் என்றே, உறங்குவதாக பாவனை செய்தான்.

ஏமாளிக்கள்ளன் ரூமுக்குள் காலெடுத்துவைத்ததும், எழுந்தான் வீட்டுக்காரன் சந்தடி செய்யாமல், வைத்தான் ஓர் அறை கள்ளன் முதுகிலே! “அடி ஆத்தே! யாரோ அறையறமாதிரி இருக்கே” என்று துடித்துத்திரும்பிப் பார்த்துத் தூங்கிக்கொண்டிருந்த வீட்டுக்காரன், நிற்கக்கண்டு நடுங்கினான், அடடா! தூங்கிவிட்டேன் என்று எண்ணிதானே, துரைமகன் போல உள்ளே நுழைந்தாய்” என்று கேட்டு அடி, உதை, குத்து ஆகிய வரிசை நடத்தி, ஊர்கூட்டி உதை பாகத்தைக் காட்டி போலீசில்விட்டு நையப்புடைக்க வைத்தான், கள்ளனை! இந்தக் கள்ளனின் மூளைக்கும், சில ஆரிய சனங்களின் மூளைக்கும் அதிக வித்தியாசமில்லை! ஆனந்தவிகடன், ஆஸ்யம் என்று கூறிக்கொள்வதிலே, பெருமை பாராட்டுகிறதல்லவா! மூளை வேகத்தைப் பாருங்கள் கட்சி செத்துவிட்டதாம்! செத்தும் அதற்குக்கிராக்கி. இது என்ன அறிவில்லாததாக இருக்கிறதே என்பீர். இதற்கு பெயர் ஆஸ்யம்! ஆமாம், சிரிக்க வேண்டும் சார், சிரித்தாகவேண்டும்;

“இறந்துபோன பிறகும் அதற்குக் குஷிபிறந்திருக்கிறது” என்று அக்டோபர் 25ல், ஆ.வி. எழுதுகிறது. இறந்தபிறகு எதற்குத்தான் எதுதான் இருக்கமுடியும்! இறந்தபின், எது இருக்கும்! இருந்தால்தானே குஷியோ குமுறலோ இருக்க!! இதுகூடத் தெரியவில்லையே கபந்தத்துக்கு என்றுதானே கூற வேண்டி யிருக்கிறது. அறிவுக்கே புறம்பான இது ஆஸ்யமாம்!

அதாவது ஜஸ்டிஸ் கட்சி, பிணமாகிவிட்டது என்றால் செயலற்றுக் கிடக்கிறது என்ற பொருள் கொள்ள வேண்டுமாம்! சரி! அப்படியே பொருள் கொண்டாலுங்கூட, வீட்டுக்காரன் தூங்குவதாக எண்ணி உள்ளே நுழைந்து உதைபட்ட கள்ளனின் கதி இத்தகைய கசடர்களுக்கு ஏற்படுமே!! அரசிய லிலேயே வீர வெட்டியான் வேடம் பூண்டு உலவினாரே, சூரர், சத்தியமூர்த்தியார், அவர் சொல்லிச் சொல்லி அலுத்தார், ஜஸ்டிஸ் கட்சியை ஐயாயிரம் அடி ஆழத்திலே குழிதோண்டிப் புதைத்துவிட்டேன் என்று! அவ்வளவு ஆழமான குழி தேவை என்று அவர் கருதக்காரணம், கிலிதான்! ஆரியத்துக்கு, அவ்வளவு ஆழமான குழி தேவையில்லை. அது ஏற்கனவே இளைத்து ஈளைகட்டி, எலும்புருக்கியதால் தாக்கப்பட்டு, மெலிந்து எலும்புக்கூடாகிவிட்டது. ஒரு கடைசி அடி, ஒரு சாக்கடைக்குழி போதும், அதைப்போட்டுப் புதைக்க! ஜஸ்டிஸ் கட்சிக்கு, ஆழமான குழி வேண்டும், அது அவ்வளவு பெரியது! வெட்டிய குழி, வேதியருக்கு வீண்வேலையாக முடிந்தது, “மீண்டும் மீண்டும் ஜஸ்டிஸ் கட்சி கிளம்புகிறதே” என்று மீசையற்ற கூட்டம் கூவிக்கிடந்தது. அதன் கொடுக்கு ஆ.வி. அதன் கண்ணுக்கு ஜஸ்டிஸ் கட்சி உயிரற்றுக் கிடப்பதாகத் தோன்றுகிறது போலும். கள்ளன் எண்ணியதுபோல், எண்ணி ஆ. வி. கஷ்டப்பட இஷ்டமானால், தாராளமாக எண்ணிக்கொள்ளட்டும். நாம் எப்படி தடுக்கமுடியும், ஆரியகுதர்க்கர்களின் அறிவுகெட்ட பேச்சை! பட்டால்தானே தெரியும் புரட்டர்களுக்கு படாமலா தப்பித்துக்கொள்ளப் போகிறார்கள்! வருகிறது விரைவில், இதுகளுக்குப் புத்தி கற்பிக்கும் சமயம்! வந்தே தீரும்! அதுவரை, இதுகள் வரட்டுத் தவளைகளாக, குருட்டு நாய்களாக, கிழட்டுக் கழுதைகளாக இருக்கட்டுமே, அதுகளின் ஆசையும் தீர்ந்து போகட்டுமே!!

8.11.1942

# ஆரியரின் அந்தரங்க அகராதி !

(தமிழர்கள் நம்பும் பல கருத்துகளுக்கு ஆரியர் கொண்டுள்ள உண்மையான கருத்து)

## கோயில்

கோவென மக்களை வெளியே அழ வைத்து வாழ்வதற்காக ஆரியர் தமிழரைக் கொண்டே கட்டிவைத்துக் கொண்ட இல்லங்கள்.

## கும்பாபிஷேகம்

கும்பம்= வயது, அபிஷேகம்= ... செய்வது, ஆரியர் வயறு குளிர... வாழ்,ஓர் வழி.

அர்ச்சனை...

ஹர்- சேனை என்பதன் மருஉ. ஹர் என்ற கொள்ளைக் கூட்டத்தாரின் சேனை போல், தமிழரைக் கொள்ளையடிக்க உபயோகமாகும் தந்திரம்.

திராவிட மக்களின் செல்வத்தை வாழ்வையும் இந்த நாட்டிலே கரைக்க உபயோகித்த ஆயுதம். இன்று கொஞ்சம் கூர் மழுங்கிக் கிடக்கிறது.

அரன்.

அரம் என்பதன் திரிபு. தமிழர் வாழ்வைத் துண்டு துண்டாக்க உபயோகிக்கப்பட்ட அரம்= ஒரு ஆயுதம்.

கௌபீனம்.

தமிழருக்கு, அவர்கள் பட்டு பீதாம்பரம். பவுன்புட்டா சேலை முதலிய ஆடைவகைகள் செய்யும் திறமை உள்ளவர்களாக இருந்தாலும், யார் என்ன அணிய வேண்டும் என்பதைக் குறிக்கும் பதம். லகரம், னகரமாகி விட்டது. தமிழர்களுக்கு விஷயம் தெரியாமலிருக்க.

## வினாயகன்

வினா- அகன், என்பதன் கூட்டுச் சொல். ஏன் இப்படி எங்களைத் துரத்தினீர் என்ற வினா தமிழர்களுக்கு தோன்றினாலும், அதை மனத்திற்குள்ளேயே முடங்கும்படி செய்வதற் காக ஏற்பட்ட கற்பனைத் தேவன், வினா அகன், என்பதை வினாயகன் என்று தொகுத்துத் தமிழருக்குத் தந்தோம்.

## ராவணன்

ரா+வண்ணன், ராவணன் என்றாயிற்று, ரா= இரவு, வண்ணன்= நிறமுடையவன், அதாவது கரிய மேனியன், தமிழன்.

## இதிகாசம்

இது, காசம், என்பது தமிழருக்குத் தெரியாதிருக்கும் பொருட்டு, இதிகாசம் என்று கூறப்பட்டது. இது= இந்தக் கதை, காசம்= கேட்டு நம்பினவருக்குக் கருத்து, காசநோய்க்காரரின் உடல் கெடுவது போல் கெட்டு விடும் என்பது புதைந்துள்ள பொருள்.

## வேதம்

பேதம், என்பதையே, வேதம் என்று விளம்பினோம். நாட்டிலே பேதம் இருக்கவே, இந்த வேதம் பயன்படுவிதிலிருந்து, இந்த இரகசியம் விளங்கும்.

## வைகுண்டம்

வை! முண்டம்! என்பதைத் திரித்து எழுதினோம். எம்மிடம், ஏமாறும் முண்டமே! வை, காசு பணம் என்று நம்மவர், திதி முதலிய காரியங்களின் போது தமிழரைக் கேட்க, வை குண்டம் என்ற இரகசிய கோட் (ஊடினந) உபயோகிக்கிறோம்.

## கைலாயம்

தானை முன், என்பது முந்தானை என்று ஆயிற்று, தானை சேலை, முன்= முன்னால் இருக்கும் பாகம். அதுபோலவே லாயம் கை, என்பது கைலாயம் என்றாயிற்று. லாயம்= ஆரியருக்குச் செக்குமாடுகளாக உள்ள ஏமாளி களை அடைத்து வைத்திருக்கும் பட்டி, கை= நம்முடைய கையில் இருக்கிறது என்று, நம்மவர், தமிழரின் சடங்குகளிலே சொல்லுகிறோம்.

இதுவும் இரகசிய கோட் (ஊடினந) தேசிய சர்க்கார் எங்ஙனம் அமைப்பது, இங்கு மூன்று தேசங்கள் உள்ளனவே என்றுரைத்தாலோ, முப்புரிகள் முணு முணுக்கின்றன. பின்னர் எப்படித் தேசீய சர்க்கார் அமைப்பது! இதுசமயம் தேவை, தேசீய சர்க்காரால்ல, இன்று தேசீயம் என்பது, ஓர் கதம்பக் குழம்பாக இருக்கிறது. நாட்டுப் பிரிவினைக்குப் பிறகே, தெளிவான தேசீயம் தோன்ற முடியும்! இன்று அவசியமானது, போரைத் திறம்பட, வெற்றிகரமகா நடத்தித் தரக்கூடிய, பலமான சர்க்கார்- அதைப் பரிபூரண மாக ஆதரிக்கும் மக்கள்- அம்மக்களைக் சரியான வழியிலே நடத்திச் செல்லும் தலைவர்கள்- இவையே! இவைகட்குக் குறுக்கே நிற்பது, ஆச்சாரியார்ர் போன்றோர், அடிக்கடி விடும் அறிக்கைகள், சில சீமை மகாத்மாக்கள் விடும் யோசனைகள், பேட்டிகள் ஆகிய நிகழ்ச்கிகளே என்போம்.

தேசீய சர்க்கார் தேவை, தேவை என்று இன்று கூறும், ஆச்சாரியார், அதை அமைக்க, அவருக்கு இருந்த அருமையான சந்தர்ப்பங் களைத் தவற விட்டுவிட்டார் என்பதை, தர்க்கத் துக்காக அவர் மறுக்கலாமே தவிர, மனதார மறுக்க முடியாது!! போர் துவங்கிய உடனே, பிரிட்டனுடன் பேரம் பேசும் காரியத்திலே இறங்காது, பிணக்கு தீர, இங்குள்ள கட்சிகளைக் கலந்து சமரசம் உண்டாக்கியிருந்திருப்பின், இன்று ஆச்சாரியார் கோரும் சர்க்கார் இருந்திருக்கும்! அன்று அவரது ஆசை, வாலியை வீழ்த்த வேண்டும் என்பதன்றி வேறில்லை, இன்று விம்மிடுவது வீண் என்போம். இப்போதும், மூன்றாண்டுகட்கு முன்பு பேசியிருக்க வேண்டியதைப் பேசிக் கொண்டிருந்து பயன் இல்லை.

இன்று, ஆச்சாரியார் ஆங்கிலேயருக்கு, வேண்டுகோளோ, எச்சரிக்கையோ விடுவதை விட உண்மையிலேயே நாடு, ஜப்பானியரிடம் சிக்காமலிருக்க வேண்டுமென்ற எண்ணமிருப் பின், போர்க்காலத்திலே பேரம் பேசக்கூடாது என்று கூறிவிட்டு, களத்தை வேவல்கள் கவனிக்கட்டும், மக்களை நாங்கள் கவனித்துக் கொள்கிறோம் என்று கூறிவிட்டு, மற்றத் தலைவர்களுடன் கலந்து பேசி, மக்களிடையே, போரில் வெற்றிபெறுவதற்கான ஆர்வம் பிறக்கும் வேலையைச் செய்தலே, முறை என்போம்.

கல்கத்தாவிலே ஆச்சாரியார் பேசிய போது, தமது காங்கிரஸ் சகாக்களுக்குச் சொன் னார், ``பிரிட்டிஷ் ஆட்சியை இத்தனை வருஷ காலம் பொறுத்துக் கொண்டோம், இனி இரண்டாண்டு பொறுத்துக்கொள்வோம்'' என்ற அருமையான போதனை! அத்துடன்

ஒன்று சேர்த்து ஆச்சாரியாருக்கு நாம் அர்ப்பணம் செய்கிறோம், இந்த மூன்றாண்டுகளாக உமது சகாக்கள் ஒதுங்கி இருந்தது போல், இன்னும் இரண்டாண்டு, வெற்றி கிடைக்கும்வரை, ஒதுங்கி இருக்கட்டும், இந்தச் சமயத்திலே, அவர்களை உள்ளே புகுத்தும் முயற்சி வேண்ண்டாம்.''

இதனை நாம், எட்டு கோடி முஸ்லீம், நாலு கோடி திராவிடர், ஆறு கோடிக்கு அதிகமான ஆதிதிராவிடர் சார்பாகக் கூறுகிறோம். ``பவதி பிஷாந்தேஹி' என்று, சியாங்கே ஷெக்கிடமோ, ரூஸ்வெல்ட்டிடமோ சென்று பயனில்லை என்று சீரிய புத்திமதி கூறிய டாக்டர் அம்பேத்காரின் அறிக்கையையும், கண்டவர். காற்றாடியைப் பறக்க விடும் கபடம் வேண்டாம் என்று ஜனாப்ஜின்னா விடுத்த எச்சரிக்கையையும், கவனப்படுத்துகிறோம்.

- திராவிட நாடு, 8-11-1942

# வாழ்க சோவியத்

“இதோ இந்த மாமிசப் பிண்டத்தைப் பாருங்கள்! இவனுடைய மாளிகையைப் பாருங்கள். இவனுக்கு இரண்டாயிரம் ஏக்கரா நிலம். எடுபிடி ஆள் இருநூறு. பாரிசிலே பத்து பங்களா! இலண்டன் கம்பெனிகளிலே பங்கு! கொஞ்சிக்குலவும் கோகிலங்கள் பத்து. இவன் வயதோ அறுபது! நான் வாலிபன். வாழ்க்கைக்கே வழியில்லை. வீடில்லை; வேலையில்லை. உணவு இல்லை. கொஞ்சிட யாரும் இல்லை. கோவெனக் கதறினாலும், தேறுதல் கூறுவார் இல்லை.”

“தோழனே! புலியைப் பிடித்தானபிறகு, அதற்குப் போதனை புரிந்து அதன் சுபாவத்தை மாற்ற முடியவா போகிறது - பிடி துப்பாக்கியை அவன் மார்புக்கு நேரே. ஒழியட்டும் ஜாரின் கூலி. அழியட்டும் அக்ரம ரஸ்புடினுக்குப் பரமானந்த சீடனாக இருந்தவன். பிடி! சுடு!!

ஒரு வேட்டுச் சத்தம்! ஒரு கதறல். ஒரு பிணம் கீழே! ஒரு கூட்டத்தின் ஆரவாரம்.

“போர்வீரனா நீ! விம்மிக்கொண்டிருக்கும் என்னைச் சுட்டுத் தள்ளுவதுதான் உன் வீரமா? என்னைப்போல் ஏழை நீ. என்னைப்போல் நீயும் ஓர் அடிமை! ஜாரின் கொடுங்கோன்மையிலே நீயும் இருக்கிறாய். கூலிக்காக உன் கூடப்பிறந்த தோழர்களைச் சுடப் போகிறாயா? வீரனானால், அக்ரமக்காரர் மார்பிலே உன் ஈட்டியைச் செலுத்து! போரிடும் வகை தெரிந்தவனானால், புறப்படு இப்போதே, போக போக்கியங்களிலே புரண்டு கொண்டு, புழுப்போல் துடிக்கும் மக்களைக்கண்டு, மமதையோடு, “தடிப்பயலை எங்காவது போய் மூட்டை தூக்கச்சொல்லு, வண்டி இழுக்கச் சொல்லு, வாசலிலே நின்றுகொண்டு வரட்டுத் தவளைபோல் கத்துகிறான். விரட்டு அவனை” என்று வேலையாட்களுக்கு உத்தரவிட்டு விட்டு, திராட்சைரசம் ஊறிக்கிடக்கும் அழகியின் அதரத்தைச் சுவைத்துக் கொண்டிருக்கும் சீமானுடைய மாளிகையை மண்மேடாக்கு! அது போர், அது வீரம்! பசி துரத்த, பதைத் தோடி வரும் என்னை ஜாரின் கூலிக்காச் சுடுவது, கோழைத்தனம், கொடுமை, மடமை, துரோகம்.”

“தங்கையே! என் தவறை உணர்ந்தேன். வயற்றுக்காகத்தான் இந்தக் கோலம் பூண்டேன். என் ஈட்டி இது உன் இருதயத்திலே பாயாது. என்

இனத்தவரை அது இனி தீண்டாது. இந்த ஈட்டி, ஏழை அழுத கண்ணீர் ஏழைகளின் பெருக்கத்துக்குக் காரணமாகவும், ஏழைகளின் உழைப்பை உறிஞ்சும் அட்டைகளாகவும் உள்ள ஜாரின் தர்பார் தளுக்கர்களின் தசைகளை இது இனி பசிதீரத்தின்னும். இதோ கிளம்புகிறேன்!"

ஒரு வீரனின் மனமாற்றம்! விவேகமுள்ள வனிதையின் முகமலர்ச்சி!!

* * *

"நான் டூமா மெம்பர்!"

"டூமா தூளாகிறது. உன் முடிவும் நெருங்குகிறது."

"ரஷிய மக்களை ஆட்சி செய்ய அதிகாரிகளின் பீடம், டூமா. தெரியுமா?"

"ஆட்சி செய்யும் அதிகாரியின் அக்ரம ஓநாயே! உன்னிடம் பேச நேரமில்லை. நீ இத்தனை நாட்களாக ஆண்டதற்கு இதோ இந்தக் குண்டுதான் காணிக்கை."

ஒரு வெடிச்சத்தம்! ரஷிய பார்லிமெண்ட் (டூமா) மெம்பரின் மார்பிலிருந்து இரத்தம் பீறிட்டு வெளியே வருகிறது. ஒரு கோரக்கூக்குரல்......

தோற்காது! வால்கா நதிக்கரையிலிருந்து, விளாடிவாஸ்டாக் வரையிலே, ஜெர்மானியர், தமது பிணங்களைக் குவித்து, அதன்மீது நடந்து செல்ல வேண்டும்!! ஓர் அடி ரஷிய நிலத்துக்கு, ஒரு ஜெர்மானியனின் உயிர்தான், ரஷியா விதித்துள்ள விலை! சோவியத்தை இந்த முறையான விலை கொடுத்து வாங்க, மக்களின் உயிரை மண்ணென மதிக்கும் ஹிட்லராலும் முடியாது!

மண்டை மீது ஓங்கி அடித்தாலும், வெறிநாய் தனக்குச் சாவுநிச்சயம் என்பதை உணர்ந்து ஓடாது. வெறி அதிகரித்து, மேலும் பாயும்! விவேகமிருப்பின், நாஜிகள், ஸ்டாலின் கிராட் சமரிலேயே பாடம் தெரிந்து கொண்டு ஓடியிருப்பர். ஆனால், வெறிநாய்கள் வோல்கா நதிக்கரையை விட்டு ஒழியவில்லை! அவர்களை விரட்டியடிக்கா முன்பு வீரரஷியரும் ஓயப்போவதில்லை. நிலங்களை நாசமாக்குவது எளிது, ரஷிய நினைப்பை நாசமாக்க முடியாது. அது ஜார் கொடுமை எனும்

நெருப்பிலே வெந்து, புரட்சிச் சம்மட்டியால் அடித்துக் கூராக்கப்பட்ட அரிவாள்! அது நாஜியின் நினைப்பை அறுத்தொழிக்கும் என்பதை அறிவாளிகள் அறிவர்.

ஜோயா பதினெட்டாண்டு பாவை! காதல் மொழியும், கட்டித் தழுவுவதும் முத்தமும், சரசமும் பெற்று வாழ வேண்டிய வாலிப வனிதை! மாஸ்கோவிலே, படித்துக் கொண்டிருந்தாள் ஜோயா! மாஸ்கோவை நோக்கி ஜெர்மன் பட்டாளங்கள் செந்நாய்க் கூட்டம் போல் சீறிவருவதைக் கேட்டதும், சிந்தனையிலே சிங்கம் குடி புகுந்தது. நாட்டை நாசமாக்க விரோதிகள் முனையும் போது ஏடு தூக்கிக் கிடப்பதா? என் நாட்டினருடன் நானும் சேர்ந்து நாஜியை நசுக்குவேன் என்று கூறினாள் ஜோயா! வாலிபத்தை மறந்தாள், வாழ்க்கையை மறந்தாள். அவள் மனதிலே காதல் மணம் இருந்திருக்கவும் கூடும். யாரறிவார்! எழில் பூத்த இளமங்கை, நான் மாஸ்கோவுக்கு வெளியே நின்று மாற்றானை எதிர்க்கும் மறவருடன் போய்ச்சேருவேன் என்று கூறினாள். சென்றாள்! பெட்ரிஷ்ஷெவோ என்ற கிராமம், மாஸ்கோ அருகே உள்ளது. அதுதான் ரஷியர்களின் முகாம். பதுங்கிப்பாயும் கொரில்லா வீரர்களின் கூடாரம். ஜோயா அதிலே தங்கினாள்! நாஜிகளைத் தாக்குவது, நாஜிகளின் முகாம்களைக் குலைப்பது, தீயிடுவது, போக்குவரத்துகளைப் பொசுக்குவது, இவை ஜோயாவின் காரியம். பகலெல்லாம் காட்டிலே வாசம். இரவிலே வெளியே நடமாட்டம். ஜோயாவின் நடமாட்டம், நாஜிகளுக்குத் திண்டாட்டம் தந்தது. “எவளோ ஒரு பெண்! இளமங்கையாம். அவள் செய்யும் துணிகரம், பயமூட்டுகிறது” என்ற பேச்சு நாஜிவட்டாரத்திலே கிளம்பிற்று. சுந்தரி ஜோயா, சுவஸ்திகக் கொடியருக்கு, பயங்கரமான பிரச்னையானாள். அவள் தனது தீரத் திருவிளையாடலைச் செய்து கொண்டிருக்கையில், ஜெர்மானியரிடம் ஓர் நாள் பிடிபட்டாள், அன்று ஜெர்மன் போக்குவரத்து வண்டிகளைக் கொளுத்தச் சென்றாள், சிக்கிக்கொண்டாள். சிக்கினது ஜோயா என்று தெரிந்ததும், சீறினர் ஜெர்மானியர். சித்திரவதை செய்தனர். மற்ற கொரில்லா வீரர்கள் பதுங்கியருக்கும் இடம் எது, கூறு, என்று கேட்டனர் ஜெர்மானியர். ஜோயா வாய் திறக்கவில்லை!

கடுமையான பனி. ஜோயா அரை நிர்வாணமாக்கப்பட்டாள். அந்தப்பனிப்பாதையிலே, பாதரட்சையின்றி ஜோயாவை நடக்கச் செய்தனர். நடந்தாள், ஆனால், நண்பர்கள் எங்கே உள்ளனர் என்பதைமட்டும் கூறவில்லை. நாக்கு உலர்ந்து விட்டது நங்கைக்கு.

பருகநீர் கேட்டாள், பாதகர்கள் கிரோசின் கொடுத்தனர், கிண்டலுக்கு. சித்திரவதை கோரிய பலன் தராமற்போகவே, நடுத்தெருவிலே, தூக்குமரம், நாட்டி, ஜோயாவைத் தூக்கிலிட்டனர். இந்தக்கோரத்தைக்கண்டு கலங்கினர் பெட்ரிஷ் ஷெவோ என்ற பட்டியின் மக்கள். ஜோயா, "தோழர்களே, துயறுறாதீர்! தீரமாக நின்று போரிட்டு, நாஜியை நாசம் செய்யுங்கள், சுட்டெறித்து விடுங்கள், துரத்துங்கள் சுவஸ்திகக் கொடியரை. சாக நான் அஞ்சவில்லை. மக்களுக்காக மாள்வதை நான் மதிப்புக்குரிய காரிய மாகக் கொள்கிறேன்" என்றுரைத்தாள். ஜெர்மானியரைப் பார்த்தாள், "என்னைத் தூக்கிலிடுவீர்! நான் ஒண்டி ஆசாமியன்று! நாங்கள் இருபதுகோடி பேர் இருக்கிறோம். இவ்வளவுபேரையும் தூக்கிலிட உங்களால் முடியாது. பழிக்குப்பழி வாங்க வேறு பேர் வருவர். ஜெர்மன் சோல்ஜர்களே! சரணடையுங்கள், உங்கள் காலம் முடிவதற் குள். செஞ்சேனை வெற்றிபெறப்போவது உறுதி" என்றுரைத்தாள்.

தூக்குக்கயிறு கழுத்திலே ஏறிக்கொண்டது. கீழே காலைத் தாங்கிக்கொண்டிருந்த பெட்டியை ஜெர்மானியன் உதைத்து எடுக்கிறான். ஊசலாடுகிறாள் அந்த வீரமங்கை அந்த நேரத்திலே உரைத்தாள் "தோழர்களே! விடை கொடுங்கள், போரிடுங்கள். பயம் விடுங்கள். ஸ்டாலின் நம்மிடையே இருக்கிறார். உங்களை விடுவிக்க அவர் வருவார்."

ஸ்டாலின் படைகள், ஜோயாவின் கடைசி மொழியின்படியே அவர் பெட்ரிஷ்ஷேவோ கிராமத்திலே பின் நுழைந்து, ஜெர்மன் படைகளை விரட்டி அடித்துவிட்டனர். அப்போதுதான், சோவியத் சர்க்கார், இள வீரமங்கையைப் பற்றிக் கிராமத்தினர் கூறக்கேட்டு, அவள் புகழ்பரப்ப "சோவித்தின் வீரர்" என்றபட்டத்தையும், லெனின்பதக்கம், தங்க நட்சத்திரப் பதக்கம் ஆகியவற்றையும் மாண்மணிக்கு அர்ப்பணம் செய்து மாஸ்கோமுதல் விளாடிவாஸ்ட் வரையிலே அவள் நாமம் விளங்க செய்தனர்! ஜோயாவின் உறுதி போதாதா, சோவியத் ஒருபோதும் தோற்காது என்பதை விளக்க.

எத்தகைய இடுக்கண்வரினும் சமாளிக்கும் சக்தி சோவியத் மக்களுக்கு இயற்கையாகவே இருக்கிறது. பாடுபடாது பொருள் ஈட்டியவன் கொள்ளையடித்துக் குபேரனானவன் சொத்தின் அருமை அறியாது, கண்டபடி ஆடிக்கெடுவதுபோலவே,

தியாகத்திலேயே மூழ்கி விடுதலை பெறாமல், கவலையற்றுத் தூங்கும் நேரத்திலே மரத்திலே இருக்கும் கனி காற்றடித்துக் காலடியிலே வீழ்வதுகேட்டு விழித்தெழிந்து அதனை எடுத்துக்கொண்ட கதைபோல், விடுதலை பெறும் மக்கள், அதன் அருமையையும் நொந்துகொள்ளார், அதற்கு ஆபத்தும் கீழே வீழ்கிறது - புரட்சிக்காரன் புது இறை தேடிக் கொண்டு வெளியே போகிறான்.

* * *

“எட்டாம் நம்பர் பட்டாளத்துத் தலைவனா! வாடா வகைகெட்ட முட்டாளே. மக்களைச் சுட்டுத்தள்ள உத்தர விட்டாயே, இதோ இப்படித்தானே சுடவேண்டும்!”

மற்றோர் வெடிச்சத்தம். பதக்கங்கள் அணிந்த படைத் தலைவன் பிணமாகக் கீழே வீழ்கிறான், படையிலே இருந்த போர் வீரன், சிரித்தபடி, மற்றத்தோழர்களைப் பார்த்து, “இதோ எட்டாம் பட்டாளத்துத் தலைவன், எப்படிப் பெற்றான் இந்தப் பதக்கம்? வீரம், திறம் காட்டியா? இல்லை! அவன் தங்கை ஒரு நடன சுந்தரி! தர்பாரிலே ஆடினாள், அவள் கண் சுழல்வது கண்டு காமம் சுழன்று ஜாரின் பிரதானி ஒருவன் இலயித்தான். இந்தக்கணம், நமது படைக்குத் தலைவனாக இருக்கநேரிட்டது. ஒழிந்தான் உலுத்தன்.” என்று கூறுகிறான்.

* * *

“ரொட்டி! ரொட்டி! மலைபோல ரொட்டிக்குவியல். பசிதீரத் தின்னுங்கள், பாட்டாளிகளே உயிர் வாழுங்கள்.”

“அநீதிக்கு அரண்களாக உள்ள அதிகார பீடங்களை அழியுங்கள். அடங்கிக்கிடந்த தோழர்களே! பயமின்றி வெளியே வாருங்கள். பழமை பறந்தோடிவிட்டது. பாதகர்கள் பிணமாயினர். புது ஆட்சி பிறக்கிறது. பசி தீரும் காலம். நமது உழைப்பு நமக்குப் பயன் தரும் காலம். ஊராள்வது ஊராரை மாளச்செய்வதற்கே என்று ஊளையிட்டோரின் தலைகள் உருளும் காலம். ஊமைகள், பிரசங்கியாகலாம். கோழைகளும், வீரராகவும், கோட்டைகள் தூளாகின்றன. தர்பார் தவிடுபொடியாகி விட்டது. அதர்மத்துக்கு உடந்தையாக

இருந்த பாதிரிக்கூட்டம் பச்சை இரத்தத்திலே நீந்திச் சாகின்றனர். பொழுது வந்தது! புரட்டு ஒழிந்தது! புது ஆட்சி பிறந்தது! புறப்படுங்கள், புன்னகைபூத்த முகத்துடனே!”

* * *

ஜாரின் உல்லாச ரயில் வண்டி, பெட்ரோகிராடுக்கு வந்து சேரவில்லை. புரட்சி செய்தி கேட்டதும் ஜாரின் மனதிலே கவலை தோன்றிவிட்டது. எங்கோ கிராமத்திலே ஒளிந்துகிடக்கிறான் ஜார்.”

இவையும் இவைபோன்ற வேறு பலவுமான காட்சிகள், பேச்சுகள், நிகழ்ச்சிகள், பெட்ரோகிராட் நகரிலே, ஓர் நாளிரவு நடந்தது; இருபத்தைந்து ஆண்டுகளுக்குமுன்பு! 1917 பிப்ரவரி 27ந் தேதி! அன்று தான் ரஷியப்புரட்சியின் உதயம்! அன்று தான் முதலாளித்தனம் மூலையில் உட்கார்ந்திருப்பதாகக்கூறினாலும் போதாது, மூட்டை முடுச்சுடன், டான், வோல்கா, நதிகளைத் தாண்டி, ரஷிய எல்லையையே கடந்து, எங்காவது சென்று தீரவேண்டும் என்று ரஷியமக்கள் உத்திரவு பிறப்பித்தனர்! அன்றுதான், அநியாயத்துக்குத் தூக்குத்தண்டனை. அக்ரமக்காரருக்கு அந்தமான்! செல்வச்செருக்கர்களுக்குச் சிரச்தேம்! உல்லாச வாழ்வினருக்கு மரணச்சீட்டு. ஊராண்ட ஜாருக்கு இறுதி அறிக்கை! உலகம் கேட்டுத்திடுக்கிட்ட திருநாள் அது. 25 ஆண்டுகளுக்கு முன்பு நடந்தது, ரஷியப் புரட்சி. ரஷியப் புரட்சியின் 25ம் ஆண்டு விழாவை, இவ்வாண்டு, ஸ்டாலின், வேட்டொலியே பக்கமேளமாகக் கொண்டு, கொண்டாடியிருக்கிறார். அன்று உள்நாட்டு அக்கிரமக்காரரை ஒழிக்க அவரும் அவரது தலைவர் லெனினும், பிறரும் உத்திரவு பிறப்பித்தது போல், இன்றும் ஸ்டாலின், ரஷிய மக்களுக்கும், பாட்டாளி உலகு பூராவுக்கும், உலகத்திலேயே புதியதோர் அக்கிரமத்தைப் புகுத்த முனையும் பெர்லின் ஜார் தர்பாரை, தவிடு பொடியாக்குக என்று உத்தரவிடுகிறார். ஜாரின் கூலிகள், ஜார் பரம்பரைக்குப் பல்லக்குத் தூக்கிகள், ஜாரின்

சுபாவக் காரருக்குச் சுருதிப்பெட்டிகள், ஜாராட்சி போன்ற ஆட்சியிலே அடைப்பம் தாங்கும் “பேறு” பெற வேண்டுமென்ற நினைப்பு கொண்ட நாடி நடுங்கிகள் தவிர, மற்றையோர், “சபாஷ்! ஸ்டாலின்!!” என்று அவரைப் புகழ்ந்து, அவர் மொழி வியந்து, அவர் விழியைத் தம் வழியெனக்கொண்டு, அவரது ஆள்காட்டி விரலைத் தம் சட்டமென்று கருதி அவர் கூறும் காரியத்திலே நம்மாலான பங்கு செய்வோம் என்று முன்வருவர்! முயல்கள் புதருக்குள் பதுங்கட்டும்! நரிகள் பொந்துகளைத் தேடட்டும். சமதர்மச் சிங்கங்களே! நீங்கள் உங்கள் குகையை விட்டு வெளியே வாருங்கள்! ஸ்டாலினின் குரல் கேட்டும், வெளி வராதவர்கள், கோழைகள் மட்டுமன்று, ஜாரின் கூலிகள், சமுதாயச் சாக்கடைப் புழுக்கள்!!

“240 டிவிஷன் ஜெர்மானியர், ரஷியாவைத் தாக்குகின்றனர்! நெப்போலியன், மாஸ்கோவைத் தாக்கியபோது அவனிடமிருந்த போர் வீரர், 30,000! இன்று செஞ்சேனையை 30 இலட்சம் நாஜிகள் தாக்குகின்றனர். செஞ்சேனைக்கு இன்றுள்ள மகத்தான ஆபத்து என்னவென்பது இதிலிருந்து விளங்கும். இத்தகைய ஆபத்தில், ரஷிய வீரர்கள் காட்டும் வீரம், எவ்வளவு அபாரமானது! வேறு எந்த நாடும், வேறு எந்த சேனையும், நம்மைப்போல, நாஜிக்கொள்ளைக் கூட்டத்தை எதிர்த்து நிற்கமுடியாது.

தோழர்களே, நாம் விடுதலைப் போரிலே ஈடுபட்டிருக் கிறோம். நேசநாடுகளுடன் சேர்ந்து போரில் ஈடுபட்டிருக்கிறோம். மனித சமுதாயத்தின் கொடிய விரோதிகளை, முறியடித்து, வெற்றிபெற்றே தீருவோம்.

ஹிட்லராட்சியைத் தவிடுபொடியாக்கித்தீர வேண்டும், தவிடு பொடியாக்குவோம். யுக்ரைனிலே, அக்ரமநாஜிகள் செய்யும் கொடுமையை நான் அறிவேன். பாதுகாப்பற்ற நமது பாட்டாளி களைச் சித்திரவதை செய்கிறார்கள். சொத்தைச் சூறையாடு கிறார்கள். சொல்லொணாக் கஷ்டம் நம் மக்களுக்கு. நம் சுந்தரிகள் கற்பழிக்கப்படுகின்றனர்.” - என்று ஸ்டாலின் கூறுகிறார். பாட்டாளிகளின் இலட்சிய பூமி, நாஜிக்குக் குச்சு வீடா! வீரர்களின்

கோட்டம் வெறியர்கட்கு வேட்டைக்காடா! நெப்போலியனை நடுங்கவைத்த நாடு, நொந்து நலிவதா! அதைக்கேட்ட பின்னர், உலக ஏழை மக்கள், தங்களுக்கு "விமோசனம்" உண்டு என்று எண்ணிடவாவது, முடியுமா! ரஷிய ரணகளத்திலே, ஹிட்லரின் ஜெயக்கொடி நாட்டப்பட்டு விட்டால், பாட்டாளி மக்கள் ஆட்சி ஏற்பட முடியும் என்ற எண்ணத்துக்கு சவக்குழி வெட்டப்பட்டது என்று தான் ஆகும். சோவியத் சுருண்டபிறகு, "சோற்றுக்கில்லாதார்" என்ற சொல்லம்பால் தொல்லைப்படும், உலகப்பாட்டாளி மக்களின் எதிர்காலம் சுருண்டே போகும்!

சோவியத் மக்கள் விடுதலைபெற்றது, வீரத்தால், விவேகத்தால் எனவே அந்த விடுதலைக் காக்கவும் வகை அறிவர், வீரமே மந்திர விளக்குக்கு நெய் என்பதை அறிவர். எனவே எத்தகைய ஆபத்தையும் பொருட்படுத்துவதில்லை. ஸ்டாலின் கிராட் சரிந்துவிட்டது என்று பறைசாற்றி, எத்தனை நாட்களாயின. இப்போதும் நடப்பது என்ன? சமர்! எப்படி முடிந்தது? சோவியத் சுபாவம் அது. ஸ்டாலின் கிராடின் வெளி அரண்களைத் துளைத்துக்கொண்டு நாஜிகள் புகுந்தனர். கல்டிமோஷேங்கோ, ஸ்டாலின் கிராடிலிருந்து காகசஸ்வரையிலே பெரும் களத்தைக் காத்து வருபவர். ஸ்டாலின் கிராட் நகருக்கு ஜெர்மானியர் புகுந்தனர் என்ற ஊர்கோட்டையாகட்டும்! வீடு களமாகட்டும்! வீட்டுக்குள் இருவரும் ஒவ்வோர் அறையும் கொலைக்களமாகட்டும் என்று உத்திரவிட்டுவிட்டார். ஸ்டாலின் கிராடிலே, நடுவழியாகவும், வடமேற்கு எல்லைவழியாகவும் ஜெர்மன் படைகள் புகுந்து கொண்டிருந்தன. ஜெர்மன் விமானங்கள், வட்டமிட்டு, குண்டு வீசிக் கொண்டிருந்தன. பெர்லின் ரேடியோ, ஸ்டாலின்கிராட், வீழ்ந்துவிட்டது என்று பிரசாரம் செய்துகொண்டிருந்தது.

உலகமே, தீர்ந்தது ஸ்டாலின்கிராட் என்று கூறிப் பெருமூச் செறிந்தது. அதே நேரத்தில், வால்கா நள்ளிரவிலே, நீந்திக்கொண்டு வந்தன செம்படைகள். மேஜர் ஜெனரல் அலெக்சாண்டர் ரோடிம்ஸ்டீவ் என்றவர், தமது படைகளுடன், தீப்பிடித்தெறியும் நகருக்குள் நுழைந்தார். வயது! சமதர்மிகளுடன் மாட்ரிட் அருகே, பாசீசப் படைகளுடன் தீரமாகப் போரிட்டவர். கல்டிமோஷேங் கோவிடம் பாடம் படித்தவர். பயமறியாத வீரன்! புரட்சி ரஷியாவின் புதல்வன்! புகை ஸ்டாலின் கிராடுக்குள் புகுந்து, புண்பட்ட தோழர்களைப்

போர்வீரர்களாகக் கொண்டு, பிளந்து போன பாதைகளை அரணாக்கி, இடிந்துகிடந்த வீடுகளிலே கோட்டைகள் அமைத்து, உள்ளே நுழைந்த ஜெர்மானியரை விரட்டலானார்! ரோடிம் ஸ்டீவ், ரஷியரின் வீரத்திற்கோர் எடுத்துக்காட்டு, தியாக வல்லி ஜோயாவும், வீரவர்மன் ரோடிம்ஸ்டீவும், இத்தகையவர்களைத் தோழர்களாகக் கொண்ட ஸ்டாலினும், இருக்கும்போது, ஏன் சோவியத் ஜெயிக்குமா, தோற்குமா, என்ற சந்தேகம் பிறக்க வேண்டும்! யுக்ரைன் போயிற்றே, காகசசிலே குடைந்துவிட்டனரே, கிரைமியாக விழ்ந்ததே, இனி ரஷியாவிலே தொழிற்சாலைகள், ஆயுத உற்பத்திச்சாலைகள், இயற்கைப் பொருளுக்கு இடம், எங்கே என்றும் அயரத் தேவையில்லை. சோவியத் தலைவன், இதிலும், தனது திறமையைக் காட்டாது போகவில்லை.

ஐரோப்பா கண்டத்திலே, சோவியத்நாடு ஓர் அற்புதபுரி! சுற்றிலும் முதலாளி ஆட்சி, வஞ்சக வல்லரசு வர்த்தக வலை வீசிகள், மக்களின் வாட்டத்தைப்பற்றிய கவலையற்றவர்கள்! சோவியத் ஒன்று மட்டுமே, சோற்றுக்கில்லையே என்று சோர்ந்து கிடந்தவர்களின் சொர்ணபுரி!

பதினைந்து கோடி போர் வீரர்களின் “பாரா” கொடுக்கும் வீரபுரி. ஆகவேதான், வீறாப்புக்கொண்ட ஹிட்லர் கூட்டம், சம்மட்டி அடியினால், சாய்கிறது.

வாழ்க சோவியத்! வெல்க சோவியத்!!

15.11.1942

# மாஸ்கோ ரேடியோ

கொடுமையான இந்தப்போருக்குக் காரணம் ஜெர்மன் மக்களல்ல, அந்த மக்களின் கண்ணையும் கருத்தையும் கட்டிவிட்ட ஹிட்லர் கூட்டமே. இதனை ஜெர்மன் மக்கள் உணரும்படி சோவியத்நாட்டு ரேடியோ பன்முறை பல உண்மை நிகழ்ச்சிகளையும், செய்திகளையும், ஜெர்மன் தாய்மார்களுக்கு எடுத்துரைத்து வருகிறது. விஷயமறியாமல், ஹிட்லராட்சியின் அடிமையாகி அவதியை அனுபவிப்பவரிடம் அனுதாபம் காட்டுவது, உபதேசிப்பது! பாசிசப் பித்துப் பிடித்தலைந்து ஹிட்லரையே பரமபிதாவெனப் போற்றி, உலகை ஆளவேண்டு மென்று பேராசை கொண்டிருக்கும் பேர்வழிகளுக்கு, காரசாரமாகச் சூடுகொடுத்து புத்தி புகட்டுவது, ஆகிய இரண்டு முறைகள், மாஸ்கோ ரேடியோவால் கையாளப்படுகிறது. மாஸ்கோ அழைக்கிறது! என்று மாஸ்கோ ரேடியோ கூவினதும், பெர்லின் முதலிய பட்டின மக்கள், போர் முனையின் உண்மை நிகழ்ச்சி இப்போது தெரியும் என்று கூறுவர்; உண்மையை கூறி உள்ளத்தை உருக்குகிறது ரஷிய ரேடியோ.

ஓர் ஏழை ஜெர்மன் சோல்ஜர். பட்டிமாடு! கூலிக்காகக் களம் புகுந்தவன், குடலறுபட்டு மாண்டான். அவனது குடும்பத்திற்கு, மாஸ்கோ ரேடியோ ஆறுதல்கூறி, அறிவுறுத்துகிறது. படியுங்கள், இருதயத்தைத் தடவும் இயல்புடனுள்ள இந்த ரேடியோ பேச்சை.

“மாஸ்கோ அழைக்கிறது! இபென்ஸ்டாட் நகரத்துவாசி, பிராகிரீமர் என்ற அம்மையை, ரேடியோ அருகேவரச் சொல்லுங்கள். அந்த அம்மையாருக்கு அத்யாவசியமாகத் தெரியவேண்டிய செய்தி இருக்கிறது.

அம்மையே! 116ம் நம்பர் ஜெர்மன் காலாட்படையிலே இருந்த உன் கணவன், லட்விக்ரீமர் என்பவர், ரஷிய வைத்யசாலையிலே இறந்துவிட்டார் என்ற வருத்தமிக்க செய்தியைத் தெரிவித்துக்கொள்கிறாம்.

பெரிசினா நதிக்கரையிலே, ஜெர்மானியர் தாக்குதல் நடத்தியபோது, அவன், ஈரலில் குண்டுபாய்ந்துக் கீழே சாய்ந்தான்.

எங்கள் படைவரிசைக்கு எதிரிலே, 1300 ஜெர்மானியர் வீழ்ந்து

கிடந்தனர்; ரஷிய வைத்யசிகிச்சை வண்டிகள், அவர்களில் காயமுற்ற வர்களுக்குச் சகாயமளிக்க வந்தன, ஜெர்மானியர் அப்போதும் சுட்டனர்.

எங்கள் வைத்யசாலையிலே, உமது கணவன், 18 மணி நேரம் இருந்தான், உங்கள் வீட்டுத்தோட்டத்திலே, நீயும் உன் குழந்தைகளும் இருக்கும் காட்சியடங்கிய ஒரு படத்தைப் பார்த்துக்கொண்டே இருந்தான்.

உன் கணவன் நல்ல போர் வீரன்! போலந்து, பல்கேரியா, யூகோஸ்லாவியா ஆகிய இடங்களிலெல்லாம் சண்டை செய்திருக்கிறான். வீரத்திற்காக அவனைப் பாராட்டித் தரப்பட்ட இரண்டு சிலுவைகளை அணிந்திருந்தான்.

ஆனால், கிரீமர் அம்மையே! உன் கணவன், ஏன், பெரிசீனா நதிக்கரை வந்தான்? அவன் அணிந்திருந்த கௌரவ சிலுவைகளால் உன் குழந்தை குட்டிகள் காணப்போகும் பலன் என்ன? மற்றவர்களின் வீடுகளிலே நுழைந்து, அவ்வீடுகளின் தாய்மார்களையும் குழந்தைகளையும் கொல்வது முறையா? லட்விக்கிரீமர், இவற்றைச் செய்ய விரும்பவில்லை.

நீ அவனுக்கு எழுதிய கடைசி கடிதத்திலே, விரைவில் அவன் வீடு திரும்புவான், உன்னுடனும் குழந்தைகளுடனும் வாழ்வான், விரைவில் சாந்தி ஏற்படும் என்று நம்புவதாக எழுதியிருந்தாய்.

நீங்கள் யாவரும் சமாதானமே விரும்புகிறீர்கள்; நாங்கள் விரும்புவதும் சாந்தியே! ஆனால் ஹிட்லர் அதை விரும்பவில்லை!! அவன் போரை விரும்புகிறான். தாய்மார்கள் தவிக்கும்படி செய்யப்படுவானேன்? சிந்திய இரத்தம் போதாதா?

ஆனால் ஹிட்லருக்கு இது தெரியாது, கணவனை இழந்த காரிகையின் கலக்கம், தந்தையை இழந்த தனயனின் துயரம், மகனை இழந்த தந்தையின் தவிப்பு, ஆகியவைபற்றி 'ஹிட்லருக்குத் தெரியாது. அவனுக்கு மனைவியுமில்லை, குழந்தையுமில்லை!

மாஸ்கோ ரேடியோவின் மொழி, அம்மாதை மட்டுமா, உலகத்தின் மனதையே உருக்கியதன்றோ! மக்களிடம் மாஸ்கோ காட்டும் அன்புக்கு இஃதோர் எடுத்துக்காட்டு. ஆனால் மமதைக்காரன் மாஸ்கோ ரேடியோ,

செய்தி இதோ, மற்றோர், ரேடியோ செய்தி, இது ஆணவம் ஒரு ஜெர்மன் மாதுக்கு, கூறுவது.

ஏ! பிராவெர்னர்! உன் கணவனுக்கு நீ எழுதிய கடிதத்திலே, போர்முனையிலே ஆனால் என்னைப்பற்றியும் குடும்பத்தைப் பற்றியும் நினைத்துக்கொள் என்று எழுதி இருந்தாய்.

ஜூலை 29ந் தேதி எழுதிய கடிதத்தில் எவனாவதொரு ரஷியனிடமிருந்து ரோமத்தால் செய்த மேலங்கி எடுத்து அனுப்பினால் மகிழ்ச்சியாக இருக்கும், ரஷியாவில் அத்தகைய மேலங்கிகள் ஏராளமாக கிடைக்குமாமே, என்று உன் கணவனுக்கு எழுதியிருந்தாய்.

எது கிடைத்தாலும் அங்கு இங்கு, சர்வத்திற்கும் இருக்கிறது என்று எழுதினாய்.

ரஷியத் திருட்டுப்பயலைத் தீர்த்துக்கட்டுவதில், முனைந்து செய், என்றும் எழுதியிருந்தாய்.

அம்மையே! உன் கடிதம் உன் கணவனுக்குக் கிடைத்தது. ஆனால் உன் கட்டளைகளை நிறைவேற்ற முடியாத நிலை அவனுக்கு ஏற்பட்டிருக்கிறது. அவன் ரஷியாவில் பிணமானான்!!

ரஷியாவிலே, ஏராளமான மேலங்கிகளும், மற்றப்பொருளும் உள்ளன. ஆனால் கொள்ளையர்கள் அவைகளை அடித்துக்கொண்டு போகாமல் பாதுகாக்க 200,000 மக்கள் இருக்கின்றனர்!

இதை, இப்போது ரஷியாவில் உள்ள ஜெர்மன் படையினரின் தாய்மார்களுக்குக் கூறு.”

15.11.1942

# சோவியத் கொரில்லா

படை தோற்றால் சண்டை தோற்றது என்பது, மற்ற இடங்களில் நடப்பது. சோவியத்திலே, அன்று! படை அழிந்தாலோ, அல்லது பின்வாங்கினாலோ, களத்திலே இல்லை, என்றுமட்டுமே தான்கூற முடியும் சண்டை தீர்ந்துவிட்டது என்று கூறமுடியாது. காட்டிலே, கணவாயிலே, மலைச்சரிவிலே, ஜெர்மன் முகாமுக்கருகே, வளைவிலே, எங்குச் சோவியத் கொரில்லா இருப்பான், என்ன செய்வது பகலிலா, இரவிலா, எந்த நேரத்தில் எப்போது வருவான், என்று கூறமுடியாது. போர் எங்கும் தோன்றும் தீடீரென்று, எந்தச் சமயத்திலும் வரக்கூடும், கையில் கிடைத்தது ஜெர்மானியன் கையிலே தப்பித்தவறி சிக்கினாலோ, அவன் வாய் திறவாது, மற்றக் கொரில்லாப் படையினர் எங்கே உள்ளனர் என்பதைக் கூற மாட்டான், என்ன செய்தாலும் எவ்வளவு இம்சை செய்தாலும் டாங்கியின் இரும்புப்பற்கள் கொண்ட சக்கரத்திலே கட்டி, டாங்கி ஓட்டுவதை விடவா, சித்திரவதை வேறு இருக்க முடியும்! சோவியத் கொரில்லாவை இத்தகைய சித்திரவதை செய்தும், வாய் திறக்கவில்லை.

செஞ்சேனை, சீறிப்பாயும் புலியன்று, சோவியத் கொரில்லா, நெளிந்து தீண்டிடும் நாகம்! அதன் பற்களைக்கண்டு, ஜெர்மானியர் பதறிக்கிடக்கின்றனர்.

பத்துநாள் போரிட்டோம். பத்துப்பேரை இழந்தோம். பட்டிணத்தைப் பார்த்தோம். இனி பயமின்றி வெல்வோம், வெற்றி ரசத்தைப் பருகுவோம் என்று ஜெர்மன் படையினர் கூறமுடியாது. கொரில்லாவின் கண்கள் ஊருக்குள்ளே கூடாரமிட்டுக் கொண்டிருக்கும் விரோதியின் ஒவ்வொரு செயலையும் கவனித்துக் கொண்டிருக்கும். காடுகளிலே உலவுவர் காலை மாலையிலே மந்திராலோசனை. வேட்டை! எதிர்ப்பட்ட சனியன் அழிந்தான். ஓடும் ரயில் கவிழும், பாடும் ஜெர்மானியன் பிணமாவான், அவன் சேர்த்துள்ள பண்டம் பறிபோகும், அவன் ஆயுதச்சாலை கொள்ளைபோகும். டாங்கிகள், பீரங்கிகள், லாரிகள், விமானங்கள், எதற்கும் ஆபத்துதான். எதிரே, செஞ்சேனை இல்லை என்று அயர முடியாது, சுற்றிலும் இருப்பர் சோவியத் கொரில்லாக்கள், ஆண், பெண், கிழவர், குமரர், சிறுவருங்கூட!

கொரில்லாவிடம் பட்ட கஷ்டத்தை ஒரு ஜெர்மன் படைத்தலைவன்

தனது கடிதத்திலே எழுதினான். அக்கடிதம் சோவியத் படையினரிடம் சிக்கிற்று, அது இது.

“ஆறு நாட்களாக நமது ஆட்கள் அவதிப்படுகின்றனர். உணவு இல்லை. சர்வமும் இங்கு சாம்பலாக்கிவிட்டே ரஷியர் ஊரைவிட்டுச் சென்றனர். பக்கத்து இடங்களிலே போய், உணவு சேகரிக்கலாமென்றாலோ, பாழும் கொரில்லாத் தொல்லை பொறுக்க முடிவதில்லை. இரவும்பகலும், இவர்களின் இன்னல், இம்சிக்கிறது. இருபது பேருக்குமேல், உணவு தேடிக்கொண்டு வரும்படி வெளியே அனுப்பினேன். மூவரே திரும்பிவந்தனர் வெறுங்கையுடன், மற்றவர்கள், கொரில்லாவிடம் சிக்கிவிட்டனர். செத்தனரோ, பிழைத்தனரோ தெரியவில்லை.”

18ம் நம்பர் ஜெர்மன் டாங்கிப் படைக்கு இச்செய்தியை ஒரு பிரிவின் தலைவன் தெரிவித்தானாம்.

சோவியத் கொரில்லாக்கள், புரட்சிக் காலத்தில் எப்படி, ஜாரின் கொடுமைகளை, மறைந்திருந்து, சமயம் கிடைக்கும் போதெல்லாம், தாக்கி வந்தனரோ, அதுபோல் நாஜியிடம் பிடிபட்ட இடங்களிலே இன்று செய்து வருகின்றனர். அவர்களின், போர்முறை, ஜெர்மன் படையினருக்குப் பெரிய தொல்லையாகி விட்டது. அதிலும், குளிர் காலத்திலே, கொரில்லாவின்பாடு கொண்டாட்டம்! இது குளிர்காலந்தானே!!

15.11.1942

# சோவியத் விகடம்

சோவியத் நாட்டிலே, இந்தப் பயங்கரமான போரின்போதும், மக்கள், நகைச்சுவையை இழக்கவில்லை! நகைச்சுவையும் சோவியத் நோக்கத்தைப் பலப்படுத்தும் விதமாகவே உள்ளது. சோவியத் பத்திரிகைகளிலே விகடப் பேச்சுகள் விதவிதமாக வெளிவருகின்றன. எதிரியை நையாண்டி செய்வது அப்பேச்சுகளின் நோக்கம். அவற்றிலே சில. இங்கே தரப்பட்டுள்ளன.

(1) நகரைத் தாக்குவதா!

ஜெர்மன் மேஜர் (சோவியத் நகரொன்றைப் பிடிக்கக் கிளம்புகையில்) : ஏ! லெப்டினன்ட்! ஏன் நமது படைகள் என் உத்திரவின்படி அந்த சோவியத் நகரைத் தாக்கக் கிளம்பவில்லை?

ஜெர்மன் லெப்டினன்ட் : அந்த நகரை, நாஜிகள் பிடித்துவிட்டனர், என்று நேற்றே கொயபிள்ஸ் பெர்லின் ரேடியோவிலே பேசிவிட்டாரே ஏற்கனவே கொயபிள்சிடம் பிடிபட்ட நகரத்திலே நாம் போவானேன் என்று எண்ணுகின்றன போலும் நமது படை.

## (2) வழி தெரியவில்லை

ஒரு ஜெர்மன் சோல்ஜர் : டே, காரல்! தெரியுமா விஷயம், ரஷியர்களுக்கு இருட்டிலே வழியே தெரிவதில்லை.

மற்றொரு ஜெர்மானியர் : அது உனக்கு எப்படித் தெரியும்?

முதல் பேசிய ஜெர்மானியன் : நேற்று இரவு, இரண்டு ரஷிய சோல்ஜர்கள் நமது படைவரிசைக்கு வந்தனர். திரும்பிப் போகும்போது, நமது படையினரிலே நாலுபேரை இழுத்துக்கொண்டு போனார்கள் வழி தெரிந்து கொள்ள!

(3) நேர்மாறாக!

ஒரு ஜெர்மன் சோல்ஜர் : அடே, ஆட்டோ! வீட்டிலிருந்து உனக்கு வந்துள்ள கடிதத்திலே என்ன எழுதி இருக்கிறார்கள்?

ஆட்டோ : ஜெர்மனியிலே எங்கும் நாசமாகவும் மோசமாகவும் இருப்பதாக எழுதி இருக்கிறார்கள். காரல்! உனக்கு உன் வீட்டார் என்ன எழுதி இருக்கிறார்கள்.

காரல் : நேர்மாறாக எழுதி இருக்கிறார்கள். ஜெர்மனியிலே எங்கும் மோசமாகவும், நாசமாகவும் இருக்கிறதாம்.

(4) குஷியா? கூப்பிடு!!

ஜெர்மன் ஆபீசர் : கர்னலே! உமது உத்திரவின்படி ருமேனியப்படை, சோவியத் படையைத் தாக்கக் கிளம்பிவிட்டன.

ஜெர்மன் கர்னல் : ருமேனியப்படை, முணுமுணுத்துக் கொண்டே போயிற்றா?

ஜெர்மன் ஆபீசர் : இல்லையே! மிக்க சந்தோஷமாகக் கிளம்பிற்று.

ஜெர்மன் கர்னல் : அடடா! மோசம் போனோம். ருமேனியப் படை அவ்வளவு குஷியாக கிளம்பிற்று என்றால், சோவியத்தில் சரண்புகுந்து விடலாம் என்பதற்காகத்தான் என்று தோன்றுகிறது. உடனே ருமேனியப்படையைத் திருப்பிக்கொண்டு வந்துவிடு. போ.

(5) விட்டால்தானே!

சோவியத் களக் குழியிலிருந்து ஒரு ஜெர்மன் சோல்ஜர் : ஆட்டோ! நான் ஒரு ரஷிய சோல்ஜரைப்பிடித்து விட்டேன்.

ஜெர்மன் களக்குழியிலிருந்து மற்றோர் ஜெர்மன் சோல்ஜர் : அவனை இழுத்துக்கொண்டு இங்க வாயேண்டா!

சோவியத் குழியிலிக்கும் ஜெர்மானியன் : அவன் என்னை விட்டால்தானே நான் அங்கு வர!!

15.11.1942

# மாஸ்கோ மணம்

குதிரை வாங்கப்போன மந்திரி, கழைக் கூத்தாடினார். அவரது தாண்டவத்தைக்கண்டு மகிழ்ந்த கண்ணன், நரியைப் பரியாக்கியத் திருவிளையாடலைத் திருப்பாசுரத்தால்கூறி, நீறு பூசி, திருத்தல யாத்திரை திருநாளைப்போவார்களாக இந்தத் தில்லும் முல்லும் இந்த நாட்டிலே! “ஆண்டவன்” நரியைப் பரியாக்கினாரே தவிர, மீண்டும், நரியெனும் பழைய வடிவுகொண்டு, ஊளையிட்டு ஓடிவிட்டதென்றே கூறினர். ஏன் எனில், நரி பரியாகும் பாட்டை ஈசனைக் கொண்டு புரியவைக்கும் “மாணிக்கவாசகர்கள்” ஆயினும், நரி நரிதான், பரி பரிதான், நரி, பரியாகவே ஆகிவிடாது, உண்மையைக் கண்டு பயந்து! அர்த்த மற்ற, திருவிளையாடல்கள் எண்ணி, நெஞ்சு நெகிழ்ந்து, கண்ணில் நீர் புரள, கழுத்திலே உருத்திராக்கம் புரள, கைகூப்பித் தொழுது கடம்பா! கச்சி ஏகம்பா! மணாளா! என்று கசிந்துருகும் மெய்யன்பர்களுக்கு, இவ்விதழ் வாசகமோ, மகேஸ்வரன் இன்றி, ஓடப்பர் ஒப்பப்பர் உண்மையை உரைக்கிறது. சோவியத் மலர்! சோர்ந்தவர்களாகி, பாமரர் விவேகிகளாகி, பாட்டாளியும் பராரியும் ஆட்சியாளர் பாலைவனம் புன்னகைப் பூந்தோட்டமாகி, எலும்பு எழில்மிகு உருவமாகி, ஏவலர் ஏறுகளாகி, முயல்களின் முழக்கத்தைக் கேட்டுப் புலிகள் பயந்து செத்து, அன்னக் காவடிகளின் ஆவேசங்கண்டு சொர்ணக்காவடிகள் சுருண்டுவிழுந்து, குப்பை மேட்டுக் கூக்குரல், கோபுரத்தைக் குமுற வைத்த, வீரவிளையாட்டை, செய்துகாட்டி, அற்புதத்தை நிரந்தரமாக்கி அவனியெங்கும் அந்த அற்புதத்தை நிரந்தரமாக்கி அவனியெங்கும் அந்த அற்புதத்தை ஏற்படுத்தமுடியும், ஏற்படுத்த, இமையவளிடம் ஞானப்பால் உண்டவரோ, ஏடு எதிர்நோக்கிச் செல்லச் செய்யும் ஜாலக்காரரோ தேவையில்லை, எவரும் செய்யலாம், உறுதியுடன் உழைத்தால், என்ற உண்மையை உலகுக்கு உரைத்த சோவியத் ரஷியாவிலே, இருபத்தி ஐந்தாண்டு களுக்கு முன்னம் ஏற்பட்ட புரட்சிக் கொண்டாட்டத்தின் நினைவுக்குறியாக, இவ்விதழ் வெளியிடுகிறோம். சோவியத் புரட்சியின் போதிருந்த காட்சிகள் சில தீட்டியுள்ளோம். சோவியத் நாட்டிலே இதுபோது நடைபெறும், போரிலே, உள்ள நிலைமை பற்றிய கட்டுரைகளும் உள்ளன. சோவியத் மக்கள் சோர்வின்றி நடத்தும் இந்தப்போர், உலகிலே நடைபெறும், இரண்டாவது மாபெரும் புரட்சியின் முதலாவது கட்டம் என்பதே நமது கருத்து.

இருபத்தைந்தாண்டுகட்கு முன்பு ஏற்பட்டது சோவியத்திலே, புரட்சி. அதன் வாடை, ஐரோப்பா, ஆசியா கண்டங்களிலேயும் வீசலாயிற்று. இன்று பொதுஉடைமையைப் பொசுக்கவேண்டு மென்று பீர்கடையிலே பிதற்றும் பேயன்வாழும், ஜெர்மனியிலேயே, சமதர்ம வாடை வீசிற்று. சீனாவிலே சமதர்மம் முளைத்தது. பிரான்சிலே சமதர்மிகள் ஆட்சியும் நடத்தினர். சமதர்மப் பிரசாரமும், சமதர்மக் கிளர்ச்சியும் பலமாகிக்கொண்டே வந்தது. முதலாளிகள் மூலையில் அமரவும், மன்னிப்புகோரவும், தமது முறைகளுக்குப் புதிய கருத்துரைகளைக் கூறவும், தொழிலாளரைத் தட்டிக் கொடுக்கவும், தயவு செய் என்றுரைக்கவும், இலாபப் பங்கீடு தருவோம் என்று கூறவும் தொடங்கினர்.

இந்த வேகத்தைக் குறைத்து, சமதர்மப் பூங்காவை அழித்து, சர்வாதிகாரக் கள்ளியைப் படரவைத்த குடிலர்கள் மூவர், முதலிலே, முசோலினி, பின்னர் ஹிட்லர், மூன்றாவதாக, பிராங்கோ, மூலைக்குச்சென்ற முதலாளித்தனத்துக்கு, முலாமிட்டழைத்து, முடிசூட்டி வைத்த மூன்று முரடர்களிலே, ஸ்பெயினிலே இருப்பவர், சக்தியுடன் கொஞ்சம் யுக்தியுங் கொண்டவர் எனவே, அவர் சபை புகாமல், திரைமறைவிலேயே இருந்து வருகிறார். தோல் கிழிந்த முரசானான் முசோலினி! ஹிட்லர்மட்டுமே, ஒரு வீர இனத்தின் மூடபக்தியை முதலாகவைத்து, சமதர்மத்தைச் சாய்க்கும் சூதாட்டத்தை நடத்திக்கொண்டிருக்கிறார். இந்த வெறியை, அடக்க நடக்கும், மாபெரும் இரண்டாம் புரட்சியின் ஒரு கட்டமே, இன்று நடைபெறும், போர். எனவேதான், உண்மையில் சமதர்ம உள்ளங்கொண்டவர்கள், இந்தப் போரிலே, நேசநாடுகளின் முகாமிலே இருப்பதைப் பெருமையெனக் கொள்கின்றனர். இந்தப்போரிலே, சமதர்மம் சாய்ந்து போகுமானால், முதலாளித் தனத்தின் எதிர்த்தாக்குதல் வெற்றி பெற்று, காரல்மார்க்சின் கல்லறை பிளந்தெறியப்பட்டு, லெனின் சிலைகள் தூளாக்கப்பட்டு, ஸ்டாலின் சித்திரவதை செய்யப்பட்டு, சமதர்ம வரலாறுகள் சாம்பலாக்கப் பட்டு, ஏழை அழுத கண்ணீரில், ஏழைகளின் தலைகள் அறுபட்டு மிதந்துகிடக்கவும், அதிலே, முதலாளிமார்கள், ஒய்யார ஓடத்தைச் செலுத்தி, உல்லாசப் பயணம் புரிவர் என்பதும், தெரிந்தவர்கள், இன்றைய போரிலே, அச்சு நாட்டுக்கு எதிரிடையாக இருப்பவர் எவராயினும் நம் தோழர், அச்சு நாட்டுடன் இச்சை கொண்டோர் எவராயினும் அவர் தமது எதிரி, என்ற எண்ணத்தை உறுதியாகக் கொண்டுள்ளார்.

உலகிலேயே, ஓடப்பர் ஒப்பப்பராக முடியும் என்பதை புரட்சி மூலம் நடத்திக்காட்டியது போலவே இப்போதும், ஜெர்மன் படைகளை எதிர்த்து நின்று தாக்க முடியும் என்பதையும், எதிரி ஓர் இடத்

திலே ஜெயிப்பினும் அவனது இடுப்பை முறிக்க, வேறு அரங்கங்களை ஏற்படுத்தவேண்டும் என்பதையும் ஜெயித்துவரும் எதிரியை, வெற்றியிலேயே வேதனை உண்டாகும்படி, பொருளையே பொசுக்கித்தள்ள வேண்டுமென்பதையும், உலகுக்கே எடுத்துக் காட்டியதும், சோவியத் ரஷியாதான்! போர் துவங்கியதிலிருந்து ஜெர்மன் படைகள், எல்லைக்கருகே வந்து விட்டனவென்ற செய்தியைக் கேள்விப்பட்டதும், வெள்ளைக் கொடியை ஏற்றாதநாடு, சோவியத் ரஷியாவே! இரத்தம் புரண்டோடுவதையும், பிணங்கள் புதைக்கவும் நேரமின்றி கோரச்சண்டை நடப்பதையும், கண்டும், மனங்கலங்காத மக்கள், சோவியத் மக்களே! இந்தப் போரிலேயே பிரம்மாண்டமான சண்டைகள் பிடிவாதமான தாக்குதல்கள், தந்திரமான பதுங்கிப்பாயும் முறைகள், சோவியத் நாடுதான் செய்து காட்டிற்று. வாரக்கணக்கிலே, மாதக்கணக்கிலே, முடித்துவிட முடியும் என்று, கூறிய ஹிட்லரின், திட்டத்தைத் தகர்த்த பெருமையும் அந்த நாட்டுக்கே உண்டு.

மாஸ்கோ வெளிப்புறத்திலே வேட்டொலி, மாஸ்கோ நகர் ரேடியோ நிலையத்திலே மதுரமான கீதம்! இதைவிட, வீரம் வேறு, என்று, எங்கே காண்பது. தொழிற்சாலை மிகுந்த பிரதேசத்திலே போர் என்றால், போர் நடத்திக்கொண்டே ஒரு பகுதியினர், தொழிற்சாலை இயந்திரங்களைக் கழற்றிக்கொண்டு, மற்றோர் பகுதியினர் வேறு பாதுகாப்பான இடங்களிலே அவைகளை அமைக்க எடுத்துச் சென்றபடி இருப்பர், அது முடிந்ததும், எதிரி உள்ளே நுழைவான். காண்பது என்ன! கட்டாந்தரை இடிந்த கட்டடங்கள் இவையே! போர் வீரன் உடை, தொழிலாளி முகம், படிப்பாளி உள்ளம் - இது ஸ்டாலின் சித்திரம். 1918லிருந்து 21 வரை, பத்து நாட்டுப்பட்டாளங்கள். பச்சைக்குழவியென்றிருந்த பொது உடைமை ஆட்சியை நசுக்கக்கிளம்பியபோது ஸ்டாலின், ரணகளத்தினராக நின்றான். இன்று நாஜிகள் பாய்ந்து போரிடும் களமத்தனையும், ஸ்டாலின் வீரப்போரிட்டு உலவிய இடங்களே. எனவே போர்த்தந்திரமத்தனையும் தெரியும். ஸ்டாலினுக்கு உறுதுணையாக உள்ள, வரஷிலாவ், டிமோஷெங்கோ, ஆகியோரும், பாட்டாளிக் குடி பிறந்தோர், புது ஆட்சி அமைப்பிலே சிற்பிகள்! எனவேதான், வீர ரஷியரின் வெஞ்சமர், உலகமே கேட்டு

வியக்கும்படியானதாக இருக்கிறது.

சோவியத் வாரவிருந்துபோல், இதுபோது, உலகப் போர்க் களத்திலே, அச்சு நாட்டுப்படைகட்கு அவதியும், நேசநாட்டினருக்கு வெற்றியும் ஏற்பட்டிருக்கும் நிகழ்ச்சிகளை கேட்டின்புறுகிறோம்.

வட ஆப்பிரிக்காவிலே, ஜெர்மன் படைகள் பின்வாங்கி ஓடும் ஓட்டமும் அவைகளைத் துரத்திக்கொண்டும், இதுவரை 20000 பேருக்குமேல் கைதிகளைப் பிடித்துக்கொண்டும் போகும், பிரிட்டிஷ் படைகளின் கொண்டாட்டமும் வடஆப்பிரிக்காவிலே விஷி (விச்சி)க்குச் சொந்தமான பிரதேசத்திலே அமெரிக்கப் படைகளின் பிரவேசமும், விஷிப்படைகளின் விரசமும், டார்லான் எதிரிகளிடம் பெற்றுள்ள சுகவாசமும், குடால்கனார் போரிலே, ஜப்பானியப் படையைத் தலைதூக்க ஒட்டாது, அமெரிக்கப் படைகள் தாக்குவதும் ஸ்டாலின்கிராடிலே ரஷியர்கள் ஒருபுறமும் குளிர் மற்றோர்புறமும் தாக்குவதுகண்டு ஜெர்மானியர் தவிப்பதும் பிரிட்டிஷ் விமானங்கள் விடாமல் தாக்குவதுகண்டு, பீர்கடையிலே நின்று ஹிட்லர், “மனம்வேகிறது! என் செய்வது. எனக்குக் காலம் வரட்டும். பார் அப்போது” என்று ஓலமிடுவதும், சோவியத் வாரம், உலகுக்கு விருந்தென அளிக்கும் செய்திகள். பணிந்தவர் கதியாது? என்பதற்குப் பாடம் புகட்டுவது வட ஆப்பிரிக்காவிலே அமெரிக்க பிரிட்டிஷ்படைகள் வெற்றிபெற்று வருவதைக் கண்டதும் விஷி ஆண்டு பிரதேசத்திலும், ஹிட்லரின் படைகள் புகுந்துவிட்டன. மேலே, மேல்மூச்சு வாங்கியபடி அச்சுப்படைகள் வெற்றி ஆனந்தத்துடன், ஆப்பிரிக்கக் கரைபக்கமாக நேசநாட்டுப் படைகள், இடையே மத்யதரைக்கடலில் இது சமர்சதுரங்கம் இன்று.

இரண்டாம் போர்முனை அடுத்த ஆண்டுதான் - என்று அமெரிக்கத் தலைவர் கூறிவிட்டார். ஐரோப்பாவிலே, இரண்டாம் போர்முனை பற்றி அதை அவர் கூறியிருக்கக்கூடும். ஆனால், ஆப்பிரிக்காவில் கால் ஊன்றிக்கொண்டு, மத்யதரைக்கடலிலே முகாமமைத்து, இத்தரையைத் தாக்குவது, இனி நடவாது என்று கூறமுடியுமா! வட ஆப்பிரிக்காவிலே. திடீரென்று அமெரிக்கப் படைகள் வெற்றிவலம் வருவதுபோல அந்தமானைத் திருப்பிப் பிடித்தாகிவிட்டது. அசாமிய எல்லையிலிருந்து பர்மாவிற்குள் நேசநாட்டுப்படைகள் பிரவேசித்துவிட்டன என்ற செய்தியை நாம் கேட்க அதிகக்காலம் பிடிக்கும்.

நேசநாடுகள், வெற்றிபெற பலவழிகள் உண்டு. சோவியத் நாட்டு நிகழ்ச்சிகள் நேசநாட்டினருக்கு, வீரக்கனல் மூட்டா திருக்குமா!

ஓடப்பராக, இருந்த ரஷியர்கள், உதையப்பராகி, முதலாவது ஆட்சியை முறியடித்து, மக்கள் யாவரும். ஒப்பப்பர் என்பதை சோவியத் நாட்டிலே 25 ஆண்டுகட்கு முன் நிலை நாட்டினர், வாழ்க சோவியத்!! வெல்க சோவியத்!! மாஸ்கோ மணம் மானிலமெங்கும் பரவுக!!

15.11.1942

# வெட்டுப் போர் !

``ஆளுக்கொரு கத்தரிக்கோல்! மற்றொரு கரத்திலே ஈரத் துணி. இரண்டுடனும், தெருக்கோடி, திருக்கோயில் குளத்தங்கரை, மடம், சத்திரம் ஆகிய இடங்களிலே நிற்க வேண்டும். ஒரு வெட்டு! ஒரு துடைப்பு! ஒழிந்தது பீடையின் அறிகுறி, பேதைமைச் சின்னம், பிளவை உண்டாக்கும் வளைவுகள், வைதீக விளம்பரம், இனச் செருக்கு, ஆரிய அழுக்கு!''

வீரன், சற்றுக் கோபத்துடன், காரசாரமாக இதைக் கூறிக் கொண்டு என் எதிரே நின்றான்.

யாரோ, ஏதோ விஷமம் செய்து விட்டார்கள் என்று எனக்குத் தெரிந்து விட்டது. விஷமம் செய்யாதவரையிலே, வீரன் வெளி வருவதில்லை. வேட்டை கிடைத்தாலோ அவனுக்கு விட்டுவிடும் வழக்கமுமில்லை. எனவே, ``யாரப்பா, வீரா, வம்பு செய்தார்கள்? என்ன நேரிட்டது?'' என் கத்தரிக்கோல்!'' என்று நான் கேட்டேன்.

``ஓஹோ! கத்தரிக்கோல் என்றதும், கேலியான நினைப்புக் கொண்டாயா, பரதா! நான் கேட்பது நீ நினைப்பது போல, ``சைனா பஜார் வேலைக்கு அல்ல'' என்று கூறி சிரித்துவிட்டு, ``ஒரு புதுப்போர் ஆரம்பிக்க எண்ணுகிறேன். அதற்கே இந்த ஆயுதபாணிகள் தேவை!'' என்றான்.

``புதுப் போரா?'' என்று நான் கேட்டேன். ``ஆமாம்! நாம் போர் தொடுக்காமல் இருப்பதால், வலிய நமக்கு அழைப்பு விடவும் வந்துவிட்டார் கள். நோட்டுகளிலே, கண்டதை எழுதுகிறார்கள் என்பதைத் தடுக்க, சர்க்கார், கண்டிப்பாக, கோணல் புத்திக்காரரின் கீறல்கள் இருக்கும் நோட்டுகளை ஒப்புக்கொள்ள மாட்டோம் என்று கூறி விட்டார்களல்லவா! அது குறித்து, எழுதிற்று ஆனந்த விகடன். ஆனால், சர்க்கார் மீது பாயத் தொடங்கி, நம் மீது பாய்ந்துவிட்டது. நீ, ஏதோ, ஆனந்த விகடன், அரசியல் நிருபராக மட்டுமே குரங்கை அமர்த்திக் கொண்டிருப்பதாகக் கூறினாய். சேட்டை தவிர

வேறு சரக்கு ஆனந்த விகடனுக்கு ஏது? சர்க்கார் நோட்டுகள் சம்பந்தமாகப் போட்டுள்ள புது உத்தரவை மீறி, நோட்டுப் போர் ஆரம்பிக்க வேண்டுமாம். யார்? இந்தி எதிர்ப்பாளர்கள், நாம். கேட்டாயா, கேட்டை, மூட்டை கேது ராகு செய்யும் கேலியை, அதற்காகத் தான், தம்பி விகடா! போரிட நாங்கள் காகிதக் கோடல்ல. புதிதான போர் தொடுக்கிறோம். பூசுர கூட்டம் புனிதமானது என்று கருதிக் கொண்டிருக்கும் அந்த உச்சிக் குடுமி மனதிலே மமதையைப் புகுத்தும் மார்பிலே புரளும் முகவரி. இரண்டையும் கண்டு கபடத்தின் குறி இவை என்பதை உணராது, மக்கள் கைகட்டி, வாய் பொத்தி நிற்கின்றனரே அந்தச் சின்னங்களைக் கத்தரிக்கோல் கொண்டு, அறுத்திடவும், நெற்றியிலே நீட்டிக் கொண்டுள்ள மதக் குறிகளை ஈரத்துணி கொண்டு அழித்திட வும் ஆளுக்கொரு கத்தரிக்கோலும், ஈரத்துணியும் வைத்துக் கொண்டு போர் களங்களிலே நிற்க ஒரு காலம் வருமானால், உஞ்சி விருத்திக் கூட்டம் ஊளையிட்டுக் கொண்டு ஓடாதா என்று கேட்க என் மனம் துடிக்கிறது என்று வீரன் கூறிட, விலா நோகச் சிரித்தான். இதுதான் புதுப் போர்த் திட்டமா என்று கேட்டேன். ஏன், இதற்கென்ன சரியில்லையா? குதிரைவால் போல், குடுமி தொங்கிக் கொண்டிருக்கத்தான் வேண்டுமா? சூடிட்ட மாடுகள் போல, நெற்றியிலே குறிகள் இருக்கத்தான் வேண்டுமா? இவைதான் நாகரிகமா? ஆப்பிரிக்கா நாட்டு நீக்ரோக்கள், முகத்திலே பலவர்ணங்களைப் பூசிக் கொண்டு கழுத்திலே எலும்புகளையும், மிருகத்தின் பற்களையும் கோர்த்து மாலைகள் போல் கட்டிக் கொண்டிருப்பதை, அநாகரிகம், காட்டுமிராண்டித் தனம் என்று அறிஞர்கள் கூறவில்லையா! அவர் களின் செயலுக்கும், அரகர மகாதேவா என்று கூறி உருத்திராக்கமாலை அணிவதற்கும், ரகுபதிராகவ ராஜாராம் என்று கூறி துளசி மாலை அணிந்து கொண்டிருப்பதற்கும் என்ன வித்தி யாசம் இருக்கிறது, நீதான் சொல்லு கேட்போம். இத்தகைய வேடங்கள் புனையாவிட்டால், ஈசனருள்

கிட்டாதாமே! இதை நம்ப வேண்டுமாம். இதற்குப் பெயர் பக்தியாமே! புத்தியுள்ளவர்கள் இதைப் போற்ற முடியுமா? என்று வீரன் வெகுண்டு விட்டு, மேலும் சொன்னான், வெட்டுப் போர் ஆரம்பிக்க வாரீர் என்று நம்மவரைப் பார்த்து அந்த `தோ நேக்குகள்'' நையாண்டி செய்கிறனவே, அதுகளின் போக்குமாற, இத்தகைய புதுப் போர் ஆரம்பிக்கதானப்பா வேண்டும். சமயம் வரட்டும் என்றுதான் பார்த்துக் கொண்டிருக்கிறேன். சீனாவிலே, ஆண்கள், சீவி... தலைவாரி, ஜடை போட்டுக் கொண்டுதான் வெளியே வருவார்கள். அந்த ஆபாசத்தை விட்டு விடச் சொல்லி சீன அறிஞர்கள், எவ்வளவோ இதமாக எடுத்துச் சொல்லித்தான் பார்த்தார்கள். கேட்கவில்லை! சீர்திருத்த சிங்கம் சன்-யாட் சென் இதமாகக் இடித்தும் கூறினார். அவருடைய சீடர்களும் எவ்வளவோ முயன்றும் ஜடை போடுவதை சீனர்கள் கைவிடவில்லை. பிறகு ஆளுக்கொரு கத்தரிக் கோலுடன் வீதியில் சிலர் கிளம்பினர். ஜடை போட்ட சீனன் நடந்தால், ஜடையைப் பிடித்து இழுப்பாராம். ஒரு சடக் ஜடை போகும் பத்து நூறு, இடங்களிலே இது நடந்தது ஜடை போடும் வழக்கம் சொல்லாமல் ஓடிவிட்டதாம். அதுபோலவே இங்கும் முடியும் என்று வீரன் கூறினான்.

``தம்பீ வீரா! உனக்கிருக்கும் ஆர்வத்திலே- சட்டத்தை மறந்து விடாதே'' என்று நான் எச்சரித்தேன்.

``சட்டத்தை மீறித் தானோ நோட்டுப் போர் நடத்த வாரீர் என்று சவுண்டிகள் நம்மை அழைக்கின்றன. சட்டத்தை மீறிக் காரியம் செயலாற்றினால், இந்தச் சனாதனக் கொடுக்கும் வெட்டும் காரியத்தைத்தான நாம் செய்ய வேண்டும். ஆகவே, நீ தெரிவித்துவிடு, இந்தி எதிர்ப்பாளர்களின் அடுத்த போர், நோட்டுப் போராக இராது, வெட்டுப் போராக இருக்கும் என்று, என் வீரன் விளம்பினானா ``எனக் கேனப்பா வீண் வம்பு! நீயே போய்க்கூறு'' என்று நான் சொல்லி தப்பித்துக் கொண்டேன். வீரன் ``வெட்டுப் போர்'' அறிக்கையை என்றும் வெளியிடுவானோ தெரியாது!

(திராவிட நாடு - 22.11.1942)

# ஒரே ஒரு விமானம் !

ஆகவே, வாயுபுத்ரா! வல்லமை மிக்க வனே, நீ தென் திசைக்குப் புறப்பட்டு அலைகடலைத் தாண்டி, கடலையும் விண்ணை யும், மண்ணையும் மருட்டும் கட்டழகனும், காற்றையும் நெருப்பையும், கட்டியங் கூறுவோ ராகவும், தேவர்களைத் தெருக்கூட்டுவோராக ஏற்படுத்திக் கொண்டு கோலோச்சி வரும், இலங்காதிபதியின் சொர்ணபுரியை காண்பாய். அங்கு, அரண்மனைகளிலும், சோலைகளிலும், தேடிப் பார். சோகித்து உடல் மெலிந்த, பிராட்டியைக் கண்டால், இக்கணையாழியைக் கொடு'' என்று, அன்று.... இராமன் அனுமாருக்குக் கூற, அனுமார் ஒரே பாய்ச்சலில், கடலைத் தாண்டி, இலங்கையை அடைந்தார். ... அது பழைய இதிகாசம்!

இதுபோது, கடலைக் கடக்கவும், கடந்து சென்று, இந்தியரின் செய்தியை எடுத்துக் கூறி, சுயராச்யம் கேட்டுப் பெறவும், போகப்போவதாக, அன்பர் ஆச்சாரியார் கூறுகிறார். சர்க்காரிடம் இதற்கான அனுமதியும் கோரினாராம். அனுமதி கிடைத்ததும், சுயராச்யத்தைத் தேடிக்கண்டு பிடிக்கச் செல்கிறாராம்!

ஆனால், என்ன பரிதாபம். இவர் வருகிறேன்! வருகிறேன்!! என்று கூறுகிறார். ஆனால், அங்கே சீமையிலிருந்து, மிஸ்டர் அமெரி ``அந்த ஆசாமிக்கு இங்கு என்ன வேலை? அவர் வேலை செய்ய வேண்டிய இடம், இந்தியதான்'' என்று, கன்னத்திலறைவது போலக் கூறிவிட்டார்.

ஆச்சாரியாருக்கு இப்போது இல்லை! போ! கிடையாது! முடியாது! என்ற `வரங்களே' கிடைக்கின்றன.

தேசிய சர்க்கார் உண்டா?

இல்லை!

காந்தியாரைப் போய்ப் பார்த்துப் பேச வேண்டும், அனுமதி உண்டா?

கிடையாது!!

சீமைக்கு வரலாமென்று நினைக்கிறேன்.

வருவானேன்? வந்து என்ன முடியப் போகிறது?

ஆச்சாரியார், எந்தத் திக்குக்குக்குத் தெண்டனிட்டுத் தரிசனம் செய்து, திருத் தாண்டகம்பாடி வரம் கோரினாலும், பலன் கிடைக்கக் காணோம். இந்தப் பரிதாப நிலைமை கண்டு, அவரது பக்தர்களும், சாமரம் வீசிகளும், பதைத்து, ``இப்படியும் இவருக்கு நடப்பதா? இதென்ன கொடுமை'' என்று கண்பிசைவதும், கைகளைப் பிசைவதுமாக உள்ளனர்.

``காந்தியாரைப் போய்க் கண்டு பேசினால், சமரசம் ஏற்பட்டுவிடும். அது ஆச்சாரியாரால் தான் முடியும். அவருக்கு வைசிராய் அனுமதி தர மறுத்தது கொடுமை, அநீதி, ராஜ தந்திரமற்ற தன்மை'' என்று, கூறுகின்றனர், எழுதுகின்றனர்.

ஆனால் இவர் யார்? என்பதைப் பற்றிப் பேச மறுக்கின்றனர், யோசிக்கத் தவறுகின்றனர். இவர் யார்? என்று நாம் கேட்கிறோம்.

தென்னாட்டுக் காந்தியார்! திருச்செங் கோட்டு முனிவர், மாஜி முதலமைச்சர், மகாத்துமா வின் சம்பந்தி, கண்ணன் காட்டிய வழி நடப்போர் என்று அவரைப் பற்றி அன்பர்கள் கூறும் அர்ச்சனைகளை நாம் மறந்து விடவில்லை. அந்த வர்ணனைகளைக் கூறிடும் தோழர்களையே, மீண்டும் கேட்கிறோம், இவர் யார் என்று.

அரசியலிலே குழப்பம் விளைவித்த கோணற் சேட்டைக்காரர், இவரை, வெளியே தள்ளி வெகு நாட்ட்களாகி விட்டன! காங்கிரசை விட்டோ இவர் வெளியேறிவிட்டார். வேறு கட்சி களுக்கோ இவர் வேம்பு! புதுக்கட்சி அமைக்கவும் தவறிவிட்டார். எனவே இவர் யார்? எதற்குப் பிரதிநிதி? எந்த இலட்சியத்தின் சின்னம்? எவருக்கு வக்கீல்? ஏன் இவர் துடிக்க வேண்டும்! துரைமார் வட்டாரத்தைத்தொழக் காரணம் என்ன? சமாதானத்துந்துபியை முழக்கும் நோக்கம் யாது? யார் பொருட்டு இவர் விசேஷத் தூதராகிறார்? யார் இந்தத் திருக்கோலம் பூண்டு திருவலம் வரும்படி இவரை அழைத்தனர், வேண்டினர்? என்று கேட்கிறோம்.

ஆச்சாரியார் பெரிய அறிவாளி என் பதையோ, பொது வாழ்வில் பல வருஷங்களாகப் பாடுபட்டு வருபவர் என்பதையோ நாம் மறக்க

வில்லை. ஆனால், இதே விசேஷங்களோடு கூடிய, ``தலைவர்கள்'` இந்தியாவெனும் உப கண்டத்திலேயே ஆச்சாரியார் ஒருவர் தான் இருக்கிறாரா? என்று கேட்கிறோம். ராஜ தந்திரமும் உலக அறிவும், இந்தியப்ப் பிரச்னை பற்றிய தெளிவும், கொண்ட ``பெரியோர்கள், வேறு எவருமே இங்கு கிடையாதா? அத்தகையவர் களை ``மௌனமாக'' இருக்க, இவர் மட்டும், திக்கெட்டும் தீப்பொறிப் பறக்கத் தாண்டவமாடு வானேன் என்று கேட்கிறோம். அவ்வளவு பேரும் அக்கறையற்றவர்கள், இவர் ஒருவர்தான் அக்கறைக் கொண்டவர் என்பதை யார் ஒப்புக் கொள்வர்! எங்கும் பாலைவனம், ஒரே ஒரு நீரோடை! எல்லோரும் ஏமாளிகள், இவர் ஒருவர் மட்டுந்தான், இந்திய அரசியலின் சிக்கலைத் தீர்த்து வைக்கக் கூடிய அறிவாளி. ஆச்சாரியார், ``நான் போகவேண்டும் சீமைக்கு'' என்று கூறுவதிலே, இந்தத் தத்துவம் தவிர வேறு என்ன தொக்கியிருக்க முடியும் என்று ஆர அமர யோசித்து அன்பர்கள் பதில் கூற வேண்டுகிறோம்.

சீமைக்குச் சென்றால், இந்திய நிலைமை சீர் பட்டுவிடும் என்று இவர் செப்புகிறாரே! சீர் படுத்த வேண்டிய இடம் எது? சீமையா, இந்த உபகண்டமா? என்று கேட்கிறோம், இந்தியரின் கோரிக்கையைச் சீமைக்கு எடுத்துச் செல்லும் தாராளத் தபால் உத்தியோகத்துக்கு, ஆச்சாரி யாரின் குருதேவர், முன்பு போனாரே, கண்டது என்ன? கொண்டு வந்தாரா சுயராச்யம்? வட்ட மேஜை மாநாடு குட்டிச் சுவராகும் வம்புகள் பேசினாரே தவிர, காரியபூர்த்திக்கான மனப் பான்மையைக் காட்டினாரா என்று கேட்கிறோம்.

``எங்கள் காந்தி இலண்டன் சேர்ந்தார், கைகூப்பித் தொழுவீர்'' என்று இங்கு கொடுமுடி கோகிலம் கீதம்பாட ஒரு சந்தர்ப்பம் கிடைத்த துடன், காந்தியரின் இலண்டன் பயணம் முடிந்து விட்டது. காந்தியார் போய்ச் சாதிக்க முடியாமற் போனதை, ஆச்சாரியார் சாதிக்க முடியுமா? அத்தகைய மனப்பான்மையை, அவர் கொண்டிருக்கிறாரென்றால், காந்தியாரைவிட, ஆச்சாரியார் தன்னை அதிகமான மேதாவி என்று கருதுகிறார் என்று ஏற்படுகிறதல்லவா? இது சரியா, முறையா என்று கேட்கிறோம்.

இருக்கும் சண்டை, சர்க்காருக்கும், காங்கிரசுக்கும் நடக்கும் காரியமோ, ஐந்தாம் படைக்காரரின் கை வரிசை என்று எவரும் ஐயுறும்படியான, அழிவு வேலைகள். இந்த வேலைகள் நடைபெற்றுக் கொண்டிருருக்கும்

நேரத்திலே, ஆச்சாரியார் போன்ற தலைவர்கள் செய்ய வேண்டியது என்ன? சீமைக்குச் சென்று, ``இந்தியாவிலே, தண்டவாளங்களைக் கழற்றி, தபால் பெட்டிகளைக் கொளுத்தி, தீ மூட்டி விடும் காரியங்கள் நிற்க வேண்டுமானால், எமது சகாக்களிடம் அதிகாரத்தைத் தாரும்'' என்று கேட்பதா, காந்தியாரின் கூட்டத்தார், ஆச்சாரி யாரை, இதுபோல் போய்க் கூறும்படி ஏற்பாடு செய்வதாகச் சர்க்கார் கருத வேண்டுமா? நாச வேலைகளிலே ஈடுபட்டோர்களுக்கு ஆச்சாரி யார் நன்மொழி எடுத்தோதட்டும்.சிறைப் படாத காங்கிரஸ்வாதிகளைத் திரட்டி, அவர்களைக் கொண்டு, இனிக் காங்கிரஸ் எத்தகைய நாச காரியத்தைச் செய்பவருக்கு உடந்தையாக இராது என்று தீர்மானம் நிறைவேற்றட்டும். பிறகு, இந்த முடிவுக்கு ஏற்ப, நாட்டிலே அமைதி உண்டான தும், அகாகான் அரண்மனைக்குச் செல்ல ஆச்சாரியாருக்கு அழைப்புக் கிடைக்கும். அதற்குள் லீகுடன் ஒரு சமரசம் ஏற்படுத்திக் கொள்ளட்டும். இதுதானே வழி! இங்கே புகையும் நெருப்பும் சூழ்கிறது! சமுதாயப் புண்ணும், பிளவும் குறையவில்லை! கட்சிகளுக்குள் உள்ள வேற்றுமைகள் நீங்கக் காணோம்! இவ்வளவிருப் பினும், ``ஒரே ஒரு விமானம்'' என்று ஆச்சாரியார் கூவிப் பயன் என்ன என்று கேட்கிறோம்.

ஜெர்மன் சர்க்காரின் அதிகாரத்தைப் பெறாமல், தன்னிச்சையாக, ஏதேனும் தூது பேசியோ, தூபமிட்டோ பார்ப்போம் என்று விமானமேறி வந்த ஹெர் ஹெஸ் (ழநசச ழநளள) பின்னர் ஜெர்மன் சர்க்காரால், ``அவனுக்குத் திடீரென மூளைக் குழப்பமேற்பட்டு விட்டது. அதனால் தான் சொல்லாமல் சீமைக்குப் பறந்து சென்றான்'' என்று கூறிவிட்டது. ஆச்சாரியாரின் சண்டமாருதப் பிரசாரம் சீமையில் நடக்கும் போது, இங்கு ஆகாகான் அரண்மனையிலே அந்த ராத்மாவிடம் கொஞ்சிக் கொண்டிருக்கும் மகாத்மாவும் அவரது மடத்துக் காவலரும் எல்லாரும் ஆச்சாரியாரைப் பற்றி, என்ன கூறுவார்களோ அறிவர்!

ஆச்சாரியார் சீமைக்குப் போக வேண்டும் என்ற உடனே, இந்த தேசத்தை தாங்கிக் கொண்டுள்ள அசகாய சூரர், வைத்தியர் வரதராஜுலு, ``நானும் கிளம்புகிறேன்'' என்றுரைத்து விட்டார். லீகுக்கு ஒருவர்? திராவிடருக்கு ஒருவர்! என மற்றும் பலரும் கிளம்பி, சீமையிலே, அந்நாட்டு தலைவர்கள், அந்தப் படையை அனுப்பு! கடற் படையை இங்கே போகச் செய். விமானப் படையை இத்தாலி மீது பாயச் சொல். பர்மாக்குள் நமது படைகளை அனுப்பு.. என்று பேசிக் கொண்டிருக் கையில், ஹைடு பார்க்கில் (ழலனந ஞயசம) ஒரு பக்கத்தில், சொரென்சன் தலைமையில் சுயராஜ் யம் தேவை என்று

ஆச்சாரியாரும், வரதராஜுலு, இந்துஸ்தான் தேவை, இந்துக்கள் லேசானவர்களல்ல. இரதகஜ துரகபதாதிகள் படைத்தவர். ஈரேழுலோகத்தையும் அடக்கி ஆள்பவர். முப்பத்து முக்கோடி தேவர்களைக் கொண்டவர். என்று வீரமுழக்கம் செய்யவும், பாகிஸ்தான் எமது பிறப்புரிமை. அதைப் பெற்றே தீருவோம் என்று முஸ்லீம் லீக்கினரும், திராவிட நாடு திராவிடருக்கே என்று நீதிக் கட்சியினரும் பேசவுமான நிலைமை இருக்க, உலகப் போர் அங்கங்களிலே என்னென்ன ஏற்பாடுகள் செய்வோம் என்பதை பேசி முடித்துவிட்டு, சர்ச்சில் அமெரிக்கப் பிரதிநிதியுடனும், வாயில் சுருட்டுடனும் அப்பக்கம் வந்து புகையை மேலே விட்டபடி புன்னகையுடன் பிரசங்கிகளைக் காட்டி, இதோ இதுதான் இந்தியா என்று ஏளனமாகக் கூறுவார். இந்தக் கேலிக்கூத்தைத் தவிர வேறு ஆச்சாரியார் செய்யக்கூடிய காரியம், இன்று இங்கு இல்லையா என்று கேட்கிறோம். ஜனாப் ஜின்னாவிடம் பேசின பிறகு ஆச்சாரியார் வைசிராயை பேட்டிக் கண்டு பேசினார். பேசுகையில் காந்தியாரைப் போய் பார்க்க வேண்டுமென்று மட்டுமே தெரிவித்தார். வைசிராயும் முடியாது என்று கூறிவிட்டார்.

காந்தியாரைப் போய்ப் பார்ப்பது பிறகு இருக்கட்டும், ஜனாப் ஜின்னாவுடன் பேசினதில் என்ன பலன் ஏற்பட்டது? அவருடன் சமரசம் உண்டாகிவிட்டதா? என்றன்றோ, வைசிராய் கேட்டிருக்க வேண்டும். அந்தக் கேள்வியைக் கேட்டிருப்பின், ஆச்சாரியாரின், சமரசமுயற்சி என்ன ஆயிற்று என்பது ஏற்பட்டிருக்கும். அதனைக் கூறாது, வைசிராய் வேறு ஏதேதோ கூறினார்.

ஆச்சாரியார், ஜனாப் ஜின்னாவிடம் பேசின பிறகு, இருவருக்குள் சமரச ஏற்பாடு பூர்த்தியாகிவிட்டது என்ற கூட்டறிக்கை வெளியிடப்பட்டிருப்பின், ஆகாகான் அரண் மனையின் கதவு திறக்கப்பட்டிருக்கும். வைசிராயிடம் சாவி இருப்பதாக ஆச்சாரியார் கூறுகிறார்! இல்லை! நாம் பன்முறை கூறினோம், இன்றும் கூறுகிறோம், சாவி அங்குமில்லை, சீமையிலும் இல்லை! சாவி, நமக்குள் ஏற்படும் சமரசத்திலே இருக்கிறது! அதற்குச் சீமைப் பயணம் பயன் தராது! தள்ளாடும் கிழவன் தங்கக் கொடி போன்ற தையலை மணந்து கொண்டு, பிறகு தங்கபஸ்பம் தேடியும், பயன் என்ன அடைய முடியும்? அதுபோலவே, அரசியலிலே, சோர்வும் சிக்கலும் வளர்த்து விட்ட கூட்டமே, சிக்கலைப் போக்கவும் முனையாமல், சிரித்துப் பேசுவோம், என்று முன் வந்தால், பலன் ஏற்படாது. சிந்தனையில் ஒரு தெளிவு!! செயலில் ஒரு புது மாற்றம்!! திட்டத்திலே புதுமை தோன்ற வேண்டும்.

அதுதான் மிக மிக அவசரமாகத் தேவை.

இப்போது அவசரமாகத் தேவை, ஒரே ஒரு விமானமல்ல! ஒற்றுமைக்கு மனம்!!

(திராவிட நாடு - 22-11-1942)

# ஓடுது பார் !

ஓடுது பார், வேகமாய் எங்கும் ஓடுது பார்! என்று களிப்புடன் பாடி, விழாக் கொண்டாடி வெற்றி வாடை வீசக் கண்டு, மக்கள் முக மலரும், வெற்றி செய்திகள், கடந்த பத்து நாட்களாகக் கிடைக்கின்றன. ஸ்டாலின் சிராட், லெனின் கிராட்... வாரனேஷ், சாகசஸ் முர்மான்ஸ்க் ஆகிய பல இடங்களில் ஜெர்மன் படைகள், பிடரியில் கால்பட, பின்வாங்கி ஓடுகின்றன. பெருநஷ்டம், சொல்லாணாக் கஷ்டம். டான், வோல்கா நதி தீரங்களில் நாச நாட்டியமாடிய நாஜிப் படைகள் இப்போது சோவியத் ஜ்வாலை சுற்றி வளைத்துக் கொண்டிருக்க கண்டு, தப்பும் வழி தெரியாது... தலைவனை நம்பித் தலையிழக்கிறோமே என பிணங்களின் மீது உருண்டு, குளிரால் சுருண்டு கண் இருண்டு கலங்குகின்றன. மூன்று மாதத்திற்கு மேலிருக்கும் இத்தகைய `முக்தி' தரும் சக்தியினால் தாக்கப்பட்டுள்ள நாஜிகள் ... இருபதாயிரம் சதுர மைல் விஸ்தீரணமுள்ள சோவியத் களத்திலே, ரஷியா தமது வீரத்தாலே, வீவேகத்தாலே, வெறி கொண்ட பெர்லின் பேயரை இடித்து அடித்து, இழந்த இடங்களை மீட்டுக் கொண்டு, எதிரியைப் பிடித்திழுத்துப் கைது செய்து வருகின்றனர். புலி வேட்டைக்குப் போய் கிலியில் சிக்கிய கதை போல், ஆப்பசைத்து விட்டு மதியிழந்த மந்தி போல், தீயிலே கால் வைத்து விட்டு திக்கு முக்காடும் கள்ளன் போல, நாஜிப் படை திணறுகிறது. டாண், வோல்கா நதிகளிலே, சோவியத்காரர்கள் தமது இரத்தம் புரண்டோடும் அளவு வேகமாக போரிட்டனர். ஸ்டாலின் கிராட், சோவியத்தின் கண் என்று கருதிக் காத்தனர்.'' எங்களது படைகள் ஒரு ஊருக்குள் நுழைந்தன என்றால் பிறகு அவைகளை விரட்ட யாரால் முடியும்?'' என்று கேட்ட அடாலப் ஹிட்லரே, இதோ உமது படை ஓடுது பார், வரிசை குலைந்து வகை கெட்டு! எங்கெங்கு முழக்கமிட்டனரோ, அங்கெல்லாம் அழு குரல், வெற்றி கண்ட இடமெல்லாம் இன்று வேதனை. வீரர் என்று விளம்பரம் பெற்றவர் இன்று கோழையாகி, பதைத்துப் பயந்து ஓடும் உமது படையைப் பார்!

மூன்றே வாரத்திலே, மாஸ்கோவிலே சுவஸ்திகக் கொடி பறக்குமென்று பேசிய சூரனே, உன் படை ஓடும் வேகத்தைப் பார்!'' என்று சோவியத் மக்கள் கூறிப் பூரிக்கின்றனர். பெர்லினுக்குக் கிடைக்கும் இடி இது மட்டுமா! வட ஆப்பிரிக்கா முனையிலோ ஜெனரல் ரோமல் ஓடிய ஓட்டத்தின் வேகம், எவ்வளவு மனமுறிவைத் தந்திருக்கும்.

வழக்கப்படி நடக்கும் `வாண வேடிக்கை' பிரிட்டன் குண்டு வீச்சு, ஜெர்மன், இத்தாலிய நகர்கள் மீது நடந்த வண்ணமிருக்கிறது. ஜப்பானின் ஜம்பமோ, தலை நீட்டினால் மட்டந் தட்டு கிறார்கள்.

இந்நிலையிலே, நேச நாடுகள், வெற்றி பெறுமென்று எவர் துணிந்து கூற முன் வாரார் என்று கேட்கிறோம். இவ்வளவு அச்சுத் தோல்விகளைக் கேட்ட பிறகேனும், நெஞ்சிலே நச்சுக் கொள்கை கொண்டுள்ள வஞ்சகக் கூட்டம் வால் சுருட்டி வளை தேடி வாழட்டும், வகை யிருப்பின் என்று கூறுகிறோம்.

இரவு பகலாகி விட்டது என்று ஜெனரல் ஸ்மட்ஸ் கூறுகிறார். அழகிய கருத்து அழகுறக் கூறப்பட்டது. இதைவிட, அழகியதோர் வாசகம் நமது நினைவிற்கு வருகிறது. சோவியத் தலைவன் சோர்விலா வீரன், சமதர்மத் தீரன், ஸ்டாலின் கூறினார் நவம்பர் 7-ந் தேதி, சோவியத் புரட்சியின் இருபத்தைந்தாம் ஆண்டு விழாவின் போது, செஞ்சேனையின் சக்தியை உலகு உணர்ந்து கொண்டது, செஞ்சேனையின், தாக்கும் சக்தியை எதிரி உணரும் காலம் பிறக்க வெகு நாட்கள் இல்லை. நாங்கள் `தமாஷ்' அனுபவிக்கும் நேரம் ஒரு நாள் வரத்தான் போகிறது.

என்று கூறினார். உலகமே `தமாஷ்' அனுபவிக்கிறது, அந்த உத்தம வீரன் குறிப் பிட்டபடி! ஓடுது பார், ஜெர்மன் படை, பின் வாங்கி ஓடுது பார்! என்று உலகம் உவகையுடன் கூறுகிறது! ஒழிக அச்சு நாட்டு நச்சரவு! ஓங்குக நேச நாடுகள்!!

(திராவிட நாடு - 29.11.1942)

# ஆரியர் செய்த அக்கிரமம்

டாக்டர் அத்பேத்காரும் மற்றும் இன்று தீண்டப்படாதவர்கள் என்று அழைக்கப்படும் ஏனையோரும் இந்தியப் பூர்வ குடிகளின் சந்ததிகளே. ஆதிகாலத்தில், அந்தப் பூர்வ குடி மக்களே நாட்டுக்கு, அதிபதிகளாக சுதந்திர வாழ்வு நடத்தி வந்தார்கள். அவ்வாறு வாழ்ந்து வந்த இந்தியப் பூர்வகுடி மக்கள் பிற்காலத்து வெளிநாட்டிலிருந்து வந்த ஒரு கூட்டத்தாருக்கு அடிமைப்பட்டு சுதந்திரத்தையும், மானத்தையும் இழந்து மிருகங்கள் அனுபவிக்கும் சாமானிய சுதந்திரங்களுமில்லாமல் உயிர்ப் பாரம் தாங்கும் படி நேர்ந்திருக்கிறது. இது போன்ற சம்பவத்தை உலக சரித்திரத்திலேயே காண முடியாது.

குடி புகுந்த ஆரியர்கள் பூர்வ குடிகளை விட பளபளப்பான வர்ண முடையவர்களா யிருந்தனர். எனவே, வெள்ளையர்களான ஆரியர்கள் கறுப்பர்களான அதி இந்தியர்களை விட உயர்ந்தவர்கள் என ஒரு ஐதீகம் ஏற்பட்டது. அன்று முதற் கொண்டே வர்ண பேதக் கொடுமை ஆரம்பமாயிற்று. வர்ண பேதக் கொடுமையினால் இந்தியாவைப் போல் கஷ்டப்படும் நாடு உலகத்திலேயே வேறு இல்லை என்று சொல்லலாம். ஆரியர்கள் ஆதி இந்தியர்களைச் சந்தித்தபோதே அவர்களுக்கு `கறுப்பர்கள்' என்ற இழிபெயரைச் சூட்டினார். போர்க் கடவுளான இந்திரனை ஒரு ஆரிய வீரன் பாராட்டிப் புகழ்வதைக் காண்க.

ஆரியர் சட்டத்துக்குக் கீழ்ப்படியாதவர் களைத் தண்டித்து கறுப்பர்களை மனுவுக்கு அடிமைப்படுத்தி மற்றும் நூற்றுக்கணக்கான உதவிகள் புரிந்து இந்திரன் ஆரியர்களைக் காப்பாற்றினான். (ரிக் வேதம் முதல் மண்டலம் 30-வது மந்திரம் 8-வது ஸ்லோகம்.)

## ஆரியர் கொடுமை

ஆரியர்களுக்கும் ஆதி இந்தியர்களுக் கும் நடைபெற்ற போரைப் பற்றியும் ஆரியர் செய்த பற்பல கொடுமைகளைப் பற்றியும் வேதங்களில் பல குறிப்புகள் காணப்படுகின்றன. வெள்ளை ஆரியர்கள் கறுப்புப் பூர்வ குடிகளை எவ்வளவு குரூரமாக இம்சித்தார்கள் என்பதைக் கீழ்வரும் உதாரணங்களால் ஒருவாறு யூகித்துக் கொள்ளலாம்.

ஓ! உலகம் போற்றும் இந்திரனே! ஸுஷ்ரூ வனை எதிர்த்த இருபது கறுப்பு அரசர்களையும் அவர்களது அறுபதினாயிரத்துத் தொண்ணூற்றி யொன்பது படைகளையும் நீ உன் தேர் சக்கரத்துக்கு இரையாக்கி நசுக்கிக் கொன்று ஆரியர்களுக்கு உதவி புரிந்தாய்.

(ரிக் வேதம் மண்டலம் 1, மந்திரம் 53. ஸ்லோகம் 9)

2

ஓ! இந்திரனே! பிப்ரு மிருகய அசுர அரசர்களை ஆரிரிய மன்னனான விதாதின் பத்திரன் ரிஜீஷ்வனுக்கு அடிமைப் படுத்தினாய்! ஐம்பதினாயிரம் கறுப்புப் படைகளை செயித்தாய். முதுமை உயிரை மாய்ப்பது போல் அனேக கோட்டைகளையும் பாழாக்கினாய்.

(ரிக் வேதம் மண்டலம் 4 மந்திரம் 16 ஸ்லோகம் 18)

3

ஆரிய அரசன் தாபிதியின் தன்மைக்காக முப்பதாயிரம் தாசர்களை உன் மந்திரச் சக்தியி னால், ஓ! இந்திரனே! யமனுலகுக்கு அனுப்பினாய்!

(ரிக் வேதம் மண்டலம் 4 மந்திரம் 30 சுலோகம் 21)

4

``ஓ தீரனான இந்திரனே! உன் வலை பிரம்மாண்டமானது, மஹா பலாட்டியமானது, ஆயிரக்கணக்கானவர்களைச் சிக்க வைக்கும் ஆற்றலுடையது, ஒன்று, பத்து, நூறு, ஆயிரமாகப் பெருகும் சக்தியுடையது. அத்தகைய வலையில் தாசப் படையைச் சிக்க வைத்து நூற்றுக்கணக் கான ஆயிரக்கணக்கான லட்சக்கணக்கானவர் களைக் கொன்றாயே!

(அதர்வண வேதம் தாண்டம் 8 மந்திரம் 8 ஸ்லோகம் 7)

மேலே கூறிய உதாரணங்களால் ஆதி இந்தியர்கள் லட்சக்கணக்காகக் கொல்லப் பட்டதையும் சித்திரவதை செய்யப்பட்டதையும் ஊகித்து அறிந்து கொள்ளலாமல்லவா? எஞ்சிய ஆதி இந்தியர்கள், மீது ஆரியர்கள் கொண்டி ருந்த வெறுப்பும், வஞ்சகமும் அம்மா பெரிது! பெரிது!!

கீழ் வருவன ரிக் வேதம் 7-வது படலம் 104-வது மந்திரத்திலும்

அதற்கான வேதம் கண்டம் 8, 4வது ஸ்லோகத்திலும் காணப்படுகின்றன.

ஸ்லோகம் 1

இந்திரனே ஸோமனே ராட்சகர்களை எரி, எரி! நசுக்கு, நசுக்கு! இடவனாந்திரங்களில் ஒன்று நூறாய் பெருகிவரும் அந்தக் கூட்டங்களை அடக்கு, அடக்கு! பின்னப்படுத்து, மடையர்களை அக்னி சுவாலையால் சுட்டுப் பொசுக்கு, வதை செய்! துண்டு துண்டாக வெட்டு!

ஸ்லோகம் 2

இந்திரனே, ஸோமனே, அரக்கக் கூட்டத்தை, துரோகிகளை, தீமையில் உருவான வர்களை, அக்னி குண்டத்தில் வைத்து, நீர் பானையில் வேகவைப்பது போல் அவித்துக் கொல்! துரோகிகளான அந்த பச்சை மண்ணைத் தின்னும் அரக்கர்களை மீளா நரகத்தில் தள்ளி இம்சிப்பாயாக!

ஸ்லோகம் 3

குகைகளிலும் வனாந்திரங்களிலும் அந்த சண்டிகளை கீறி, பிளந்து அரித்து சித்திரவதைச் செய்! இருண்ட காடுகளில் மறைந்து கிடக்கும் அவர்களுக்கு ஒரு உதவியும் செய்யாதே! அந்த வனாந்திரங்களில் அவர்கள் மீளாமல் போவார்களாக. பயங்கர பலத்தால் அவர்களை அடக்கி ஒடுக்குவீர்களாக!

ஸ்லோகம் 4

ஓ இந்திரனே, ஓ ஸோமனே. மேல் மண்டலத்திலிருந்து கொடியவர்களை கீழே சொரிவீர்களாக! அதிலிருந்து ஆயிரக்கணக்கான ஆரியர் கிளம்புமாறு கருணை புரிவீர்களாக! தினமும் பெருகிவரும் இந்தக் கூட்டங்களை எதிர்ப்பதற்காகவே வானிலிருந்து லட்சக்கணக் கான அஸ்திரங்கள் தோன்றும்படியாக செய்வீர்களாக!

ஸ்லோகம் 11

அசூரர்கள் ஒழிக! பிள்ளை குட்டிகள் நசிக்க! பிற்கால சந்ததிகள் அசூரக் கூட்டங்களை விழுங்கி விடட்டும்.

# பாதுகா பட்டாபிஷேகம் பலிக்கவில்லை ! - பரதன்

பட்டாபிஷேகத்துக்கு ஏற்பாடு செய்யப் போகிறாரா? இல்லையா? என் கட்டளையை மீறவும் உனக்குத் துணிவு பிறந்ததா?

பரதனுக்கே இந்த நாடு சொந்தம், முடி அவனுடையது, அதை நான் இராமன் பறிக்க உடந்தையாக இரேன்.

துஷ்டன்! போ, வெளியே.உன் மந்திரி வேலை மாண்டது. நட, என் நாட்டை விட்டு.

மகாப் பிரபோ! நாடு இது ஒன்று தானா உலகில். மற்றவை காடா? மந்திரி வேலை ஒன்றுதானா மாநிலத்தில். வேறும் உண்டு, நீர் வாழும், நான் வெளியே செல்லுகின்றேன்.

* * *

இராமனுக்கு முடி சூட்ட வேண்டுமென்று தசரதன் சுமந்திரனிடம் பேசியபோது, கேகய நாட்டு மன்னனுக்கு தசரதன் முன்னம், தந்திருந்த வாக்கின்படி, பரதனுக்கே முடிதர வேண்டும் என்ற முறையை மந்திரி சுமந்திரன் மறக்காமல் அதன்படியே நீதியாகவே நிகழ்ச்சி இருக்க வேண்டும் என்ற நினைப்பு கொண்டிருந்திருப் பாரானால், நான் மேலே குறிப்பிட்டிருக்கும் உரையாடலும், அரண்மனைக் குழப்பமும் நடந்திருக்கும். மந்திரி, மன்னனின் மொழியை அவர் விழியாலேயே கண்டு அவ்வழி நடப்பவர். எனவே சதி வெற்றி பெற்றது.

மக்களாவது, மன்னனும், மந்திரியும் கூடி முடி யாருக்குச் சொந்தமோ அவருக்கே செல்ல வேண்டும் என்பதை வற்புறுத்தினாரா? இல்லை! அயோத்தி மக்கள், சிரித்துப் பேசிய இராமனிடம் சொக்கிக் கிடந்தனர். மேலும், மன்னன், புரோகிதன் மந்திரி தலை அசைத்தால், மக்களின் உடலும் உள்ளமும் அசையும் காலம் அது- பக்தி காரணமாக மட்டுமல்ல, பயத்தினால்! எனவே, மக்களும் சரி என்றனர். தோரணம் கட்டினர்- தெருக் கூட்டினர், திருவிளக்கேற்றினர்- திருவிழாக் கொண்டாடினர்- தெந்தினா பாடினார். மக்களின் மனம் மன்னனுக்குத் தெரியும், இயல்பும் தெரியும். அதனைத் தசரதர் இராமனிடம் எடுத்துரைப்பதை வால்மீகி தெளி வாகக் கூறுகிறார். மக்கள் மனம் ஒரு நிலையில் உள்ளதல்ல என்று. இல்லையேல் அவ்வளவு இலகுவில் இசைந்திருக்க மாட்டார்கள்.

அது தான் ஒழியட்டும். பரதன் காடு சென்று இராமனைக் கெஞ்சி, பாதுகையைப் பெற்று வந்து, பாதுகா பட்டாபிஷேகம் நடத்தினபோதாவது, ``பரத பூபதி! நீயாவது ஆண்டு கொண்டிரு. ஒரு ஜதை செருப்பை ஆளச் செய்கிறீரே செருப் பாளும் அளவு சிறுமையினரா யாங்கள்'' என்றேனும் மக்கள் கேட்டனரா! இல்லை. பாதுகைக்குப் பல்லக்குத் தூக்கினர். நாம் நாட்டிலே உலவினால் என்ன? நாட்டிலே, நமது பாதுகையன்றோ ஆட்சி செய்கிறது என்று பூரித்திருக்கக் கூடும் இராமர் எப்படி ஒரு நாட்டு மக்கள், பாதுகையை ஆளச் சம்மதித்தனர் என்று நான் சில சமயங்களிலே எண்ணியதுண்டு. மக்கள் உள்ளம் இவ்வளவு மடைமையை வரவேற்குமா என்று ஐயங் கொண்டதுண்டு. பாதுகா பட்டாபி ஷேகம், எனக்கு அயோத்தி நாட்டு மக்களின் பாமரத்தன்மைக்கும், பயங்கொள்ளித் தன்மைக் கும், பித்துக் கொள்ளிப் போக்குக்கும் ஓர் எடுத்துக்காட்டாகவே தென்பட்டது. ஆரிய முனியாம் வால்மீகி, ஆரிய ஆட்சியிலே கிடந்த அநாரியர், எவ்வளவு கபோதிகள் என்பதை இதன் மூலம் விளக்கினார் என்றே நான் எண்ணுகிறேன். ஆளுநருக்குப் பதிலாக அவன் கால்ஜோடு! இது ஆரியத்திடம் அடிமைப் பட்டவருக்கன்றி. வேறு எவருக்கும் சம்மதமாக இருந்திக்க முடியாது. ஆரியத்திடம் அடிமைப் பட்டால் தான் ``அதற்காக இது?'' என்பது நம்பிக்கையூட்டும். முள்ளம் பன்றிக்காக பலாக்காய்! பிதுர்க்கள் பிரீதிக்காக பார்ப்பன ருக்குத் தானம்! கங்கா ஜலத்துக்காக கிணற்று நீர்! என்று கூறுவர், நம்புவர். அதைப் போலத்தான் இராமனுக்குப் பதில் அவனது ஜோடுகள்!

* * *

இராமாயணக் காலத்திலே நடந்ததை ஏனப்பா, இப்போது கூறுகிறாய், திரேதாயுகத்துத் திருவிளையாடலைத் கலியுகத்திலே பேசுகி றாயே, நீ என்ன என்.எஸ். கிருஷ்ணனான, திரேதாயுகத்திலுமிருந்து, கலியுகத்திலும் காட்சி யளிக்க? அப்படி உனக்கென்ன என்.எஸ்.கிருஷ்ணன் போல் `சாப விமோசனம்' பெற வேண்டிய அவசியத்தை உண்டாக்கிய `சல்லா' உண்டா. அந்தவிதம் பேச நடக்க என்று என்னைக் கேட்பீர்கள். அன்று நடந்த பாதுகா பட்டாபிஷேகம் போல் இவ்வையகத்தில் சித்ரபானு வருஷம் ஐப்பசி மாதத்தில் இருபத்தி நாலாம் நாள் 14.11.1942ம் தேதி ஆகிய நன்னாளில் முகூர்த்த விசேஷங்கள் எனக்குத் தெரியாது. ஏதாவது முகூர்த்த

விசேஷங்கள், முக்தி தரும் நகரத்தில், நகரமாம் காஞ்சி தொண்டை நாட்டு தலைநகரமாகவும் வைணவ, சைவ பக்தர்கள் தவமாகவும் உள்ள காஞ்சீபுரத்தில் நகர சபை மண்டபத்திலே பாதுகா பட்டாபிஷேகம் விமரிசையாக நடந்தேறியது.

கலி யுகத்தில் பட்டாபிஷேகமா? காஞ்சியிலா என்று ஆர்வமாக கேட்க ஆவலாகத்தான் இருக்கிறது. காஞ்சீபுரம் முனிசிபாலிடியின் கவுன்சிலர் ஓர் ஸமார்த பிராமணர். டாக்டர் சீனுவாச அய்யர் என்பதையும், அவர் புதுக்கோட்டைவாசியானா லும், எப்படியோ தலைவராகி விட சந்தர்ப்பம் ஏற்பட்டு விட்டது என்பதையும், அன்னார் இந்திய பாதுகாப்புச் சட்டத்தின் கீழ் சிறையில் காவலில் வைக்கப்பட்டிருக்கிறார் என்பதை நேயர்கள் அறிவர். உதவி சேர்மனும், சிறையில் இருக்கும் தனது தலைவர் பதவியை டாக்டர். ராமய்யர் என்கின்ற இன்னொரு ஸ்மார்த்த பிராமணக் கவுன்சிலருக்கு டாக்டர். சீனிவாச அய்யர் அளித்திருந்தார். அந்தத் தோழரின் சிறை வாசத்தை கண்டு திகிலடைந்திருந்த ரகுராமர் தனது கவுன்சிலர் பதவியை, ஏற்கனவே ராஜினாமா செய்திருந்தாலும், பதவி மோகத்தால் ராஜினாமாவை வாபஸ் பெற்றுக்கொண்டு, `டெலிகேட்' சேர்மனாக வேலை பார்க்கும் பாக்யத்தைப் பெற்றார்.

சென்ற 11-ம் தேதி நடைபெற்ற கவுன்சில் கூட்டத்தில் தமது கட்சி அங்கத்தினராலேயே விகற்பமின்றி டாக்டர் ராமர் தலைவராக ஒப்புக் கொண்டது ரகுராமன் சேர்மன் ஸ்தானத்தில் அமர்ந்து விட்டு தனது சுயரூபத்தை காட்டிக் கொள்ள ஆரம்பித்தார். பாரதி கீதம் ஒன்றைப் பாடி ஆரியர் வாழ்வை ஆதரிப்பவனே என்று முடித்ததுதான் தாமதம், பாடக் கூடாது எனும் எதிர்ப்பு பலமாக ஏற்பட்டது. கூட்டத்திற்கு வந்திருந்த காங்கிரஸ் அங்கத்தினர்கள், கவுன்சில் மண்டபத்திலிருந்து ஒவ்வொருவராக நழுவி விடவே, ரகுராமர்தான், தனியே மண்டபத்தில் தனித்து நின்று தவிர்க்கக் கண்டார். போதிய அங்கத்தினர்கள் இல்லாத காரணத்தினாலே கூட்டம் ஒத்திதி வைக்கப்பட்டது என்று புத்தகத்தில் எழுதி வைத்துவிட்டு,

சூடு, சொரணை இல்லாத கூட்டமென்று தமிழரைக் - குறிப்பாகக் காங்கிரசுத் தமிழரைக் கருதுவதினால் தானே இந்தக் காரியம் நடந்தது! சிறையிலே போனவர் ``சிவனே'' என்றோ, காந்தியோ என்றோ கிடப்பதை விட்டு, எதற்காக இன்னொரு ஐயருக்கு அந்த அதிகாரத்தைத்

தர வேண்டும்'' என்று கேட்கிறேன். இந்த அக்ரமத்தைக் கேட்பாரில்லையா! ஆரியத்தை அடக்குவாரில்லையா?

வந்த ``ஐயர், சும்மா இருந்தாரா? ``ஆரியர் வாழ்வினை ஆதரிப்போனே'' என்று பாடினார். ஏன் பாட மாட்டார்? ஆரியர் வாழ்வு ஆதரிக்கத் தானே பாடுகிறார்கள். ஒரு ஆரியர் சிறை புகுந்தார். அவர் அனுபவித்த அதிகாரம் மற்றோர் ஆரியருக்கு! தமிழ் மண்ணிலே மானம் மங்கி விட்டது.

* * *

பாதுகா பட்டாபிஷேகம் போல, டாக்டர் சீனுவாச ஐயருக்குப் பதில், அவருடைய அனுமதி பெற்ற டாக்டர் ரகுராம் ஐயர் ஆட்சி செய்ய முன்வந்து, ஆரியம் வாழ்ந்திடக் கீதம் பாடினாரே தவிர, பட்டாபிஷேகம் நிலைக்க வில்லை. அயோத்தி மனப்பான்மை மாறிவிட்டது. அடுத்த கட்டத்தில் 14-11-1942ல் மீண்டும் கூட்டம் மாலை 6 மணிக்கு என்று குறிப்பிட்டிருந்தாலும், அரை மணிக்கு முன்னதாகவே ரகுராமர், சேர்மன் ஸ்தானத்தில் உட்கார்ந்திருக்கக் கண்டோம். டெலிகேட் சேர்மனார் கவுன்சிலில் தலைமை வகிக்க உரிமை கிடையாது. கவுன்சில் ஒரு தலைவரை அப்போதைக்கப்போது தேர்ந் தெடுத்துக் கொள்ள வேண்டுமென்று அரசாங்க அறிக்கை இருந்து வருவது ரகுராமருக்கு உண்மையிலேயே தெரியாதோ, அன்றி. தெரிந் திருந்தும் மற்றவர்களுக்குத் தெரியாது என்கிற மனப்பான்மை கொண்டிருந்தாரோ அறியோம். அன்று தலைவராக இருக்க ஒழுங்கற்ற முறைகள் இரண்டொன்றைக் கையாண்டும் பலிக்கவில்லை. நமது தோழர்கள், காங்கிரஸ் கவுன்சிலர் திரு. எம். கண்ணப்ப முதலியாரைப் பிரேரேபிக்க அபிப் பிராய பேதமின்றி ஏக மனதாக ஒப்புக் கொள்ளப் பட்டு சேர்மன் ஸ்தானத்தில் கண்ணப்ப முதலியார் அமர்ந்தார்.

ருசிகரமான சில விஷயங்களையும் நேயர்களுக்கு அறிவிக்க விரும்புகிறோம். அன்று நடந்த கூட்டத்தில் நமது தோழர் அப்பாயி செட்டியாரின் தீர்மானம் ஏற்றுக் கொள்ளப்பட்டு, யுத்தத்தில் சேவை செய்யும் ராணுவங்களின் உதவிக்காக ரூ. 1000 சாங்ஷன் செய்யப்பட்டது. காங்கிரஸ் கவுன்சிலர் சடகோபாச்சாரியார், வாசக சாலையின் ஆதரவில் நடைபெறும் ஓட்டலுக்கு, இலவச லைசென்சு கொடுக்கக்

கேட்டுக் கொண்டது நிராகரிக்கப்பட்டது. தும்பவனம் வாசக சாலையில் இருந்த ரேடியோவைத் தற்காலிகமாக நிறுத்தப்பட்டது. மேற்படி வாசக சாலைக்குக் கவர்ன்மெண்டு சகாய நிதி கேட்பதை நிறுத்தி வைக்கப்பட்டது. இவைகளனைத்தையும் விடத் தலைவர் தோழர் கண்ணப்ப முதலியார் அவர்கள் ஆரம்ப முதல் கடைசி வரை கூட்டத்தைத் திறமையாகவும், தைரியமாகவும் நடத்தியதையும், இரண்டு, மூன்று சமயங்களில் நமது தோழர்கள் பேசிக்கொண்டிருந்ததில் குறுக்கிட்டு, ரகுராமர் பேசியதை தலைவர் கண்ணியமாகத் தடுத்ததையும் நாம் பாராட்டுகிறோம்.

காங்கிரஸ் கட்சியில் இருக்கும் திராவிடத் தோழர்கள் இனியாவது தங்கள் உறக்கத்திலி ருந்து விழிக்கடும். டாக்டர் சீனுவாசனும், அவர் சிறையில் இருந்தாலும் அவன் தம்பி அங்குதன் என்பது போல் இன்னொரு ஸ்மார்த்தப் பார்ப்பானுமே தலைவர் பதவியை அடைய உரிமையுள்ளவர்கள் என்கிற அழுகிய மனப் பான்மை ஒழிய, அவர்கள் உள்ளத்தில் சுய மதிப்பு ஏற்பட வேண்டாமா என்பதே நமது கேள்வியாக இருக்கிறது.

கூடிய சீக்கிரம் சேர்மன் ஸ்தானமும், தேர்தலுக்கு வரக்கூடும். அதுசமயம் திராவிடத் தோழர்கள் எவ்விதம் நடந்து கொள்ளுகிறார்கள் என்பதையும் பொறுத்திருந்து பார்ப்போம். ஆனால் சூடு கண்ட வேதாளம் மீண்டும் தலை நீட்டுமா?

``உங்களுக்குத் தெரியுமே, விக்கிரமாதித் தனின் சிம்மாசனத்தின் மீது போஜராஜா ஏறி உட்காரச் செல்லும்போது, பதுமைகள் கதை சொல்லி அவனை நிறுத்தின என்ற ருசிகரமான கதை! அதுபோல, இனி, ``தமிழர் தரணியிலே ஆரியர் ஆட்சி செய்ய முன் வந்தால், ``அகோ வாரும். பிள்ளாய்! ஆரியனே நில்லாய்! தமிழ் நாட்டிலே ஆரியன் நீ அரசு செலுத்தலாமா? பெரும்பாலானவர்களும், நாட்டுக்குச் சொந்தக் காரருமான தமிழர்களின் வரிப்பணத்தைக் கொண்டு நடத்தப்படும் இடத்திலே உழைக்காது வாழும் ஊர் உழைப்பை உறிஞ்சிகள், ஆள முனைந்தால் இனித் தமிழகம் பொறுத்துக் கொண்டிராது'' என்று இடித்துரைத்துத் தமிழரைத் தரணியாளச் செய்ய வேண்டும். பாதுகா பட்டாபிஷேகம் பலிக்காது போனதே ஆரியருக்கு ஓர் பாடம்! ஆனால்

இனித் தமிழரே ஆட்சி செய்யும் வழி வகுத்தால் தான் பாடம் பூர்த்தியாகும். செய்வரா?

(திராவிட நாடு - 29-11-1942)

# மனோ ராஜ்யம்

அடித்து விடுவாயோ? அடித்தால் தெரியுமா?

என்னடா தெரிவது? அடித்தால் என்ன செய்வாய்?

என்ன செய்வேன் தெரியுமோ?

என்னதாண்டா செய்வாய்? இதோ அடிக்கிறேன் பார், என்ன செய்வாய்?

அழுவேன்!

* * *

காந்தியாரைப் போய்ப் பார்த்துப் பேசிப் பயன் என்ன? அவர், நீர் சொன்னால் கேட்பாரா? கேட்கா விட்டால் என்ன செய்வீர்?

கேட்காவிட்டால் என்ன செய்வேன் தெரியுமா?

என்ன செய்வீர்?

பேசாமல் திரும்பி வந்து விடுவேன்!

* * *

முதல் உரையாடல், விகடம்! இரண்டாம் உரையாடல் அரசியல் உலகில் ஆச்சாரியாரின் சொற் சகடம்! கோழை கூறுகிறான், அடித்தால் அழுவேன் என்று அதுதான் அவனுக்குத் தெரிந்தது. ஆச்சாரியார், தூது போகிறேன், பலித்தால் சரி, பலிக்கா விட்டால் வீடு திரும்புகிறேன் வெறுங்கையுடன் என்றுரைக்கிறார். இந்தத் "தூது" பலிக்கும் வழி இல்லை என்றறிந்தே வைசிராய், ஆச்சாரியாருக்குக் காந்தியாரைக் காணும் அனுமதி தரவில்லை.

இது, இந்தி எதிர்ப்பாளர் ஈ.வெ.ரா. பங்காளர்கள் கூறுவதல்ல! ஆரியத் தோழர், அரசியல் ஆருடக்காரர், சீர்திருத்த சேவையை ஏட்டின் மூலம் செய்து புகழ் ஈட்டி வருபவர், பம்பாய்வாசி சோஷியல் ரிபார்மர்

பத்திரிகை ஆசிரியர், கூறுகிறார்! வைசிராய், அனுமதி மறுத்தது தவறன்று, முறையே. அனுமதி மறுத்ததால் குடி முழுகிப் போகவில்லை, அனுமத்திருந்தால் காரியம் எதுவும் கைகூடப் போவதில்லை. ஆச்சாரியாரின் தூது பலித்திருக்காது, பலிக்கும் ராசியே கிடையாது, என்று மேற்படி பத்திரிகை எழுதிற்று.

எழுதினால் என்ன? ஆச்சாரியார், லயோலா கல்லூரியிலே, “அகில உலகமே, எனக்கு வைசிராய் அனுமதி தர மறுத்ததைக் கண்டிக்கிறது” என்று கூறிடத் தவறவில்லை. டாக்டர் அருண்டேல், காரசாரமாகவே கண்டித்தார், ஆச்சாரியாரின் முயற்சியை, ஆச்சாரியாருக்கென்ன, கேளாக்காது இல்லையா, கண்டனம் பிறக்கும் பக்கம் திருப்ப! இந்து மகாசபைக்காரர், ஆச்சாரியார் முஸ்லீம் லீகுடன் சமரசம் செய்து கொண்டால் அது எம்மைக் கட்டுப்படுத்தாது என்று கூறினர். ஆச்சாரியாருக்கென்ன, அதைப் பொருட்படுத்த வேண்டுமென்று அவசியமுண்டா? காங்கிரசே ராஜி பேசினால் காரியம் பலிக்குமே யொழிய காங்கிரசிலிருந்து விரட்டப்பட்ட ராஜகோபாலாச்சாரியார், எந்த அதிகாரத்தைக் கொண்டு முஸ்லீம் லீகினிடம் ஒரு சமரசம் செய்து கொள்ள முடியும்? என்று ஜனாப் ஜின்னா கேட்டார், ஆச்சாரியாருக்கென்ன புன் சிரிப்பு தெரியாதா! யார் எதைச் சொன்னாலென்ன, இரயில் ஓடுவது இருக்கும் வரை, இராஜிக்காகப் பேட்டிகள் காண்பேன், காகிதங் கிடைக்குமட்டும் சமரச கீதத்தை, நானா விடுவேன்! என்று கருதி விட்டார் போலிருக்கிறது, பாபம், கால்வலிக்கச் சுற்றுகிறார், வாய் சலிக்கப் பேசுகிறார், கை சலிக்க எழுதுகிறார், சோர்வின்றி உழைக்கிறார்!! ஆனால் பொத்தல் தோண்டியிலே நீர் மொண்டு பொழுது விடியுமட்டும் இறைத்தாலும், தோட்டத்திலே நீர் பாய்ச்சி ஆகுமா?

காகமும் கழுகும், நாயும் நரியும் ஓர் நாள் சுற்றித் தின்னப்போகும் சோற்றுத் துருத்தியப்பா இது! ஒன்பது வாசல், இந்த வீட்டுக்கு! இரண்டு கால்! எதற்கு இந்த வீடு பயன் படுகிறது? காமவேள் இதனை நடனசாலையாகக் கொள்கிறான்!

மும்மலக்கேணி! போகபோகம் திணிக்கப்பட்ட பெட்டி! கணக்கற்ற கிருமிகள் மொய்த்துக் கொண்டிருக்கும் கும்பி! பிரமனெனும் குயவன் செய்த மட்கலம்! எமனெனும் தடிகாரன் அடித்து நொறுக்கப் போகும் பாண்டம்! என்று பேசிடும் ஆண்டி, சந்தி வேளையிலே மதுக்கடை போவதும், இரவிலே எவளாவதொரு இன்பவல்லியைத் தேடுவதுமாக

இருக்கும் வேடிக்கை போல், பதவி எதற்கப்பா? மாகாண சுயாட்சியிலே என்ன இருக்கிறது? அது வெறும் ஹம்பக் என்று வங்கத்திலே மந்திரியாக இருந்த தங்கக் குணமுடைய முகர்ஜீ மொழிந்ததைக் கேட்கவில்லையா? இந்தப் பதவிகளுக்கா நாம் பிறந்தோம்! பரிபூரண சுயராஜ்யம் பெறுவதல்லவா நமது நோக்கம் என்று பேசிடும் கூட்டம், பகலிரவு பாராது, இலஜ்ஜையையும் விட்டு பதவிக்காகப் பல்லிளிக்கும் காட்சியை இங்கு காண்கிறோம். முசோலினி முகாரி பாடுகிறார். ஏன், இப்படிப் பதைக்க வேண்டும்? இது வரையிலே இந்தத் தேசீயத் திலகங்கள் பதவியிலே அமராததால், என்ன குறை கண்டோம்! போர் முயற்சி கெட்டு விட்டதா! போர் நிலைமை தளர்ந்ததா! இல்லையே! இவர்கள் இங்கு தண்டவாளப் பெயர்ப்பு வீரராக இருக்கும் நாட்களிலே, அமளியிலே அச்சு முறிகிறது, நேசநாடுகளின் கூட்டு முயற்சியினால் இந்தியப் பாதுகாப்பு இதுவரை சரித்திரங் கண்டிராத அளவு பலமாகி விட்டது. அந்தமான் தாக்குண்டது. ரங்கூன் மீதும் குண்டு வீச்சு. டூனிசியாவிலே வெற்றி வாடை காண்கிறோம். காண்டன் மீது சீனர் பாய்ந்தனர் என்று கேட்கிறோம். கடலிலே காணப்படும் ஜப்பானியக் கப்பல்கள் மூழ்கடிக்கப் படுகின்றன.

ரோமனை விரட்டியடித்ததும் உமக்குத் தந்தி அனுப்புகிறேன் என்று சர்ச்சில், ஆகஸ்ட் மாதம், ஸ்டாலினிடம் கூறினாராம். ஸ்டாலின்கிராடிலிருந்து ஜெர்மானியரை விரட்டினதும் உமக்கு நான் தந்தி அனுப்புகிறேன் என்று ஸ்டாலின் சர்ச்சிலிடம் சொன்னாராம். இரண்டு தந்திகளும், முறையே சென்றன, என்று சர்ச்சில் கூறிக்களிக்கிறார். இங்கு காங்கிரஸ் கூட்டம், இன்னமும் கோபுரந்தாங்குவது நாமே என்று பொம்மைகள் எண்ணிக் கொள்வது போல, ஏன் மனப்பால் குடிக்க வேண்டும் என்று கேட்கிறோம். எதற்காக ஆச்சாரியார், தேசீய சர்க்காருக்காக இன்னமும் திருவாயமொழி பாடித்திரிய வேண்டும்? அது இல்லாததால் நேரிட்ட குறை என்ன? அது கிடைத்து விட்டால், இவர்கள் செய்யப் போகும் அற்புதம் என்ன? முத்தான வாய் திறந்து சொல்வாரா அதனை என்று கேட்கிறோம்.

ஆச்சாரியார், வைசிராய் அனுதி மறுத்தார், சமரச முயற்சி கெட்டே விட்டது என்று சாற்றுகிறார். அதே நேரத்தில் ஜனாப் ஜின்னா, ஆச்சாரியார், செல்லுபடியாகாத செக்! என்பதைக் கூறிவிட்டார், பிறகே

ஆச்சாரியாரும், சமரசத்தூதர் என்று கூறுகிறார். எதற்குத்தூது? காங்கிரஸ் - லீக் சமரசத்துக்கு! இரு கட்சிகளுக்குள் இருக்கும் சர்க்கார் மீது காங்கிரஸ் காரணம் என்ன? சர்க்காருக்குச் சங்கடம் விளைவிப்பதன் மூலம் அதனை தாண்டித் தன்பக்கம் சேர்த்துக் கொண்டு, லீகை ஒழிக்கலாம் என்ற நோக்கம். இதை ஜனாப் ஜின்னா தெளிவாகக் கூறிவிட்டார், "இன்று நடைபெறும் நாசகாரியம், லீகின் மார்புக்கு நேராகக் காங்கிரஸ் நீட்டிக்கொண்டிருக்கும் கைத்துப்பாக்கிக்குச் சமாதானம் என்று. இந்த நிலையிலே தூது அது வெற்றி பெறப்போவதே துரைமாரின் "தோடா" கிடைக்கப் போவதேது! அன்பரே! ஆச்சாரியாரே, அருமையான காலத்தையும் கருத்தையும், வீணுக்குச் செலவிடுகிறார், என்று நாம் கூறினால், அவர் வாதத்தை நம்மீது வீசுகிறார், சல்லியர் வேண்டாம் என்று. கர்ணனுக்குத் தேரோட்டிய சல்லியன், களத்திலே, கர்ணனுக்குச் சந்தேகத்தையும் சஞ்சலத்தையும் உண்டாக்கித் தொலைத்தாலும், அது போல், இந்தக் கர்ணனரரை, நாம் சல்லியர்கள் போல் சஞ்சலத்துக்குள்ளாக்குகிறோம். பாரதத்திலே, ஆச்சாரியார் எடுத்தாண்ட சம்பவத்தைப் போல், நாம் ஒன்றல்ல, இரண்டு தருவோம், அவருடைய நிலைமையையும், அவருடைய சகாக்களின் நிலைமையையும் விளக்க, குந்திபெற்ற பிள்ளைகளைக்கண்ட திருதிராஷ்டிரனின் பதவி பொறாமையால், தன் வயிற்றுக் குழவி பொறாமையால், தன் வயிற்றுக் குழவி கொண்டு இடித்துக் கொண்டாளாம், கரு சிதைந்து, நூறு கருக்கள், துரியோதனராதியர், பிறந்தனர். அதுபோல், டாக்டர் அம்பேத்கார் (ஒரு ஆதிதிராவிடர்) சர். முகமது உஸ்மான் (ஒரு முஸ்லீம்) மத்திய சர்க்காரிலே பதவி பெற்றுப் பரிபாலனம் செய்வது கண்டு, ஒரு சர். ராமசாமி முதலியார், பிரிட்டிஷ் யுத்த மந்திரி படையிலே அங்கம் வகித்தது கண்டு, மனம் குமுறி, "ஐயோ! தெய்வமே! ஆலமரம் சுற்றி, அபிஷேகம் செய்தும், அடி வயிறு கனத்ததே யொழிய, பிள்ளை காணோமே என்று திருதிராட்டிணன் மனைவி தேம்பினது போல, எட்டு மாகாணமாண்டோம், கொட்டு முழக்கடித்தோம், கோல் சுழற்றி நின்றும், கூடுவோம் சிறையிலே என்று என்னென்னமோ செய்தும், ஆட்சி நமக்குக் கிடைக்கவில்லையே என்று குமுறி, குழவி கொண்டு இடித்துக்கொண்ட கோணற் புத்திக்காரிபோல் காங்கிரஸ் கூத்தாடுகிறது, என்போம்.

பாரதத்திலேயே வரும் உத்திர குமாரன், உரத்த குரலிலே பேசினான் அந்தப்புரத்திலே மாதர்கள் முன்பு, "மாடு பிடிசண்டைக்கு வந்துள்ள மாற்றான்களை, ஒரு விநாடியிலே நான் ஓட்டிடுவேன், ஒரு நல்ல சாரதி

மட்டும் கிடைத்தால்” என்று. விராட இளவரசனின் வீரத்தின் போலித்தன்மை பெண் உருவிலிருந்த அர்ஜுனனுக்குத் தெரியும், ஆகவே அந்த பிருஹன்னனை, நான் சாரத்தியம் செய்வேன் என்று கூறி, களத்திற்கு உத்திர குமாரனைக் கூட்டிச்செல்ல, நால்வகைச் சேனையைக் கண்டு, நாடி நடுங்கி, நாக்குழறி, தேரின் பின்புறமாகக் குதித்தோடியே விட்டானாம் உத்திர குமாரன், காங்கிரசின் வீரம், இதற்கு மாறானதன்று!

புராணம் பேசிப் பொழுதைப் போக்குவதை ஆச்சாரியார் விட்டு, சரிதம் போதிக்கும் பாடத்தின்படி காரியம் நடக்க வேண்டும் என்ற நினைப்பு கொண்டால், ஒரு சமயம், பிரச்சனை தீரும்.

“பிரிட்டிஷார் போய்ச்சேர ஒரு பிரிட்டன் இருக்கிறது. நான் எங்கே போக முடியும்! இதுவே என் தாயகம். ஆனால் சொந்த நாட்டில் பிறருக்கு அடிமையாக இருக்க நான் சம்மதியேன்” என்று ஜனாப் ஜின்னா, சின்னாட்களுக்கு முன்பு சிங்கமெனச் செப்பினார். தந்திரத்தாலோ மந்திரத்தாலோ ஆங்கில ஆட்சியை நீக்கிவிட்டு வந்தேமாதரத்தின் ஆட்சியைப் புகுத்த விரும்பும் முயற்சியை முறியடிப்பதே, முஸ்லீம் சுயராஜ்யப் போரின் முதற்கட்டம். சாணக்கியர்கள் அதை உணரவேண்டும். அதை உணராது, ஊராள எண்ணினால், சுயராஜ்யம் கிட்டாது. மனோராஜ்யமே மிச்சமாகும்.

6.12.1942

# வௌவாலின் விசாரம்

வாட்ட வருத்தமின்றி விளையாடிக்கொண்டிருக்கிறீர்களே, உங்கள் தலையில் இடி விழ இருப்பது தெரியவில்லை. கத்துவதும், தலைகீழாகத் தொங்குவதும், மரம் பழுத்தால் சென்று தின்பதும், புழுதி கண்டால் பூரிப்பதும், இன்பமே நிரந்தரம் என்று எண்ணிக்கொண்டுவிட்டீர்கள், ஏமாளிகளே! எனக்கு என்னதான் கோபம் வருகிறது தெரியுமா உங்கள் பேரில். ஒழிக்க வேண்டியது தான் உங்களை! நமது பக்கத்து பசங்களாயிற்றே என்ற பச்சாதாபம் என்னைப் பிய்த்து விடுகிறது. இல்லையானால், நானே போய் அவர்களை அழைத்துக்கொண்டு வருவேன்." வௌவால் சோகமும் சீற்றமும் கலந்த குரலில் இவ்விதம் கூறியதும், வட்டமிட்டுச் சிறகடித்துச் சுவரில் மோதி தாவி விளையாடிக்கொண்டிருந்த மற்ற வௌவால்கள், கொஞ்சம் சுற்றும் வேகம் குறைந்தது. என்ன இருந்தாலும் நமது வாயிற்றே, கொஞ்சம் அடக்கங்காட்ட வேண்டுமே என்று யோசித்தே, வௌவால்கள் விளையாட்டை நிறுத்திக் கொண்டன. வயோதிக வௌவால் அழவில்லையே யொழிய, முகத்திலே துக்கம் கப்பிக் கொண்டிருந்தது. ஒரு முறை கனைத்துவிட்டுக், கிழ வௌவால் பேச ஆரம்பித்து, பயத்துடன்.

"எத்தனையோ காலமாகத்தான் நாம் இங்கு வாழ்ந்து வருகிறோம், ஒரு தொல்லையுமின்றி, விசாலமான இடம்; விளையாட, உறங்க உலவ எவ்வளவோ சௌகரியம். நமது எதிரிகளோ நுழையவே மாட்டார்கள். நுழைந்தாலும், நாம் பதுங்கிக் கொள்ள எவ்வளவோ இடங்கள். இந்த இருள் நம்மை எவ்வளவோ இரட்சித்தது. இவ்வளவு இன்பமும், பாதுகாப்பும், இருக்கும் வாழ்வுக்கு ஆபத்து வந்து விட்டது, அது தெரியாமல், ஆடிக் கொண்டிருக்கிறீர்கள் அசடுகளே! என்று கிழ வௌவால் கூறிற்று. மற்றவைகள் ஒன்றை ஒன்று மருட்சியுடன் பார்த்து விட்டு, "என்ன ஆபத்து? யாரால் ஆபத்து?" என்று மெதுவாகப் பேசிக் கொண்டன. ஒரு வௌவால் "தாத்தா! ஏன் துயரப்படுகிறீர்? எதற்காகக் கவலை? என்ன ஆபத்து நமக்கு?" என்று கேட்டது. வயோதிக வௌவால், தலையை அசைத்துக் கொண்டே, "துயரமா? உன் பருவம் உன் நிலைமையை நினைப்பூட்டவில்லை! ஆபத் தென்றால், சாமான்யமானதல்லடா குழந்தாய். இதுவரையிலே தப்பினோம், இனி முடியாது" என்று கூறினபோது தான் மற்ற வௌவால்கள், உண்மையிலேயே ஆபத்து வந்துதான் விட்டது என்று எண்ணின,

பயந்தன.

“மிருகங்களுக்கும் பறவைகளுக்கும் மீண்டும் சண்டையா? நாம் எந்தக் கட்சி என்ற கேள்வி பிறந்துவிட்டதா?” என்று கேட்டது ஒரு சிறிய வௌவால்.

“மகா புத்திசாலி தாண்டா! வாயை மூடு. அந்தச் சண்டை நடந்தபோது நீ பிறக்கக்கூட இல்லை. உன் அப்பா அம்மாவுக்கே அப்போது சரியாகப் பேசத் தெரியாது. மிருகமா, பட்சியா, எந்த இனம் நாம், என்ற கட்சிச்சண்டை சாதாரணம்... இப்போது” என்று இழுத்தது வயோதிக வௌவால்.

“பழத்தோட்டத்துக்கக் காவல் போட்டுவிட்டார்களோ?”

“வேடர்கள் இந்தப்பக்கம் வருகிறார்களா?”

“புது வியாதி ஏதாகிலும் பரவிக்கொண்டு வருகிறதா?”

“புயல் காற்று அடிக்கப் போகிறதா?”

ஒவ்வொரு வௌவாலும் இதுபோல் ஒவ்வொரு கேள்வி கேட்கலாயிற்று. ஒன்றிற்கொன்று பயத்திலே தோற்கவில்லை. ஒவ்வொரு கேள்விக்கும், வயோதிக வௌவால் இல்லை! இல்லை! என்று தலையை ஆட்டிக்கொண்டே இருந்தது.

“என்ன தான் அது. எங்களுக்கு எப்படித் தெரியும்? சொன்னால் தானே? நாங்கள் ஒன்று மில்லை என்று தான் வழக்கம்போல் விளையாடிக் கொண்டிருந்தோம்” என்று மரியாதையாக ஒரு வௌவால் கூறிற்று. வயோதிக வௌவாலின் முகத்திலே புன்னகை பூத்தது. “தாத்தாவுக்குச் சந்தோஷம் வந்து விட்டது, சிரிக்கிறார்,” என்று கூறிக்கொண்டு, சில வௌவால்கள் கத்திக்கொண்டே கூத்தாடின. “சீ! முட்டாள்களே, கேளுங்கள் சேதியை,” என்று கடிந்துரைத்தது கிழம். கூத்தாடிய குட்டிகள் கிட்ட நெருங்கின. கிழ வௌவால், கேட்டது, மற்றவைகளைப் பார்த்து, “இந்த ராஜ்யம்” யாருடையது தெரியுமா?”

“நமதே ராஜ்யம்.”

உங்கள் அப்பன் பாட்டன் கட்டினதா? இல்லை. இது முன்னோர் காலத்திலே, என் முப்பாட்டன் காலத்துக்கும் முன்னாலே கட்டப்பட்ட ராஜ்யம். இதைக் கட்டினவர்கள், நமது மூதாதையரன்று. இது மனிதர்கள் கட்டிய இடம்.”

மனிதர்கள் கட்டிய இடமா? நமது சாதியார் கட்டியதல்லவா?”

மனித ஜாதி கட்டி, நெடுநாள் வாழ்ந்து, பிறகு தமக்குள் சண்டை போட்டுக்கொண்டு, இந்த ராஜ்யத்தைச் சீர் குலைத்து விட்டபிறகு, நமது சாதி இங்கே குடி ஏறிற்று. இது நமது சரித்திரம். இது தெரியாமல் கத்திக் கூத்தாடுகிறீர்கள்.

“சொன்னால் தானே தாத்தா தெரியும். இது மனித ஜாதி கட்டிய இடமா? அதானே, நாங்கள் யோசித்தோம், எப்படியடா, நம்ம சாதி இப்படிப்பட்ட கட்டடத்தைக் கட்ட முடியும் என்று.” சாதிக்கு, கட்டடம் கட்டவா தெரியும்? யாராவது கட்டி வைத்து, ஆண்டு அனுபவித்துக், கலனாகி விட்டால், விட்டு விட்டுப் போய்விடுவார்கள், பிறகு நாம் அங்கே வசிப்போம். அது நம் குலதர்மம். கட்டடம் கட்டத் தெரிந்தால் நான் கட்டியிருக்க மாட்டேனா ஒரு புதுக்கட்டடம். ஏன் முப்பாட்டன் இங்கே வாழ்ந்தான், பாட்டனும் இங்கே, அப்பா இங்கே இருந்தார், நான் இருக்கிறேன். அவ்வளவு தான். நமக்குக் கட்டடம் கட்டத்தெரியாது. கட்டின இடத்திலே, நுழைந்து கொண்டு வாழத் தெரியும். மரம் பழுத்தது வா என்று யார் நம்மை அழைக்கிறார்கள்? நாமாகப் போகிறோமல்லவா? அதுபோலத்தான், இங்கு வரச் சொல்லியும் யாரும் கூப்பிடவில்லை. நாமாக நுழைந்தோம், வாழ்ந்து வந்தோம், இப்போது, “வா வெளியே” என்று அழைக்கிறார்கள். இடத்தைக் காலி செய்ய வேண்டுமாம்.”

“ஏன்? எதற்கு?”

“இடத்தை இடிக்கப் போகிறார்களாம்.”

“யார்?”

“மனிதர்கள்.”

“நாம் வாழ்ந்து வரும் இடத்தை, மனிதர்கள் இடிக்கப் போகி றார்களா? நமது சுதந்திரம் பாழாவதா? நாம் போரிட வேண்டும்.”

“போதும், போருக்கு நாம் இலாயக்கா? மேலும், இடமோ நம்முடையதல்ல. இடிக்க வருபவர்களோ, எது சொன்னாலும் கேட்கமாட்டார்கள்.”

“ஐயோ! இது என்ன அக்ரமம். இவ்வளவு நாளாக நாம் வாழ்ந்த வாழ்வு பாழாவதா? எதற்காக இதை இடிக்க வேண்டுமாம்?”

“இந்த இடம், அசுத்தமும் அநாதரிகமும் கொண்டதாம், குப்பையும் கூளமும் குவிந்து விட்டதாம். இந்தப் பக்கமாக மனிதர்கள் நடமாடினாலே குடலைப் புரட்டுகிறதாம் கெட்ட வாடை. இருள் சூழ்ந்து கிடக்கிறதாம்.”

“ஆமாம்! இவைகள் இவர்களுக்குப் பிடிக்கவில்லை. நமக்கு இருட்டுத்தான் வேண்டும். குப்பை கூளமின்றி நாம் எப்படிக் குளித்து முழுகுவது. அநாகரீகம் என்று சொன்னால், அதுதானே நமக்கு பூர்வீக சொத்து. அசுத்தம் நமக்குப் பழகி விட்டது. நாம் இருக்கிறோம். மனிதர்களுக்கு இவை பிடிக்கவில்லை என்பது சரி. அவர்கள் இங்கு வரவேண்டாம்.

“இருட்டும் அசுத்தமும், நிரம்பிய இந்த இடம், புராதனமானதென்றாலும், அதிகக் கடனாகி விட்டதாம், சரிந்து விட்டன, சுண்ணாம்பை விட்டது, மாடி இடிந்து விட்டது மேடு குவிந்து விட்டது, கிணறு விட்டது, கூடம் குமுறி விட்டது. மிகப் பழைய கட்டடம், மனிதவளம் இல்லாததால், கலனாகி விட்டது. இதனை இடித்துத் தள்ளி விட்டு, இடத்திலே புதிய மாளிகை நல்ல காற்றோட்டம், விசாலம் மாளிகையைக் கட்டினால், மனிதர்கள் வாழ முடியுமாம். அதற்காகத்தான் இந்த இடத்தை இடிக்கப் போகிறார்களாம்.”

“நம் கதி?”

“அதைப் பற்றிய கவலையால் நான் குமுறுகிறேன்.”

கிழ வௌவாலுக்கும், வாலிப வௌவாலுக்கும் இந்த உரையாடல் நடந்த பிறகு, உண்மையிலே வௌவால்கள் கிலி கொண்டு விட்ட வௌவால்களின் வாட்டம், காண்போரைக் கரையவைக்கும் விதமாகத்தான் இருந்தது. பரிதாபத்துக்குரிய இந்தப் பழைய மாளிகை வாசிகள் ஏதேதோ யோசித்தன.

பல நூற்றாண்டுகளுக்கு முன்பு, ஏராளமான பொருட் செலவிட்டு, திறமையானவர்கள் கட்டின மாளிகை அது. அரண்மனை! அதிலே அரசரும் அரச குமரரும், குமரிகளும் விளையாடிய இடம் அந்தக் காலத்திற்கேற்றபடி, வானளவிய கோபுரம், விசாலமான வாசல், விசித்திர வேலைப்பாடுடைய கூடம். பெரிய பெரிய தூண்கள், தோட்டதது சிங்காரக் குளம், சிலைகள் கொண்ட மாளிகை, அதைக் கட்டியவர், சொந்தக்காரர், அவ்வழி வந்தோர், வாழையடி வாழையாக வாழ்ந்த, ஒவ்வோரு காலத்தில் ஒவ்வோர் புது இடத்து அவரவர்கள் கட்டிக் கொண்டுபோயினர். பழைய மாளிகை அனுபவிப்பார்கள் போயிற்று. ஊர் புதுப்பிக்கப்பட்ட பழைய இடம் காடாகி விட்டது. காட்டிலே இந்தக் கட்டடம் கலனாகிக் கிடந்தது. பார்க்கக் கெம்பீரமாக இருக்கும் விதத்திலே கட்டப்பட்ட இடம், பாழடைந்த மாளிகையாகிப், பாம்பும் வௌவாலும் பிறவும் வாழும் இடமாகிவிட்டது. சரிந்த சுவர்களிலே, பிளவுகளிலே கடுவிஷமும் பாம்புகள் பதுங்கிக் கொண்டிருந்த கூரைமீது செடியும் கொடியும் படர்ந்து விட்டன. குளத்திலே நீர் வந்து நெடுநாட்களாய் விட்டன. அதிலேயிருந்த கிருமிகள் கோடி கோடி, புளுதிக் குவியலிலே உடும்பும் ஓணானும், பல்லியும் பிறவும் ஓடி விளையாடின. உயரமான அந்தக் கட்டடத்திலும் தூண்களிலும், சுவரிலும், தூலத்திலும், மாடியிலும், ஏராளமான வௌவால்கள் வாசம் செய்து வந்தன. புதிய அரண் மனைகளிலே கீதமும், கிண் கிணியோசையும், யாழும் குழலும், மழலையும் காதல் மொழியும், தென்றலும் கதிரோனின் ஒளியும் இருந்தன. இந்தப் பாழடைந்த மாளிகையிலே, வௌவால்களின் சத்தந்தான் கீதம்! பாம்புகள் சீறுவதுதான் கிண்கிணி, பலவகையான நச்சு உருவங்களின் கிரீச்சொலியே யாழ், குழல்! புதிய கட்டடங்களிலே, மக்கள் மகிழ்வோடு வாழ்ந்தனர், இடிந்த சபா மண்டபத்திலே, வௌவால்களே தர்பார் செய்து வந்தன. புதிய இடங்களிலே பூந்தோட்டம், இங்கோ கள்ளி, முள், கசுமலம்!

எனவே தான், சரிந்த உபயோகமற்ற, குட்டிச்சுவராகிக் கொண்டு வரும் அந்த இடத்தை இடித்து விட்டு, புதியதோர் கட்டடம் அமைத்தால்,

மக்கள் வாழ வசதியாக இருக்கும் என்று மனிதர்கள் தீர்மானித்தனர். இடிக்க ஏற்பாடுகள் செய்யலாயினர், இந்தச் செய்தி தெரிந்ததும், பாழடைந்த இருட்டு மாளிகையில் வாழ்ந்த வந்த வௌவால்கள் தமக்கென இருந்ததும், பிறர் நுழையாததும், தமக்குப் பிடித்தமான பண்டங்கள் வசதிகள் நிரம்பியதுமான இடம் போய்விட்டால் என் செய்வது என்று ஏங்கி, மனம் வீங்கித், தூங்குவதையும் மறந்து, துயரிலே உழன்றன.

“ஆபத்து பிரமாதமானதாகத் தான் இருக்கிறது. நாங்கள் இந்த இடம் என்றென்றும் நமக்கே சொந்தம் என்று இறுமாந்து கிடந்தோம். எமது வாழ்வு நிரந்தரமாக இருக்கும் என்று பூரித்தோம். இப்போது என்ன செய்வது? எங்களுக்கொன்றும் புரியவில்லையே. தாத்தா! நீர்தான் இதற்கு ஓர் வழி சொல்ல வேண்டும்” என்று வயோதிக வௌவாலிடம் மற்றவை முறையிட்டுக் கொண்டன.

“இடிக்க வருபவர்களை, எதிர்க்கக் கிளம்புவோம் என்று சொல்ல வேண்டும்.”

“செய்யக் கூடாது, செய்யவும் முடியாது.”

“ஏன் முடியாது?”

“கட்டடத்தை இடிக்க வேண்டுமென்பதற்கு அவர்கள் கூறும் காரணங்களை நாம் மறுக்க முடியாததே தம்பி! அதைக்கவனி. இருட்டு என்கிறார்கள், இல்லை இது தான் ஒளி என்று எப்படிக் கூறுவது. குப்பை கூள மிருப்பதும் உண்மைதானே, அதை எப்படி மறைப்பது, ஒழிக்கத்தான் முடியுமா? ஒழித்தால், இடமே காலியாக இருக்குமே? கலனாகி விட்டதும் உண்மைதானே. ஆகவே இடம் இடிக்கப்பட வேண்டும் என்பதற்கு மனிதர்கள் கூறிடும் காரணங்களை நாம் மறுக்க முடியாது. நியாயம் நம் பக்கம் இருக்க முடியாதல்லவா? ஆகவேதான், அவர்களுடன் சண்டைக்குப் போகக்கூடாது என்று சொன்னேன். மேலும், சண்டைக்குக் கிளம்பினால், நம்மிடம் இருக்கும் ஆயுதம் என்ன? தலைகீழாகத் தொங்குவோம். சிறகாலடித்துக் கொண்டு, அவர்கள் முகத்திலே மோதுவோம். வேறு என்ன செய்ய முடியும்? அவர்கள் கை தட்டும்போதே நமக்கு உடல் நடுக்கம்!”

“உண்மை தான். பிறகு என்ன தான் வழி?”

“இந்த இடித்த கட்டடம் எமக்கு வேண்டும், இருள் தேவை, அசுத்தம் வேண்டும், என்றும் கூற முடியாது. கூறினால், நம்மைக் கேலி செய்வார்கள். நமக்கோ உள்ளபடி இவைகளின்றி வாழவும் முடியாது.”

“இரு நெருப்புக்கிடையே உள்ள புழுப் போலானோம்.”

“ஆமாம்! குழந்தைகளே. நான் சொன்னேனே முன்பே. எனக்கு இவ்வளவு வயதாயிற்று, இது வரையிலே இத்தகைய ஆபத்து வந்ததில்லை. காலம் கெட்டு விட்டது. ஒரே ஒரு வழி இருக்கிறது.”

“என்ன? தாத்தா அது?”

“மனிதர்களே நீங்கள் எந்தக் கட்டடத்தை இடிக்க வேண்டுமென்று கூறுகிறீர்களோ, இது மகா புனிதமானது, தேவசம்மதமானது, பழமையானது, அருமையான வேலைப் பாடுடையது. உங்கள் முன்னோர்களின் அபாரமான திறமைக்கு இது தானே சாட்சி. இதை அழிக்கலாமா? இதையும் அழித்து விட்டால் ஆன்றோர்களின் ஞாபகப் பொருள் வேறு என்ன இருக்கும்? எதைக் கொண்டு பெருமை பேசிக் கொள்வது? என்று மனிதர்களைக் கேட்க வேண்டும்.”

“ஆமாம்! சரியான யோசனை. அப்படித்தான் கேட்க வேண்டும். இடிக்கக் கிளம்புகிறீர்களே, உங்களால் இதைப்போல ஒரு கட்டடம் கட்ட முடியுமா? என்று கேட்கலாம்.”

“கூடாது, கூடாது! அதைக் கேட்டால் மனிதர்கள், எவனோ கட்டிய கட்டடம் இடிந்த போது உள்ளே புகுந்து கொண்டு முரட்டுப் பிடிவாதம் செய்கிறீர்களே, ஏ! வௌவால்களே! எங்கே ஒரு கட்டடம் நீங்கள் கட்டுங்களேன் பார்ப்போம், என்று சொல்லுவார்கள்.”

“ஆமாம், சொல்லுவார்களப்பா. அது மகாசிரமம். யாரால் ஆகிற காரியம்.”

“மனிதர்களே! இங்கு இருட்டு, அசுத்தம் குப்பை இருப்பது உண்மை தான், ஆனால், அவைகளைப் பார்க்க வேண்டாம், இந்தக் கோபுரத்தின்

உயரத்தைப் பாருங்கள், கூடம் எவ்வளவு விசாலம் பார்த்தீர்களா, தூண்கள் எவ்வளவு சித்திர வேலைப்பாடுகளுடன் இருக்கிறது பாருங்கள் கண்ணால். இவ்வளவு அருமையான இடத்தை இடிக்கலாமா? என்று கேட்க வேண்டும்.”

“ரொம்பச் சரியான பேச்சு. அதுதான் திறமானது.”

“இவ்விதம் கேட்டால், இடிக்க வேண்டுமென்று கூறும் மனிதக் கூட்டத்திலே சிலர் “உண்மை தான்! இந்த வௌவால் சொல்வதும் சரிதான். கட்டடம் மிகப் பழையது அருமையானது அது இருக்கட்டும், என்று பேசுவர்.”

“நமக்குப் பலம் கிடைக்கும்.”

“ஆமாம்! மற்றொரு இரகசியம், எங்கேயும் வெளியே சொல்லி விடாதீர்கள். அந்த மனிதக்கூட்டத்திலே, பாழ் மண்டபம், பழைய மாளிகை போன்றவைகள் இருக்க வேண்டும் என்று கூறும் சிறு கூட்டம், இருக்கிறது! அவர்கள் நம் பக்கம் சேருவார்கள்.”

“மனிதர்களே! நீங்களோ இந்தப் பழைய மாளிகையிலே வசிப்பதில்லை. அதைப் பார்க்கவும் வருவதில்லை. வந்தால் தானே அதன் வசீகரம் தெரியும் என்று சொல்லிப் பார்க்கலாம்?”

“அது தப்பு! வந்து பாருங்கள் என்று அழைத்தால், அங்கே தான் பாம்பும் பல்லியும், புழுவும் புழுதியும், இருட்டும் குப்பையும் நிரம்பிக் கிடக்கிறதே அங்கே எப்படி நுழைய முடியும்; நாற்றத்தைச் சகிக்க முடியாது. அதற்காகத்தான் இடிக்கப் போகிறோம் என்று பேசுவார்கள் மனிதர்கள்.”

சரி! சரி! அப்படியானால் அவர்களை அழைக்க வேண்டாம்.

கண்ணீர் விட வேண்டும், கைகளைப் பிசைந்து கொள்ள வேண்டும். நமக்கு நஷ்டமில்லை, உங்களுக்குத் தான் கட்டடத்தை இடிப்பதால் நஷ்டம் என்று உருக்கமாகப் பேச வேண்டும். இவ்

வளவும் பலிக்கவில்லையானால் ஒரு தந்திரம் செய்ய வேண்டும்.

என்ன தந்திரம்?

கொஞ்சம் உறுதியாக இருப்பதாகக் காட்டிக் கொண்டு, ஏதோ, கை வைத்துப்பாருங்கள் கட்டடத்தில். இதைத் தொட்டவன் கெடுவானென்று துவாபரயுகத்திலேயே சாபமிருக்கிறது என்று பயங்காட்ட வேண்டும்.

பயப்படுவார்களா? பலிக்குமா?

பயப்படுகிறவர்கள் சிலர் கிடைக்கமாட்டார்களா? ஆள் குறைகிறது இலாபந்தானே. இடிக்கும் ஆள் குறைவாக இருந்தால், இடிக்கத் தாமதமாகும் அது வரையிலேயாவது தங்கி இருக்கலாமே.

கடைசியில் இடித்துத் தான் விடுவார்களா?

காலம் போகிற போக்கைப் பார்த்தால், அப்படித்தான் தோன்றுகிறது.

நாமும் ஏதாவது புது இடம் போகலாமே.

புது இடத்திலே, நம்மைக் கண்டால் அவர்களுக்குப் பிடிப்பதில்லை. அந்த இடத்து வெளிச்சம் நமக்குப் பிடிப்பதில்லை. என்ன செய்வது.

நமது இனத்தைக் கூட்டி, ஒரு பெரிய மகாநாடு நடத்தி, பழைய கட்டடங்கள் பாதுகாப்புக் கமிட்டி ஏற்படுத்தி, அதற்கு ஒரு தொண்டர் படை ஏற்படுத்தி, பழைய கட்டடத்திலே கை வைத்தால், மகா பாபம் சம்பவிக்கும் என்று பிரகடனம் வெளியிடலாம்.

பழைய கட்டடத்தின் மகிமைகள் பற்றிப் பிரசாரம் செய்ய வேண்டும். புத்தகம் வெளியிட வேண்டும். இருட்டு, குப்பை என்று தூற்றுகிறார்களே இருளில் உள்ள ஒளி குப்பையிலே உள்ள மாணிக்கம், இந்த மனிதர்களின் கண்களில் படுவதில்லை. அதற்கு “அவன் அருள்” வேண்டும், என்று பத்திரிகையிலே எழுத வேண்டும் பழைய கட்டடப் பாதுகாப்புக்காகப் பணம் திரட்ட வேண்டும், சங்கம் வைக்க வேண்டும்.

ஆமாம்! செய்ய வேண்டும்.

யாரைத் தலைவராகப் போடுவது.

ஏதாவது காரியம் செய்ய வேண்டும். அது நம்மைக் கஷ்டப்படுத்தவும் கூடாது என்று எண்ணும் புண்ணியவான் யாராவது ஒருவர் கிடைத்தால், தலைவராக்கலாம்.

வௌவால்களின் மந்திராலோசனை முடியப் போகும் சமயத்தில் திடீரென விழித்துக் கொண்டேன்!!

* * *

அக்ரமம், ஆபாசம், அநீதி, ஆரியம், மூடநம்பிக்கை, குருட்டுக் கொள்கை, கோமாளிக்கூத்து, மன அழுக்கு, மக்களுக்குள் பேதம், ஆகிய இருள், குப்பை கூளம், பாம்பு புழு, நிரம்பியுள்ள புராண இதிகாசாதிகளை உள்ளடக்கிய இலக்கியங்கள் ஆகியவற்றை அழித்துப் பகுத்தறிவு, விஞ்ஞானம், மக்கள் மாட்சி எனும் புதிய அமைப்புகளை ஏற்படுத்த வேண்டுமென்று, சுயமரியாதைக்காரர்கள் கூறுவதையும், கிளர்ச்சி செய்வதையும் கண்டு, ஆரியர், பழைமை விரும்பிகள் புராணப் பண்டிதர்கள், நெரித்த புருவமும், சுளித்த முகமும் காட்டி, கடுகடுத்த பேச்சுப் பேசி, “இலக்கிய மறியாதானே! என்ன காரியம் செய்யத் துணிகிறாய்?” என்று ஆத்திரமும் அழுகுரலும் கிளப்புவதைக் கண்டேன், கேட்டேன், சில ஏடுகளில் எழுத்தையும் படித்தேன், சிரித்தேன், சூடு உரைக்கிறது. எனவேதான் சுருதி ஏறுகிறது என்று மகிழ்ந்தேன், நித்திரை போனேன். பழமை பாழும் மாளிகையாகவும், புராணப் பண்டிதர்கள், வௌவால்களின் மாநாடாகவும், கனவிலே கிளம்பின. பாபம்! பரிதாபந்தான் அவர்கள் நிலை! கனவிலே வௌவால்கள் வாடிக் கூடிப் பேசியது போலத்தான், புராணப் பண்டிதர்களின் வட்டாரம் பேசுகிறது, நம்மைப் பகைக்கிறது. ஆனால் வௌவால்கள் விரும்புகின்றன என்பதற்காகப் பாழடைந்த மாளிகையை இடித்துத் தள்ளாவிட்டால் புது உலகம் தோன்றாதே! ஆகவே தான் இடிக்கிறோம்!!

வயோதிக வௌவால், என்று சொன்னாயே, அது யார் பரதா? என்று என்னைக் கேட்காதீர்கள். கனவு கண்டேன்

தோழர்களே; வேறு நீங்களாக புராணப் பண்டிதர்களிலே, வயதானவர்களின் அட்டவணையைத் தயாரித்துப் பரதனின் கனவிலே தோன்றிய கிழ வெளவால், இவராக இருக்குமா, அவராக இருக்குமா என்று ஆராய்ச்சி செய்து கொண்டிராதீர்கள். உண்மையிலே, கனவிலே கண்ட வயோதிக வெளவாலின் முகம் மட்டும், நான் எங்கோ அடிக்கடி பார்த்த முகமாகவே தென்பட்டது. வேண்டாம் பாபம், பெயரைக் கூறமாட்டேன். கூறினால், நீங்கள், “ஆமாம்! அவரேதான்” என்று சொல்லிவிடுவீர்கள். அவர் மிகச்சாது! நாவலர்! காவியங் கற்றவர்! அவர் வருத்தப்படக்கூடாது என்பது என் எண்ணம். ஆனால், இப்போதும் எனக்கு, கனவிலே நான் கண்ட வெளவாலுக்கு அவர் முகமே தான் இருந்ததாக நினைவு! அது கிடக்கட்டும்! யாராயிருந்தாலென்ன? ஆட்களைப் பற்றியா இப்போது தகராறு? அபிப்பிராயங்களைப் பற்றித் தானே!!

13.12.1942

# அமெரியின் அக்பர் பூஜை !

மாளிகையிலே அழு குரல், மாரடிதுக் கொண்டு மாதர்கள், மண்டையிலடித்துக் கொண்டு ஆடவர், கூக்குரலிட்டுக் கொண்டு ஆடவர், கூக்குரலிட்டுக் கொண்டு குழந்தைகள், கோவெனக் கதறிக்கொண்டு பணியாட்கள், கோரமான காட்சி. வீட்டுக்குடையான், வேற்படையான்! அனைவரையும் அடக்கி ஆண்ட ஆண்மையாளன், சாய்ந்து விட்டான், செல்வமும் சுகமும் விட்டு, சுற்றமும் நட்பும் விட்டு, வீட்டினர், அவனை நம்பி வாழ்ந்தவர், அவனாதரவில் இருந்தவர்கள், களத்திலே போரிட்டு மாள்கையில் கண்ணிழந்தார் கலங்குவதுபோல், இனி எங்ஙனம் வாழ்வோம், எவ்வாறு உய்வோம் என்று திகைத்து திக்கெட்டும் கேட்குமாறு அழுகின்றனர்.

மாண்ட மறவனின் முன்னவன், முதுமை எனும் முற்றத்திலே முடங்கிக் கிடக்கிறான், செயல் சிந்தனை மறந்து, கண்ணில் ஒளி இல்லை, கைகளிலே வலி இல்லை, கருத்திலே குழப்பம், உயிர் மட்டும் ஊசலாடுகிறது.

திவான் சாய்ந்ததும் மாளிகையிலே மாநிதி ஏராளம், நிலபுலன்களும் அதிகம். அபலைகளும், பால்மனம் மாறாப் பாலரும், படுத்த படுக்கையாளரும், கிழவருமே இருந்தனர். பஞ்சாயத்துத்தாரராகச் சிலர் நுழைந்தனர்களே. சொத்துக்களைக் கண்காணிக்க போகாதிருக்க, நிர்வாகம் செய்ய. அதே நேரத்தில் மாளிகையின் நிலை தெரிந்தவர்கள், அகப்பட்டதைச் சுருட்டினர், ஆளுக்கொரு தடி தூக்கினர், பட்டங்கள் பறிபோயின. பணியும் பட்டும் கொள்ளையாயின, பண்ணையாள் வயலுக்குடையோன் நானே என்றான், பலரும் பலவகையிலும், பரிதாபத்துக்குரிய அந்தக் குடும்பச் சொத்தைக் கொள்ளையிட்டனர். வந்த பஞ்சாயத்துக்காரர் சொத்துக் குடையானிடம் அன்பும், நீதி நேர்மையிலே நாட்டமும் கொண்டவராக இருப்பின், என்ன செய்ய வேண்டும்? அமளியைச் சாக்காகக் கொண்டு அகப்பட்டதைச் சுருட்டும்வரை அடக்கி, சொத்தைப் பாதுகாத்து,

உரிமையாளரிடம் தரவேண்டும். ஆனால், திடீர் மரணத்தால், திணறிப் போகும் குடும்பத்திலே, பெரும்பாலான இடங்களிலே, பஞ்சாயத்துக்காரர், இந்தப் பண்பைக் காட்டினதில்லை. ஒரு குடும்பத்தின் வேதனை, வேறு பலருக்கு விருந்தாகவும், ஒரு சொத்துக் குடையானின் அழிவு, வேறு பலரின் கொள்கைக்கும் இடமளிப்பதை, நாட்டிலே, பலமுறை நாம் கண்டிருக்கிறோம். இதனால் சிந்திய மூக்கினர் சிரிக்கும் சீமானானதையும், சீமானின் குடும்பம் செல்லறித்துப் போவதையும் கண்டுள்ளோம். பஞ்சாயத்துக்காரர் மட்டும், பக்குவமாக ஒழுங்காக நடந்திருப்பரேல், சொத்து இப்படியா சூறை போயிருக்கும், என்று சோகிப்பதைக் கண்டோம். கதறுவதைக் கேட்டிருக்கிறோம்.

பாதுஷா பக்கிரியானால்!

வட நாட்டிலே யிருந்த இஸ்லாமிய அரசகுடும்பத்தின் கடைசி நாட்களின் கதி, இது போலத்தானாயிற்று. ஷா ஆலம் கண்ணிழந்து கதியிழந்து, முன்னாளில் முடிதரித்திருந்த மொகலாயரை எண்ணி எண்ணி ஏங்கி, புலிகள் வாழ்ந்த இடத்திலே, கிலி குடி கொண்டதைக் கண்டு கதறி, மொகல் குடும்பம் சிதறுண்டு, சின்னாபின்னமாகி விட, தாஜ்மஹாலைக் கட்டிய பரம்பரை, தங்கும் விடுதிக்கே தர்மசாலைகளைத் தேடுவது காண, மனம் குழம்பிக் கிடந்தார். அந்த நேரம் பார்த்து, முன்னம் ஒடுங்கிக் கிடந்தவர்கள் ஆர்ப்பரிக்கலாயினர். கொஞ்சினவர்கள் கர்ஜித்தனர், சலாமிட்டு நின்றவர்கள் யுத்த சன்னத்தராயினர்; ஆம்! பாதுஷா பக்கிரியானால், குலாமும் குனிந்து சலாமிடானன்றோ! மொகல் குடும்பத்தின் நிலையும் அஃதே போலாயிற்று. அந்த நேரத்தில் விந்தையான சீமைச் சாமான் வாங்கல்லையோ ஐய்யே! என்று விலைகூறி விற்க வந்த ஆங்கிலர், பஞ்சாயத்துதாரர் ஆயினர். ஆனால் வழக்கமாக நடைபெறும் வல்லடி நடந்ததேயன்றி, வடநாடு எனும் குடும்பம், மொகலாயர் சொத்து, அதை அவர் வசம் மீட்டுத் தருவதே பஞ்சாயத்தார் கடமை என்ற முறையிலே ஆங்கிலேயர் நடந்து கொள்ளவில்லை. இந்த ஆரம்பக் கோளாறு, மூல நோயே இன்று வரை நாம் காணும் பலவிதமான அரசியல் தொல்லைகட்கும் காரணம். வாழ்ந்து கெட்ட வல்லரசு மொகல் அரசு, வளைந்து கெட்டது திராவிட அரசு, இரண்டுக்கும் கை கொடுத்திருக்க வேண்டியதே பிரிட்டிஷ் அரசின் கடமை! நீதி! ஆனால் வஞ்சனைக்காரர், வல்லரசுகளின் வாரிசுகளாகினர், அதற்கு ஆங்கில

வியாபாரிகள் வந்தோம், பொருள் விற்றோம், இலாபம் பெற்றோம் என்று இருப்பதே நமது கடமை என்று எண்ணி இடமளித்தனர், இடர் வளர்த்தனர்.

## அமெரியின் பூஜை

அன்று, அக்பர், ஹாஜஹான், அவுரங்கசீப் முதலியோருடைய நினைப்பும், ஆங்கிலருக்கு இல்லை! பாண்டியன், சேரன், சோழன் என்ற பெயர்களைப் பட்டியலேயும் சேர்த்தனரில்லை. பரந்த இந்த உபகண்டம், பராமரிப்பாரற்றுப் பரிதவிக்கும் நிலைமை தெரிந்ததேயன்றி, இந்தப் பாதகத்துக்குக் காரணர் யார் என்பதைக் காணவேண்டு மென்ற நினைப்பும் இல்லை. புல்லுருவிகள் ஆங்கிலரைச் சுற்றி நின்று புன்னகை புரிந்தன! பூரண கும்பங்களைத் தாங்கிய பூசுரக் கூட்டத்தைக்கண்டுச் சீமையினர் பூரித்தனர்.

இரு இனமும் இன்று எழுச்சி பெற்றிருக்கிறது, "எமது அரசு எமக்கு" என்று கூறுகின்றன. இந்த நேரத்திலே அமெரி துரைக்கு, திடீரென்று, அக்பர் மீது அன்பு, இந்தியா ஒரே நாடாயிற்றே என்று ஆர்வமும் பிறக்கிறது! பாருங்கள், நமக்கெல்லாம் இல்லாத நாட்டுப்பற்று, அமெரி துரைக்கு!! அக்பர் விழாவாம் சீமையிலே, அதிலே அமெரியின் சொற்பொழிவாம்! இங்கு ஆண்ட அக்பரின் பரம்பரை, ஆண்டிகளாகிக் கிடக்க, அவர்களை ஈடேற்ற ஒரு தலைவர் ஓயாது உழைக்க, அங்கே அமெரி துரை அக்பருக்கு அர்ச்சனை செய்கிறார், அது கேட்டு, இந்துத் தலைவர்கள், சந்தோஷிக்கின்றனர். ஏன், பிறந்தது, அக்பர் மீது இத்துணை அன்பு? எதற்காகக் கொண்டாடினர், அக்பர், விழாவை? அக்பர், எவ்வண்ணம், இந்தியாவை ஒரே நாடெனக் கருதினாரோ, அது போல் இதுபோது, இநதியா ஒரே நாடென்று கருதவேண்டுமாம், இன அரசு கேட்பது கூடாதாம். உபதேசத்தைப் புரியவே, அக்பர் விழாவைப் பயன்படுத்திக் கொண்டனர்.

சிவாஜி விழா கொண்டாடி இந்து - முஸ்லீம் பிணக்கை வளர்க்கும் சீலர்கள் போல், ரஞ்ஜித்சிங் விழா கொண்டாடி முஸ்லீம் - சீக்கியர் மண்டை மோதுதலுக்கு அச்சாரம் கேட்கும் அன்பர்கள் போல், அங்கே அமெரி துரை, அக்பர் விழா கொண்டாடி, பாக்கிஸ்தான், திராவிடஸ்தான் பிரச்னையைப் படுகுழியில் தள்ளப் பார்க்கிறார். இந்து

- முஸ்லீம் எனும் இரு இனத்தையும் ஒன்றெனக் கொண்டு கோலோச்சினராம் அக்பர். அவர்போல், இரு இனத்தையும் ஒன்றெனக் கருதும் உயர்ந்த இலட்சியம் தேவையாம்!

அந்த நாள் அஜாத்!

ஐயா, ஊர்க்குபதேசியாரே! உத்தமமான கொள்கை என்று கூறினீரே உம்மைக் கேட்கிறோம், நீரும், இங்குள்ள ஆரியரும் அக்பரை, அண்டம் முட்டப் புகழ்வது ஏன்? அவருடைய சமரச ஞானத்தைப் போற்றும் அன்பர் குழாமே! அவர் வழி நின்றீரா நீவிர்! அவ்வளவு 'திராசாட்சி' நடத்திய, திலக மிட்ட அக்பருக்கு அந்தக் காலத்திலே இந்து மன்னர்கள், தொல்லை தராமற் போயினரா? அவர் காலத்துக்குப் பிறகு, மொகல் அரசைச் சிதைக்க முகாம்கள் போட மறந்தனரா? அக்பரின் முயற்சி, முறியடிக்கப்பட்டதைச் சரிதம் காட்டுகிறதே யன்றி, வெற்றி பெற்றதையா காட்டுகிறது? வெற்றி பெற்றிருந்தால், இன்று வடநாடு முழுவதும் பிறைக் கொடியின் பெருமித ஆட்சியின் கீழ் இருந்திருக்குமே! ஏன் நடக்கவில்லை அது!

அக்பர், புகழப்படுவதற்குக் காரணம் என்ன? இந்து மன்னர்களை அவர் முறியடிக்க வில்லையா? இந்து மண்டலங்களை மொகல் ராஜ்யத்திலே இணைத்துக் கொள்ள வில்லையா? ரஜபுத்ர வீரர்களை ரணகளத்திலே சந்திக்கவில்லையா? அமளி இல்லையா? அக்பரின் ஆட்சியை ஏற்க மறுத்த எந்த இந்து மன்னனையும் அவர் சமரச ஞான கீதம்பாடித் திருப்பி விடவில்லை, சமரில் திறம் காட் டியே வென்றார், வென்றபிறகு, அவருக்கு அம்மன்னர்கள் வெண் சாமரம் வீசினர். அக்பர், சக்தியாலும், யுக்தியாலும், அளவிட வேண்டும் என்ற எண்ணத்திலே அவருக்கு ஆழ்ந்து கிடந்த பக்தியாலும், தமது ஆட்சியை ஸ்திரப்படுத்தினார். அவருடைய தந்திரத்தைப் பாராட்ட லாம், வெற்றிகள் கண்டு விருதுகள் தரலாம், ஆனால், அவரே சமரச தூதுவர், அவர்போல் இனி பாகிஸ்தானிகள் ஆகவேண்டும் என்று ரைப்பது, அக்பரிடம் கொண்ட அன்புக்கு அறிகுறியன்று, அக்பரின் இனத்தவரை இளித்த வாயராக்க வேண்டும் என்ற எண்ணம் என்று ரைப்போம், இல்லையேல், இந்து மன்னர்களை முறியடித்ததில் எந்த மொகலாயருக்கும் குறையாத, அக்பரை மட்டும் புகழ்வது ஏன்? வெற்றிகள் பெற்ற பிறகு, அவர், ஆட்சி

சுமுகமாக நடக்க அபுல்கலாம் ஆஜாது ஆனார்! ஆரியரும் ஆங்கிலரும் அகம் குழை வதன் மர்மம் அதுதான். இந்துத் தலைவர்களைத் தட்டிக் கொடுத்து தர்பாரில் இடமளித்தார். முஸ்லீம்களுக்கு உள்ள இன அன்பு எப்படி இருப்பினும் தனக்குத் துணை செய்யும், எனவே, அவர்களை ஆதரிக்க வேண்டியது மில்லை, எதிர்க்கும் இந்துக்களுக்கு, இரண் டோர் பதவிகள் கொடுத்தால் அவர்கள் அடங்கிக் கிடப்பர் என்ற தந்திரத்திட்டம் வகுத்தார், ரஜபுத்ர ரசவல்லிகளை ஜனானாவிலே உலவவிட்டார், அதன் பயனாக ரஜபுத்ர வீரர்களின் எதிர்ப்பை அடக்கினார். இவ்வளவுடன் மற்றோர் காரியம் செய்தார், ஆரியத்தை ஆதரித்தார். அவரிடம் சவர்க்கார்களும், சர்க்கார் அதி காரிகளும் அன்பு காட்டுவதும் அவருக்குப் பத்திரிகை உலகம் தலையங்கம் சூட்டுவதும், இக்காரணம் பற்றியே. அக்பருக்கும் மற்ற மொகல் மன்னர்களுக்கும் வித்யாசம் வேறு எதிலுமில்லை; மற்றவர் கள் ஆரியத்தை ஆதரிக்க வில்லை, அக்பர் ஆரியத்தை ஆதரித்தார். ஆகவே தான் வார்தா வாசியான ஆஜாதுக்கு அக்ரகாரம் அன்பு காட்டுவது போல, அக்பருக்கு ஆரியரும் ஆங்கிலரும் அன்பு காட்டு கின்றனர், அவர் நாமம் வாழ்க என்றுரைக்கின்றனர் அவர் வழியே மெய்வழி என்று செப்புகின்றனர்.

## ஆங்கில உபதேசி

இங்ஙனம் செய்தலே முறை என்று ஆங்கிலருக்கு, ஓர் ஆங்கில ஆசிரியர் நன்னூல் கூறியுமுள்ளார்.

ஈ.பீ. ஹாவல் என்ற ஆசிரியர் பிரிட்டிஷாரும் ஆள நினைக்கும் பேர்வழிகளும், அக்பர் எங்ஙனம் ஆரியக் கோட்பாட்டின்படி ஆள முயற்சித்தாரோ, அவ்வழியே ஆட்சி செய்ய முயலுவது சரியாகும் என்று எழுதியுள்ளார்.

அமெரி துரைக்கு ஹாவலின் வாசகம் அரிச்சுவடி! எனவே அவர், ஆரிய வழக்கப்படி ஆள முனைந்த அக்பரைப் புகழ்கிறார், சமயம் கிடைத்ததால், ஆரிய வழிப்படியே, அமெரியே பாதுஷா

வாகவும் இசைவார்!

பதின்மூன்றாம் வயதிலே பட்டத்துக்கு வந்த அக்பர், பரந்த

சாம்ராஜ்யத்தின் பாதுஷாவாகப் பரிமளத்தோடு ஆண்டார்; காரணம் பக்குவமாக ஆரியரை சரிப்படுத்தி வைத்துக் கொண்டதுதான்.

சுழல் அக்பரின் ஆட்சியின் ஆரம்ப ஆபத்து சூழ்ந்தது. தகப்பனார் இறந்ததும், தன்னைச் சுற்றிலும் எதிரி கூடாரமடித்திருப்பதைக் கண்ட அக்பர், ராஜஸ்தானத்தில், பாய்மரமிழந்த மரக்கலம் போலிருந்த மண்டலங்கள் முறுக்கு மீசை மன்னர்கள் கிளம்பினர். மாளவம், கூர்ஜரம், ஒரிய நாடு முதலியன ஓங்காரக் கூச்சலிட்டு, சுதந்திரக் கொடிகளை உயர்த்தின. கடலோரத்தில் போர்த்துகீசியர், பொருளைக் காட்டி, ஏசுவின் அருள் மொழி பேசியும், கால் ஊன்றத் தொடங்கினர். இது மட்டுமா!

சூர் வகுப்பினர், சுறாவளி போல் கிளம்பி, அக்பரின் ஆட்சி எனும் மரத்தை அடியோடு பெயர்த்தெடுப்போமென சூள் உரைத்தனர். டில்லி, ஆக்ரா என்ற இரு நகர்களும் சூர் வகுப்பினரிடம் அடங்கின. தலை நகரிலே தாயாதிகள்! சுற்றிலும் சூரர்கள். கடலோரத்தில் வென்றார்! ரஜபுதனத்தில் ரகளை! இவ்வளவு சுழலுக்கிடையே, சுந்தரமான ஓர் வாலிபன், அவன் மனதிலே சாம்ராஜ்ய கனவு.

## பணியா புரட்சி

சுழலுக்கு மூலமாக இருந்த சூர் வகுப்பினருக்குத் துணிவும் வலிவும் தந்தது யார் என்று எண்ணுகிறீர்கள்? இந்து, பணியா!! ஹெமு என்ற பணியாவின் உதவி கொண்டே, சூர் வகுப்பினர் புரட்சிப் புயலைக் கிளப்பினர். சூர் வகுப்பினரிடம் வேலைக்கமர்ந்த இந்த பணியா, மொகல் படைகளை டில்லியிலே முடியடித்தான். ஹேமு, சூர்வகுப்பை மூலைக்கு அனுப்பிவிட்டு, ஜெயக்கொடி நாட்டி, விக்ரமாதித்யன் எனப் பெயரிட்டுக்கொண்டு, ஆளத் தொடங்கினான். தர்பார் என்ன! நாணயவாரிகள் விக்கிரமர் என்ற விருது என்ன! விருந்தென்ன, வேடிக்கை என்ன, பணியாவுக்குப் பட்டம் கிடைத்த பார்ப்பனருக்குக் கொண்டாட்டந்தானே!

பைராம்கான் என்ற படைத்தலைவன், அக்பருக்கு அரண்போல் விளங்கினான். அவனுடைய அரிய திறமை வாலிப வேந்தரைச் சூழ்ந்திடும் காட்டை அழிக்க உதவிற்று. பானிபட்டிலே, பைராம்கான், விக்ரமனை வீழ்த்தினான், இளைஞனை அழைத்து “இதோ ஹேமு! இவன் தலையை வெட்டி வீசு” என்றான் பைராம்கான். இந்து முஸ்லீம்

சமசர சன்மார்க்கராம் அக்பர், என்ன செய்தார்? இந்துவும் மனிதனாயிற்றே என்று இதோபதேசம் பேசினாரா? இல்லை! ஹேமுவின் தலையைத் துண்டித்தெரிந்தார். ஆகவே, அக்பரின் சமரசக் கட்டடத்திற்கு அஸ்திவாரக் கல் நாட்டு விழாவுக்கு ஒரு பணியாளனின் இரத்தமே அபிஷேகிக்கப்பட்டது. குவாலியர், ஆஜ்மீர், ஜான்பூர், தீவார், கூர்ஜரம், வங்கம், காஷ்மீர், என்ற பல்வேறு மண்டலங்களையும், அக்பர் போரிட்டு வென்று, மொகல் அரசின் அடி பணியவைத்தார்.

சித்தூர் கோட்டையின் முற்றுகை, உதயசிங் ஓட்டம், ஜெயமாலின் வீரம், ராஜபுதனமாதரின் தியாகம், ஆகியவைகள், "சமரச சன்மார்க்கி" இந்து அரசுகளின் மீது போரிட்ட போது நடந்த மயிர் கூச்செறியும் மகத்தான் நிகழ்ச்சிதானே!

## பாவம் மாறாது

ஆரியரின் கூத்து காரிய மின்றி நடவாது. இந்து அரசர்கள் சிலர் சுதந்திரமிழந்தனரே தவிர, ஆரியரின் வாழ்வுக்குக்குறை ஏதும் வரவில்லை. யார் அழிந்தாலென்ன, எத்தனை அகழிகளிலே தலைகள் உருண்டாலென்ன, கோட்டைகள் தூளானாலென்ன, தமது வாழ்வுக்கு வழி கிடைத்தால் போதும் என்ற எண்ணம் ஆரியரின் மாற்ற முடியாத சுபாவம், சிறுத்தையின் புள்ளி மாறினாலும், இந்தச் சீலரின் வாழ்வுப் பற்று மாறாது, பாம்பு சீறிட மறந்தாலும் இந்தப் பண்பாளர்கள் தம் பண்பை மறவார்! அக்பர், இஸ்லாத்தை வாழ்க்கை வழிகாட்டியாகக்கொண்டு, இருந்திருப்பரேல் இறந்த ஜெயபாலின் கல்லறை மீது ஆரியரின் கண்ணீர் வெள்ளம் புரண்டிருக்கும்!

ஆனால், எந்த பைராம்கான், இளம்பாதுஷாவுக்குப் பட்டமும் ராஜ்யமும் நிலைக்கச் செய்தாரோ, அவரே, அக்பரால் விலக்கப்பட்டார். அரசனுக்கு ஊழியம் செய்து அலுத்த அவர், ஆண்டவனுக்கு ஊழியம் செய்ய மெக்கா சென்றார், வழியிலே, கொன்று போடப்பட்டார். வீர இஸ்லாமியத் தலைவனான பைராம்கானை அக்பர், வேலையை விட்டு நீக்கியது, இந்து வட்டாரத்துக்கு விலைமதிக்க முடியாத ஓர் விருந்து! மொகலாய வீரர்களின் இரத்தத்தை ரஜபுதனக் களத்திலேயும், கங்கைக் கரையிலேயும் சிந்தவைத்துச் சித்தரித்த மொகல் தர்பாரிலே, யாருக்கு முதல் தாம்பூலம்? யாரை அக்பர் முக்கியமான வேலைகளிலே அமர்த்தினார்? படியுங்கள் பட்டியை! ஆரியர்கள் அக்பர் விழா கொண்டாடும் காரணம் விளங்கும்! ராஜா பகவான்தாஸ்,

ராஜாமான்சிங், தோடர்மால், பீர்பால்! இவர்கள் அரும்பணியாற்றினர் என்பதை நாம் மறக்கவில்லை. ஆனால் இவர்கள், மொகல் ஆட்சியிலே இடம் பெற்ற இந்துக்கள் என்பதையும் மறக்க மறுக்கிறோம். உதயபுரி போனாலென்ன, மேவார் வீழ்ந்தாலென்ன, சித்தூர் சரிந்தாலென்ன, தர்பாரிலே இருப்பவர், நம்மவர்தானே! என்பதே ஆரியரின் பூரிப்பு.

## தீன் - இலாஹி

ஜனாப் துரானி எம்.ஏ.எல்.பி., அக்பருக்குக் கொரானில் நம்பிக்கை குறைவு என்றும் கலிமாவையே அவர் ஏற்றுக் கொள்வதில்லை என்றும், கூறுகிறார்.

தாரா சந்த் என்ற இந்து ஆசிரியரொருவர், அக்பர் காலத்து முஸ்லீம் ஆசிரியர்கள், தமது நூலுக்கு முதலில், பிஸ்மில்லா என்று பொறிப்பதற்குப் பதிலாக, ஸ்ரீ ராம், ஸ்ரீ சரஸ்வதி ஹரி ராதா கிருஷ்ணஜீ" என்று பொறித்தனர் என்று கூறுகிறார்.

அபுல் அலா மவு தூதி, எனும் லாகூர் முஸ்லீம் பிரமுகர், "இவ்வளவு ஏனப்பா, அக்பர் படத்தைப் புத்தகங்களிலே பாருங்கள், நெற்றியிலே திலகத்தோடு இருப்பார்" என்று கூறுகிறார்.

இங்ஙனம், இஸ்லாமிய நெறியினையே கடைப்பிடிப்பது என்ற கட்டு நீக்கி, எம்மதமும் சம்மதம் என்று இருந்தார் அக்பர்! ஆரியரின் பூரிப்புக்குக் காரணம் அதுதான். யாருக்கு எந்த ராஜ்யமிருப்பினும், தங்கட்கு "மதராஜ்யம்" இருக்க வேண்டும்; மற்ற ராஜ்யங்களின் வருமானத்தை விட, மதராஜ்யத்திலே அதிகம் என்பது ஆரியருக்குத் தெரியும்! இதற்கு அக்பர் இடமளித்தார், எனவே தான், அக்பரை ஆரியர் ஓர் ஆழ்வாராகக் கருதினர். அக்பர் தர்பாரிலே இந்து பண்டிதர்களும், பாவாணரும், சிற்பியும், ஓவியக்காரரும் வாழ்ந்தனர். பதினேழு ஓவியக்காரராம் அவர் தர்பாரிலே, அவர்களில் பதின்மூவர் இந்துக்கள்! சமஸ்கிருதத்தை அக்பர் ஆதரித்தார், வடமொழி கிரந்தங்களான பாரதம், இராமாயணம், ஆகியவற்றைப் பெர்ஷிய மொழியிலே பதிப்பிக்கச் செய்தார். இஸ்லாம் எதற்கு, ஓர் கதம்பம் தயாரிப்பேன் என்று கூறி, அபுல் பாஜல் என்பாருடன் கலந்து அக்பர், தீன் இலாஹி என்ற புதிய மார்க்கமும் ஏற்படுத்திப்பார்த்தார். முஸ்லீம் அறிவாளிகளை மூலையில் துரத்தினார். தனது ஒன்றுவிட்ட சகோதரனான முகமத் ஹக்கீம் என்பவர் காபூலில் ஆண்டிருந்தபோது, அக்பராட்சியிலே

வெறுப்புகொண்டு அங்கு சென்று முஸ்லீம் பிரமுகர்கள் தங்கினதற்காக ஹகீமைக் காபூலை விட்டு விரட்டினார்.

## அமெரி மறந்தார்

1575ஆம் ஆண்டு வரையிலே, அக்பர், ஓர் நல்ல முஸ்லீமாக இருந்தார், குரான் வாசித்து, தொழுகை செய்து கொண்டிருந்தார். பிறகு மாறி விட்டார்” என்று எம்.எஸ். ராமசாமி ஐயங்கார் எழுதியிருக்கிறார் பள்ளிப் பிள்ளைகளுக்குத் தயாரித்த பாட புத்தகத்திலே!

ஆரியத்தை ஆதரித்தால், அந்த மன்னர்களைத் தேவாம்சம் என்று புகழ்வதும், மக்களைத் துதிக்கச் சொல்வதும் ஆரியத்தைக் கருவறுப்பின் அவர்களை அசுராம்சம் என்று திட்டுவதும், மக்களை அவர்களுக்கெதிராகக் கிளப்பி விடுவதும், ஆரியர் ஆதிகால முதற்கொண்டு செய்து வரும், ராஜ தந்திரம். ஆரியத்தை ஆதரித்து, ஆட்சியை நிலைக்கச் செய்வது என்ற நியதி அக்பருக்கு. அவ்

வழியைப் பின்பற்றும்படி ஆசிரியர்கள் கூறியதை மறவாது, அமெரி துரை, அக்பர் விழாக் கொண்டாடினார் போலும்! ஆனால், இப்போது இஸ்லாமிய சமுதாயம் தீன் இலாஹி கேட்டுத் திருப்தி கொள்ளும் பருவத்திலில்லை! அமெரி அதைத்தான் மறந்து விட்டார்!!

சிவாஜியை சத்ரபதி என்று பூஜித்தனர் ஆரியர், அதன் பலன், மராட்டிய சாம்ராஜ்யம், பீஷ்வாக்கள் எனும் பார்பனரிடம் போனதுதான், சீக்கியரைச் சீலமுடையோரே! சிங்கங்களே! என்று ஆரியர் புகழ்ந்தனர், அதன் பலன், சீக்கியரும் இஸ்லாமியரும் பகைத்து நிற்பதே! ரஜபுத்திரரை, சூரிய குலம் சந்திர குலம் என்று துதித்தனர், அதன் பலன், அம் மன்னர்களின் இரத்தம் மணல் வெளியிலே புரண்டதுதான், செந்தமிழ் நாட்டிலோ, அவர்கள் பரமபாகவதன்! பக்திமான்! மனுநீதி தவறாத மன்னன்! என்று நமது மறத்தமிழரைப் புகழ்ந்து வைத்தனர், அதன் பலன், மூவேந்தர் வரலாறே மூடுமந்திர மாக்கப்பட்டு, முச்சங்கம் அழிந்து, மும் முரசு கெட்டு, மூவரின் பின்னோர் மூட்டைதூக்கிகளானதே! ஆரியத்தை நம்பினால் அழிவோம் என்ற பாடம் தெரிந்தவர், அமெரி துரையின் பூஜை கண்டு மயங்கார், அதனை மதியார்!!

# அலகாபாத் அம்மானை

“மார்கழி மாதம் திருவாதிரை நாள்

வரப்போகுதய்யே!

மனதைப் புண்ணாக்காமல் ஒரு தரம்

போய்வாவென்று சொல் ஐயே!”

என்று ஆடலழகர் மீது காதல் கொண்டு கசிந்து கண்ணீர் மல்கிக் கேட்ட நந்தனார், எந்த ஆருத்ரா தரிசனத்தைக் கண்டாரோ, அது, இவ்வாண்டு அடியோடு நிறுத்தப்பட்டு விட்டதாம்! தில்லைத் தீட்சிதர்களே கூடிப் பேசி, இம்முடிவுக்கு வந்தனராம்.

இது போலவே, ரங்கநாதரின் வைகுந்த ஏகாதசிக்கும், வளர்பிறை தேய்பிறையாகி விட்டது. மற்றும் பல கோயில்களிலே கொட்டு முழக்கு நிறுத்தப்பட்டு விட்டது. காலத்தின் கோலம் என்று கைபிசைந்து கொள்வர் வைதிகர்கள். காலராவும், பிளேக்கும், அம்மை நோயுங்கூட, நமக்குக் கிடைக்க இருந்த அன்பளிப்பு நின்று விட்டதே என்று அழுதுகொண்டிருக்கும். ஷோக் மைனர்கள், தாங்கள் காண இருந்த கண்ணாடிக் கமலமோ, கர்ல் சுந்தரியோ, ஆருத்ராவுக்கு வருவாளென்று எண்ணினதில் மண் விழுந்ததே என்று அயர்வர். மற்றும் பலருக்குப் பலவிதமான மனக் கஷ்டம் ஏற்பட்டிருக்கும். இத்தகைய திருவிழாக்கள் நிறுத்தப் பட்டது மகத்தான தேசீய நஷ்டம் என்று தேசபக்தர்கள் பாசமேலீட்டால் கூறவுங்கூடும். சாப்ரு மாநாட்டிலே, “இத்தகைய தேசீய நஷ்டங் களைத் தடுக்கத் தேசீய சர்க்காரால் தான் முடியும்” என்று விவாத வீரர் எவராவது வீரதீரத்துடன் பேசி, இதனை மறுப்பவருண்டா? என்று கேட்டிருக்கக் கூடும். “எனக்கு வேறு தீர்மானமிருக்கிறது பேச; இல்லையானால் விட்டிருப்பேனா இதை மறுத்துப் பேசாமல்” என்று மற்றோர் மாபெருந் தலைவர் மலர்ந்திருக்கவுங்கூடும்.

அடையாறு கலா மண்டபத்துப் பத்மினி, சித்தினிகள், பூர்வீக இந்திய நடனக் கலைக்கு இத்தகைய அவமதிப்பைக் காட்டினதற்காக நாங்கள் கண்டித்து, கண்டித்ததைக் காட்டும் பொருட்டு, பூச்சூடுவதை ஒருநாளும், புது மோஸ்தர் பூட்ஸ் அணிவதை ஒரு வாரமும், கிரீம் பூசுவதை மூன்று மணி நேரமும் விட்டுவிடப்போகிறோம் என்று தீர்மானிக்க இருந்தார்கள். ஆனால், நாட்டிய நவரசமணி, ஸ்ரீமதி உருக்மணி அருண்டேல் அம்மையபரின் கருத்து வேறுபடவே, தீர்மானத்தை விவாதித்து, நிறைவேற்றாமல் விட்டுவிட்டனர் என்று, ஒரு விசேஷ அறிக்கை வெளியிடப்படக் கூடும். "ஆனால் இதனை ஒரு சாதாரண சம்பவமென்று நான் கருதவில்லை. இதுதான் முதல் தரமான புரட்சி" என்று மார்க்ஸ் மாணவர் முழக்கம் செய்யக்கூடும்.

வீரன், இவ்வாறு பேசிடக் கேட்ட நான், "விசாரமாக இருக்கும். கேள்வியிலே நீ பேசும் வேடிக்கைதான் எனக்கு மருந்தாக இருக்கிறது" என்று கூறினேன். "நீ தினசரிகளைப் படித்த தில்லையோ! படித்தால் அந்த வேடிக்கை கிடைக்குமே ஏராளம். நான், தேவையில்லையே" என்று "என்ன வேடிக்கை" என்று நான்கே வீரன் சொன்னான். "எத்தனை உண்டு. ஏன், இந்தத் தேவ தேவன் இப்படித் திணறுவதும், திருக்கடி தேம்புவதும் ஒரு பெரும் வேடிக்கையாகத் தோன்ற வில்லையா உன் செங்கோலுக்கு முன்பு, நெற்றிப் பாஞ்சசன்யம், சக்கரம் யாவும் பழகுவது வேடிக்கை யல்லவா! இந்தத் திருவிழாக்கள் உண்மையிலேயே பூசைக்காக என்பது மெய்யான முப்புரமெரித்தவரும், மூன்றடியாக உலகை அளந்து, மாபலியையும் முகுந்தனும், சர்க்கார் மாளிகை அதன் வாசிகளும், கிடுகிடுவெனவும், தலை சுழன்று, மனம் மிரண்டு, தமது உத்தரவை மாற்றிவிடவுமான "அற்புதத்தை" அரை நொடியிலே செய்திருக்க மாட்டார்களா! உண்மையில் இந்தத் திருவிழாக்கள், "திருப்பிரம்மங்களின் தேவைக்காக, காசுக்கும் கருத்துக்கும் சூறாவளியாக, சுயநலக்கூட்டம் ஏற்படுத்தியவை," எனவே தான், அவைகள் கால

நெருக்கடியை உத்தேசித்து நிறுத்தப்பட்டதும், எங்கும் "கப் சிப்" ஆகிவிட்டது. இந்த வேடிக்கை உனக்குப் போதாதா? என்றான். "இது ஒரு வேடிக்கையா?" என்று நான் இழுத்தேன். "சரி! அது தான் போகட்டும், இந்திய அரசியல் சிக்கலைப் போக்க, கண்ட நாள் வாழ்வும் செல்வாக்கும், பொது ஜனத் தொடர்பும், பத்திரிகைப் பலமும் கொண்ட கட்சிகளெல்லாம் முயன்று தோற்ற பிறகு முக்காடிட்ட மூர்த்திகள் கூடிப் பேசினீரே, சிக்கலை அவிழ்க்க, அது உனக்குச் சிரிப்பூட்டவில்லையா? என்று கேட்டான். அதுகூட எனக்குச் சிரிப்பில்லை. ஆனால், மாநாடு கலைந்ததும் அந்த மாபெரும் தலைவர்கள் அலகாபாத்தை விட்டுக் கிளம்பினர், இனி அவரவர்கள் தத்தமது கட்சியைக் கலந்தா

லோசித்துப் பேசுவர்" என்றிருக்கிறதே அந்தப் பகுதிதான் ஆச்சரியமானதடி என்பதுபோல், எனக்கு அந்தச் செய்திதான் வியப்பூட்டுகிறது. இவர்களுக்குக் கட்சிதானா? கலந்து பேச! உதாரணமாக, சர். ப்ரு, எங்கேபோய், இந்த வயதிலே கட்சியைக் கண்டு பிடிப்பார்! சட்ட புத்தகத்திலே, வரிக்கு வரியினூடே மறைபொருள் கண்டு பிடிப்பார் திடீரெனக், "கட்சி"யைக் கண்டு பிடிக்க முடியுமா! இருந்தால் தானே! அலகாபாத்திலே பேசினர், அவரவர் தம் கட்சியைத் தேடினர் என்ற அறிக்கைக்கும் அரசமரத்தைச் சுற்றிவிட்டு வயிற்றைத் தடவிக் கொண்ட கதைக்கு வித்தியாச மில்லையே, இதுதான் எனக்குச் சிரிப்பூட்டுகிறது என்று நான் சொன்னேன். உண்மையாகவே, இந்த விருந்தாக அந்த மாநாட்டுச் செய்தியைத்தான் நான் கொள்வேன். அவ்வளவு வேடிக்கை தோழர்களே, விவேகிகள் பலர் விழலுக்கு நீர்பாய்ச்சும் அந்த கலை! பாபம்! ஒவ்வொருவரும், ஒவ்வொரு துறையிலே நிபுணர்கள். பெரிய சட்ட நிபுணர்கள். தீமையிலுள்ள 'பாயிண்ட் தானம்' செய்யக் கூடியவர்கள். ஆனால் பொது மக்கட்கும் அவர்கட்கும் இருக்கும் சம்பந்தமோ, புராணப் புலவர் கட்கும் பகுத்தறிவுக்கும், புளியம் பழத்துக்கும் அதன் ஓட்டுக்கும் இருப்பது போன்றது கூட அன்று! சிலருக்குச், சொந்தக் கருத்தை எடுத்துக் கூறியவுடன், கட்சியிலேயிருந்து "கல்த்தா" கிடைத்தது. சிலர், "எந்தக் கட்சியும் எமது இயல்புக்கு ஏற்றதன்று; எமது இயல்புக்கு ஏற்றபடி கட்சி அமைக்கவோ எமக்கு நேரமில்லை" என்று கூறிடும் ஏகாந்திகள். ஆனால் ஒன்று அறிவர். ஒன்றரைப் பக்க நீளமுள்ள அறிக்கைகள்!! அந்தக் கூட்டத்துக்குப் போய்ச் சேரும் நாள் வரும் என்று அன்பர்

ஆச்சாரியார் கனவுகூடக் கண்டிருக்க மாட்டார். ஆனால், பாபம், அங்கும் போனார், அல்லாபக்ஷின் தந்தியையும் கண்டார், அவரது அலுவல், அது போலாகிவிட்டது. "இதனால் நஷ்டமொன்று மில்லை" என்று கூறுவார், ஏனய்யா இந்த வீண்வேலை? என்று நாம் கேட்டுவிட்டால். அவர் இஷ்டம், அதைத்தடுப்பது கஷ்டம், நமக் கென்ன. "வாடி உள்ளே! அங்கே ரேழியிலே, இந்த மொட்டை முண்டைகள் ஏதாகிலும் பேசிண்டே கிடக்கும் மொண மொண வென்று. உள்ளே வா! என்று கூப்பிட்ட ராஜாயி, அடுத்த ஆறாம் மாதம் அறுத்து விட்டாள், ரேழி மாநாட்டிலே அமராமல் என்ன செய்வாள் அது போல, ஆச்சாரியாருக்கு முன்பு காங்கிரஸ் இருந்தது, எனவே, கட்சியற்றார் மாநாட்டுக்குப் போக வேண்டிய நிர்ப்பந்த மில்லை. இப்போதுதான் அவர் "ராஜிநாமா" செய்து விட்டாரே, சாப்ரு கோஷ்டியிலே சேராது என் செய்வார் பாபம்! இலண்டன் பட்டினத்திலே இப்போது, ஏழெட்டு அரசுகளின் தலைவர், தத்தம் அரசு அமைத்துக் கொண்டு, நேசநாட்டு வெற்றியை எதிர்பார்த்தக் கொண்டுள்ளனரல்லவா! ஜெனரல் டி'காலே என்ன! வில்ஹெலமினா அரசியார் என்ன! டாக்டர் பென்ஷ்! இன்னும் பலர்! அவர்களுக் காகவாவது, விமானப்படை, தரைப்படை உள்ளன. வெற்றி வாடையும் வீசுகிறது. ஓர் நாள் மீண்டும் தத்தம் அரசுகளைப் பெறுவர். ஆனால், அலகாபாத் என்ற அபூர்வ நகரமிருக்கிறதே அது அரசியல் விதவைகள், கூடிக்கூடி, ஆரூடம் கேட்டு, அலுத்துப் போகும் இடம்! ஆச்சாரியார் அங்கும் சென்று பார்த்து விட்டார்! முயற்சி திருவினையாக்குமாமே, அந்தப் பழமொழியை அவர் வாழ்க்கை வழியாகக் கொண்டார் போலும்! பார்க்கட்டும்!!

இனி, ஒரு பத்து நாட்களுக்காவது, பத்திரிகைகளின் விசேஷ நிருபர்கள் மும்முரமாக வேலை செய்வர். சாப்ரு மாநாட்டு எதிரொலி! சாப்ரு மாநாட்டு விஷயமாக டில்லியில் பரபரப்பு; வில்கி சாப்ரு கோரிக்கையை ஆதரிப்பார் என்று விஷயமறிந்த வட்டாரம் கூறுகிறது" என்று எழுதவும், எழுதியதை மறுத்து மற்றொன்று எழுதவும் தொடங்குவர். இந்த வேடிக்கைகளைச் சில நாட்கள் அனுபவிக்கலாம்!

ஆனால், இந்த அலகாபாத் அம்மானைகள் அரசியல் நெருக்கடியைத் தீர்க்க முடியாது. பிரச்சினை வேறு, இவர்கள் பேசுவது வேறு; பிணியறியாதார் மருந்து வகை பேசுகின்றனர். இந்த வேடிக்கை, எதற்கும் இடமளிக்கும் இந்நாட்டிலேயன்றி வேறெங்கும் காண முடியாது.

நான் பழைய லவால் அன்று! நீங்கள் காண்பது புது லவால்! என்று இப்போது அதிகாரம் செய்யும் லவால் கூறுகிறார். நான் வெர்டூன் வெற்றி வீரன் என்பது பழங்கதை. இப்போது நான் பெர்லின் பிடித்து வைத்துள்ள கத்தை என்று வயோதிகப் பெட்டெயின் கூறவில்லை. அட்மிரல் டார்லான், நான் அங்குமிருப்பேன் இங்குமிருப்பேன், என்று கூறவில்லை, செயல் அவ்வண்ணமிருக்கிறது. ஆச்சாரியாரும், இத்தகைய போரால் பொசுக்கப்பட்ட புருஷர்களிலே ஒருவர் தானே! அவர் அதைச் சொல்லவில்லையே தவிர, அவர் நிலை அதைத் தெளிவாகக் காட்டுகிறது. அவர் சாப்ரு மாநாட்டுக்குப் போகிறாரென்றால், புறப்படுமுன்பு அவருடைய மனம் என்ன பாடுபட்டிருக்கும். எத்தனையோ முறை சாப்ருஜயகர் கூட்டத்தை நையாண்டி செய்த கூட்டத்தின் தலைவரல்லவா அவர்! அப்படிப் பட்டவர், அங்காவது போவோம் என்று எண்ணினது அவருடைய "வேளை". லவால் போலப் பேசவில்லையே யொழிய; அவர் ஒரு புது மனிதராகத் தான் காணப்படுகிறார். என்ன செய்வது, எல்லாம் யுத்த நெருக்கடி!!

* * *

வயல்களிலே விளைவது போதாது, ஆகவே காடு மேடு, குளத்தங்கரை, கோயில் தோட்டம் ஆகிய எல்லா இடங்களிலும் உணவுப் பொருளை உற்பத்தி செய்யுங்கள் என்று சர்க்கார் புது யோசனை கூறியிருக்கிறார்களல்லவா, அது போல, வார்தா வயலிலே, வெற்றி விளையவில்லை, பம்பாயிலே சாகுபடியின் போதே சச்சரவு, டில்லியிலே குத்தகைக்கு விடவே ஆளில்லை. எனவே ஆச்சாரியார், அலகாபாத்திலாவது தமது விவேகமெனும் வித்தைத் தூவி, உழைப்பெனும் நீர்பாய்ச்சி, வெற்றி விளையுமா என்று பார்க்கிறார். இதுவும் வீணானது அவருக்குத் தெரியாமலா போகும்! அபசகுனமாக முதலிலே கூற வேண்டாம் என்று சொல்லுகிறார், நான் என்ன செய்வது உண்மையைக் கூறத்தானே வேண்டும். காளையிடம் பால் வேண்டினால், கனபாடி சுப சோபனம் பாடினாலும் கிடைக்கவா போகிறது! ஆனால், ஏன், ஆச்சாரியார், இந்த அலகாபாத் அம்மானையிலும் கலந்து கொண்டார். அதன் காரணத்தை அவர் கூறினார் அலகாபாத் கூட்டத்திலே!

தேசிய சர்க்கார் ஏற்படா முன்னம், யுத்தம் முடித்து விட்டால், நம்பாடு மிக ஆபத்தாக முடியும்! இது ஆச்சாரியார் வாக்கு.

அவருடைய அலைச்சலுக்கும், மனக்குடைச்சலுக்கும், காரணம் இந்தக் கருத்தே தான். போர் ஆரம்பமான போது, பிரிட்டன் தனியாகத், திக்கற்று, நல்ல விமானப் படையற்றுச், சேம்பர் லெயின்கள் உலவிய இடமாக இருக்கக் கண்டனர் காங்கிரசார். அச்சு நாட்டு வெற்றிகள் அவர்களுக்கு, பிரிட்டனின் பலவீனத்தைக் காட்டின. மூழ்கும் கப்பல், சரியும் சுவர், இலாபமில்லாக் கம்பெனி என்று பிரிட்டனை எண்ணினர். அச்சு நாட்டவரின் ஆற்றலைப் பற்றிப் பேசினர். காந்தியாரும் ஆஸ்ரம வாசி, ஹிட்லருக்கும் உச்சியான இடத்திலே ஒரு தனி ஜாகை உண்டு; காந்தியாருக்கு அந்தராத்மாவின் உதவி உண்டு, ஹிட்லரும், கடவுளின் தூதர் என்றே ஜெர்மன் மக்கள் நம்புகிறார்கள். இருவரும் மாமிசம் புசிப்பதில்லை. மது அருந்துவதில்லை, மாதரிடம் கொஞ்சுவதில்லை, இருவருக்கும் குழந்தைகளிடம் பிரேமை, இருவரும் இரு பெரும் நாட்டின் இணையில்லாத் தலைவர்கள் என்று அர்ச்சித்தனர். அப்போதெல்லாம், பெல்ஜியம் வீழ்ந்தது, பிரான்ஸ் பணிந்தது, போலந்து புகைந்தது, செக்கோ சிதைந்தது, கிரீஸ் கவிழ்ந்தது, என்று இழவோலை வந்த வண்ணமிருந்தது. இது கேட்டு இப்போது என்ன சொல்லுகிறாய்? என்று இடுக்கியிலே இங்கிலாந்தைச் சிக்க வைத்தனர் காங்கிரஸ்காரர். பிரிட்டிஷ் தோல்வி நிச்சயம், அச்சுநாட்டு வெற்றி நிச்சயம் என்ற எண்ணத்துடன் காந்தியார் இருக்கிறார் என்று பண்டித ஜவகரும் சொன்னார். ஆகவே, மூழ்கும் கப்பலிலிருந்து முதலில் எலிகள் ஓடுவது போலக், காங்கிரசார் தமது பதவிகளை விட்டு வெளியேறினர். விரைவிலே ஒரு சுப முகூர்த்தத்திலே தமக்குப் பட்டாபிஷேகம் நடக்கும் என்று நம்பினர். ஆனால், தனியாக நின்ற பிரிட்டன், தணலிலே வெந்து, தங்கநிறங் கொண்ட எஃகுக்கம்பியாகி, இன்று அச்சுநாட்டு இருதயத்தைக் குத்தும் ஈட்டி முனையாகி விட்டது. நச்சு நினைவு கொண்ட அச்சு நாட்டின் கொட்டத்தைச் சோவியத் சம்மட்டி சோர்வின்றி மட்டந்தட்டி வருகிறது. இப்போது, ஸ்டாலின்கிராட்டி லிருந்து

ஜெர்மானியர் ஓட்டம், ரிஜாவிலே ஜெர்மன் படைகளுக்குத் திண்டாட்டம், நேப்பிள்ஸ் மீது பிரிட்டிஷ் குண்டுவீச்சு. ஜினோவா நகரைக் காலி செய்யும்படி முசோலினி உத்தரவு, மடகாஸ்கர் பணிந்தது. டாகர் இணங்கிற்று, சாலமன் சமரிலே ஜப்பான் சளைத்தது, மக் ஆர்தர் மகத்தான வெற்றி பெற்றார், ரோமல், எல் அகாலியாவிலிருந்து ஓடுகிறார், மாண்டலே ரோடு தாக்கப்பட்டது, நியூகினியில் ஜப்பானியர் தோற்றனர், என்ற இந்த அட்டவணையைக் காண்கின்றனர். எந்தப் பக்கம் திரும்பினாலும் இந்தியாவிலே சோல்ஜர் மீதுதான் இடறி விழவேண்டும், அவ்வளவு இராணுவப் பெருக்கம்! பட்டாளத்தைப் பார்க்காத குக்கிராமமே இல்லை, பட்டாளத்துக்கு ஆள் அனுப்பாத பட்டிக்காடே இல்லை, பால் விற்று வந்தவன், பழக்கடைக்காரன், பண்ணை வேலையாள், பாட்டாளி என்னும் தோழர்கள், இன்று டாங்கிப் படையிலும் பீரங்கிப்படையிலும் விமானப் படையிலும், "நாயக்"காகி விட்டனர். திக்கெட்டும் கூடாரங்கள்! தெருவெங்கும் இராணுவத்தார் நடமாட்டம். பட்டாளம் இராத பட்டிக்காடு இல்லை! இவ்வளவு பலமாகி விட்டது இந்திய முஸ்தீப்பு, பதினைந்து இலட்சம் போர் வீரர்கள் பாரா! உஷார்!! என்று கூறுகின்றனர் இன்று.

இவ்வளவு பலம் திரண்டு, பக்குவம் பெற்றது, ஆச்சாரியார் அறியாததன்று! இவ்வளவு படை திரட்டவும், பணந்திரட்டவும், இரண்டுக்கும் தேவையான பிரசாரம் செய்யவும், காங்கிரசல் லாதாரே பயன்பட்டனர் என்பதை பிரிட்டிஷார் அறிவர், என்பதும் ஆச்சாரியாருக்குத் தெரியும்.

வெற்றிக் கொடியின்கீழ் நேசநாடுகள் வீற்றிருக்கும் வேளையிலே, வீரஇஸ்லாமியரும் தீரத்திராவிடரும் ஆற்றிய அரும்பணிகள் ஆங்கிலரின் கவனத்திற்கு வராமற் போகுமா, அதே நேரத்தில், அகிம்சை பேசிவந்த கூட்டம், தபாலைக் கொளுத்தி தண்டவாளத்தைக் கழற்றி, போலீசை விரட்டி, சர்க்கார் ஆபீசைத் தாக்கிய நாசகாரியம், நினைவிற்கு வராமற் போகுமா!

சூலுக்கும் சுறாவுக்கும், எதிரியின் சப்மரைனுக்கும் கலங்காது, கடல் கடந்து சென்று போரிட்ட பட்டாளத்தினிடம் பரிவு உண்டாகுமா? படையலை உண்டு கடைவீதியிலே நின்று,

பட்டாளத்திலே சேராதே என்று சுலோகம் பாடிய சொரூபங்களிடம் அன்பு ஏற்படுமா? ஈராக், ஈரானுக்கு அடிக்கடி சென்று, இந்தியப் பட்டாளத்தாருக்கு இதமொழி உரைத்து வந்த சர். சிகந்தர் ஹயத்கானிடம், நேசநாடுகள் சலுகை காட்டுமா, பிர்லாமாளிகையிலே கூடி, பிரிட்டனுக்கு இறுதி எச்சரிக்கை விட்ட "தேசியத் திருப்பிரம்மங்களிடம்" அன்பு காட்டுமா? யுத்த எதிர்ப்புப்பேசிய ஆச்சாரியாரிடம் அளவளாவுமா, அன்றி, அமெரிக்கா சென்று இரவல் தளவாட சட்டத்தின்படி போர்ப் பொருள் பெறும் பணியைத் திறம்பட ஆற்றிய சர். சண்முகத்திடம் பேசுமா! மீண்டும் மந்திரிகளாக வேண்டு மென்று சிறைக்குள் குதித்த தோழர்களுக்குத் திருஷ்டி கழிக்குமா, ஆபத்தான வேளையிலே, ஹனிபால் கதை தெரிந்த பிறகும், ஆகாயமார்க்கமாக பிரிட்டன் சென்ற அஞ்சா நெஞ்சராம் சர். இராமசாமி முதலியாரின் யோச¬னையைக் கேட்குமா? நேசநாடுகளின் வெற்றி வாடை, காங்கிரசாருக்குக் குளிராகத்தான் இருக்கும்!!

ஆச்சாரியார் நேச நாடுகள் வெற்றிபெறும் இந்த நேரத்திலே, நாம் தேசிய சர்க்காரிலே இருக்க வேண்டும், இல்லையானால் ஆபத்து என்பதன் கருத்து இதுதான்!

இது தெளிவாக இருப்பது கண்டு நான் மகிழ்கிறேன். சில "தெம்மாண்டைகள்" இன்னமும் பிரிட்டனைத் திட்டுவது, வீரத்துக்கு இலட்சணம் என்று கருதுவது போல் ஆச்சாரியார் இராமல் உண்மையான நிலைமையைத் தெரிந்துகொண்ட வரையிலே எனக்குத் திருப்தியே. ஆனால், அலகாபாத் போவது என்றால், அது மீண்டும், அவருடைய மனம் இருட்டடைப்பில் சிக்கிற்றோ என்ற ஐயத்தை உண்டாக்குகிறது.

20.12.1942

# காலக்கண்ணாடி

இந்தத் திருக்குளத்தைச் செப்பனிட்டு நீராழி மண்டபம் கட்டி, நேர்த்தியான சித்திர வேலை செய்யப் பத்தாயிரத்துக்கு மேல் செலவிட்டு, மண்டபம் கட்டி முடித்ததும், தெப்போற்சவத்தை நடத்த மற்றோர் பத்தாயிரம் செலவிட்டுப், பாண வேடிக்கையும் பாண்டு வாத்தியமும், மூன்று ஜதை நாயனமும், மூன்று நாள் வேத பாராயணக்காரருக்கு விருந்தும் தந்தார், தீனதயாள முதலியார்! பாவம்! அவருடைய திருக்குமாரன் தான், இதோ பிணமாக மிதக்கிறான் திருக்குளத்திலே! சொத்துத் தீர்ந்து விட்டது! தகப்பனார் வியாபாரி! இலாபத்தைப் பக்திப் பிரபாவத்துக்குச் செலவிட்டார், புகழ் கிடைத்தது, புகழ், வியாபாரத்துக்கு விளம்பரமாயிற்று, விளம்பரம் வியாபாரத்தை விருத்தி செய்தது, மேலும் இலாபம் கிடைத்தது! மகனோ, வியாபாரமறியான் தந்தையைச் சுற்றிக் கொண்டிருந்த பூசரக் கூட்டம், தன்னைச் சூழ்ந்திருக்கக் கண்டான், சொத்தைக் கரைத்தான், சொகுசாக விளையாடினான், சொர்ண தானம் செய்தான், தகப்பனார் துவக்கிய தெற்போற்சவத்தையும் விடவில்லை, புதிய கைங்கரியத்தை வேறு செய்தான், காளைப்பருவம், கண்ணடியால் கசங்கினான், காசை இழந்தான், கதியற்றவனானான், கடனாளியானான், கதறினான், கேட்பார் இல்லை, கஜேந்திரனுக்கு மோட்சமளித்தவனின் திருக்குளமே கதி என்று கூறி, விழுந்தான், இறந்தான், பிணம் மிதக்கிறது! தெப்போற்சவத் திருக்கைங்கரியம் செய்த பக்திமானின் பிணம், தெப்பம்போல் மிதக்கிறது. திருவிழாவுக்குத் திரளான கூட்டம் வருவது போலத்தான் இதற்கும் வந்து காண்கிறது.

தீனதயாளுவிடம் திதிக்கு வாங்கிய அரிசி பருப்பு காய்கறி, தட்சணை, சோமன் ஜோடு ஆகியவற்றைக் கொண்டு குடும்பக் காலட்சேபத்தை நடத்தி, தன்மகனைப், பெரிய படிப்புப் படிக்க வைத்தார், பார்த்தசாரதி ஐயங்கார்! அவர் மகன் பி.ஏ. படிக்கும்போதே, வரதட்சணை ஐயாயிரத்துடன் கிடைத்தாள் வத்சலா! வத்சலாவின் தகப்பனார், சர்க்காரிலே பெரிய அதிகாரி. வத்சலா மணாளன் வரதாச்சாரி பி.ஏ. ஜில்லா போலீஸ் சூபரிண்டு அவன் தான், பிரேத விசாரணைக்கு ஏற்பாடு செய்தான். அன்றிரவு வத்சலா, வரதாச்சாரி வயோதிகப் பருவத்திலேயிருந்த பார்த்தசாரதி ஐயங்கார் மூவரும் “அல்லி அர்ஜுனா” நாடகத்துக்குச் சென்று ஆனந்தமாகப் பொழுது போக்கினர். பிணமான பரந்தாமனின் மனைவி பத்மா, அழுத குரலொலி, அவள்

வசித்த வீதியையே கலக்கிவிட்டது. திருப்பணி செய்த தொண்டனைத் திருவடி நிழலில் சேர்த்துக் கொண்ட பெருமாள், தேவியுடன் நித்திரை செய்தார். அவர் காதிலே, பத்மாவின் பிரலாபம் விழவில்லை!!

20.12.1942

# தலயாத்திரை

தலயாத்திரை சென்று, பக்தர்கள், அருள் பெற்று வரலாம் என்றெண்ணுவர். ஆனால் பெறுவது அது அல்ல, உடலிலும் உள்ளத்திலும் நோய் கொள்வர். இத்தகைய பயணமின்றி, உல்லாசத்துக்குச் செல்வர் சிலர். வேறு சிலர், உலகைக் காணவேண்டும், ஏட்டிலே உள்ளதைப் படித்தால் மட்டும் போதாது, நாட்டு நிலையையும் நினைப்பையும் கண்டு, கருத்தை வளமாக்குவோம் என்ற எண்ணத்துடன் ஊர் பல சென்று வருவர்.

மைசூர் மாஜி திவான் சர். மிர்சா இஸ்மாயில், வெளியே சுற்றுப்பயணம் செய்வதனால் கருத்து வளர்ச்சி ஏற்படும் என்பது பற்றித் தெரிந்து கொண்டிருப்பாரோ இல்லையோ, நமக்குத் தெரியாது. ஆனால், அது போல, மாணவர்கட்கு அவர் உபதேசித்தார். அவரும் பாட்னா, டாக்கா சர்வ கலாசாலைகளிலே, போய்ப் பார்த்ததில், தமது சுற்றுப் பயணம் பலனளித்திருப்பதைத் தெரிந்து கொண்டிருக்கக் கூடும். அங்கெல்லாம், அவர் பாகிஸ்தானை மறுத்துப் பேசினார்.

உடனே முஸ்லீம் மாணவர்கள் கண்டித்தனர், சர். மிர்சாவின் பட்டமளிப்பு விழாச் சொற்பொழிவுக்குச் செல்லக்கூடாதென்று கிளர்ச்சி செய்தனர். இது சர். இஸ்மாயிலுக்கு, முஸ்லீம் உலகின் மனப்பாங்கை விளக்கி இருக்க வேண்டும். இந்தப்பாடம் அவருக்குக் கிடைத்தது, சுற்றுப் பயணத்தினால் தான்! பாடங் கேட்ட பிறகாவது, சர். இஸ்மாயில் திருந்துவாரா?

20.12.1942

# வேதாந்தியின் விழிப்பு

வாழ்வோ அநித்யம்; உலகமோ மாயை, எல்லாம் மன மயக்கு, இதை நம்பினாலோ வரும் மன அழுக்கு; என்று வேதாந்தி விளக்கினார். ஆதாரஙகளைக் காட்டினார். ஆஹா! என்ற கேட்போர் வந்தனர், அவரது புகழ் ஓங்கிற்று.

கந்தலும் பீதாம்பரமும் என்ற பேதம், அரண்மனை குடிசை என்ற வித்தியாசம், சொக்குவது துக்கத்தால் கிடப்பது, இவைகள் உண்மையை சார்ந்தோர்க்கு இல்லை, என்று உபதேசிக்கிறார்.

அவருடைய உபதேசத்தைக் கேட்டு உள்ளம் குளிர்ந்த மக்கள், பாலும் பழமும் தேனும் பிறவும் தந்தனர். "இவை என் எதிரே இருப்பதும் ஒன்றுதான் உள்ளே போவதும் ஒன்று தான். எனக்கு அந்த வித்தியாசம் இல்லை" என்றுரைத்தார் பழத்தைத் தேனில் தோய்த்து உள்ளே அனுப்பி, அந்தப் தயைப் பிறகு பாலால் கழுவினார். படுத்தார், துயின்றார்.

அவருடைய வேதாந்தத்தைக் கேட்ட நேரத்திலே வேதனைப்பட்ட மக்கள் ஓர் வித ஆறுதல் பெற்றனர், வீடு பெற்றனர், அங்கே அவர்களை உலகம் கொண்டு அழைத்தது, "உன் உடம்புக்குக் காய்ச்சல்! அதற்கு மருந்து வாங்கி வா, போ! உன் மனைவி கர்ப்பவதி, கேள் அவளுடைய வேதனைக்கு போய் அழைத்து வா மருத்துவரை. அதோ, கதவு தட்டுகிறது யார், மார்வாடி! போய் மண்டியிட்டு மனுச் செய்துகொள், மழைக்காலமாயிற்றே கூரை ஒழுகுமே, அதைக் கவனி" என்று உலகம் உரைக்கிறது.

துயிலினின்றும் எழுந்த வேதாந்தி, காணிக்கை செலுத்த வந்த செல்வவானைப் பார்த்து, "மாயா உலகை நீ மதியாதே, மாநில வாழ்வது நிலையாதே!" என்று உபதேசிக்கிறார். பொருள் தருகிறார் உபதேசிக்கிறார். பொருள் தருகிறார் புண்ணியந்தேடி வந்த பூமான். பொருள் உன்னிடம் இருந்தாலென்ன, என்னிடம் இருந்தால் என்ன?" என்று புன்முறுவலுடன் கூறுகிறார் வேதாந்தி. பணம் வேதாந்தியின் பெட்டியிலே படுத்து உறங்குகிறது!

வேதாந்தி, வேதனையறியாது வாழ்கிறான், உழைக்காது

அனுபவிக்கிறான், ஊர்க்குபதேசம் செய்து வாழ்க்கைச் சுவையைப் பருகுகிறான். ஆனால், உலகமே மாயை என்று பேசுகிறான்.

வேதாந்தத்தைக் கேட்ட உழைப்பாளியோ, புழுப்போல் துடிக்கிறான் தரித்திரத்தில், செக்குமாடாக உழைக்கிறான், சீலைப்பேன் குத்துகிறான், அவன் வாழ்க்கையைச் செல்லரிக்கிறது.

ஏழைக்குக் கருத்து வளராதது கண் திறவாதது, கஷ்டத்துக்குக் காரணம் கண்டு பிடிக்க முடியாது திணறுவது கஷ்டத்தைப் போக்கிக் கொள்ளக் கையை மேலுக்குத் தூக்கிடும் காரியமின்றி வேறறியாதிருப்பது, வேதாந்தி, சித்தாந்தி, மதவாதி, என்போர் உலகிலே காணப்படும் காட்சி, நிலை, ஆகியவற்றுக்கு மாயை என்ற தத்துவமோ, வினை என்ற சாக்கோ, மேலுலகம் என்ற ஆசை மொழியோ கூறி வைத்ததால்தான்.

சமதர்மச் சிங்கம், சோவியத் தலைவர், லெனின், இத்தகைய வேதாந்தி, சித்தாந்திகளைக் குறித்து அழகியதோர் மொழி, ஆழ்ந்த கருத்தமைந்ததோர் வாசக முரைத்தார், “உலகவிளக்கம், வர்ணனை, காரணம், பற்றிப் பலர் பலவிதமாகப் பேசிவந்தனரே யொழிய, உலகை மாற்றி அமைக்க வேண்டும் என்று முயன்றதில்லை” என்றுரைத்தார்.

வேதாந்தி, சித்தாந்தி, மதவாதி என்போர், உலக உற்பவம், உலக காரணம், உலகினோருக் குற்ற நிலைக்குக் காரணம் என்பன பற்றிப்பேசினர், ஏடெழுதினர், நாட்டினரால் நன்கு உபசரிக்கப் பட்டு வாழ்ந்தனர். ஆனால், உலகிலே இருக்கும் கொடுமை மடைமை, வேதனை, சூது, என்பவைகளைப் போக்கத் தம் சிறு விரலை அசைத்தனரில்லை. அரண்மனைப் பூங்காவிலே, சதங்கை குலுங்க நடந்து வந்த அரசிளங்குமரி, அன்றலர்ந்த ரோஜா, மணம் வீசும் மல்லிகை, முறுவல் தரும் முல்லை, அழகிய அல்லி, சுகந்தம் வீசும் மனோரஞ்சிதம் ஆகியவற்றைக் கண்டு களிகொண்டு, ஆடிப்பாடி, சேடியருடன் கூடிப், பூக்கொய்து மாலை தொடுத்து மகிழ்கிறாள். ஆனால், கதிரோனைக் கண்டதும் கண் விழித்து, நிலந்திருத்தி நீர் பாய்ச்சி, காவலிருந்து பாடு பட்ட தோட்டக்காரனன்றோ கஷ்டமறிவான். வேதாந்தி, அந்த அரசிளங்குமரி போன்றவனே!

காட்டைத் திருத்த கழனியை உழ, தோட்டம் காக்க, மலை குடையப் பாறை பிளக்க, அவன் வாரான். காய்ந்த வயறும் குழி விழுந்த கன்னமும் பஞ்சடைந்த கண்களும் அவனுக்கல்ல! கந்தலன்று அவன் அணிந்திருப்பது, கம்பங் கூழன்று அவனுக்கு; பீதாம்பரதாரியாக இருப்பான்! அத்தகைய வேதாந்திகளை விரட்டியடித்தே வீரன் லெனின், பாட்டாளி மக்களின் ஆட்சியை ரஷியாவிலே அமைத்தான். செல்வம் படைத்துச் சொகுசாக வாழ்வோர் சிலராய் சொல்திறமும், மக்களை மயக்கும் மொழித் திறமும் பெற்ற சிலரும், சொகுசாக வாழுகின்றனர்; முன்னவர் சிற்றரசன், சீமான், முதலாளி; பின்னவர், வேதாந்தி, சித்தாந்தி, புராணிகன், பாகவதன், குருக்கள், ஜோதிடன், மடாதிபதி ஜீயர், மகந்து குலகுரு முதலியோராவர்; முன்னவர், உரிமை கொண்டாடி உரத்த குரலில் பேசி ஊரை அடக்குவர், பின்னவர், மாயைபேசி, மெல்லிய குரலால் மக்களை மயக்குவர்; இருசாராரும் சமதர்ம வாழ்வுக்கு இசையார்.

சர். ராதாகிருஷ்ணன் ஒரு வேதாந்தி! ஆரிய பீடமாம் காசியிலே உள்ள சர்வ கலாசாலையின் பிரதம பூஜாரி! மெல்லிய உடல் படைத்த இந்த வேதியரின் உள்ளத்திலே, மேனாட்டு கீழ்நாட்டு வேதாந்த சாரம் ததும்புகிறதாம். நவீன வேதாந்தி, எனவே நடந்து சென்று நல்லுரை கூறார், பறந்து செல்கிறார் பாரிஸ், இலண்டன் முதலிய பட்டினங்கட்கு; பட்டுப் பீதாம்பரமணிந்து மான் தோலாசனத்தில் அமர்ந்து உலக சம்ரட்சணார்த்தம் உபதேசம் புரிவதில்லை, ஆங்கில உடைதரித்து, அழகான மோட்டார் ஏறி, மாணவர் கூட்டத்திடையே “மன்னர் பிரானின் மொழியை” மலருகிறார். நடை உடை பாவனை மேனாட்டுடையது; எண்ணமோ, ஆரியம்! ஆங்கிலமேல் பூச்சிலே ஆரிய நச்சு!! அதை அவர் தந்திருக்கிறார், கல்கத்தாவிலே சென்ற வாரம் அவராற்றிய கமலா பிரசங்கத்திலே! இங்கு, சோவியத் வாடை வீசினால், இத்தகைய சொகுசுக்காரர் தம் கடையக் கட்டுவர். அதைத்தான் வார்தா தடுத்து விட்டதே. எனவே இத்தகைய வேதாந்திகள் உலவவும் பேசவும் வசதி இருக்கிறது. வார்தா தந்த பாதுகாப்பே தன்போன்றவர்கட்கு வாழ்க்கை வழியை வசதியானதாகச் செய்து தந்திருக்கிறது என்பதை அறிந்த சர். இராதா கிருஷ்ணன், செய்நன்றி கொல்லாமல், காந்தியாரைப் புகழ்ந்தும், அஹிம்சையைப் போற்றியும், அகில உலகும் இந்த அவதார புருஷரை அறிந்து கொள்ளப் போகும்நாள் வருமென்று ஆரூடம் கூறியும் பேசினார்.

காந்தியாரை அவதார புருஷரென்று உலகம் தெரிந்து

கொள்வது பிறகு இருக்கட்டும், அறிந்து கொண்ட இந்த அந்தணர், ஏன் இன்னமும் அகாகான் அரண்மனை சென்று அவரடி பூஜித்து நில்லாது, உபஅத்யட்சகராக உலவி ஊன் சுமந்து திரிகிறார் என்று கேட்கிறோம். அஹிம்சையைப் பற்றிப்பேசும் இந்த "அறிவாளி" அஹிம்சாவாதிகள் இன்று "அகோர வீரபத்திரர்களான"து தெரிந்து, அதைத் தடுக்க, என்ன செய்தார் என்று கேட்கிறோம். இவருடைய ஆளுகையிலே இருக்கும் காசி சர்வகலாசாலையின் கதவை இழுத்துப் பூட்டிக் கொண்டு கடுவேகமாக வெளியே போனாரே தவிர, அஹிம்சை பற்றிப் பேச ஏன் அவர் முயலவில்லை என்று கேட்கிறோம்.

"இன்றைய மதம்" என்பது பற்றிப், பேசவும் மனந்துணிந்தார் இந்த மின்மினி. இதற்கு ஏதேதோ ஏட்டுரைகளைக் கொட்டுகிறார். இருதய ஜோதியே இந்த மார்க்கம், இகபர மார்க்கமே இந்து மதம் என்று சுலோகங்களைக் கூறுகிறார். ஏட்டிலே இருப்பதை இனியோர் சமயம் கவனிப்போம், நாட்டிலே உள்ள இன்றைய மதம் எது என்று ஆண்மையுடன் உரைக்கட்டும் ஆங்கில மேல் பூச்சுக்கார ஆரியர். அகில உலகும் அறியட்டும், ஆபாசமும் அநீதியும், அக்ரமமும் ஆணவமும், மடைமையும் மமதையும், "இன்றைய மதமாக" இருக்கும் கோரத்தை, கூறவாரும் என்று அறைகூவி அழைக்கிறோம்.

இந்நாட்டிலே, பல்லாயிரம் சாமிகள், கோட்டை கொத்தளம் போல் கோயில்கள், அவைகளைக் கூடாரமாகக்கொண்டு வேட்டையாடும் ஆரியக் கூட்டம், அந்தக் கூட்டத்திடம் சிக்கிக் கருத்திழந்து காசு இழந்து கபோதிகளாக உள்ள மக்கள் அவர்கள் படிக்கும் மதநூற்கள், அதிலே வரும் மடத்தனமான கதைகள் "இன்றைய மதமாக" இருப்பதையும், இவைகளைக் கண்ணை மூடிக்கொண்டு ஒப்புக் கொள்பவனே பக்தன் - ஆஸ்திகன் - இவ்வளவு ஆபாசத்தையும் எப்படியப்பா நம்புவது என்று கேட்பவன் நாத்திகன் என்று பேசப்படுவதை நெஞ்சிலே ஈரமும் வீரமும் இருப்பின் சர். இராதாகிருஷ்ணன் எடுத்துரைக்கட்டும். கூறக் கூசுவாரானால், நாம் கூறுகிறோம், அதை மறுக்கட்டும். மனதிலே திடமிருப்பின் என்று கூறுகிறோம்.

இத்தகைய ஆபாசத்தை களைய இவர் முயன்றாரா இது வரை! எப்படி முயலுவார்? அது, நுனி மரமேறி அடி மரம் வெட்டுவது, அவரைப் பொறுத்த மட்டிலே! அவருடைய பீடமே, அந்த ஆபாச மாளிகையிலே இருப்பது.

ஆனால், இந்நாட்டிலே ஓர் சமதர்மச் சூறாவளி மக்கள் மனதிலே எழும்பினால் உரிமைப் போர் உணர்ச்சி மக்கள் உள்ளத்திலே கிளம்பினால், “பசி! பசி!” என்று கதறும் மக்களிடம் இவர் போன்றோர் “பஜி! பஜி!” என்று கூறினால், யாரை? எம்மை இக்கதிக்கு ஆளாக்கி, நாங்கள் இவ்வளவு இடரிலே வீழ்ந்து கிடந்தபோது இதம் செய்ய யார் முன் வந்தனர், நாங்கள் பஜிக்க” என்று பதைத்த மக்கள் கூறி, “பிடி! இந்த வேதாந்தி சித்தாந்தி மதவாதிக் கூட்டத்தை என்று முழக்கமிடுவர். வேதாந்திகளின் மனப்பிராந்தி அன்று ஒழியும் விழிப்பு ஏற்படும். அதுவரை சர். இராதாகிருஷ்ணர்கள் உலவட்டும்!

20.12.1942

# லீ . ரா .

லீ.ரா. எனும் அன்பழைப்புக்குரியார் நமது ஆருயிர் நண்பர், சீர்திருத்தச் செம்மல் தமிழ் மரபின் எடுத்துகாட்டாக உள்ளமும் உடலமும் பெற்று, குளிர்ந்த மொழி பேசி, முன்னேற்றத் துறையிலே பல்லாண்டு உழைத்து வந்த மறத்தமிழர், குடி அரசு, பிரசண்ட விகடன், விநோதன், விநோதினி எனும் பத்திரிகைகளின் ஆசிரியராக இருந்து செந்தமிழில் தமிழர்க்குத் தமிழளித்து வந்த தோழர் லீ. ராமசாமி அவர்கள் திடீரெனக் கோவையிலே இறந்தாரெனும் மனமுடையும் செய்தி கேட்டோம், சித்தஞ் சோர்ந்தோம், சிந்தனை குழம்பிற்று. சென்ற திங்கள் சென்னையிலே சந்தித்தோமே, சிரித்துப் பேசினாரே, கோவையிலே பாட்டாளி மக்களின் பேரிகையாகத் “தோழன்” எனும் வார இதழ் நடத்த ஏற்பாடு செய்துள்ளேன் என்றுரைத்தாரே, அவரா மறைந்தார் என்று அலறினோம், தமிழகத்திற்குற்ற நஷ்டத்தை எண்ணி மனம் நொந்தோம். என் செய்வோம்.

தமிழ் நாட்டுச் சீர் திருத்த உலகம் அவரது பணியால் வளமுற்றது, சுயமரியாதைக்காரர் அவரை ஓர் தளபதியென்று கருதி மகிழ்ந்தனர். அவருடைய அருங்கலைப் பயிற்சியும், சீர்திருத்த நோக்கமும், விடுதலை ஆர்வமும், வாழ்க்கைப் படகு கஷ்ட மெனும் புயலிலே சிக்கிக் கொண்டு கவிழ்வது போன்ற நிலை ஏற்பட்ட போதெல்லாங் கூட, முகத்திலே புன்னகை மாறாத இயல்பை அவருக்குத் தந்தது.

மறைந்த மறத் தமிழரின் குடும்பத்துக்கு நமது ஆழ்ந்த அனுதாபத்தைத் தெரிவித்துக் கொள்கிறோம். மலை குலையினும் மனங் குலையாதிருப்பது தமிழர் மாண்பு. அது ஒன்றே நமக்கு ஆறுதல். வேறு எது!

(திராவிடநாடு - 20.12.1942)

## கொடை வள்ளல் , செட்டி நாட்டரசர் அவர்கட்கு ,

பெரியோய்!

தங்களின் பெருங்கொடையின் சிகரமாக விளங்கும் அண்ணாமலைப் பல்கலைக் கழகத்திலே அண்மையில், திருவிதாங்கூர் மன்னர் ஆற்றிய பட்டமளிப்பு விழாச் சொற்பொழிவிலே, தங்களின் சீர்மிகு குணமதைச் சித்திர மொழியிலே செப்பியிருப்பது கேட்டுச் செந்தமிழ்நாடு மகிழ்கிறது சேர நாட்டரசரின் பாராட்டுக்குரியர் தாங்கள். மற்றைய மன்னரும், மன்னர் மன்னருங்கூட தங்களை மனமாரப் பாராட்டுவர். காரணம், தாங்கள் தமிழ் மரபுக்கேற்ப, மக்களுக்கு உதவும் மாண்பு மக்களின் அறிவுக்கண் திறக்கும் அரிய செயல், தங்களின் பயன்தருகொடை, யாவரையும் தங்கள்பால் கனிவுடன் இருக்கவே செய்யும்.

மூவேந்தர் மும்முரசு கொட்டி வாழ்ந்த ஒரு இடம் இன்று, வேதனைக்காடாகி இருப்பது கண்கூடு. முன்னமோர் முறை இத்தாலி நாடு நிலைகுலைந்து, நெறி இழந்து, எடுப்பார் கைப்பாவையாய், யாவர்க்கும் அடிமையாய் இருந்த காலை வான்டே எனும் கவி, கசிந்து கண்ணீர் மல்கிக் கதறினாராம். “ஓ! என் இத்தாலியே ஒளியிழந்த வைரமே. வல்லரசுகளின் வைப்பாட்டியே! வலுத்தவனிடம் வதையும் அடிமையே” என்று.

திராவிடமும் அந்நிலையே பெற்று விட்டது. ஆண்ட பரம்பரை அடிமைகளாயினர். கடலில் மரக்கலம் செலுத்தி, வாணிபம் செய்தவர்கள், தோணியிலே சென்று மீன் பிடிக்கவும் வகையற்றுப் போயினர். புலியையும் வேழத்தையும் வேட்டையாடியவர்கள், பூனைக்கும் பூசுரர்க்கும் (சகுனத்தடை என்று கருதி) பயப்படும் நிலைபெற்றனர். கவிதை இயற்றியவர்கள் கட்டுக்கதைகளை நெட்டுருப் போடுபவராயினர். இத்தகைய இடத்திலே தோன்றி, பாடுபடு, பொருள் ஈட்டு, பணியாற்று என்ற மும்மணிக் கோவையை வாழ்க்கை வழியெனக் கொண்டு, வளமுற வாழ்ந்து, மக்களின் வாழ்வும் வளம்பெற உதவி செய்து கொடை கொடுக்கும் கையராய், குளிர்முகக் கோமானாய், உலவுகிறீர். பழந்தமிழ் மரபு, பட்டுப்போனது, இதோ துளிர் விட்டிருப்பது காணீர் என்று பலரும் போற்றுவது மிகையாகாது.

தர்மப்பிரபுக்கள் இந்நாட்டிலே பலருண்டு. பஜாஜ், பிர்லா போல,

வியாபார நோக்கத்துடன் வாரி வாரி இறைக்கும் வள்ளல்கள் உண்டு. அத்தகையதன்று தங்கள் கொடை. திருவாங்கூர் மன்னர் அதனைத் தெளிவுபடக் கூறினார்.

“அவர்களுடைய இனத்தார்களும் குடும்பத்தார்களும் பரம்பரையாய் நடத்திவந்த தருமமுறையன்றி இவர்கள் செய்துள்ள இத்தருமம் உன்னதமான வரவேற்கத்தக்க நல்ல பலன்களையளித்துள்ளது.” என்று மன்னர் மொழிந்தார்.

தருமம் செய்வது என்ற முறையிலேயே தாங்கள் முதல் புரட்சி செய்தீர்கள் ஜான் ஹாப்கின்ஸ், ராக்பெல்லர் போன்றார் போல!

இசை உலகிலும், அது போன்றே தாங்கள் செய்தது ஒரு புரட்சியே! தமிழிசையைத் தாங்கள் துலக்கினீர்கள், அது இதற்குள், பூத்துக் காய்த்து கனிந்து வருகிறது.

செல்வவான்கள், சங்கீத வித்வான்களுக்குச் சன்மானம் தருவது, கிருதிகள் பாடும்போது பொருள் விளங்காவிடினும் தலையை அசைப்பது என்று இருந்தனர். தமிழகத்திலே தமிழ் இசை வேண்டும் என்று கேட்டீர்; எதிர்த்தோருக்கு இதமொழி உரைத்தீர், இன்று எங்கும் எவரும் என்னென்ன தமிழ்ப்பாட்டுகள் கிடைக்கும் என்று தேடும் நிலை உண்டாகி விட்டது. தரும உலகில் தாங்கள் செய்த புரட்சி போலவே இசை உலகிலும் தங்கள் புரட்சி, பொன் மலர் மணம் பெற்றது போலாயிற்று.

இவைகட்காகத் தங்களைப் போற்றும் தமிழர், மற்றோர் துறை யிலே தங்களின் மகத்தான புரட்சியை எதிர் நோக்கி நிற்கின்றனர்.

தமிழகத்தின் வளம் சுருங்கி, வாணிபம் வளைந்து, தொழில் தேய்ந்து, செல்வம் சிதைந்து போகிறது. ஜீவநாடியான வாணிபம், வடநாட்டவரிடமே இருக்கக் காண்கிறோம். வைரத்துக்கு சுராஜ்மல், தங்கம் வெள்ளிக்குப் பாபாலால், இரும்புக்கு டாடா, மருந்துக்கு தாதா, கப்பல் விமானத்துக்கு லால்சந்த் ஹீராசந்த், ஆடை அணிக்குச் செல்லாராம், உண்டி வகைக்கு ஆரியபவன், என்று இருக்கும் நிலைமை மாற வேண்டாமா! தமிழகச்

செல்வம் இவ்வளவு வாய்க்கால் வழியாக வழிந்தோடி வடநாடு வளமாகச் செய்கிறது, இங்கோ வரண்ட வயல், இருண்ட முகம், பசித்த உள்ளம், பாடுபட்டும் பலனடையாக் கூட்டமாக இருக்கக் காண்கிறோம்.

ஏழடுக்கு மாடியிலே எத்தனையோ இலட்சாதி பதிகள் வடநாடுகளில் உலவ, இங்கு தரித்திர நாராயணர்கள் தாண்டவமாடுகின்றனர்.

வாணிபவேந்தராம் தாங்கள் இதனைத் தெரிந்து கொள்ளாதிருக்க முடியாது. போர் நெருக்கடியும் பணமுடையும் அதிகரித்துள்ள இந்நாளிலே, நமது நாட்டிலே சின்னஞ் சிறு ரயில்வே நிலையங்களிலும், கண்ணைப்பறிக்கும், பாவையரும் பூங்காவும் பல வர்ணங்களில் சித்தரிக்கப்பட்டுள்ள விளம்பரப் போஸ்டர்கள் வரிசை வரிசையாக ஒட்டப்பட்டுள்ளன.

அரவிந்த மில்லிலே ஆடைவாங்குங்கள், மினர்வா மில்லிலே துணி வாங்குங்கள் என்று, வடநாட்டு மில் விளம்பரங்கள் ஒட்டப்பட்டுள்ளன. வியாபார மந்தமோ, பொருள் முடையோ, வடநாட்டு வியாபார உலகில் இருந்திருக்குமானால், விந்திய மலையைக் கடந்து வித விதமான போஸ்டர்கள், இங்குள்ள சிறு ரயில்வே ஸ்டேஷன்களிலும் வருமா!

வடநாடு, மான்செஸ்டர், லங்காஷயர், போலாகி விட்டது. தமிழகமோ, வற்றாத நதியிருந்தும் பாலைவனமாக இருக்கிறது.

வடநாட்டுக்குத் தென்னாடு வெள்ளாட்டியாக, வெண்சாமரம் வீசும் அடிமையாக இருக்கும் நிலைமாற வேண்டாமா?

இந்தப் பொருளாதார சுதந்திரம் திராவிடத்துக்குக் கிடைக்கும் திட்டமே, திராவிடநாடு திராவிடருக்கே! என்பதாகும்.

பொருள் அபிவிருத்திக்கு இதைவிடச் சிறந்த வழி வேறு இல்லை!

ஆகவே தான், தாங்கள், இந்தத் துறையிலே நுழைந்து வேலை செய்ய வேண்டும் என்று நான் வேண்டிக் கொள்ளுகிறேன்.

தங்கள்பால்,

மட்டில்லா மதிப்புக் கொண்ட,

# பூகோள போதனை

மே.த. வைசிராய் வின்லிதோ பிரபுவுக்கு, இந்திய பூகோள ஒற்றுமையிலே, அபார சிரத்தை உண்டாகி விட்டது; அமெரிக்கு அக்பரிடம் அன்பு வந்தது போல! மே.த. வைசிராய் அவர்கள், தமது பரிவை அதிஷ்டம் போல் வழங்குவது அவருக்கான உரிமை! காளை மாடுகளின் ரட்சகராகக் காட்சி தந்தார்; சரி, பிரபுவின் பரிவு, காளைகளிடம் சென்றது போல, பாடுபடும் இனங்கள் மீதும் பிறக்கக்கூடுமல்லவா, என்று மகிழ்ந்தோம். இன்றோ, பூகோள ஒற்றுமை மீது பரிவு கொண்டவர், பல கோடி மக்களின் எதிர்கால வாழ்வுக்குப் பயமூட்டும் திட்டத்தை வைத்துள்ள தோழர்களுக்குக் குதூகலம் பிறக்குமாறு, இந்திய ஒற்றுமைக்குப் பங்கம் வரக்கூடாது என்று பேசுகிறார். வைத்ய வரதர் சந்தனம் என்கிறார், சவர்க்கார் சாமரம் வீசுகிறார்; சர். சி.பி. ராமசாமி ஐயர், சல்லடம் போடுகிறார், இவைகட்கு ஆச்சாரியார் எதிர் அஸ்திரம் விடுகிறார்! ஐயோ! பூகோளமே! நீயுமா, எதிரியாக வேண்டும்!

பூகோள அமைப்பை மட்டுமே கவனிப்பதானால், லின்லிதோ பிரபுவின் ஜென்மபூமியினர், சிறு படகுகளில், கடலில் உலவி மீன் பிடிப்போராகவும், வண்ணமும் கரியும் பூசிய முகத்தினராகவும் இருந்திருக்க வேண்டும்; பிரிட்டன் இயற்கை வளங்கள் அதிகமில்லாத, கடல் நடுவிலே உள்ள ஓர் திட்டு! ஆனால் வாதத்தை கவனித்தால், சூரியன் மறையாத சாம்ராச்யம், பிரிட்டனுக்கு இருப்பது தெரிகிறது! பூகோள போதனை செய்யும் மே.த. வைசிராய், நூற்றுக்கணக்கான சமஸ்தானங்கள் இந்திய பூமியிலே இங்குமங்கும் இருப்பது கண்டு, என்ன செய்கிறார்?

சமஸ்தானாதிபதிகள், தோட்டக் கச்சேரி நடத்தி, பொன் மாலை சூட்டி, மே.த. வைசிராயின் புன்முறுவல் காணத் தவங் கிடக்கும் நேரங்களிலே லின்லிதோ பிரபு, இந்திய ஐக்யத்தைப் பற்றிப் பேசி, இனி இத்தனை துண்டுகள் ஏன், ஒரே அரசியலா வோம், தனித்தனி வாழ்வு வேண்டாம் என்று கூறினாரா, கூறுவாரா! மன்னர்பிரான் சர்க்காருக்கும் சமஸ்தானங்கட்கும் ஏற்பட்டுள்ள உடன்படிக்கைகள் பற்றியன்றோ அச்சமயங்களிலே பேசுகிறார். பூகோள போதனை, பாகிஸ்தான், திராவிடநாடு கேட்பவர்கட்கு பிரத்தியேகமாக ஒதுக்கி வைக்கப்பட்டிருக்கும் அற உரை போலும்!

பிரபுவின் கவனத்திற்கு நாம் சிறிதளவு சரித்திரத்தைக் கொண்டுவர அனுமதி கோருகிறோம். பிரிட்டிஷ் பிரபுக்கள் இந்திய உப கண்டத்திலே ராஜப்பிரதிநிதிகளாக வராமலிருந்த காலம் ஒன்று இருந்தது! ஏன்! பிரிட்டிஷ் பிரமுகர்கள் மொகல் தர்பாரிலே, அனுமதி பெற்று பேட்டி கண்டு, சலாமிட்டுக் குனிந்து நின்று, ஜாடை தெரிந்து சரக்கைக் காட்டி, வினயமாக வியாபாரம் செய்த காலம் ஒன்று இருந்தது. பொன்னும் மணியும் கொழித்த காலம்! வீரரும் தியாகியும் உலவிய நேரம்! வாழ்க்கை ஒரு விருந்தாக இருந்த வேளை. அந்தக்காலத்திலே, திராவிடம் தனி! பாகிஸ்தான் தனி! இந்து மன்னர்கள் தனித்தனி! அந்தக் காலத்திலே கட்டப்பட்ட அழகிய தாஜ்மஹாலைத்தான், அகில உலகிலிருந்தும் வரும் யாத்ரீகர்கள் இன்றும் கண்டு, போற்றுகின்றனர்.

"அகிலும் தேக்கும் அழியாக் குன்றம்

அழகாய் முத்து குவியும் கடல்கள்

முகிலும் செந்நெலும் முழங்கு நன்செய்

முல்லைக்காடு மணக்கும் நாடு"

என்ற விதத்திலே இருந்தது திராவிட நாடு.

சரிதமும் பூகோளமும் சேர்த்து வைசிராய் பார்ப்பாரானால், இந்திய பூபாகத்திலே மூன்று தனி அரசுகள் அமைவதே முறை என்பதை உணர்வார்.

பூகோளத்தையுங் கூட, போதனைக்காக மட்டுமன்றி, தெளிவுக்காகப் படிக்கும் யாவரும், இந்த உபகண்டம், நிலப்பண்பு, சீதோஷ்ணப் பண்பு ஆகியவைகளிலே, மூன்று தனித்தனி இடமாக இருத்தலைக் காணலாம். மலையும் மணல் வெளியுங் கலந்த வடமேற்கு பாகம், இமாலய அடி வட்டாரம் என்னலாம், வளமும் வற்றா நதிகள் பாய்வதுமான கங்கை நதிதீரம், தென்பீட பூமி, என்று மூவகை நாடுகள், உள்ளன. இவை, லின்லிதோ பிரபுவின் மூதாதைகள், ரோமன், டேன், நார்மன் எனும் பல்வேறு இனத்தவருக்குத் தம்நாடு வேட்டைக்காடாவதைக் கண்டு கண் கசிந்து கிடந்த காலத்திலே, தேன் கசியும் கவி இயற்றி, மணம் வீசும் வாழ்வுடன்,

“வானிடை மிதந்திடும் தென்றலிலே

மணிமாடங்கள் கூடங்கள் மீதினிலே

தேனிடை யூறிய செம்பவள

இதழ்சே யிழையாருடன் ஆடுவமே”

என்று பள்ளுபாடி வாழ்ந்த இடங்கள்!

பூகோள போதனை புரியும் “பூஜ்யர்கள்” ஸ்காண்டி நேவிய தீபகற்பமென்று இயற்கையால் ஒரே வட்டாரமாக்கப்பட்டுள்ள இடம், ஏன், ஸ்வீடன் என்றும், நார்வே என்றும் இரு அரசுகளாக, பன்னெடுங்காலமாக உள்ளன என்பதற்கும், ஐபீரியன் தீபகற்பம், ஸ்பெயின் என்றும் போர்ச்சுகல் என்றும் இரு பிரிவாக, இரு அரசாக ஏன் உள்ளதென்பதற்கும், இங்குள்ள பெரிய பண்ணை அளவுள்ளதான ஒரு லக்சம்பர்க் ஏன் தனி அரசு, தனி வாழ்வு கோருகிறதென்பதையும், சிறு நாடுகளின் சுதந்திரங்களைக் காப்பாற்றவே, பிரிட்டன் சீறிப் போரிடுகிறது என்ற போர் நோக்க விளக்கத்தையும், மறந்துவிடத் துணிகிறார்களா என்று கேட்கிறோம். ஒரு கோடி முஸ்லீம் ஒரே இடத்திலே வாழ்ந்து, வேற்றானிடம் அடிமைப்பட்டு இருக்கின்றனரா? இல்லை! எங்கும் தாருல் இஸ்லாம்! இங்கு மட்டுமே 10 கோடி முஸ்லிம்கள், அடிமை வாழ்வில் உள்ளனர். நாலு கோடி பேர், எங்காவது நயவஞ்சகரின் நாட்டியப் பொம்மைகளாகி உள்ளனரா? இல்லை! திராவிடருக்கு மட்டுமே அக்கதி! இரு இனமும் இக்கதி பெற்றதன் காரணம், பூகோளப் பித்தலாட்டமன்றி வேறென்ன? பூகோளத்தை விஞ்ஞானமும், இன எழுச்சியும் மாற்றி யிருப்பதை யார் மறுக்க முடியும்? பூகோளத்துடன் விஞ்ஞானம் சேரவில்லை யானால், சூயஸ் கால்வாய் எது? சொகுசான வியாபார வாழ்வு மேனாட்டாருக்கு எங்ஙனம் கிடைத்திருக்க முடியும்.

ஐயர்லாந்திலே ஓர் அல்ஸ்டர் ஏற்படுவதற்குள்ள காரணங்களைவிட ஆயிர மடங்கு அரிய பெரிய, சரித ஆதாரமுள்ள காரணங்கள், பாகிஸ்தான், திராவிடநாடு பிரிவினைக்கு உண்டு. மே.த. வைசிராய் பூகோள போதனையை மறந்து சரிதத்தைச் சான்றுக் கழைக்க வேண்டும்.

காளைமாடுகளுக்குப் பண்ணை வேண்டுமென்பதை, பிரபு

மறுக்க மாட்டார். கஷ்டமனுபவிக்கும், 10 கோடி மக்களுக்குச் சுதந்திரமாக வாழச் சொந்த அரசில் வாழ உரிமை உண்டு, நாலு கோடி “நாடாண்ட இனம்” தன்னரசுபெற உரிமை உண்டு. உரிமப்போர், உபதேசத்தினால், மங்கிவிடாது.

27.12.1942

# ஏன் பிறந்தோம் இங்கு

நீர்வள நிலவள மிகுந்த நெல்லூர் தலத்திலே, சென்னை மாகாணக் கவர்னரின் ஆலாசனையாளர் மிஸ்டர் ரூதர்போர்டு, "மக்களே! காலநெருக்கடியை உத்தேசித்து, இனி நீங்கள் உபயோகிக்கும், அரிசியின் அளவைக் குறைத்துக் கொள்ளுங்கள்" என்று உபதேசித்தார். மூன்றுவேளைச் சோற்றுக்காரர் இரண்டு வேளை உண்போர், ஒரு பொழுதுடன் இருப்பது, முழு வயிற்றுக்குச் சோறிடுவோர் அரை வயிற்றை மட்டும் நிரப்பிக் கொள்வது என்ற இன்னோரன்ன முறைகளே தேனும் கையுண்டால், மதியுரைத்த மன்னர்பிரான் சர்க்காரின் அதிகாரி கூறியபடி நடக்கலாம், "இது ஒரு கஷ்டமல்லவே! ராபர்ட் கிளைவின் கீழ் வேளை செய்த இந்திய சிப்பாய்கள் கஞ்சியைத் தாங்கள் குடித்துவிட்டு, சாதத்தை வெள்ளைச் சிப்பாய்கட்குத் தரவில்லையோ, அத்தகைய மூர்த்திகளன்றோ" என்று மற்றோர் ஆங்கிலத் தோழர் எவரேனும் கூறுவார். புறாவுக்காகத் தன் சதையை அறுத்துத் தந்த சிபிச் சக்ரவர்த்தி வாழ்ந்த இப்பாரத பூமியிலே, தியாகமே வாழ்வு என்பதன்றோ கொள்கை" என்று ஆரியரொருவர் திருவாய் மலர்ந்தருளுவார், "அரைவயிறு சாப்பிடும்படி "துரை" சொன்னாராமே அது கிடைத்தால் போதுமே நான் உணவருந்தி நாள் மூன்றாகிறதே" என்று பட்டினிப் பட்டாளம் கிளம்பும். இவ்வளவு வேதனை இங்கிருக்கிறது. சோற்றுக்கு அளவிடும் போதனையும், சோற்றுக்கே திண்டாடும் சோதனையும் ஏற்பட்டிருக்கிறது. நாட்டிலே இதுபோது பதினைந்து இலட்சம் தோழர்கள் பட்டாளத்திலே சேர்ந்து, சர்க்காரின் பாதுகாப்பு பெற்று, பசி நோயின்றி இருக்கும் இந்தத் தயவும் கிடைத்திராமற் போய்விட்டிருந்தால், மிஸ்டர் ரூதர்போர்டின் உபதேசம் போல், நாட்டிலே பலர் செய்ய வேண்டி நேரிட்டிருக்கும். பட்டாளத்திலே சேர்ந்தோம், பாதிவயிற்றுச் சோற்றுக்காரராக இல்லை என்று போரிடும் தோழர்கள் திருப்தி கொள்ளலாம். அவர்களும் நம்முடன் இருந்து, வேதனையை உண்டு விம்மிடுவதை விட, இன்றுள்ள நிலை மேலென்று கருதுவர்.

சாப்பாட்டின் அளவைக் குறைத்துக் கொள் என்று உபதேசம் செய்யப்படும் நாட்களிலே அமெரிக்காவிலே! ஹாலி உட் எனும் கலாஷேத்திரத்லே உள்ள நட்சத்திரங்களும் மனம் நொந்துள்ள னராம். பாருங்கள் பரிதாபத்தை. பராரியும் பஞ்சையும் அவதிப் படுவது சகஜம் கலைவாணிகள் கஷ்டப் படுகிறார்களென்றால், திடுக்கிடவில்லையா!

ஓ! கலை வளர்ச்சியிலே கருத்துக் கொண்ட கவிதா உள்ளம்படைத்த கண்ணியர்களே, உமது இருதயம் துடிக்கவில்லையா, கலைக்கு வந்துற்ற இடி கேட்டு.

இங்கே சோற்றுப் பஞ்சம் இருக்கட்டும் - அதைப் பொறுத்துக் கொள்ளலாம், அங்கே ஹாலிவுட்டில், கலையை வளர்க்கும் கயற்கண்ணிகள், கமலமுகவதிகள், கூந்தலழகி! ஆடலழகி ஆகியோரும், சுந்தரரூபர், சுகுணப் பிரதாபர்களம் சோர்ந்து விடுகின்றனராம், அவர்கள் சோர்ந்தால் கலை சுருண்டு விடாதா, கலை சுருண்டால், உலகமே இருண்டன்றோ போகும், ஆகவே ஆவன செய்க என்று இங்குள்ள கலாவல்லபர்களுக்கு கலையின் சார்பாக ஒரு வேண்டுகோள் விட வேண்டிய அளவு வேதனை ஹாலிவுட்டிலே! யாது என்பீர்கள். கேண்மின், இனிக் காலக்கோளாறை உத்தேசித்து ஹாலிவுட் நட்சத்திரங்கள் திங்களொன்றுக்கு (அங்கும் முப்பது நாட்கள் திங்களுக்கு!) 6666-10-8 தொகைக்கு மேலாகச் சம்பளமாகப் பெறக்கூடாதென்று, சர்க்கார் உத்தரவிட்டுள்ளனராம். கிளிகளும் கோகிலங்களும் 6666 ரூபாயைக் கொண்டு நாங்கள் ஒரு மாத முழுவதையும் எப்படிக் கழிப்போம், எதற்குக் காணும் இத்தொகை என்று ஏங்குகின்றனவாம். நாளொன்றுக்கு 222 ரூபாய் தான் பாவம்! இது போதுமா! இது அமெரிக்காவிலே அவர்களுக்கு வந்துள்ள அவதி. இங்கு, மிஸ்டர் ரூதர்போர்டு, அரிசியை மட்டாக உபயோகிக்கும்படி அற உரையாற்றுகிறார். ஏன் பிறந்தோம் இங்கு?

27.12.1942

# வீசுகிறார்கள் சுயராச்யம் !

டோக்கியோ ரேடியோவிலே சொன்னானாமே, சுயராச்யம் தருகிறேன், எங்களோடு சேருங்கள் என்றுரைத்த ஏமாளிக் கூட்டத்தின் கருத்து, கல்கத்தாவிலே, ஒரு முறைக்கு மும்முறை நிலவொளியிலும், விடியு முன்னரும், ஜப்பானியர் குண்டு வீசினர் என்ற செய்தி கேட்ட பிறகேனும் கருத்து துலங்கியிருக்கும் என்று நம்புகிறோம். ஜப்பானியர் குண்டு வீசுவது, நம் நாட்டு மக்களை, “மோட்ச சாம்ராஜ்யத்துக்கு” அனுப்ப வேண்டுமானால் பயன் படுமே தவிர, சுயராஜ்யத்துக்குப் பயன்படாது. குண்டுகள் வெடிக்குமே யொழிய, அவைகளினின்றும் சுயராச்யம் கொத்தாகப் பூக்காது!

கல்கத்தாக் குண்டு வீச்சு, ஜப்பானின் கபடம் என்ன வென்பதைக் காட்டி விட்டது. அம்மட்டோ! வங்கச் சிங்கம், வரண்டு விடாது என்பதையும் காட்டுகிறது.

இப்போது ஜப்பானியர் ஒரு விமானத்தோடு இங்கு வந்தால் நேசநாடுகள் ஒன்பது விமானங்களை, விண்ணிலே வட்டமிடச் செய்து, கொட்டும் ஜப்பானின் கொடுக்கை நறுக்கும் நிலைமை இருக்கிறது. எதிரியின் 9 விமானத்துக்குக்குப் பதில்கூற ஒரு விமானங்கூட இல்லாத நாட்களிலே, இந்தக் குண்டுவீச்சு நடைபெறாமல், நேசநாடுகள் நிமிர்ந்து நின்று போரிடக்கூடிய இந்நாட்களிலே, நேரிடுவது கண்டு நாம் மகிழ்கிறோம்.

பர்மாவுக்குள் நேசநாட்டுத் துருப்புகள் முன்னேற முன்னேற, ஜப்பானியரின் முகாம்களிலே கிலி அதிகரிக்கும். கிலியின் காரணமாக அவர்களுக்கு, எங்கேனும் கண்டு வீசுவோம், என்று பதைப்புச் சுபாவம் தோன்றக்கூடும். அத்தகைய நேரங்களிலே, கல்கத்தா தாக்கப்பட்டதுபோல, மற்ற இடங்கள் தாக்கப் படக்கூடும், வங்கத்தார் போலவே, மற்றையோரும் சிங்கமென்று இருத்தல் வேண்டும். இன்று நாம் ஆதரவற்றவர்களல்லர். வீர ரஷ்யரின் தோழர், சீனரின் நண்பர்கள், பிரிட்டனின் பராமரிப்புக்குரியர், அமெரிக்கரின் ஆதரவும் கிடைக்கப் பெற்றுள்ளோம். எனவே அச்சமில்லை!

அச்சமில்லை! என்று உரைப்போம், ஆண்மையுடன் நிற்போம், வெற்றிபுரி நடப்போம். வீரரின் வழி அதுவே! வீர ரஷ்யர், ஜெர்மன் படைகளை டான் நதி தீரத்திலே நொறுக்குகிறார்கள். ரணகளச் சூரன் ரோமில் ஓட்டப் பந்தயத்திலே இத்தாலியரை விஞ்சி விட்டான். எங்கும் நேசநாடுகளின் வெற்றிக்கான நிலைமை உண்டாகிவிட்டது. இங்கும் நாம் உறுதியுடன் நின்றால், வெற்றி நமதே! அஞ்சேல்!

27.12.1942

# காலக்கண்ணாடி - தடித்தாண்டவராயன்

யாரப்பா அது? கண் செரியாத் தெரியல்லை. அடெடே! தாண்டவராய முதலியா? வாப்பா, என்ன விசேஷம்? தடித் தாண்டவராயனுண்ணு நம்ம பையன் எப்போதும் உன்னைச் சொல்லுமே கவனமிருக்கோ!

ஏனில்லிங்க! நேத்து இராத்திரி வந்தேன் ஊருக்கு, சாமியைப் பார்த்தூட்டுப் போவலாம், பத்து வருஷமாச்சேன்று வந்தேனுங்க. ஷேமந்தானுங்களா?

இருக்கேன் பகவத் சங்கற்பத்தாலே. ஏண்டாப்பா தாண்டவராயா? ஊரை விட்டே போயிட்டே, போன இடத்திலாகிலும் ஏதோ காலட்சேபம் சரியாக நடக்கிறதோ?

இழுத்துப் பறிச்சிக்கிட்டு இருக்குதுங்கோ. ஏழரை நாட்டான் விலகி ஏழு மாசந்தானுங்களே ஆவுது. பட வேண்டிய பாடு பட்டாச்சி. பூமி வீடு எல்லாம் இங்கேயே போச்சிங்களே. அங்கே ஒரு மவராசன் கிடைச்சாருங்கோ. அவர் வீட்டிலே தான் கணக்கு எழுதறேன்.

உன் மகன் என்ன செய்திண்டிருக்கான்?

அந்தக் கண்ராவியை ஏன் கேக்கறிங்க? சினிமா ஆடராங்களே அந்தப் பசங்க கூடச் சேந்துகினு சுத்தறான்.

பொண்ணு, பொன்னி, என்னமா இருக்கா?

புலம்பிகிட்டுக் கிடக்குது! போன வருசம் தாலி அறுத்துட்டுதுங்களே!

கர்மபலன். என்ன செய்றது? நீ மகா உத்தமன். உனக்கு ஒரு குறையும் வராது. ஊருக்கு எப்போ போகப் போறே?

காலங்காத்தாலே புறப்படறேன் சாமி. சின்ன ஐயரு எங்கே இருக்கிறாரு. கண்ணிலேயே இருக்குதுங்க, பாக்கணும்னு ஆசை.

சின்ன ஐயர், சீனம் போயிருக்கான், டாக்டர் பரீட்சைக்குப் படிக்க.

அடுத்த வருஷம் வருவான். ஆயிரம் ரூபாய் சம்பளம் அவனுக்கு.

ரொம்ப சந்தோஷம். அவருக்கென்ன, தங்கக்கம்பி.

மாட்டுப்பொண்ணு பெரிய இடண்டா தாண்டவா! உனக்குச் சொல்றதிலே எனக்குப் பரம திருப்தி. ஜட்ஜ் ஜம்புகேச ஐயருன்னு, பெரிய ஆசாமி, அவர் மக. ஒரே பொண்.

நம்ம தம்பி எங்கேங்கோ?

யாரைக்கேக்கரே? இரண்டாம் பிள்ளையா! அவன் சினிமாவிலே பெரிய "ஆக்டர்." நீ இருக்கிற ஊரிலே சினிமா இருக்கோ? அதிலே பார்க்கலாமே, சந்திரன் என்று சினிமாவிலே பெயர் அவனுக்கு. போனமாசம் வந்திருந்தான் நன்னாத்தான் இருக்கான். என் மகள் மரகதம், அது தான் கர்மம், விதவையாகிவிட்டது, அது ஒரு பெரிய மனக்குறை, மெட்ராசிலே படிக்கிறா இப்போ டாக்டர் வேலைக்குத்தான் போகணும்னு பிடிவாதம் செய்யறா!

தள்ளாத வயதிலே நீங்க மாத்திரம் ஏன் சாமி இங்கே தனியா இருக்கணும். சினிமா எஜமானரு கூடவே இருக்கலாமே.

வீடு வாசல், தோட்டம், துரவு, நிலம், புலம், இவைகளை விட்டுட்டு எப்படிப் போறது? என்ன செய்றது? கோயில் வேலை ஒண்ணு இருக்கேடா, அதை விட முடியுமோ? பொண்ணை யார் கண்டா, பிள்ளையை யார் கண்டா? இறக்கை முளைத்தா, தானா பறக்கறது; அது கிடக்கு, நீ இருக்கிற ஊரிலே, என்னென்ன சாமான் விசேஷம்?

அது சுத்தப் பட்டிக்காடு, சாமி!

பட்டிக்காடா இருந்தா பச்செனு இருக்குமே காய்கறி. நல்லதா கிடைச்சா, அனுப்புடா தாண்டவா! பழைய விஸ்வாசத்தை மறந்துடாதே. போய் வா! சுகமா இரு!

ஊர் பெரியதனக்காரராக இருந்து உத்தமன், பக்திமான் என்று பெயரெடுக்க, சொத்தைச் செலவிட்டுக் கடனாளியாகி, வீடு வாசலை விற்று விட்டு வேற்றூர் போய், கணக்கனாகிக் காலங் கழிக்கும்

தாண்டவராய முதலி, பத்து வருஷங்களுக்குப் பிறகு, சொந்த ஊர் வந்து, ஊருக்கு ஜோதிடர், புரோகிதர், அர்ச்சகர், தகராறுகளைத் தீர்க்கம் தரகர், ஆகிய எல்லாம் உருண்டு திரண்டு ஒருருவாக இருக்கும் சுந்தர சர்மாவைத் தரிசித்து, க்ஷேமம் விசாரித்த சம்பவம் மேலே தீட்டப்பட்டிருக்கிறது.

தாண்டவராய முதலி சுகமாக இருக்கிறார், ஐயர் சொல்படி.

ஐயர், ஏதோ கிடக்கிறார், மகன் ஓரிடம், தானோரிடம் என்று!!

வாழ்ந்து கெட்ட முதலியார், பச்சை காற்கறி அனுப்புவதாகக் கூறினார். செய்வார்!!

27.12.1942

# வரப்போகுதய்யே ...!

மார்கழி மாதம் திருவாதிரை நாள் வரப்போகுதய்யே, என்று பாடினாராமே நந்தன், அந்த நாள் வருகிறது. ஊர் பலவற்றிலே, உள்ளே கிடக்கும் உற்சவ மூர்த்திகள், வெளிக்கிளம்புவர்! திருவாதிரை ஒருவாய்க்களி, என்ற பேச்சும், திரும்பிப் பார்த்தால் உலக்கைத் தடி என்ற ஏசலும், நடக்கும். அத்திருவிழாவிலே கலந்து கொள்பவர்கள், சேவை செய்து விட்டு, நெற்றியிலே அர்ச்சகர் அளிக்கும் திருச் சாந்தினை அணிந்து வீடு திரும்புவர், மோட்சத் திற்கு அச்சாரம் தந்துவிட்டதாகக் கருதிக் கொண்டு, அந்த விழாவிலே, திலகமிடும் செயல் புரியும் சீலர்கட்கு, அதை ஒட்டியுள்ள புராணம் தெரியுமோ, என்பது சந்தேகந்தான். தெரிந்தால், தன்மானமுள்ளவன், இத்தகைய திருவிழாவிலே கலந்து கொள்ளவுமாட்டான். திலகமிட்டுக் கொள்ளவுமாட்டான். கேட்க ஆபாசமானது, அந்தத் திலகத்தின் திருக்கதை!

சிவனுக்கும், காளிக்கும், நர்த்தனம், நடந்த தாம் முன்பொருபோது. சளைக்காமல் சதிராடிய காளியை எப்படியேனும் தோற்கடிக்க வேண்டு மென்ற கருத்துடன் தோடுடைய செவியன், காலைத் தூக்கி நின்று ஆடினாராம். ஒரு ஆடவன், பெண்ணின் எதிரே காலைத் தூக்கி நின்று ஆடினால், காட்சியின் கோரத்தையும், அதைக் காண நேரிடும் அம்மையின் கண்ணிலும் கருத்தியலுமுண்டாகும் மிரட்சியையும் விவரிக்க வேண்டுமா? அதிலும், அவர் எப்படி ஆடு கிறாரோ, அப்படியெல்லாம் அம்மையும் ஆட வேண்டும் என்பதே நர்த்தனப் போட்டியிலே முக்கியாம்சம், என்ன செய்வாள் காளி? எப்படிக் காலைத் தூக்கி ஆடுவது? தோற்றாளாம். இந்தக் கேவலமான முறையில் கெலித்த கடவுள், களித்தாராம், இன்றும் பக்தர்கள் இதைத்தான், காலைத் தூக்கி நின்றாடிய தெய்வமே! என்று பாடிக் களிக்கின்றனர். புராணம் இத்துடன் முடிந்திருந்தால், திருவாதிரை திலகம் ஏற்பட் டிராது. மேற்கொண்டும் ஒன்று நடந்தது, அதைவிட ஆபாசமானது. சிவனாரின் நர்த்தனத் தின்போதும் ஜடையிலேயே இருந்தாளாம் கங்கா தேவியார். திடீரெனச் சிவனாரின் நெற்றியிலே, உதிரம் ஒழுகிற்றாம். அவர் கீழே விழவுமில்லை, வேறு வகை காயமும் ஏற்படவில்லை. அவர் தெரிந்துகொண்டார், உதிர உற்பத்தின் காரணத்தை, மேலே இருந்த கங்கையும் சற்று வெட்கினார்கள், திடீரென மாதவிடாய் ஆனதால், உதிரம் சிவனாருக்கு அபிஷேகிக்க வேண்டி நேரிட்டதற்காக சிவனார்

உதிரத்தையே திலகமாக்கிக் கொண்டார். அந்த உதிரத்தின் அறிகுறியாகத்தான் இன்றும் திருவாதிரையின் போது, பக்தர்கள் திருச்சாந்தை திருவிழாவிலே பெற்று, நெற்றியிலே தீட்டிக் கொள்கின்றனர். அறிவும் தன்மானமும் தமிழருக்குப் பிறந்தால், இனி இத்திருவாதிரைத் திலகத்தைத் தரிப்பானா என்று கேட்கிறோம். வெட்கக் கேடு! வெட்கக் கேடு!! வேண்டாம் இந்த மானமற்ற செயல்!!

# அந்தத் தராசு

ஆரிய மார்க்கத்தையும், ஆரிய அரசியல் பொறியையும் மகத்தானதென்று மனதிற்கொண்டு, நேரம் நினைப்பு பொருளை அதற்கழுது பாழாகும் தமிழா! உனது பொறுமைக்கு ஓர் எல்லை வேண்டாமா! தோல் தடித்தாலும், நெஞ்சமாவது துடிக்கலாகாதா? எங்கே இருக்கிறது உணர்ச்சி?

தராசு என்றால், பண்டங்களை எடைபோடும் கருவி. பாகல்காயோ பசும்பொனோ, உருளையோ, இரும்பு உருளையோ, எதையும் எடைபோட்டு, விலை மதிப்புக் கூறவே தராசு பயன்படுகிறது. தங்க வியாபாரியிடமும் தராசு உண்டு. கருவாட்டுக் கடையிலுந்தான் அது இருக்கிறது. வியாபாரத்தை வாழ்க்கைக்கு வருவாய் தரும் ஓர் தொழில் என்று கோள்வோரிடமும் அது இருக்கிறது. மக்களைக் கசக்கிப்பிழிய, கொள்ளை இலாபம் அடிக்க, தராசுக்கோலை, கொடுங்கோலாகக் கொள்வோரிடமும் அது இருக்கிறது. நிறை தெரிய அது தேவை. ஆனால் நிறை அந்தக் கோலைப் பிடிக்கும் தோழரின் குணத்தைப் பற்றியே, குறையுடைத்தாகவோ, சீருடைத்தாகவோ இருக்க முடியும். ஆனால், எடை போடுவது என்பது, இன்றியமையாததொன்று. எனவே, எடைபோடுவோரின் இயல்வு உலகினோருக்கு நன்மை பயக்கக் கூடியதாக இருந்தால் மட்டுமே மக்களின் வாழ்வு துலங்கும்.

பண்டங்களை எடைபோடும் தராசு போல், பிரமுகர்களை - எடை போடும் தராசு, எழுது கோலரிடம் உண்டு. அவர்களின் நேர்மையைப் பொறுத்தே, மக்கள், பிரமுகர்களைப் பற்றித் தெரிந்துகொள்ளுந் தன்மையுமிருக்க முடியும்.

சுதேசமித்திரன் ஆசிரியர், தோழர் சீனுவாசன், அக்கிரகாரவாசி, தேசீய நேசன், பத்திரிகையுலகின் பட்டத்தரசன். அவர் தென்னாட்டுப் பிரமுகர்களை எடை போட்டு இருக்கிறார், தாம் எழுதிய தராசு என்ற புத்தகத்திலே.

பெரியார்கள், தென்னாட்டிலே யார் என்பதை மக்கட்கு அறிவிக்கும் நோக்கம் அப்புத்தகத்தது. அதிலும் பிலபல ஆசிரியர் அறிமுகப்படுத்துகிறார் என்றால், மக்கள் அவர் காட்டும் பெரியார்களிடம் மதிப்புக் காட்டுவது சகஜந்தானே! இத்தகைய

செல்வாக்குடைய சுதேசமித்திரன் ஆசிரியரின் தராசு எப்படி இருக்கிறது என்ற, தமிழ்த் தோழர்கள், குறிப்பாக காங்கிரசிலே உள்ள தமிழ்த் தோழர்கள் - அவர்களிலே சிலருக்குத் தலைவர் என்ற பட்டமும் உண்டு - சிந்தித்துப் பார்க்கவேண்டும். வெட்கித் தலைகுனிவர். தமது உழைப்பு வீணாவது காண்பர், மானம் மங்கி மடிந்திராவிட்டால். இனியேனும் வீறு கொள்வர்.

சு.மி. தாரசு தென்னாட்டுப் பெரியார்கள் என்ற பார்ப்பனப் பண்டங்களை மட்டுமே - அம்மாமி அப்பளத்தை மட்டுமே - எடை போட்டுக் காட்டுகிறது. யார் அப்பெரியார்கள்? படியுங்கள் பட்டியை! ஏ.ரங்கசாமி ஐயங்கார், எஸ்.ரங்கசாமி, கஸ்தூரிரங்க ஐயங்கார். எஸ்.சீனுவாச ஐயங்கார், வி.வி.சீனுவாச ஐயங்கார், சர்.பி.எஸ்.சிவசாமி ஐயர், ராவ் பகதூர், நடேச ஐயர், சர்.சி.பி.ராமசாமி ஐயர், சி.ராஜகோபாலாச்சாரியார், தேசீயத் தமிழா! இந்நாட்டிலே, தேசீயக் கனலையே மூச்சாகக் கொண்டு வ.உ.சிதம்பரம் பிள்ளை என்றொருவர் இருந்ததை நீ அறிவாயா? அவர் இல்லை, மித்திரனின் தராசிலே! காவித்தைக் காங்கிரசுக்கு அரணாக்கித் தமது புலமையைப் பூசுரருக்கு நல்கி, தமது நாவன்மையை நாட்டுப் பற்றுள்ளங்கொண்ட மக்கள் பெருக வேண்டும் என்ற நன்னோக்கத்தோடு உதவிய திரு.வி.கல்யாண சுந்தரனார், அந்த தராசுக்கு ஏற்றவராகக் கருதப்படவில்லை. தென்னாட்டுத் திலகர், தொழிலாளர் தலைவர், இன்று இந்து மகாசபைத் தலைவர், வைத்தியர் வரதராஜுலு, தராசு எடுத்தபோது ஆசிரியரின் கவனத்துக்கு வரவேயில்லை. பெரியார் இராமசாமிதான், ஆசிரியர் தொடக் கூடாத பேர்வழி! தொட்டுத் தராசில் எடுத்துப போட்டாலும், எடை காட்டுவதற்குள் தராசு அறுபடும. எனவே, அவரைச் சுதேசமித்திரன் ஆசிரியர் தமது தராசுக்கு எடுக்காதது குறித்து நாம் கவலை கொள்ளவில்லை. நாம் கேட்கிறோம், தராசிலிட வேண்டிய தகுதி படைத்த தேசீத் தலைவர்கள், சி.ஆர்.ஆச்சாரியார், எஸ்.எஸ்.மூர்த்தியார், சீமான் எஸ்.எஸ்.ஐயங்கார் ஆக மூவர்தானா? இந்தத் தமிழகத்திலே, நூலில்லாத ஒருவர் கூடவா, அதற்குத் தகுதியுடையவல்ல!

டாக்டர் சுப்பராயன், நண்பர் நாடிமுத்து, தீரர் இரத்தினவேலுத் தேவர், நாச்சியப்பர், முத்துரங்கர், பக்தவச்சலம் என்ற தேர்தல் முழக்கிகள் பட்டி வருகிறதே, கவனமுண்டோ! அவர்களிலே ஒருவர் கூடவா தராசுக்கு ஏற்றவரல்ல! காங்கிரஸ் கூடாரத்திலே உள்ள தமிழ்த் தோழர்கள் இதற்குப் பதில் கூற வேண்டாமா?

தேசீயத்துக்கு மூவர் - பிரம்மம்! திருப்தி அடையவில்லை தராசு ஆரியர்!

பத்திரிகை ஆசிரியார்களிலே மூவர், மூன்றுவித அரங்கசாமிகள்!! டாக்டர் நாயர் என்றொருவர்கூட பத்திரிகையிலே எழுதுவார் என்பதும், அவருடைய தலையங்கங்களைக் கண்டு ஆங்கிலர் திகைப்பர். ஆரியர் இரகசியமாகப் படிப்பர் என்பதும தராசு ஆசிரியருக்குத் தெரியும். சர்.இராமசாமி முதலியாரின் ரசமான தலையங்கங்கள், தராசு ஆசிரியருக்கத் தெரியும். ஆனால் அவர்களைப்பற்றியெல்லாம் எழுதவா, அவர் எழுதுகோல் பயன்படுவது!! மற்றும் எத்தனை எத்தனையோ தமிழரகள் உண்டு. பற்பல துறையிலே விற்பன்னர்கள். ஆனால், தமிழர் எனற பண்டம், பார்ப்பனத் தராசு ஏறுமா?

அவர்கள் கூசாமல், குமுறாமல், தங்கள் வேலையைச் செய்கிறார்கள். அவர்களிடம் சிக்கியுள்ள தமிழர்கள், முகங்கோணாமல், முறிச்சீட்டில் கையொப்பமிட்டுவிட்டு அவர்கள் என் என்பதற்குள் எண்ணெயாக நிற்கின்றனர். இந்நிலையிலே, ஆரியத் தராச, ஆரியப் பண்டமன்றி வேறு எதை எதற்கும்? ஐயோ! காங்கிரஸ் தமிழா! கருத்தை இழந்தாயே! இது என்ன வாழ்வு!!

நாடு முழுவதும் கலங்குகிறது. பிரேத அடக்கத்தின்போது மந்திரிகள் கண்ணீர் சொரிகின்றனர். சர்ச்சிலும், அமெரியும், சாம்ராஜ்ய மணி ஒன்று போய்விட்டதே என்று சோகிக்கின்றனர். பஞ்சாப் கவர்னர் கல்லறை வரை வந்திருந்து மரியாதை செலுத்துகிறார்; சர்.சிக்கந்தரின் திடீர் மரணம் கேட்டு, சகலரும் திடுக்கிட்டுப் போயினர். பிணத்தையுங் கூடத் தராசு ஆசிரியர், தமது பத்திரிகையிலே எடைபோட்டுப் பார்த்துத்தான் தமது கருத்தைக் கூறியிருக்கிறார். படியுங்கள். சுதேசமித்திரன் சிக்கந்தர் மறைவு பற்றி எழுதியுள்ள தலையங்கத்தை.

சர்.சிக்கந்தர், தைரியமற்றவர்; ஏனெனில் சுயநலக்காரர்; தேச நன்மையை வளர்க்கவில்லை; பதவி மோகம் கொண்டவர்; வெறும் அரசியல்வாதி, அவர் மறைவு நாட்டுக்கு நஷ்டமல்ல.

இதுதான் தோழரகளே மித்திரனின் எடை! இவ்வளவு பச்சையாகவா சொன்னான் மித்திரன் என்று கேட்பீர்கள். டிசம்ப 28-ந் தேதி தலையங்கத்திலே வரும் பீழ்க்கண்ட வாசகங்களின் கருத்து என்ன என்பதை நீங்களே கூறுங்கள்.

நேர்மையில் நாட்டங்கொண்டவர்கள், மனிதத்தன்மையிலே அக்கரை கொண்டவர்கள், கற்றறையில் கேலி செய்யலாமா என்பதையும் கவனியுங்கள்.

எது சரியென்று தமக்குத் தோன்றியதோ அதைத் தைரியமாகச் சொல்லத் தயங்கினார் - இது மித்திரன் வாசகம். ஏதோ அதை தைரியமாகச் சொல்லப் பகிரங்கமாக வர்பறுத்துவது. தமது சொந்த நலத்திற்கு உகந்ததல்ல என்பதை அவர் உணர்ந்திருந்தார். இது மித்திரன் வாசகம். கருத்து என்ன? சர்.சிக்கந்தர் சுயநலக்காரர்.

தேசநலத்தை வளர்த்திருக்கக் கூடிய பல ஆரிய சந்தர்ப்பங்களை இழந்தார் - இதுவும் மித்திரன் மொழி. கருத்து யாது, நேசநன்மைக்காக காரியத்தை சிக்கந்தர் செய்யவில்லை.

பதவி விஷயத்தில் அவருக்குள்ள பிரேமை பற்றியும் சந்தேகத்திற்க இடமில்லை - இதுவும் மித்திரன் வாசகம். என்ன இதன் கருத்து? சர்.சிக்கந்தர் பதவி மோகம் கொண்டவர். இவை எல்லாம் வெறும் அரசியல்வாதிக்கு இருக்கக்கூடிய குணங்களையே காட்டுகிறது. இதுவும் மித்திரன். இதன் கருத்து என்ன? சிக்கந்தர் வெறம் அரசியல்வாதி.

தேசத்திற்கு ஏற்பட்டுள்ள நஷ்டத்தையோ அவர் எத்தகையவராயிருந்திருக்கக்கூடும் என்பதைக் கொண்டே மதிப்பிட வேண்டும். இது மித்திரன் மொழி. மருந்து என்ன? அவர் மரணம், நாட்டுக் கு ஒரு நஷ்டமல்ல. அவர் ஒரு அல்லாபக்ஷாகவோ, அபுல் கலாம் ஆஜாதாகவோ, நடந்து கொண்டிருந்தால், அப்போது நாட்டுக்கு நஷ்டம் அவர் மறைவால் என்று சொல்லுவோம் என்கிறார் மித்திரன். சர்.கே.வி.ரெட்டியாரின் மறைவின்போதும், இதைப் போலவே கேவி செய்தனர். சர்.சிக்கந்தர் விஷயமாகவும் அதுவே நடந்தது. ஆனால், மித்திரனை தமிழரும் முஸ்லிமும் ஆதரித்தும் வருகின்றனர். தமது இனத் தலைவர்களை, அவர்கள் மறைந்த பிறகு இழித்துப் பழித்துப் பேசும் ஈனச் சுபாவம் வெளிப்படையாகத் தெரிந்தும், தமிழரும் முஸ்லிமும், ஆரிய ஏடுகளை ஆதரித்துவந்தால் பிறகு ஏன், ஆரியம் தலைவிரித்தாடாது என்று கேட்கிறேன். என்றுதான், இந்த ஒரு இனமும் ஆரிய ஆதிக்கத்தை அறுத்தெறிவார்களோ!

(திராவிடநாடு - 03.01.1943)

# 1942 உலக வீரன்

அதோ வருகிறது சிகப்புப் பட்டாளம்! இனி செந்நாய்க் கூட்டத்தின் மண்டை சிதற சம்மட்டி அடி விழும்! நமது அடிமைச் சங்கிலிகள் தூளாகும், மீண்டும் சுதந்திரம், மறுபடியும் சோவியத் சுகந்தம் வீசும், வாழ்வு பரிமளிக்கும். பல வீரரை இழந்தோம், பண்ணை பாழனாலென்ன? ஸ்டாலின் இருக்கிறார், அவருடைய போர்த்திறமை நம்மை மீண்டும் விடுவிக்கும்.

ஜெர்மனியரிடம் பிடிபட்ட இடங்களிலே உள்ள ரஷிய மக்களின் நினைப்பு, பேச்சு இதுவே. ஒவ்வோர் ஜெர்மன் வெற்றியின்போதும், ஒழிந்தது சோவியத்சேனை, அதனை அழித்தாகிவிட்டது, என்று ஜெர்மன் பிரசாரகர் கூறுகின்றனர். ஆனால், மீண்டும் மீண்டும், "தீவிர எதிர்ப்பு" "பெரிய தாக்குதல்" "கோரமான போர்" நடந்தே வருகிறது. ஆத்திரமும் சலிப்புங் கொண்ட ஒரு ஜெர்மன் ராணுவ நிபுணன், "சோவியத் படை, பிரம்ம ராட்சசம்போல் இருக்கிறது. அதன் தலையை வெட்டிக் கீழே தள்ளத்தள்ள, புதுத்தலைகள் முளைத்துக் கொண்டே வருகின்றனவே" என்று கதறுகிறான். நச்சு நினைப்புக் கொண்ட அச்சு நாட்டினனே! சோவியத் மண்ணிலே நெளியும் புழுவும் போரிடும், பொதுமக்கள் வாழ, போக போகாதிகள் சிலருக்கும் பீடையும் பிணியும் பாட்டாளிக்கும் என்றிருந்த கொடுமையை அழித்தொழித்த அந்த வீரபுரியிலே, புல்லும் கல்லுங்கூடப் போர்க்குணமே காட்டும். அது வீரர்கள் உலகு! தொட்டால் துவளும் விஷியல்ல! இளித்தால் இணங்கும் இத்தாலியல்ல. சாமரமுங்கையுமாக நிற்கும் பிராங்கோ வாழும் ஸ்பெயினல்ல! லெனின் வாழ்ந்த நாடு, நெப்போலியனை விரட்டிய நாடு, அங்கு வீசும் கடுங்குளிர் காற்றுப்போல் உமது உடலையும் உயிரையும், சோவியத் மக்களின் போர்த்திறமை உறிஞ்சி எடுத்துச் சக்கைகளைச் சோவியத் களத்துக்கு எருவாக்கும். பொது உடைமை நாட்டுக்கு நாஜி இரத்தம் நீராகப் பாய்ச்சப்படுகிறது!

கடுங்குளிர்! விஷம் போன்ற காற்று! சோவியத் மக்களின் சோர்விலாத் தாக்குதல்! என்று இத்தாலிய ரேடியோ, அழுகிறது, சோவியத் செய்திகளைக் கூறுகையிலே.

ஸ்டாலின்கிராடுக்குள் ஜெர்மன் படைகள் நுழைந்துவிட்டன. இனி யாராலும் அவைகளை விரட்ட முடியாது என்று கூறின வீரன் விம்மிக்

கிடக்க வேண்டிய நிகழ்ச்சிகள் இப்போது நடைபெறுகின்றன.

பிடிக்க வந்த படை, பிடிபடாமல் தப்பினால் போதும், என்று திணறுகிறது. ஸ்டாலின்கிராட் போர்முனையிலே 60 மைல் ஓட்டம் - பின்புறமாக!!

கடந்த பதினைந்து நாட்களுக்குள், சோவியத் படைகள், 2000 சதுரமைல் விஸ்தீரணமுள்ள களத்தை எதிரியிடமிருந்து மீட்டு விட்டன.

கிழக்கே டான் நதி, வரனேஷ் ரஸ்டா ரயில்பாதை மேற்கே, வரனேஷ் ஸ்டாலின்கிராட் ரயில்பாதை தெற்கே, அமைந்த முக்கோண வட்டாரம் இப்போது ரஷியரிடம் பிடிபட்டுக் கொண்டது.

ஸ்டாலின் கிராட் பகுதியிலே இருக்கும் ஜெர்மன் படைகளைக் காப்பாற்ற விரைந்தோடி வந்த 6 ஜெர்மன் பட்டாளங்கள், தம்மைக் காப்பாற்றிக் கொண்டால் போதுமென்று ஓடுகின்றன புறமுதுகுகாட்டி! கொடோலினி கோவோ ரஷியரிடம் பிடிபட்டது.

இத்தகைய வீரதீரச்செயல் புரிந்து வெற்றிகள் பெற்று வரும் சோவியத் படைகளுக்கு, இப்போது, ஸ்டாலின், போர்த்திட்டம் வகுத்துக் கொடுத்து நடத்தி வருகிறார். அவருடைய யூகமும், திறமையுங் கண்டு நேசநாட்டுத் தலைவர்கள் அவரைப் பாராட்டுகின்றனர். சோவியத் வெற்றிக்கானவைகளைச் செய்ய, உதவ, ஒவ்வொருவரும் முன்வருகின்றனர். எந்த ஸ்டாலின், மதகுருமார்களின் ஆதிக்க ஒழிப்புக்கான புரட்சியிலே பங்கு கொண்டாரோ, எவர் மதவெறியைக் கொண்டு மக்களை மாக்களாக்கும் மதோன்மத்தர்களை மட்டந்தட்டினாரோ, எவர் பொதுஉடைமை நாட்டின் தலைவராக இருக்கிறாரோ எவர், போரில் வெற்றிபெற, இராணுவ முகாமமைக்கு வேண்டும், பாசறை அடைய வேண்டும், புதுப்படைகள் திரட்ட வேண்டும் என்பதை உணர்ந்து செய்து, மாதாக் கோயில் சென்று மணி அடித்துப் பரமண்டலத்திலுள்ள பிதாவுக்கு மனு அனுப்புவதைவிட, மக்களிடம் சென்று, எங்கள் சொத்து, சுகம், சுதந்திரம், மானம்

எனும் மதிப்பிடற்கரிய செல்வத்தை சுரண்டவரும் மாற்றானை ஒழித்து விடுக!” என்று வீரமொழி புகல்வது சரி என்றறிந்து அதைச் செய்கிறாரோ அந்த ஸ்டாலினுக்கு, நாத்திகனென்றும், நீசனென்றும், நிந்தனை செய்வோனென்றும், ஏசுவின் கருணையை இழந்தவரென்றும், மீளா நரகத்தில் விழ வேண்டியவனென்றும், தூற்றும், சபிக்கும், குருமார் கூட்டத்தைச் சேர்ந்த ஒரு கிராமக் குரு, சில ஆயிரம் ரூபிள்களை அனுப்பி போர்ச் செலவுக்குப் பயன்படுத்திக் கொள்க என்று கூறினார்! மதகுருமார் மட்டுமா, ஏசுநாதருங்கூட, அந்த இணையில்லா வீரனின் தீரச் செயலைக் கண்டால், ஆயிரங்களா, கோடிக்கணக்கில் ரூபிள்களை அவர் காலடியிலே கொட்டி “எடுத்துப் பயன்படுத்து போர்ச் செலவுக்கு” என்றே கூறுவார்! 80 டிவிஷன் ஜெர்மன் படைகள் அழியப்போகின்றன! ரஸ்டாவ் விழப்போகிறது! ஹிட்லர் மருளுமளவு நஷ்டம் ஏற்படப்போகிறது.

கிருஸ்தவ உலகிலே இன்று ஏசுநாதர் காண்பது என்ன? ஒரு கன்னத்தில் அறைந்தால் மறு கன்னத்தைக் காட்ட போதித்தவரின் கோட்பாட்டைத் தழுவிய மக்கள், ஒரு குண்டுக்கு ஒன்பது, என்று இரத்தத்திற்கு இரத்தம், கொலைக்குக் கொலை என்றுங் கூறிக்காரியத்தை நடத்தக் காண்கிறோம். ஸ்டாலின் நாட்டிலே, அதுவல்ல தத்துவம். பாடுபடு! பலன்பெறு! அந்த உரிமையை பறிக்க யார் வரினும், அவன் கையிலே ஜெபமாலை இருப்பினும் மெஷின், பீரங்கி இருப்பினும் அவன் யோகி என்றுரைப்பினும் மன்னாதி மன்னன் என்று கூறினாலும், அவனை ஒழி - என்பதே சோவியத் மக்களுக்கு லெனின் தந்த கட்டளை. அந்த லெனின் வழி வந்த வீரன், சோவியத் நாட்டை மீட்பதன் மூலம், உலகுக்குச் செய்யும் தொண்டு மகத்தானது. ஆகவேதான் டைம் என்ற அமெரிக்க பத்திரிகை “இந்த ஆண்டின் உலக வீரன்” என்று ஸ்டாலினை குறித்து எழுதிற்று. 1941ல் ரூஸ்வெல்ட்டுக்கும், 1940ல் சர்ச்சிலுக்கும் இப்பட்டம் தரப்பட்டது. வாழ்க ஸ்டாலின்! வெல்க சோவியத் படைகள்!

3.1.1943

# நீக்ரோஸ்தான் !

பலஹீனமாக இருக்கும் பாரிஸ்டர் சவர்க்கார், நாற்காலியிலே உட்கார வைக்கப்பட்டுத், தூக்கி வந்து மாநாட்டு மேடையிலே இருத்தினராம். பிறகு, அவர், அமர்ந்தபடியே, தமது பிரசங்கத்தைப் படித்தாராம். அந்த வீர கர்ஜனையைக் கேட்டீரோ என்று ஆரிய ஏடுகள் கலங்கலமாக எழுதியுள்ளன. தலைவரின் நிலையே தான் அந்தக் கட்சிக்கும். அவர் உடல்நலங்குன்றிக் கிடப்பது போன்றே இந்து மகாசபையுங் கிடக்கிறது; அவர் நடமாடச் சக்தியற்று இருப்பது போலவே, இந்து மகாசபையும் நாட்டிலே தலைகாட்டித் திரிவதில்லை; அவரைத் தூக்கி வந்து உட்கார வைப்பது போலவே, லீகுக்கு எதிரிடையான ஒரு கருத்தைக்கூற ஒரு ஸ்தாபனம் வேண்டுமே என்பதற்காக வடநாட்டு முதலாளிகள் இந்து மகாசபையைத் தூக்கி நிறுத்தியிருக்கிறார்கள். தலைவர் ஏட்டைப் படித்தது போலவே, சபையும் ஏட்டிலே பல எழுதிப்படித்துக் களித்துக் கிடக்கிறது. இவ்வாண்டு வைபவத்தின் போது, கங்கா ஜலமும் கன்னியாஸ்திரிகளின் கத்தி வீச்சும் இல்லைப் போலும்!

காட்சியிலே விசித்திரம் இராமற் போகவே, சவர்க்கார் தமது உரையிலாகிலும் விசித்திரம் இருந்து தீர வேண்டுமென்று கருதி "நீக்ரோஸ்தான் வேண்டுமென்று அமெரிக்காவிலே உள்ள நீக்ரோக்கள் கேட்டால் எப்படி அமெரிக்க சர்க்கார் அடக்கி ஒழிப்பார்களோ அதுபோல, இங்கு பாகிஸ்தான் கேட்பவர்களும் அடக்கி அழிக்கப்படுவார்கள்" என்று கூறுகிறார்.

பத்து நாட்களுக்கு முன் "பாகிஸ்தானை என் வாழ்நாளிலேயே காண்பேன்" என்றுரைத்த ஜனாப் ஜின்னாவின் மொழி, சவர்க்காரின் இருதயத்தை ஈட்டி போல் குத்தியிருக்கும். அந்த வேதனையினால், அவர் அவ்விதம் பேசினார். எனவே சீற்றம் பிறக்கவில்லை; மாறாகச் சிரிப்பே வருகிறது, இந்த இந்து சபைச் சிங்கம் புரியும் கர்ஜனை கேட்டு!

அமெரிக்காவின் ஆதி குடிகளாகட்டும் ஆப்ரிக்காவின் சொந்தக்காரராகட்டும், எஸ்கிமோக்காரராகட்டும், எந்த இனமும் தன்மானத்தையும் தன்னுணர்வையும் இழந்து விடாதபடி தடுக்க ஒரு தலைவர் கிடைத்தால், நிச்சயம் தன்னரசு பெறுவர். நீக்ரோக்களுக்கு நீக்ரோஸ்தான் தேவை தான்! அதைக் கேட்கும் உணர்ச்சி ஊற்று, வளமாக இருக்குமாறு செய்ய ஒரு தலைவரும் கிடைத்தால்,

நீக்ரோஸ்தான் கேட்பர், நாம் பாகிஸ்தான், திராவிட நாடு கோரிக்கைகளை ஆதரிப்பது போலவே, அதனையும் நிச்சயம் ஆதரிப்போம். எந்த இனமும் மற்றோர் இனத்தை அடக்கி ஆள்வதையோ, எந்த இடமும் மற்றோர் இத்தைச் சுரண்டுவதையோ நாம் கண்டிப்போம் - வெள்ளை - கருப்பு - பழுப்பு சிகப்பு - என்ற வித்தியாசமின்றி.

நீக்ரோக்கள், அமெரிக்காவிலே குடி ஏறின ஐரோப்பிய வர்க்கத்தாரால், அடிமைப் படுத்தப்பட்டு, தன்னுணர்வு அழிந்து போனதை உலகுக்கு நேரிட்ட மகத்தான நஷ்டமென்றே நாம் இன்றும் கருதுகிறோம். ஆளும் இனம் - ஆளப்படும் இனம் என்ற சொற்களே, அரசியல் அநாகரீகத்தை, அந்தகாரத்தை, அவதியை உண்டாக்குவனவாகும். இன்று கப்பலில் கஷ்டமான வேலைசெய்தும், மூட்டை தூக்கியும், முறி வேலை செய்தும், காடு மேடு வசித்தும், வாடும் நீக்ரோ மக்களின் நிலைமை கெட்டதற்குக், காரணம் அவர்கள் ஒரு நீக்ரோஸ்தான் பெறாததால்தான்! பரிதாபத்தைக் கிளர வேண்டிய இச்சம்பவம், கேலிக்கு உதாரணமாக சவர்க்காரால் எடுத்தாளப்படுவது, அவரது இன இயல்பையே காட்டுகிறது என்போம்.

உண்மையிலேயே, இங்குள்ள முஸ்லீம்களும், திராவிடர் களும், தத்தம் இனத்தினிடம், தன்னுணர்வு இருக்குங் காலத் திலேயே, உரிமைப்போர் நடத்தி, வர்க்கத்துக்கோர் வட்டாரம் பெறாவிட்டால், நிலை இழந்து கிடக்கும் நீக்ரோக்ககளின் கதியே ஏற்படும் என்று நாம் பன்முறை கூறியிருக்கிறோம்.

ஆனால், சவர்க்கார் இதை உணரட்டும். நீக்ரோக்களின் நிலைமைகண்டு, முஸ்லீம்கள், திராவிடர்கள், தமது கோரிக்கையைப் பன்மடங்கு மும்முரமாக வற்புறுத்தத் துணிவரேயன்றி, துவண்டுபோக மாட்டார்கள். இரு இனமும், இன்று அடைந்துள்ள எழுச்சியைக் கருத்துள்ளோர் தெரிந்து கொள்வர், கபோதிகள் அறியார். கபோதிகளின் கர்ஜனையை நாம் பொருட்படுத்த மாட்டோம்.

நீக்ரோக்களுக்குச் சமமாக, முஸ்லீம்களை, சவர்க்கார் மதிக்கிறார். அது அவரது இனமமதை. ஆனால் ஒன்று சொல்வோம், இந்துஸ்தானைவிட, நீக்ரோஸ்தான் மேலானதாகவே இருக்கும், ஆரியஸ்தானைவிட நீக்ரோஸ்தான் ஆயிரமடங்கு மேலாக இருக்கும். நீக்ரோதானில் சூது சூட்சி வஞ்சனைக்கு இடம் இராது! வீரருக்கு மதிப்பு இருக்கும்

வீணருக்கு ஆட்சி இராது. ஆயிரத்தெட்டுச் சாதிகளும் அநாச்சாரக் கருத்துகளைக் கொண்ட மதமும் இராது. புலி வேட்டையும் சிங்க வேட்டையுமிருக்குமே யன்றி, மேலுலகங் காட்டும் சூதாட்டமிராது. மனிதனை மனிதன் தொடக்கூடாது என்ற மடைமை, ஒரு மனிதனுக்கு மற்றோர் மனிதன் தாழ்ந்தவன் என்ற கொடுமை, ஒரு கூட்டம் வாழ மற்றோர் கூட்டம் பணத்தைக் கொட்டி அழவேண்டும் என்ற கொடுமை இராது.

சவர்க்கார், இதையும் உணரட்டும், பாகிஸ்தான், திராவிட நாடு, என்ற கோரிக்கைகளைப் பூர்த்தி செய்யாத வரையிலே இந்த உபகண்டத்திலே வேறு எத்தகைய "ஸ்தான்" அமைக்கப் பட்டாலும், அது நிலையாஸ்தானாகவே போகும். பீரங்கியும் விமானமும், கப்பலும் டார்ப்பிடோவும், 150 ஆண்டு அனுபோக பாத்யதையும், சாம்ராஜ்ய சக்தியுங்கொண்ட ஆங்கிலஸ்தானையே, உனக்கென்ன இங்கு இன்னமும் வேலை என்று கேட்கும் இக்காலத்திலே, காய்ந்த ஓலையும் கிழிந்த காகிதக் கட்டும், நெற்றியிலே பொட்டும், வைதீகக் கட்டுங் கொண்டுள்ள ஆரியர்கள், தங்கள் ஸ்தானுக்கு, மற்ற இனங்கள் அடங்கியிருக்க வேண்டுமென்று கூறினால், வீர இனங்கள், இணங்குவரா? அந்த மராட்டியப் பிராமணர், பீஷ்வாக்கள் காலத்தை மனதிலே வைத்துக் கொண்டு மமதையோடு பேசியிருக்கிறார். இது வேறுகாலம் விடுதலை வீரர்கள் விடும் கணை திக்கெட்டும் கிளம்பும் காலம். வஞ்சனை அழிந்துபட அறப்போர் நடக்குங் காலம் இறுதிப் போரின் ஆரம்ப காலம். இதையும் அவர் உணரட்டும்; பித்தத்தை விடட்டும்.

(3.1.1943)

# காலக்கண்ணாடி - பிரும்மதேஜஸ் !

என்னதான் சொல்லுங்கோ! நம்ம அரியக்குடியின் பிடியே பிடி! வைர ஜொலிப்பன்னோ! கமகம், அடாடா, அபூர்வம்! கிருதி என்ன பிகுவு, எவ்வளவு பாடாந்திரம். பக்க வாத்தியக்காரர் திணறின்னா போறா. அரியக்குடின்னா அரியக்குடிதான்.

எது எதுகளோ பாடறுதகளே, என்ன பிரயோஜனமென்னேன். போன வாரம் பாடினார் பாருங்கோ, பந்துவராளியிலே ஒரு பதம், ஆளை அப்படியே உருக்கிவிட்டுது ஒய்!

ஆமாம்!

கேட்டீரோ, பந்துவராளி பதத்தை.

கேக்கலே! நீர் சொல்றதே போதாதோ? அவர் பாட்டு சிலாக்கியமுன்னு சொல்ல வேண்டுமோ. பாடும்போது, முகம் எப்படிப் பிரகாசிக்கிறது தெரியுமோ?

பிரும்ம தேஜஸ், எங்கே போகும்?

மருங்காபுரி மகாதேவ ஐயருக்கும், பரமக்குடி பஞ்சநாத சாஸ்திரிகளுக்குமோ, அல்லது வேறு எந்த இரண்டு ஐயர்கள் சந்தித்துப் பேசினாலும், மேலே தீட்டிய உரையாடல்தான் நடைபெறும். ஒருவர் புகழ்வார். என்பர்மற்றவர் ஆம் என்பார். இன அன்பு, இராகபாவ தாளத்துடன், சதா நடைபெறும் அக்கிரகாரத்திலே, அக்ரகார விளம்பரத்துக்கு.

சித்தூர் பாட்டாமே, ரேடியோவிலே, சிட்டி! வாயேன் போய்க் கேட்போம்.

சித்தூர் சுப்பிரமணிய பிள்ளை பாட்டா, கட்டை சாரீரமப்பா, எனக்குப் பிடிக்காது. என்னமோ சரிகமரிகமப என்று சங்கீதம் பாடுவார். எனக்குப் பிடிக்காது.

உனக்கென்னடா தெரியும், அதன் சிலாக்கியம். காஞ்சிபுரம் நாயனாப் பிள்ளைக்கப் பிறகு, அபூர்வ கீர்த்தனங்கள், கனராகங்கள், தாளத் திறமையுள்ள ஜதிகள், வேறு யாரிடமிருக்கிறது. கர்நாடக சங்கீதம், வேறே யாருக்குத் தெரியும்?

அது என்னமோப்பா எனக்கப் பிடிக்காது. நான் வரவில்லை. இன்று, காமாட்சி கோயிலிலே ஒரு சிநேகிதனை வரச் சொன்னேன். போகணும்.

ஓஹோ! அப்படியா சங்கதி! நானுந்தான் வருகிறேன், வா, போவோம்.

சிட்டி, சதாசிவம், இருவரும் தமிழ் வாலிபர்கள். திராவிடத் தோழர் சித்தூர் சுப்பிரமணிய பிள்ளையின் சங்கீதத் திறமை பற்றி ணருவர் புகழ்வார். மற்றவர் மறுத்துப் பேசுவார். பிறகு இருவரும் வேறு ஏதேனும் காரியத்துக்கச் சென்றுவிடுவர். சித்தூரார் பாட்டை மறந்துவிடுவர்.

ஆரியர் உயர்வது ஏன்? தமிழர் தாழ்வது ஏன்? என்பதற்குத் தர்க்கம் வேண்டுமா? இந்தச் சம்பவம் போதாதா? அரியக்குடி என்றதும் ஆரியக் கூட்டம் ஒரே அடியாக ஆதர்க்கும். தமிழர், தராசு போட்டு நிறுத்து, தகதி திறமை பற்றி விவாதித்து, விவாதத்தில் விரோதத்தை வளர்த்து, முடிவில், தமிழரைக் கைவிடுவர்! இது என்று மாறும்?

(திராவிடநாடு - 03.01.1943)

திவான்ஜீ திருப்புகழ்

(ஊர் நிகழ்ச்சிகள், நினைப்புகள், நிலைமை ஆகியவற்றை நமது ஒற்றன் அவ்வப்போது வாசகர்கட்கு இனித் தந்து வருவார். அபிப்ராயம் அவருடையது!)

(சமீப காலத்துக்கு முன்பு திருவாங்கூரில் முதல் நீதிபதியாக (ஊறைக துரளவஉந) நியமிக்கப்பட்ட திருப்புகழ்மணி ஸ்ரீ டி.எம்.கிருஷ்ணசாமி ஐயர், முருகள் மீது பாடிய திருப்புகழ் போல், இப்போது திவான்ஜீ சர்.சி.பி.ராமசாமி ஐயர் மீது பாடுகிறார், என்ற ஒற்றன் தெரிவிக்கிறார்! அந்த திவான்ஜீ திருப்புகழைக் கீழே காண்க.)

(பாதி மதிநதி என்ற மெட்டு)

ஜாதி மதி நிறை ஜோதி மணி ஒளி

வீச அருள் செயும் குலநேசா

ஜாலமது மொழி மாது அயர்மகள்

பாதம் வருடிய படையாளா

கால முழுதுநம் கோல குல நெறி

மாய மறவாத மறையோனே

காதல் எனதிடம் காண இருவிழி

காட்டி அருள் செய்த கலைவானா

நாடுமுழுதுமே நானும் கதறினேன்

நாதம் செவிதனில் நுழைந்ததோ?

நமது இனத்தவன் நிதியில் இளைத்தவன்

நமதருள் பெறவென நவின்றோனே

சித்திரச்சோலை திருவிதாங்கூரும்

சத்திரம் நமக் காகாதோ

இத்தரை மீதில் எங்கிருப்பினும்
இனத்தைக் காத்திடல் முறைதானே!
வருவேன் நானுமே வழக்கு தாருமே
வறுமை தீருமே வடிவழகா
வந்தனம் என்ற தெந்தினம் பாட
வாயும் போதுமே வஷிஷ்டனே!
(அயர் மகள் - அயர்லாந்து மாதரசு அன்னிபெசண்ட்)

(திராவிடநாடு - 03.01.1943)

# முன்னாள் அமைச்சர் எம் . சி . இராசா அவர்கட்கு , பல்லாவரம் .

தலைவரே!

தாங்கள் இருக்கும் திக்கு நோக்கினாலும், தேசீயத் திருவவதாரம் சக்கரவர்த்தி ராசகோபாலாச்சாரியாருக்குக் குளிர் எடுக்கும். சட்டசபையிலே அவரது சாகசம், சமர்த்து, கோபம், விகடம் எனும் பல்வேறு கணைகளையும் தங்களின் ஆற்றல் எனும் கேடயத்தால் தடுத்தீர். அதை யெல்லாம் விட, இப்போது கொடுத்திருக்கிறீரே ஒரு சூடு, அடா, அடா, அடா, அருமை அருமை அருமை!! சபாஷ், ராஜா! உமது சமூகத்திலே, இத்தகைய சுயமரியாதை வீரர்கள் பெருகப் பெருக, பழங்குடி மக்களின் வாழ்வு உயரும் என்பதிலே சந்தேகமில்லை.

அலகாபாத் மாநாட்டுக்கு சர். சப்ரூ அனுப்பிய அழைப்பை ஏற்றுக் கொள்ள முடியாமைக்குத் தாங்கள் காரணம் காட்டிவிடுத்த அறிக்கையிலே, ஆச்சாரியாரைச் சரியாகப் படம் பிடித்திருக்கிறீர்கள்.

நந்தன் காலமுதற்கொண்டு தங்கள் காலம் வரையிலே, வேதியக்கூட்டம், பாடுபடும், பாதுகாப்புத்தரும், பழங்குடி மக்கட்குச் செய்துவரும் கேடு, காட்டும் அவமரியாதை, ஏடு கொள்ளாது.

அன்று ஆதனூர் வேதியன் "சிதம்பர தரிசனமா? நீ அதை சிந்திக்கலாமா?" என்று திமிருடன் கேட்டானே, நரம்பு முறியப் பாடுபட்ட நந்தனைப் பார்த்து, அதைப் போலவேதான் திருச்செங்கோட்டு ஆச்சாரியார், ஆதித்திராவிட சமூகத்தினிடம் உண்மையான அக்கரை கொண்ட உம் போன்ற தலைவர்களுக்கு.

"ஆட்சியிலே பங்கா, அடடா! ஆரியன், தருவேனா" என்று கூறினார்.

ஆதித்திராவிட இனப்பிரதி நிதிகளை அடங்கி ஒடுங்கி இருக்கச் செய்து, ஆலயப்பிரவேசத்துக்காகத் தாங்கள் கொண்டுவந்த மசோதாவையும் எதிர்த்து ஓட் அளிக்கச் செய்தார். எனவே, "எங்கள் சமூகத்துக்குக் கேடு செய்த" ஆச்சாரியார் வரும் அந்த அலகாபாத் கூட்டத்துக்கு நான் வாரேன் என்று தாங்கள் சர். சாப்ரூவுக்குப் பதில் அளித்த வீரத்தை நான்

பாராட்டுகிறேன்.

போலிச் செல்வாக்குப் புழுதி நெற்றியில்பட வீழ்ந்து வணங்கும் வீணர்கள், “ஆச்சாரியாரையா, இப்படிக் கூறுவது” என்று ஆயாசப்படுவர். அதைப்பற்றிக் கவலை கொள்ளாதீர்.

“என் சமூகத்தின் கட்டுப்பாட்டுக் குலைவுக்கும், அரசியல் சோகை நோய்க்கும், ஸ்ரீ. இராசகோபாலாச்சாரியாரே முக்கிய காரணம்.”

“ஸ்ரீ. ராசகோபாலாச்சாரியார், ஆதித்திராவிட சமூகத்தின் அரசியல் எதிரி” என்று தாங்கள் கூறியிருப்பது உண்மை உமது வீரம், வாசகங்களிலே ஒலிக்கக் காண்கிறேன்.

மற்றொன்று சொன்னீர், மிக முக்கியமானது. அலகாபாத் மாநாட்டில், தனக்குத் தென் இந்தியாவிலே போதுமான ஆதரவு இருப்பதாக ஆச்சாரியார் கூறுவார். அவர் இதுவரை, பார்ப்பனர், பார்ப்பனரல்லாதார், ஆதித்திராவிடர், முஸ்லீம், என்று பிரிவுபட்டுள்ள சமூகங்கள் கொண்ட தென் இந்தியாவிலே, அரசியல், சமுதாய ஒற்றுமை ஏற்பட ஒரு முயற்சியும் செய்யவில்லை என்று எடுத்துக் காட்டியிருக்கிறீர்கள்.

உண்மைதானே! இங்கு திராவிடத் தலைவர்கள், பழங்குடி மக்களின் பாதுகாவலர், இஸ்லாமிய ஏறுகள் இருக்க, இங்கு ஒரு கூட்டு எண்ணம் வளர்க்கச் சிறு விரலையும் அசைக்காத ஆச்சாரியார், அலகாபாத் போவது கேட்டு, நமது குறும்புக்காரக் குப்பன் கூவுகிறான், “கூரை ஏறிக் கோழி பிடிக்காதவன், கோபுர மேறி வைகுந்தத்துக்கு வழி காட்டுவது” போல இருக்கிறதே ஆச்சாரியாரின் செயல் என்று!

போலித்தனத்தின் மண்டையில் அடித்த உம்மை மனமாரப் பாராட்டுகிறேன்.

தங்களைப் பாராட்டும்,

திராவிடன்.

3.11.1943

# கல்லறை கண்டு கலங்காதீர்

டாங்கிகள் ஓட்டிச்செல்லும் வீரர்கள் கலக்கமடைந்தனர். பீரங்கிப் படையினர் பிரலாபிக்கின்றனர். பாசறையிலே உள்ள வீரர்கள், துடிக்கின்றனர்; எதிரியைக்கண்டன்று!

ஈராக், ஈரான், ஈஜிப்ட், துருக்கி ஆகிய பிறைப் பிரதேசங்களிலே உள்ளவர் மனம் குமுறுகிறது. குண்டு வீச்சினாலன்று.

லண்டன் பாராளுமன்றமும், பிரிட்டிஷ் போர் அமைச்சர் குழாமும் நீர் ததும்பும் கண்ணினராயினர். விஷப்புகை கண்டன்று.

கவர்னர் கலங்க, வைசிராய் விசனிக்க, மக்கள் மனங்குழம்ப, மகத்தான நஷ்டமென்று மந்திரிகள் அழலாயினர் - கல்கத்தா குண்டு வீச்சினாலன்று.

பத்துக்கோடி - ஏன் - பதினாலு கோடிக்கு மேற்பட்ட மக்களின் மனம் பற்றி எரிகிறது. அணைக்க முடியார் நெருப்பு அடிவயிற்றிலே புகுந்தது.

பம்பாயிலே, மலபார் குன்றிலே, மக்கள் மனதிலே ஒரு புதுக்கருத்தை மலரச் செய்த முடிசூடா மன்னன், ஜனாப் ஜின்னாவின் கண்களிலே நீர்த்துளிகள் சொரிகின்றன.

எதிரியின் பீரங்கி வேட்டுக்கும், இத்தாலிய சிறைக் கூடத்துக்கும், பாலைவனப் போருக்கும், சித்தங்கலங்காத சிங்கம், இஸ்லாமியத்தங்கம், ஷுகாத் அலிகான், இருதயத்தை எண்ணற்ற ஈட்டிகள் குத்துவது போன்ற கொடிய வேதனையிலே வீழ்ந்தார்.

பத்து மக்கள் - ஐவர் ஆடவர், ஐந்து மகளிர் ஐயோ! என்று அலறுகின்றனர். ஆற்றொணாத்துயரம். காலையிலே களிப்புக் கடலில் நீந்தினர், காதல் வெள்ளத்தில் புரண்டனர், உற்றார் உறவினருடன் உல்லாசமாக உரையாடினர். நள்ளிரவில், அவர்களைத் தீண்டிற்று நச்சரவு போன்ற செய்தி!

தந்தைக் கேற்ற தனயர்கள் என்று மொழிந்தோரும், தந்தை புலி!

மக்களோ பூனையல்ல! என்று கூறினோரும், அவரா மறைந்தார்! என்று அழலாயினர்.

மூன்று நாட்களும் முடியவில்லை அந்த மாளிகையிலே மணவிழா நடந்து. எங்கும் மலர்ந்த முகங்கள்! களிப்பை வீசும் கண்கள்! ஆனந்தம்! அவ்வளவும் அரை நொடியிலே போயிற்று. மணமக்கள் உலவிய மாளிகையிலே, பிணம் வீழ்ந்தது! அணைந்தது விளக்கு! அறுபட்டது! வீணையின் நாதம், அஞ்சா நெஞ்சன், அரசியல் நிபுணன் அமைச்சருலகின் அணியழகன், ஆற்றல் மிக்கோன், ஆங்கிலருங் கண்டு பொறாமை கொள்ளுமளவு அதிகார பீடங்களில் அமர்ந்து அரசோச்சியவன், ஐம்பதாண்டு வீரன், அடிக்கடி, தன் மக்களைக்காண, ஈராக், ஈரான், போர்க்களம் சென்று

வந்த தீரன், பாகிஸ்தான் பிறந்த லாகூர் நகரிலே, அமைச்சராக, முதலமைச்சராக, இருமுறை கவர்னராக, லீக் தலைவராக, ஜனாப் ஜின்னாவின் தோழராக, வீற்றிருந்த இஸ்லாமியக் கோஹினூரை மரணமெனும் மாபாவி, நள்ளிரவிலே, கொள்ளை கொண்டான்; எங்கும் துக்கம் கப்பிக் கொண்டது, எவர் மனமும் துடிக்கிறது. இஸ்லாமிய உலகுக்கு மகத்தான நஷ்டம். திராவிடர் ஒரு துணைத் தலைவரை இழந்தார். இந்த உபகண்டம், ஓர் உன்னத குணமுடைய தலைவரை இழந்தது. உலகின் மணிகளிலே ஒன்று மறைந்தது. என் செய்வது.

காலையிலே, கலியாணச் செலவுக் கணக்கைப் பார்த்தார், மாலையிலே நண்பர்களுடன் அளவளாவினார், இரு குமாரர்களுக்கும், திருமணம் முடித்தார். தமது குமாரிகளுக்கும் மணம் நடத்தி வைத்தார் - மகிழ்ந்தார் - இருட்டும் நேரத்திலே இருதயத்திலே வலி என்றார், மருந்துண்டார், மஞ்சத்தில் படுத்தார், மாரடைப்பால், கண்கள் மூடிக்கொண்டன, நள்ளிரவிலே அவர், நம்மைப் பிரிந்து, சென்றார் - மறைந்தார்.

சர். சிக்கந்தரின் எந்தச் செயலும், திடுக்கிட வைக்கும் விதத்தேயாகும்.

பஞ்சாப் அரசியலிலே அவர், பத்துப் படிகளை ஒன்றாகத் தாண்டுவது போல், விரைவாகச் செல்வாக்குப் பெற்றார், பலதிறப்பட்டோரை ஒரே படையினராக்கி, யூனியன் கட்சியைக் கண்டார், கூட்டு மந்திரிசபை

அமைத்து, அல்லாபக்ஷ் போல வார்தா வரத்துக்குத் தவங்கிடக்கவோ, வங்க முதலமைச்சர் போல் இந்துமகாசபையிடம் சிந்துபாடி நிற்கவோ இல்லை. சிக்கந்தரின் சித்திரக்கூடம் சின்னாட்களிலே சரியும் என்று ஆரூடம் கூறினர் அனேகர். அவரோ, அமைச்சராகவே, முதலமைச்சராகவே, மண்ணில் சாய்ந்தார்.

கடந்த ஜெர்மன் சண்டையின் போது அவர் ஒரு போர் வீரராகச் சேர்ந்தார். படையிலே ஒரு பிரிவுக்குத் தலைமை தாங்கினார்.

பாகிஸ்தானை அவர் எதிர்ப்பாரென்று கூறினர் அனேகர், அவரோ, ஜனாப் ஜின்னாவின் பாசறைக்குத் தளபதியாகவே கடைசிவரை நின்றார்.

லீக் தலைவரைக் கலக்காமல், வைசிராய், சர். சிக்கந்தரை, பாதுகாப்புக் கமிட்டியிலே அங்கத்தினராக்கிவிட்டார். லீக் தலைவர், வா! வெளியே! என்று கட்டளையிட்டார். ஒரு பக்கத்திலே இராசப்பிரதிநிதி, மறுபக்கமோ காயிதே அஃலம்! சர். சிக்கந்தர் தலைவரின் கட்டளையை ஏற்று, வைசிராயின் போக்கைக் கண்டித்து விட்டு, பதவியை ராஜிநாமாச் செய்து விட்டு, லீகிலே பிளவு கூடாதென்று கூறினார்.

அத்தகைய தலைவரை, இழந்தோம், என் செய்வோம்! லாகூர் நகரிலே உள்ள பிரபல பாக்ஷாயி மசூதியிலே, கவி இக்பாலின் கல்லறைக்கருகே, சர். சிக்கந்தரை அடக்கம் செய்யப் போகிறார்கள்.

கவி இக்பால், பக்கத்திலே சர். சிக்கந்தர், புரட்சிக் கவி ஒரு புறம் புன்னகை வீரன் பக்கத்திலே! அது லாகூர்! அந்த நகரம் பாகிஸ்தானில் இருக்க வேண்டாமா! மறைந்தவரின் மனதிலே கொந்தளித்துக் கொண்டிருந்த கருத்து அதுவல்லவா!

வீர முஸ்லீம் தோழர்காள், விம்ம வேண்டாம், அந்த இரு கல்லறைகளையும் கண்டு, காண இயலாதார் நெஞ்சினிலே கொண்டு, உறுதி கொண்டு, உழைத்துப், பாகிஸ்தான் பெறுமின்!

3.1.1943

# எவனோ தீண்டிவிட்டான் !

ஊர் ஜனங்கள் ஓடுகின்றார்கள். போலீஸ்காரர் மிரட்டுகிறார். குழந்தைகள் கிலி கொள்கின்றன. கிழங்கள் தலை அசைக்கின்றன. குளத்திலே மிதக்கிறது, சி சீசுவின் பிரேதம்! அதைக் கண்டே இத்தனை அமளி!

மூக்கும் முழியும் எவ்வளவு சுத்தம்! பவுன் நிறமாக இருக்கிறதே. பச்சைக் குழந்தையை இப்படிச் சாகடிக்க எந்தப் பாவிக்குத்தான் மனம் வந்ததோ? திருட்டுப்பிள்ளை பெற்றாலும் எங்காவது விட்டுவைக்கக் கூடாதா? திருக் குளத்திலே போட்டுவிட்டாளே, பாவி! என்று பெற்ற பிள்ளையைப் பிணமக்கினாலன்றி தன் மானத்தைக் காப்பாற்றிக் கொள்ளமுடியாத நிலையிலே வைக்கப்பட்டுள்ள எவனோ ஒருவனைத் திட்டுகிறீர்கள். ஊரிலே எத்தனையோ வதந்தி. பல விதவைக்ள் மீது சந்தேகம். கடைசியில் இன்னவள்தான் இக்கொலை செய்தவன் என்றம் தெரிகிறது. இளம் வயதுள்ள விதவை! எலுமிச்சம் பழம் போன்ற மேனி. யாரையும் ஏறெடுத்தும் பாராள். அவ்வளவு நல்ல சுபாவம். பரம்பரைப் பணக்காரர் வீடு. பாகவத சேவைக்காரர் குடி. பாவம் எப்படியோ தவறி விட்டாள். எவனோ தீண்டிவுட்டன். எப்படி எப்படியோ மறைத்தாள். கடைசியில் இந்தக் காரியம் செய்தாள் என்று பேசுகிறீர்கள், ஏசுகிறீர்கள். கண்ணால் குளத்திலே, விதவையின் வேதனையின் விளைவு மிதக்கக் கண்டீரே தவிர, கருத்திலே ஏதேனும் பாடம் கொண்டீரா! இல்லை! கொண்டார், விதவைக்ள் இன்னமும் விம்மிக் கிடப்பரா! விவேகங் காணோமே!

விதி விதி என்று பேசிவிட்டு, காரியம் கெட்டுவிட்டால், எவனோ செய்தான் சரி என்ற கை பிசைந்து கொள்கிறீர்கள். மதி என்ற ஓர் மாநிதி உண்டே, அதைக் கொண்டதுண்டா?

(திராவிடநாடு - 10.01.1943)

# கண்ணால் கண்டும் !

பகவான், வைரநாமம், கெம்பு ஸ்ரீ சூரணம் அணிந்து, அபயஸ்தங்களில் நவரத்ன இழைப்பு வேலைப்பாடுகளும், இடையில் தங்க அரைஞாணும், மார்பிலே தங்கப் பூணூலும், விதவிதமான ஒளிவீசும் ஆபரணங்களும் அணிந்திருக்கக் கண்டு, சடாரி சாய்க்கும் ஐயரின் காதிலே வைரக் கடுக்கன் ஜொலிப்பதையும், சஹஸ்ரநாம அர்ச்சனை செய்யும்போது, மலரை வீசும் கரத்திலே டால் அடிக்கம் மோதிரத்தையும், வெள்ளிவட்டிலில் பகவத் பிரசாதத்தையும் கண்டு, பக்தி ரசத்தை உண்டு, வெளியே வருகிறீர்கள். ஒரு சை, உலர்ந்த உதடு, ஒடிந்துபோன கால், ஈமொய்க்கும் புண், ஈளை கட்டிய குரல், ஏங்கித் தவிக்கும் உருவம் கோபுரவாயிலியே குமுறிக் கையை நீட்டி, மகராசா என்று உங்களைக் கூப்பிடக் காண்கிறீர்கள்! உள்ளே, உலக ரட்சகர், ஒய்யார உடையுடன், சிங்கார நகையுடன், சீமானாக இருக்க, அவன் படைப்பிலே ஒன்று சீந்துவாரற்று, செத்திட நேரமின்றி பிச்சை எடுத்திடக் காண்கிறீர்கள். அவன் ஜோதியை உள்ளே கண்டீர்கள். அவன் ஆலய வாயிலிலே, சோக ஜெகத்தின் சேதியைக் கூறம் பராரியைக் கண்டீர்கள். கண்ணால் கண்டும், என்ன செய்தீர்கள்? கருத்துக்கு ஒரு விநாடியாவது வேலை கொடுத்தீர்களா? கொடுத்திருந்தால், உலகு இப்படியா இருக்கும்?

உள்ளே இருக்கும் ஓங்காரச் சொரூபம் கல்லார்க்கும் கற்றவர்க்கும் களிப்பருளும் களிப்பு! வெளியே, முன் பாயிலே உருளுபவன், வேதனயில் புரள்பவன், சோற்றுக்குத் தாளமிடுபவன், கண்டது என்ன? தன்னைப் பிறப்பித்து, இக்கதியில் விட்ட தந்தையின் அரண்மனை வாயிலிலே அவன் அடி மூச்சுக்குரலால் அழுகிறான். அந்தச் சத்தம் உங்கள் காதிலே விழுந்து என்ன பலன் உண்டாகிறது?

(திராவிடநாடு - 10.01.1943)

# அடுத்த வீட்டு அகிலாண்டம்

அடுத்த வீட்டு அகிலாண்டம் கட்டிக்கொண்ட தாலி எட்டாம் மாதம் அறுக்கப்பட்டது. அவளை மணந்தவருக்கு இருமல் வியாதி என்று ஊராருக்குத் தெரியும். ஆசாமி மெத்த இளைத்து, மேனி கருத்துத் தள்ளாடி நடந்து, தடி தூக்கி நின்றான் என்பது கண்ணால் கண்ட காட்சி. ஆனால், ஜாதகம் பார்த்த ஐயர், ஜாம் ஜாமென முடிக்கலாம் முகூர்த்தத்தை. ஜாதகப் பொருத்தம் பேஷாக இருக்கு. பெயர் ராசிக்கும் பார்த்தேன் பூவைத்தும் கேட்டேன்! என்று கூறினார். கலியாணம் முடிந்தது. களிப்புக் கொஞ்சம் ஆடிற்று. அதனால் களைத்தார், நோயாளி மாப்பிள்ளை. சனிக் குற்றமென்றார் ஐயர். விளக்கேற்றிப் பார்த்தார்கள். வீண் சிரமமே கண்ட பலன்! விண்ணுலகம் சென்றார் வயோதிகர். விம்மி விம்மி அழுகிறாள் விதவை. இதைக் கண்டீர்கள் கண்ணால். எத்தனையோ பொருத்தம் பார்த்தாரே ஜோதிடர், எல்லாம் என்னாயிற்று என்ற கருத்துக்குச் சிறிது வேலை கொடுத்தீரிகளா! இல்லை! உங்கள் வீட்டிலே மகனுக்கோ, மகளுக்கோ முடி ஏற வேண்டுமென்ற எண்ணம் பிறந்ததும், கூப்பிடு ஜோதிடரை என்கிறீர்கள். முன்பு பார்த்தது என்ன ஆயிற்று என்ற கேட்டீர்களா! கண்ணால் கண்டீர்கள், கருததிலே தெளிவு கொண்டால்தானே கேட்பீர்கள். அதுதானே இல்லை. ஐயோ தோழரே!

ஐயர் பார்த்த ஜோதிடம் அவருக்குத் தட்சணை தந்ததேயன்றி, ஜோதிடம் கேட்டவருக்குப் பலன் தரவில்லையே என்று யோசிக்கிறீர்களா? இல்லையே. வழியிலே குழியிருப்பது தெரிந்தும், அவ்வழி நடப்பவனை, வழியற்றவன் என்றுரைப்பர். உங்களின் கருத்து குருடானதைக் கூறினாலோ கடுங்கோபங் கொள்கிறீர். தெரிந்தும் தெளிவு கொள்ள மறுக்கிறீர்?

(திராவிடநாடு - 10.01.1943)

# சிவநேசர்கட்கு !

(கும்மி மெட்டு)

கேளடி, மாதரசி! ஒரு சேதியைக்
கேட்டுக் களித்துக் கூறிடடி!
நூறைந்து பேர் அவர் கூடினரே
அங்கு நீறு மிகப்பூசி நிற்னரே.

பூசியது திருநீறு தாண்டி! ஆனால்
புதுமையாய்க் கண்டது என்னமோடி!
மாலைகளணிந்த மாதேவனடியார்கள்
மாநிலத்தால் குறை தீர்த்தாரோடி?

பேரறிவாளரடி பெயர் கேட்டாலே பேசாயடி எதிர்த்து நீ தான்
மாமதி மிக்கவர் ஆகுமடி அவர் மன்றத்தில் பேசினர் மதுரமடி

கேட்டால் மதுரமிருக்குமடி கண்ணே ஏட்டில் இனிக்கும் கரும்பேயடி
அது நாட்டினர் ருசித்திட ஆகுமோடி பெண்ணே
நவில்வாயடி அதை ஈண்டு முன்னே?

என்னடி ஏதேதோ பேசுகிறாய்
அவர் என்னென்ன கண்டவர் தெரியுமோடி?
பசுபதி பாசம் அறிந்தாரடி அவர்
பரமன் மொழி பாடி மகிழ்ந்தாரடி.

பசுவுக்குப் புல்லில்லை நீருமில்லை

அது பதைப்பது பதிக்குத் தெரிவதில்லை பாசமும் மிகப் பாழ்பட்டதோ அதை

பகருவாயே பசுதோகையானே?

மற்ற மதமென்று எண்ணாதேடி

இது மாமுனிவர் கண்ட சைவமடி

மெத்த உயர்வுகள் உள்ளதடி

இதில் மேதினியின்மதி ததும்புமடி

ததும்புமடி தங்காய் துதும்புமடி

தரித்திரமே எங்கும் கண்ட பேர்கள்

தயாபரன் பட்டமும் குட்டி நின்றோன்

தலைமறைந்த சேதி கேட்பாரன்றோ?

முந்தி அவர் செய்த மூள்வினையினாலே

மூழ்குவார் கஷ்டத்தில் தெரியாதோடி?

பக்தியுடன் சிவ சக்தியைத் தொழுதிடின்

முக்தி பெறுகுவர், மூலமிதே

முநதி எது பெண்ணே, பிந்தி எது?

மூளும் வினைகளும் ஏதடியோ?

அன்றும் இன்றும் என்றும் அவனருளே யன்றி

அணுவும் அசையாதாம் கேளாயடி.

நாத்திகம் பேசுகிறாய் நங்கையே நீ

பொல்லா நாட்களினால் நைந்தாய் தங்கையே நீ

பாழ்படும் புத்தியை நீக்கிவிடு

அந்தப் பார்வதி லோலனைப் பணிந்து தேடு.

உள்ளதை இரைப்பது நாத்திகமா?

அவர் உளறிட உம் எனல் ஆத்திகமோ? ஏட்டுச்சுமை தாங்கிக் கூட்டத்தினர் இங்கு நாட்டின் குறை போக்க வருவாரோடி

எத்தனை சாமிகள் எங்கெங்கு சாமிகள் எட்டி நடக்க இடமுமில்லை

எத்துணை தத்துலம் போதனைகள்

இவர் எடுக்குறார் படிக்கிறார் நித்தநித்தம்.

பாரிலே மற்றையோர் பண்பட்டனர் பரங்ககில் ராச்யம் அமைத்திட்டனர்

பரந்த நம் ராச்யம் பூச்யமானது

பாழான போதனை படித்ததாலே

அற்புதமென்பார் அரோகரா என்பார்

ஆலயமில்லா ஊர் பாழமென்பார்

ஆலவாயப்பன் அருள் இது என்பார்

ஆலாய்ப் பறக்கும் மக்களெதிரே.

பேதங்கள் பீடைகள் போக்கிடவோ

அந்தப் பெரியார்கள் முன் வரமாட்டாரடி

ஆமை இயல்பினர் அல்லவோடி அவர்

ஆயிரங்கற்றும் ஆவ தென்னடி?

கும்மி மெட்டிலே அஇப்பாட்டை அமைத்துள்ளேன். இரு பெண்கள் பாடுவதாகப் பாவனை ஒரு பெண் கேட்க மற்றவள் பதில் கூறுவதாக உள்ள நடை இது. சீர்காழியிலே நடைபெற்றதே, சைவ சித்தாந்த மகாசமாஜ மாநாடு, அது குறித்து இரு மாதர்கள் வாக்குவாதம் நடத்திய முறையிலே எழுதினேன். இதைப் பிசுரிக்கப் போகிறீரா இல்லை அந்த நீறுபூசிகளுடன் சேர்த்து கொண்டு, சிவவிவாவென்று காதுகளைப் பொத்திக் கொள்ளப் போகிறீரா என்று வீரன் கேட்டான். மறுபடியும் பாடலைப் படித்தேன் சிரித்துக கொண்டே வீரா! இரண்டு திருததங்களுடன் வெளியிட... என்று இழுத்தேன். இரண்டென்ன இருபத்தேழுகூட இருக்கட்டும். விஷயம் மட்டுமு சுடச்சுட வெளிவர வேண்டும். என்ன திருத்தம் சொல்லு கேட்போம் என்ற வீரன் கேட்க, நான் சொன்னேன். 12-வது பதிகத்திலே, அவர் உளறிட என்று இருப்பதை அவர் உரைத்திட என்றும் அதிலேயே சுமைதாங்கி என்றிப்பதைச் சுவைதாங்கி என்றும் திருத்த வேண்டும். இல்லையானால் நம்மைச் சிற்றினம் பேய்க்குரல் என்று சில கனல் கக்கிகள் கூறும் என்றேன்.

சரி! விஷயம் வெளியாகட்டும். சீயாழிப் பதியிலே கூடிய சிவநேசச் செல்வர்கள். செல்லரித்த ஏடுகளைக் கட்டி ஆழட்டும். ஆனால் பகுத்தறிவுப் பலகணியைத் திறக்க வேண்டோமோ என்று கேட்டுவிட்டு வீரன் போனான். பிறகு நான் சீர்காழி சைவசித்தாந்த மாநாடு சம்பந்தமான நிகழ்ச்சிகளைப் பார்த்தேன். சித்தஞ் சோர்ந்தேன். ஆண்டு தோறும் கூடி அம்மையப்பனின் அருளை நாடி அரனடியைத் தேடிடும் அந்த அன்பர் குழாம். ஆத்திகத்திலும் அறிவு உண்டு என்பதையாவது நிரூபிக்கக்கூடிய சொல் பேசி, செயல்புரியக் கூடாதோ என்று சோகித்தேன். புலமையும் அனுபவமும் நாவன்மையும் சீலமும் கொண்ட அப்பெரியார்கள் மக்களுக்கு வழிகாட்டு வோராக வேண்டாமா? மூர்மார்க்கெட் மனப்பான்மை அவர்களைவிட்டு ஒழி வேண்டாமோ? பழமை - பழமை - பழமை - அதிலே துருவித் துருவிப் பார்த்துக கிடப்பதைவிடத் துயருற்று. மனதைக் குழப்பிக் கொண்டுள்ள மக்களக்க அறிவூட்ட முன்வரலாகாதா? ஏன் இவர்கள் தமது ஆற்றலை விழலாக்குகின்றனர் என்று விசனித்தேன். சைவத்தை அலசிப் பார்த்துச சித்தாந்தத்தைச் சிதைத்துச சாறு பிழிந்தெடுத்துக் காலந்தள்ளுவதைவிட, ஒழுக்கமே மதம் - ஒழுக்கம் இவ்விதத்தது - என்று திட்டமாகக் கூறி, இவர்கள் தமது முத்திரையைப் பொறித்திடலாகாதா? சைவம் என்றால் என்ன? என்ற கேட்டாலோ, சண்டமாருதமெனக் கிளம்பி, சிவஞானர் செப்பியது. திருமூலர் திருவாய் மலர்ந்தருளியது என்ற ஏடுகளை

வீசுகின்றனர். சாதியைச் சைவம் ஒப்புக்கொள்கிறதா? என்று கேளுங்கள் ஒரு சைவரை! சாதியா? இல்லையே! சைவத்திலே சாதியா? பாலிலே விஷமா? சிவ! சிவ! என்று கூறுவர். வீட்டிலேயோ சாதி தாண்டவமாடும். நாட்டிலே உள்ள சாதி பேதத்தைப் போக்கவோ சிறு விரலும் அசையார்.

அன்புதானே சிவம் என்ற கேளுங்கள் ஆமாம்! அன்பு வேறு சிவம் வேறு என்றுரைப்பர் அறிவிலார். அன்பே சிவம். மலருக்கு மணம்போல் உள்ளதப்பா அது என்று உருக்கமாகப் பேசுவர். அவர்கள் அணிந்துள்ள அந்தத் தங்க ஓடு போர்த்துக்கொண்டுள்ள உருத்திராக்க மாலைக்கு வாயிருந்தால் சொல்லும் அன்பின் யோக்யதையை! சமணரிடம்ன காட்டிய அன்பு தெரியாதோ என்று கேட்கும்.

சைவம், பல தெய்வ வணக்கத்தை ஆதரிக்குமா? என்று கேட்பின், சிவநேசச் செல்வர். முழுமுதற் கடவுளை மட்டுமே ஏற்கும் சைவம் என்று கூறுவர். ஆனால், மரத்தடிப் பிள்ளையாருக்குத் தோப்புக்கரணம் போடுவதை நிறுத்தமாட்டார். மலையுச்சி முருகனுக்கும் துபதீபம் நடத்துவார். தேவி பூசையும் விடமாட்டார். தத்துவம் வேறு. நடைமுறை வேறு இருக்கம். இதை மாற்றச் சிவநேசச் செர்வர்கள் தமது மாநாட்டிலே என்ன செய்தார்கள். வந்தவர்கள் தத்தம் புலமையைக் காட்டிப் புன்சிரிப்பூட்டிப் போயினரேயன்றி, நாட்டுக்கும் காலத்துக்கும் ஏற்றதான திட்டமென்ன செய்தனர் என்ற கேட்கிறேன். வீரன் நையாண்டி செய்கிறான். செய்யாமல் இருப்பானோ இவர்கள் செய்த காரியம் கண்டு.

அன்பே சிவமெனக் கண்டவர்கள், எம்மதத்தின் சாரமும் சைவத்திலே இருப்பதாகக் கூறுபவர்கள். சைவத்தைப் பரப்பும் நோக்கத்துடன் எழுதப்பட்ட ஆபாசக் கதைகளைக் கொளுத்த வேண்டாமா. அந்த மாநாட்டிலே. சமணர்கள் இருக்கும் திக்க எலாம் நோக்கித் தெண்டனிட்டுச் சைவத்தை அன்பு நெறியென்று கண்டோம். அன்று உமது மதத்தை ஒழிக்க, உம்மவரைக் கழுவிலேற்றினதற்காகக் கண்ணீர் விடுகிறோம்; கை கூப்பித் தொழுகிறோம், மன்னிப்புப் பெறுகிறோம் என்று கூறவேண்டாமா?

சைவம் என்றால், இதைக் கொள்வது இதைத் தள்ளுவது என்ற வரையறை இருத்தல் வேண்டாமோ. அதைச் செய்யச் சமாஜிகள் ஏன் முயலவில்லை என்று கேட்கிறேன். என்னைப் பால். என் அழகைப் பார்

என்று பிரதாபன் கூறுவது போல, ஈரேழு பதினாலு லோகத்திலும் எமது சைவத்துககு இணை ஏது? என்று கூறுவதற்குத்தான், புலமை மிக்கவரும் பெரு நிலக்கிழாரும் கூடிப் பேசினரா என்று கேட்கிறேன். உலகம் மாறுகிறது. இவர்கள் உறங்குகின்றனர்!! சைவத்திலே ஆரீயர் ஆதிக்கம் இருப்பதை இன்றைக்குப் பதினாறாண்டுகட்கு முன்பே சிவாலயங்களிலே கமார்த்தக் கலப்பு இருப்பது பற்றிச் சைவசீலர் தமிழறிவாளர் தேழர் கா.சுப்பிரமணிய பிள்ளை ஏழுதினார்கள். என்ன பலன் கித்தது? இவ்வளவு சைவம் பேசிப் பசுபதி பாசவிளக்கமாற்றி, திருமுருகாற்றுப் படையை உருப்போட்டு உள்ளமுருக்கும் குரலிற் கூறினாலும், கட்டுக்கட்டாக நீறணிந்து குண்டலம் அச்தாடக் கோலமாய் உருத்திராக்கமாலை புரள வெளிவந்ததாலும், இச் சைவர்கள், முப்புரிகள் முன்னம் சூத்திரர்தானே! முப்புரி மூலவனைத் தொட்டுப் பூசிக்க, இச் சைவர்கள் எட்டி நின்று எழுசீரடி பாடி இறைவா போற்றி! இமையவனே போற்றி போற்றி என்று கூவிக் கிடக்கத்தானே நிலை உளது. சமுதாத்திலே உள்ள சாக்கடை இவர்கள் கண்முன் தென்படவில்லையா?

மார்டின் லூதர் செய்த மாபெரும் மதப் புரட்சி கிருஸ்துவத்தைக் கருக்கிவிடவில்லை. ஏன் இச் சைவர்கள் மட்டும் கிடைத்த எந்த ஏட்டுக்கம் பொருள் புகுத்தத் தத்துவம் நுழைக்க முன்வருமனவு தைரியமாகச் சைவத்தைச் சீர்திருத்த முன்வர மறுக்கிறார்கள். தொட்டால் சிணுங்குவானேன்? கேட்டால் கோபிப்பதேன்? கண்டனம் பிறந்தால் கதறுவது எதற்கு? இவ்வளவு மூடுபனியிலே எத்தனை காலம் தங்கியிருக்க முடியும்? அன்பே சிவமானால், அன்பை வளர்க்கப் பாடுபடுவதுதானே சைவர் கடமை, வேறு எதற்கு? அன்பு வளர, அறிவு வேண்டும். பேதம் ஒழிய வேண்டும். ஆதிக்கம் செய்வோர் அழிய வேண்டும். வறுமை போக வேண்டும். வாட்டம் தீரவேண்டும். ஒருவரைச் சுரண்டினால்தான் மற்றவன் வாழ முடியும் என்ற முறையிலே உள்ள அமைப்புகள் மாறவேண்டும். அன்பு அப்போதுதான் வளரும்; அதைச் செய்ய, நாடெங்கும் கோயில் ஏன்? அங்கு கொட்டு முழக்கும் கூத்தும் ஏன்? அதைக் காட்டிப் பிழைக்க ஒரு ஆரியக் கூட்டம் ஏன்? அது கட்டிவிட்ட கதைகள் ஏன்? ஆறுகாலப் பூசையும் அபிஷேக விசேடமும் ஏன்? அன்பு வளர இவை அவசியமா? அன்றி ஆலயங்களிலே அடைபட்டுள்ள பொருளை, வறுமை போக்கும் வளமான திட்டங்கட்குச் செலவிடல் முறையா என்பது பற்றிச் சிவநேசச் செல்வர்கள் சற்றே சிந்திக்கலாகாதா? என்று கேட்கிறேன்.

ஏன் சத்தம் அவர்கள் செவிபுகுமோ, புகாதோ, நானறியேன்.

# சேலம் வாரீர் !

வந்துவிட்டார்கள் விதண்டாவாதக் காரர்கள்; வாயை மூடிக் கொள்வோம்! சுயமரியாதைக்காரர்களா? அவர்களிடம் பேசி, யார் மீள முடியும்?

நாயக்கர் கூட்டமா? அதுகள் எதுவும் இல்லை என்று கூறுமே.

அடே! யார் நீ? சு.ம.வா? மதத்தைத் தூஷிக்காதே; பெரியவர்களைக் கண்டிக்காதே; சாத்திரத்தை இகழாதே; சாமியைக் குறை கூறாதே!

நாட்டிலே பதினைந்து ஆண்டுகளுக்கு மேலாக, மேலே துட்டப்பட்டுள்ள ஆத்திர அலறல் கேட்கப்பட்டு வருகிறது. ஒரு சிறு கூட்டத்தின் சிந்தனை, சொல், செயல், பெரியதோர் புரட்சியை உண்டாக்க முடியும். உறுதி படைத்த இலட்சியவாதிகளின் உண்மை உழைப்பு ஊராள்வோரையும் ஊராள்வோரின் குரு பீடங்களையும் மிரட்சி கொள்ளும்படி செய்ய முடியும் என்பதைச் சுயமரியாதைக் கூட்டம் காட்டிவிட்டது.

சுயமரியாதை இயக்த்தின் தோற்றம், வைதிக வல்லரசின் பீடத்துக்கு ஆட்டம் கொடுத்துவிட்டது. எங்கும் எதிர்ப்பு! எவரும் கண்டித்தனர்! அரசாங்கமும் தனது கண்களை அகலத் திறந்தது.

திரை மறைவிலே திருவிளையாடல், பூசி மெழுகிப் புன்னகை புரிதல் என்பன அறியாத, போர்க்குண இளைஞர்களைப் படை எடுத்தார்.

## பிரட்சி பூத்தது

சனாதனிகளின் சீற்றம், முதலாளிகளின் மோதுதல், தர்ப்பா சூரரின் தாக்குதல், பண்டிதர்களின் பதட்டம், பாமரரின் பதைப்பு, காந்தீயக் கூட்டத்தின் கனல் எனம் பல்வேறு பாணங்கள் சு.மு. படை மீது பாய்ந்தன. பீறிட்டு வெளியே வரும் இரத்தத்ததைத் துடைக்கக் களத்தே உள்ள வீரனுக்க நேரம் ஏது? அது போலவே, தூற்றல்களைக் கண்டு துயருறவோ, துடிக்கவோ நேரமின்றி, சுயமரியாதை இயக்கம்,

பழமையைச் சாடி, வைதிகத்தை வாட்டி, எதேச்சாதிகாரத்தை எதிர்த்துப போரிட்டது; பழமை மிரளக் கண்டது.

ஏன் என்ற கேள்வி எங்கும் முழங்கக் கேட்டனர். வைதீகர்கள், வைகுந்தநாதனை வேண்டினர். இவர்களின் வாய் மூட வழி இல்லையா என்று; கைலாயநாதனிடம் காவடி தூக்கினர், நெற்றிக் கண்ணால் சுட்டெறியும் இந்த நீசர்களை என்று. அந்த நாதர்களுக்கு என்னென்ன வேலை இருந்ததோ நாமறியோம். எவரும் சுயமரியாதைக்காரரிடம் வந்து நின்றதுமில்லை, வாய் அடைத்ததுமில்லை!

சுயமரியாதைக்காரர்களின் உழைப்புப் பலனளிக்காமலும போகவில்லை. சேரி சீறுவதும், அக்கிரகாரம் அழுவதும், பூசுரர் பார்ப்பானானதும், சூத்திரன் தமிழனானதும், புரோகிதனின் கெம்பீர நடை தள்ளாட்டமானதும, புராணீகனின் குரல் மங்கினதும, தத்துவார்த்தங்க கூறுவோர் தடுமாற்றமடைந்ததும், எதனால்? சடங்குகளைச் செய்வதிலே பெருமை கொண்டிருந்தவர்கள் இன்று ஒழிக்க முடியவில்லையே, பழக்கமாகிவிட்டதே, படிப்படியாகத் தானே நீக்க முடியும் என்ற பக்குவமாகப் பேசிச் சமாதானங் கூற முன் வருவது எதனால்? நீறு பூசி, நிகண்டு தூக்கி, நாமநெற்றி எனும் வேடமிடுவோரின் எண்ணிக்கை குறைவதன் காரணம் என்ன? பொதுவாகவே, வைகித்தின் ஆட்டம் ஓரளவு ஒடுங்கக் காரணம் என்ன? சுயமரியாதைக்காரனின் சளையாத உழைப்பு வைதிக அச்சு முறிந்து, சனாதனச் சக்கரம் சாய்ந்துபோனதன் காரணம், சுய மரியாதைக்காரன் அனுபவித்த மண் கல் வீச்சு, கால முழுவதும் சொல்லடிபட்டுச் சோர்வின்றி உழைக்கும் தலைவரின் தளரா ஊக்கம் இவைகளே! விதவைகளின் துயரம் துடைக்கப்பட்டது. கலப்பு மணம் ஓங்கிற்று. கபோதிகள் காணலாயினர். ஊமைகள் உக்கிரமாகப் பேசினர். புரட்சி மனப்பான்மை தாண்டவமாடிற்று. சமுதாயத்திலே சரியானதோர் புரட்சி துருக்கியிலே முஸ்தபா கமால் பாட்சாவும், சைனாவிலே சன்யாட் சென்னும் செய்தது போன்ற மாறுதல், இங்கு ஏற்படத் தொடங்கிற்று.

வந்தது விபத்து!

ஆனால், வந்தார் வர்தா முனிவர். நமது முயற்சியை முறியடிக்க முகாம் அத்தார். உள்நாட்டுக் கொள்ளைக்காரரை ஒழிக்க முனையும் நேரத்திலே, வெள்ளைக்காரன் மீது படை எடு என்று பேசி, நேரம் நினைப்பு சக்தி யாவும் பாழாக வழி செய்தார். சுதர்மம், இந்து மார்க்கம்,

ராமராஜ்யம், கீதோபதேசம், பாரதமாதா, வந்தேமாதரம் எனும் கற்பனைகளிலே மக்களை உலவ வைத்தார். அவர் மகாத்துமாவானார். அந்தராத்மாவின் தோழரானார். மக்களோ, வைதிகத்தின் எடுபிடிகளாயினர். வர்ணாசிரமத்தின் வலாயினிர். வளைத்தனர். அடிமை மனப்பான்மை கொண்டனர். வெளி நாடுகளிலே, சமதர்ம உணர்ச்சியைச் சாய்க்கத் தெசிய இயக்கம் கிளம்பியதை அறிவாளிகள் மறுக்கார். இங்கு பதுத்தறிவு இயக்கம், புரட்சி உதயம், காந்தீயத்தால் ஒடுக்கப்பட்டது.

இன்று ஆரியரின் ஆர்ப்பரிப்பு அதிகமாகிவிட்டது. அரசியல் போர்முனைக்கு நம்மவர் சென்றபோது, வைதிகங்கள் வளைகளை விட்டு வெளியே வந்து உலவி மீண்டும் கமக்களைத் துண்டின. இதன் பயனாக இன்று வைதிகம் தலைவிரித்தாடக் காண்கிறோம். சுயமரியாதை இயக்கம் ஒழிந்துவிட்டது என்ற அக்ரகாரம் நினைக்கிறது.

வானத்திலே மயில் ஆடிடக் கண்டேன் என்ற கூறிடுபவனை, என்னவென்று கூறுவீர்கள். வாடை வீசினால் குடியன் என்றோ, இல்லையேல் மூளை குழப்பியவனென்றோ கூறுவர். ஆனால் துர்ப்பாக்கிய மிகந்த இந்த நாட்டிலே, இல்லாததைஉண்டென்பவன் ஞானி, இருப்பதை மாயை என்பவன் வேதாந்தி, இயற்கைக்கு மாறானதை இயம்புபவன் கலா நிபுணன். பகத்தறிவுக்கு ஒவ்வாதது கூறுவோனைப் பரமபாகவதன், பகற்கொள்ளையிடுபவனைக் குரு என்ற கூறும் பாமரத்தன்மை இருக்கிறது. இதை வளர்த்துப் பயனமையும் கூட்டம் ஒன்றுண்டு. அதன் ஆதீனத்திலே எது நடப்பினும் இசை, நடனம், இலக்கியம், நாடகம், சினிமா, பத்திரிகை, பிரசங்கமேளை ஆகிய எதுவாகவிருப்பினும், அவற்றின் மூலம் மனம் பாழ்படவும் பாழ்பட்டதன் விளைவாகப் பராரியாகவுமான நிலைமையை நீடிக்கச் செய்வதையே கைங்கரியமாகச் செய்து வருகிறது. முன்னேற்றத்தை மூலையில் தள்ளி, மடத்தனத்துக்கு மாலையிட்டு உலக முன்னணியிலே ஒதுக்கிடம் பெற்றுக் கிடக்கும் இந்நாட்டுக்கு, இக்கூட்டம் செய்துவரும் கேடுபோல் உலகில் எக்காலத்திலும் எங்ககம் நடந்ததில்லை என்று குன்றின் மீதேறியுங் கூறலாம்.

## மருந்தே விஷம்

மற்ற நாடுகளிலே, மூடர்கள் மடத்தனத்தைக் கொண்டோராகவும்,

அதனை வளர்ப்பவராகவும் இருந்தனர். அந்தக் காட்டுமிராண்டிக் காலம் அறிவுக் கதிரொளி படப்பட ஒழிந்தது. அற்புதம் செய்வோன், ஆரூடக்காரன், மாந்திரீகன் என்ற தெகிடுதத்தக்காரர்கள் ஒவ்வோர் நாட்டிலும் ஓர் காலத்திலே உலவினர். ஊரை அடக்கினர். ஆனால் அறிவு வளர வளர, அவர்களின் ஆதிக்கம் அழிந்தது. மக்களின் மனம் பண்படப் பண்பட இத்தகையவர்களை நம்பும் மனப்பான்மையை மாற்றிக்கொண்டனர். அறிவு உலகின் எதிர்ப்பும், கேலியும், கண்டனமும், ஏய்த்து வாழ்ந்த கூட்டத்தை அடக்கி ஒடுக்கிற்று. ஏமாளிகளாக இருந்த மக்கள் பின்னர், விடுதலை பெற்று, வீறு கொண்டெழுந்து, விஞ்ஞானத்தின் துணை கொண்டு வாழ்வை வளமாக்கிக்கொண்டனர். இங்கோ! இருபதாம் நூற்றாண்டிலும், ஏடு பல கற்று, பட்டம் பல பெற்று, விரிந்து பரந்த அறிவு பெற்றோர் என்று விளம்பரப்படுத்தப்பட்டு, விவேகி என்ற விருதுடன் உலவினாலும், மந்திரி, நிர்வாகி, ஆசான், ஆசிரியர், தலைவன், நடிகன் எனம் எந்தப் பதவியில் அமர்ந்தாலும் ஒரு கூட்டம் மக்களை மீண்டும் மீண்டும் மடத்தனத்தில் அழுத்தி வைக்கவே தங்கள் அறிவு ஆற்றல் வெல்வாக்கு அதிகாரம் ஆகியவற்றைப் பயன்படுத்துகிறது. மக்களின் பட்டிக்கு ஓநாயாக உள்ளனர். தமது சுயநலம், குலநலமன்றிப் பிறிதொன்றினைப் பற்றிக் கருதார். பேதைமை போக்க முன் வாரார்; சாதனை செய்து தமது சோற்றுத் துருத்தியைச் சொகுசாக்கிக் கொள்வதற்காக ஏதுமறியாத மக்களை, எடுப்பார் கைக்குழவிகளைக் கொடுமையான நிலையிலே வைத்து, அவர்களின் உழைப்பை உறிஞ்சிக் கொழுத்து ஊன் சுமந்து திரிகின்றனர். எந்த அறிவுத்துறை, விஞ்ஞானவழி, பிரசாரபீடம், மடமையைப் போக்க மற்ற நாடுகளிலே பயன்பட்டனவோ, அதே துறைகள் இங்கு, மக்களின் மடத்தனத்தையே நம்பி வாழும் கூட்டத்திடம் சிக்கிக் கொண்டிருப்பதால், மருந்தே விஷமாக்கப்படுகிறது!

எங்கும் வைதிகம்

சிறார்களுக்குப் பள்ளிகளிலே ஊட்டப்படுவது வைதிக விஷமே,

சிந்தனைக்கு வேலைதரும் பருவமின்றிச் செந்தேன். போல் வாழ்க்கை இனிக்க வேண்டுமென்றும், சேல்விழியாள் சின்னஞ் சிற்றிடையாளுடன் கூடி ஆனந்தமாக ஆடிப்பாடி இருந்தலே வாழ்வின் இலட்சியமென்றும், மெருகு கெடாத மோட்டார் ஏறுதல், மேனாட்டு மாளிகை போன்றதான வீடு தேடுதல் ஆகியவைகளே பேறு என்றும் கருதும், கனவுலகில் வாழும் இளைஞர்கள் கல்லூரிகளிலே பெறவது மட்டுமென்ன? அதே விஷந்தான், ஆனால் அதற்கு வசீகரமான மேல்பூச்சு உண்டு. வாழ்க்கைப் போட்டியால் வளைந்து, வறுமையில் நெளிந்து, குடும்ப பாரத்தால் களைத்துக கிடக்கும் பருவத்திலே பெறுவது என்ன? பழைய போதையே! ஏட்டிலே, நாட்டின் நானாவித நிகழ்ச்சிகளிலே, நாடகத்திலே, சினிமாவிலே, பாட்டிலே, வீட்டிலே வீதியிலே, காலையிலே, மாலையிலே, கனவிலேயுங்கூட வைதிகத்தின் ஆதிக்கமே காண்கிறோம். இவைகளை மாற்றப் பத்திரிகை உலகு, வெளிநாடுகளிலே பயன்பட்டது. கொடுங்கோலரை வீழ்த்தக் கோணல் நடத்தை கொண்டோரைக் கவிழ்க்க, வைதிக வல்லரசை ஒழிக்க, மத ஆதிக்கத்தை மாய்க்க, மடமையை வளர்போரை வாட்ட, பத்திரிகை உலகம் பயன்பட்டது. இங்கோ?

வருவாயும், வளமும் பெற்ற பத்திரிகைகள் ஆரியக் கூட்டத்தின் ஆயுதங்களாக உள்ளன. ஆளுங் கூட்டத்தின் ஆலிங்கன சுகங்கண்டன. அவை அறிவை வளர்க்கவில்லை. மூடத்தனத்தை மக்களிடை புகுத்தும் முரசாயின. இதன் பயனாக நேரிடும் பயங்கரமான விளைவுகளைத் தடுக்க, நமதாட்சி இல்லை. ஆங்கல ஆட்சி இதனைப் போக்க முயலவில்லை. முயலுமென்று நாம் எதிர்பார்க்கவுமில்லை.

## ஆரிய ஏடுகள்

ஒவ்வோர் நாளம், நமது நாட்டிலே ஆரிய ஏடுகள், வைதிகம் வளர, பகுத்தறிவு பாழ்படி எவ்வளவு பாடுபட்டு வருகின்றன என்பதைக் கூர்ந்து நோக்குவர் கலங்குவர் என்போம்.

மோசடி நேரிடா வண்ணம் பாதுகாப்புத் தேட, ஆபத்து விளையா வண்ணம் அறிவு அரண் அமைக்க, வேடதாரிகளின் கபடத்தைக் கலைக்கப் பயன்படவேண்டிய பத்திரிகை உலகம், ஆரிய ஆதிக்கத்திலே இருப்பதனால், நாட்டை நாசமாக்குகின்றன. யாரோ ஒர் பிழைக்கும் வழி கற்ற திருப்பிரம்மம் எனது தாயத்துகள், முடிக்கயறுகள், வேல், சகல ரோகத்தையும் போக்கிச் சங்கடத்தை நீக்கிச் சங்கநிதி தரும் சக்தி

வாய்ந்தன என்று ஓர் விளம்பரம் அனுப்பினால், உடனே இரத்தத்தைச் சிந்தி உயிரைப் பணயமாக வைத்து வீரப் போரிடும் ரஷியரின் செய்திக்கும் பக்கத்திலே ஒய்யாரமாகக் கட்டமமைத்து, இன்ன ஐயரின் இன்ன விதமான தாயத்தை வாங்கி அணியுங்கள் என்ற விளம்பரத்தை ஆரிய ஏடு வெளியிடுகிறது. இது தகுமா என்று கேட்கிறோம். விளம்பரம், பணத்துக்காக என்று வாதிடுவர். சரி! பத்திரிகையின் இலட்சியமென்ன? மக்களை இத்தகைய மடிசஞ்சிகளிடம் காட்டிக் கொடுத்து வயிறு வளர்க்கும் ஈனப் பிழைப்புத்தானா? வைதீகத்துக்கும் வகையில்லாதாருக்கும் இடையே நின்று தரகு வேலை செய்வதுதான், அரசுகளையே ஆட்டி வைக்கும் பத்திரிகையின் பணியா? வெட்கம் மானம் ரோஷம் இருக்க வேண்டாமா? விவேகி என்ற பெயருக் கேற்றபடி செயலிருக்க வேண்டுமே என்ற உணர்ச்சி வேண்டாமா? சீச்சி! எதைச் செய்தேனும் எட்டடுக்கு மாடி கட்டி அதிலே பெண்டு பிளளைகளுடன் உலவுவதுதான் வாழ்க்கையின் இரகசியம் என்றிருக்கலாமா என்று கேட்கிறோம்.

வடலூர் வள்ளலார் வருகிறார் உயிரோடு என்று எவனோ ஓர் வயிற்றுக்காக வாயை விற்பவன் கூறினால், உடனே அதை வெளியிடுவது, அதற்காக் காசு பெறுவது, எந்த நியாயத்துக்குப் பொருந்தும் என்ற கேட்கிறோம். ஊரை ஏமாற்றுவதற்கு உடந்தையாக இருப்பது மானமற்ற செயலல்லவா? மனங் கூசவில்லையா? உள்ளம் பதறவில்லையா என்று கேட்கிறோம்.

## இன இயல்பு

இத்தகைய நிகழ்ச்சிகள் விளம்பர விஷயங்கள், போலி என்பதும், பொதுமக்களுக்குக் கேடு செய்யும் என்பதும் அப்பத்திரிகை ஆசிரியருக்குத் தெரியாதா? தெரியும்? அதுவுந் தெரியும், அத்துடன் இவ்விதமான எண்ணம் நாட்டிலே இடம் பெற்றால்தான் தன் இனம் குனியாது நிமிராது ஊர் உழைப்பிலே வாழமுடியும் என்பதும் தெரியும். எனவேதான், இத்தகைய விஷயங்களைத் தாராளமாக வெளியிடும் மனப்பான்மை இருக்கிறது. கட்டை அவிழ்த்துக் கொண்டு ஓடிய ஓர் மாடு, ஊரிலே சுற்றி, கோயிலொன்றைக் கண்டு உள்ளே நுழைந்தது, பின்னர் மீண்டும் வெளியே வந்ததாம் சின்னாட்களக்க முன்பு! அறிவு வளர்ச்சியிலே அக்கரை, மடமையைப் போக்க வேண்டுமென்ற நோக்கமிருப்பின், இந்த நிகழ்ச்சிக்குப் பத்திரிகையிலே இடமளிப்பாரா? வெளியிட்டாலும், மாட்டுக்குத் தெய்வ பக்தி பிறந்தது என்ற கருத்துப்பட

அது குறித்து எழுதுவரா? கட்டவிழ்த்த மாடு கொல்லைமேடு தெரிந்திருந்தால், அங்கு ஒடியிருக்கும். கோயில் தெரியவே அதனுள்ளே ஓடிற்று. இது நந்தியின் தெய்வபக்தி என்று பத்திரிகையிலே வெளிவருவதா? எவ்வளவு மடத்தனம்?

மலத்தைத் தேடி புறக்கடையிலே வரும் பன்றிகளை, மகாவிஷ்ணுவின் விஜயமென்று வெளியிடவோ, குப்பை கூளம் தேடி, அக்ரகாரத்திலே நடமாடும் கழுதைகளை, கழுதைகளுக்குள்ள பிராமண பக்தி என்றும், இனி அப்பத்திரிகைகள் வெளியிடவும் முன்வரக்கூடும்.

சேலம் சுயமரியாதை மாநாடு இத்தகைய நேரத்திலே கூடுகிறது. மீண்டும் சுயமரியாதை முரசு கொட்ட வாரீர். அணிவகுப்பைச் சரிசெய்து, ஆயுதந் தாங்கி, அறப்போர் புரிய முன்வாரீர் என்று அழைக்கிறோம்.

சேலத்திலே சுயமரியாதை இயக்கம், எதிர் காலத்திலே எவ்விதம் பணியாற்ற வேண்டுமென்பது நிர்ணயிக்கப்படவேண்டும். புதுத் திட்டங்கள் தீட்டப்படவேண்டும். அதனைச் செய்யும் ஆற்றலும், இயல்பும் இளைஞர்கட்கே உண்டு. ஆகவே, நாடெங்குமுள்ள இளைஞர்கள் திரண்டு சேலம் வர விழைகிறோம்.

போருக்குப் பிறகு உலகிலே ஏற்படப்போகும் மாறுதல், அற்புதமானதாக இருக்கத்தான் போகிறது. அதுபோது, நம்நாடு பகுத்தறிவும் சமதர்மமும் பூத்திடும் புன்னகைப் பூந்தோட்டமாக இருக்கவேண்டும. அதற்காவன செய்யவே, இளைஞர்கள் ஆயிரக்கணக்கில் சேலம் வரக் கோருகிறோம். வீரரே வருக! தோழரே வருக!!

(திராவிடநாடு - 10.01.1943)

# போர் நோக்கம்

நாம் யாவரும் பாரத மாதாவின் பிள்ளைகள். நமக்குள் ஒரு வித்யாசமும் கிடையாது. ஆயிரம் வித்தியாசம் இருந்தாலும், நாம் ஒரே தாயின் மக்கள். ஜாதி மதச் சண்டைகள் கூடாது. இந்து முஸ்லிம் என்று பேதம் பேசக் கூடாது. பிராமணர் சூத்திரர் என்று துவேஷம் பேசுவது மகாதோஷம்

டாக்டர் ரகுராம்

கேட்டயளோ அக்கரமத்தை, மதுரைக் கோயிலிலே பஞ்சமளை விடராளாமே. காலம் இவ்வளவு கெட்டுப் போச்சே. எங்கிருந்துங்காணும் மாதம் மும்மாரி பெய்யும்! ஏன் இப்படி இவா அழிந்து போயிடறாளுன்னு தெரியல்லை. ஜாதி ஆச்சாரமே கூடாதாமே. என்ன அக்கிரமம்? பாபகிருத்தியம் தலைவிரித்தாடுகிறதே. இதை மட்டந்தட்டாமே என்ன ஓய் மகா பெரிய ஜென்மம் நமக்கு. பிராமணாளுக்குன்னு உண்டான யோக்யதைகள் போயிடுத்துன்னா அர்த்தம். யாரும் கேட்பாரில்லையோ? அடடா என்ன அக்ரமம் நடக்கிறது. ஈஸ்வரனுக்கே பொறுக்காது!

அந்த கிருஷ்ணய்யர்

என் தமயன் கூடத்தான் காங்கிரசிலே இருக்கான். அவாளுடைய கட்சியும் தேச சேவைக்குத்தான் பாடுபடறது. ஆனா, இந்தச் சண்டையிலே மட்டும், அவாளுக்கும் நமக்கும் கொஞ்சம் அபிப்ராய பேதமிருக்கு. மகாத்மா என்ன சொல்றார். சுயராஜ்யம் கொடும் சண்டைக்கு உத்தாசை செய்யநேன் என்ற சொல்றார். நான், ஐயராஜ்யம் தரத்ததான் போறா பிறகு, இப்போ சண்டைக்கு உதவி செய்யுங்கோன்னு ஜனங்களைக் கேட்டுக் கொள்றோம். அவ்வளவுதான் வித்யாசம். ஆகையால் நீங்கள், கவர்ன்ர் வார் பண்டுக்குத் தாராளமாகப் பணம் தரவேண்டும். பணம் இல்லாதவா, யுத்த விஷயமா நல்ல பிரசாரம் செய்யணும். அதுக்கு வேண்டிய விஷயமல்லவாம், எடுத்துச் சொல்லத்தான், நேக்குக் கூட இந்தக் கமிட்டியிலே பிரசிடெண்டு வேலை தந்திருக்கா. ஆகவே நீங்களெல்லாம், இந்த யுத்தத்திலே, நேசநாடுகள் ஷெயுக்கணும்னு, ஜானகிராமனைப் பஜித்துக் கேட்டுக் கொள்ள வேண்டும். அதுக்காக ஒரு கோலாட்டக் கச்சேரி வச்சிருக்கு.

என் தங்கை கோமளம் ஏற்பாடு செய்திருக்கா. என் தம்பி கோபாலன், புளூட் வாசிக்கிறான். அருமையா இருக்கும் எட்டணாதன் டிக்கட் அடுத்த வெள்ளிக்கிழமை யுத்த சகாய நிதிக்க நடத்தப்படும் நாட்டியம், நம்ப முன்சீப் நரசிம்ம ஐயரிருக்காரோன்னோ அவர் மகள், மல்லிகா நாட்டியமாடுவா, கோலாட்டம் பாட்டு, இவைகளுக்கு வரணும்னு கேட்டுக் கொள்கிறேன். அவஸ்யம் வரணும்.

லேடி டாக்டர். லலிதா.

அடி! அலமு எங்காத்திலே, நம்ம நாடகத்துக்கு வேண்டிய வேஷ சாமான் அவ்வளவும் இருக்கேடி, நமக்கென்னடி சங்கடம். ரகுராமண்ணேனுடைய கதர் சால்வை, கதர் தொப்பி எடுத்துண்டு வர்றேன். எங்கப்பாவிடமிருக்கு, பஞ்சாங்கக் கட்டு, உருத்திராட்ச மாலை, பொடி டப்பி, வெள்ளிப் பூண் கோட்ட தடி, புரோகித வேஷத்துக்கு அது போதும். எங்க அக்காவிடம், லேடிஸ் பூட்ஸ், ரிஸ்ட் வாச், கைப்பெட்டி, மூக்கக் கண்ணாடி, ஜார்ஜட் சேலை, டைப்மிஷின் எல்லாம் இருக்கு, எங்க சின்னண்ணன் கோபாலன் காலேஜிலே ஸ்ட்ரைக் செய்துட்டு வந்திருக்கான். அவன் கிட்ட கோட், ஷர்ட், காலர், டை வாங்கிண்டு வர்ரேன். போதாதாடி நாடகத்துக்க வேஷம் போட.

குமாரி கோமளம்

குமாரி கோமளம், கள்ளங்கபடமின்றிக் கூறியபடி, அந்த ஒரு குடும்பத்திலே பல வேடங்களுக்கு ஆள்களும் சாமான்களும் இருந்தன, சந்தேகமில்லை. எந்த ஊரிலே இருக்கும் குடும்பம்? என்ற யோசிக்கிறீர்களா! எங்கும் இருக்கம் ஆரியக் குடும்பத்தின் சாம்பிள்!

அதிலேதான் வைதிகக் தகப்பன், தேசீயக் குமாரன், லேடி டாக்டரான மகள், பள்ளியில் படிக்கும் கோமளம், காலேஜ் ஸ்ட்ரைக் செய்யும் மாணவன், எல்லம் ஒன்றாக இருக்கும். தகப்பனால் வைதிகத்தை வளர்க்கப் பாடுபடுவார். மூத்த மகன் அதசீயம் பேசி ஜில்லாபோர்டிலே அமருவான். பெண் ஆங்கிலம் படித்து டாக்டராவாள். சிறுமி, கோலாட்டமாடி கலெக்டரிடன் மெடல் வாங்குவாள். வாலிபன், சுதந்திரம் பேசி, காலேஜில .ஸட்ரைக் செய்வான்.

ரகளையான குடுமபமாகத் தானே இருக்கும். இப்படிப் பல ரகம் இருந்தால், என்பீர்கள். ரகளையே இராது. ஒற்றுமை வீட்டிலே ஜாம்ஜாமென இருக்கும். ஒவ்வொருவருக்கும்

வாழ்க்கை எனும் நாடக மேடையிலே கிடைத்த வேஷம் என்று திருப்தி இருக்கும். ஒருவருக்கு ஒருவர் துணை என்ற எண்ணமிருக்கும். கூட்டு முயற்சியினால், குடும்பச் செல்வ வளர்சியாகும் நாட்டிலே, ஒவ்வொருவருக்கும் ஒவ்வோர் படை இருக்கும். படையிலே தமிழர், ஒருவரை ஒருவர் பகைத்துக் கொண்டும் அழித்துககொண்டும் இருப்பர். ஆரியர் வீட்டிலே, ஒவ்வொருவருக்கும் தத்தம் படையினைக் கொண்டு தான் அடைந்த நலன் பற்றிய பேச்சிருக்கும். சங்கராச்சாரியாரின் அருள் தந்தைக்க, காந்தியாரின் கடாட்சம் மூத்தமகனுக்கு, கவர்னர் யுத்தக் கமிட்டியின் கருணை மகளக்கு, கலெக்டர் துரையின் பாராட்டுதல் கோமளத்துக்கு, காலேஜ் மாணவர் கழகச் செல்வாக்கு, படிக்கும் பிள்ளைக்கு, என்று, ஒவ்வொருவருக்கும் ஒவ்வோர் ஒடத்து வரம் கிடைக்கும். பொத்தத்தில் குடும்பம் வளரும், உயரும், மேனிலை அடையும். ஆரியக் கூத்துக் காரியத்தை மறக்க அல்ல!!

வைதிக வளர்ச்சிக்கான விளம்பரங்களை, மாந்தரீகம், ஜோதிடம் முதலிய செய்திகளை மித்ரன் முதலிய பத்திரிகைகள் பிரசுரிப்பது குறித்துச் சென்ற வாரம் திராவிட நாடு தலையங்கம் எழுதிற்று. விளம்பரம் வெளியிடுவது மட்டுமென்ன. அந்த மாந்தசீக ஐயர், மித்ரன் ஐயருக்கு ஒரு கார்டு எழுதினால் போதும், அந்த தாயத்துகள், முடிக்கயறுகளின் மேலான மகத்துவங்களைப் பற்றிப் புகழுரை தீட்டி, மிஸ்டர் சர்ச்சிலே, ரூசிவெல்ட்டே, சியாங்கே ஷேக்கே, ஸ்டாலினே, ஏன் வீணாக டார்ப்பிடோ வென்றும் சப்மெரைனென்றம், விமானமென்றும், பீரங்கி என்றும், குண்டு தளவாடமென்றும், குதிரைப்படை, தரைப்படை என்றும் பலப்பல தேடிப், பணத்தை வீணிலே பாழ்படுத்துகீறீர்கள். கோடி கோடியான பவுன்களைக் கொட்டவேண்டாம். இலட்ச இலட்மாகத் தொழிலாளர் வேலை வெய்யவும் வேண்டாம். எதிரியின் போர்த்திட்டம் என்ன, நாம் என்ன திட்டமிடுவது என்று ஏங்கவும் வேண்டாம். நாற்பத்து எட்டு ரூபாய் நாலணாவிலே உலகிற்கு வந்துள்ள அத்தனை அவதியும் ஒரு நொடியிலே ஒழிந்தே போகும். விரோதிகள் அழிவர்! போரிலே சேதமிராது!

ஹிட்லரின் கழுத்தை இறுக்கிக் கண்பிதுங்கி பெளிவரச் செய்ய வேண்டுமா? சரி! எடுங்கள் 1-4.0 பூசையிலே வைத்து எடுத்த முடிக்கயறு அனுப்புகிறோம். அதை ஹிட்ரலி இருக்கும் திக்குக்கு ஏவினால், அது வாயுவேக மனோவேகமாகப் பறந்து சென்று பெர்லின் நகரிலே, ஹிட்லரைக் கண்டுபிடித்து,

கழுத்தைச் சுற்றிக் கொள்ளும். மாதவி நடனமாடி வீசிய மாலையே கழுத்தில் விழுந்தமாலை கழற்ற முடியவில்லை, காரிகையே இது யார் சூதோ என்று கோவலனைக் கதறச் செய்ததாக. ஐதீகமாயிற்றே! முடிக்கயிறு ஹிட்லரைச் சும்மாவா விடும்! டோஜா தூங்குகையிலே, அவன் இருதயத்தைத் துளைக்க வேண்டுமா? எடுங்கள் பதினைந்து ரூபாய். ஒரு வெள்ளி வேல் அனுப்புகிறோம். அதை ஏவினால், அது கடலைத் தாண்டி, விமானிகளின் கண்களை ஏமாற்றி, கடலோரப் பாதுகாப்பு, உள்நாட்டுப்படை என்பவைகளை ஏய்த்துவிட்டு, டோக்கியோவிலே டோஜோவின் அரண்மனை சென்று, அவன் இருதயத்தைத் துளைத்துவிடும், வேவல்கள் எதற்கு? விண்ணிலே வட்டமிடும் விமானங்கள் ஏன்? வீண் செலவு ஏன்? வெள்ளி வேல் இருக்கக் கொள்ளைச் செலவு செய்வானேன். இரண்டு தாயத்துகள், ஒன்று தங்கத்தால் செய்தது மற்றது வெள்ளி, முன்னது 25 பின்னது 7 ரூபாய். இவைகளை அணிந்தால் போதும், பயமேது இனி ஜெயமே என்று பண்ணிசைத்துப் பாரிலே பயமின்றி உலவலாம். அத்தகைய அரிய மாந்தரீக சக்தி இந்த ஊரிலே இருக்கும் இன்ன பெயருடைய ஐயருக்கு இருக்கிறது என்று அகில உலகுக்குமே உரைத்திடவும் துணியும். யார் இருக்கிறார்கள் கேட்க? எங்கே இருக்கிறது அந்தத் துணுவு? எப்படி இருக்க முடியும், இடுப்பொடிந்த இனத்திடம் அந்த இயல்பு.

எதைச் சொன்னாலும் தலை அசைக்கும் தாசர்கள் இருக்கும் வரையிலே, இதுவும் செய்வர், இதைவிட மோசமான ஆபாசமும் செய்வர்.

நமது நாடு நமதரசானால், இத்தகைய தெகிடுதித்தக் காரசின் கொட்டம் ஒடுக்கப்படும். பிரிவினையே, இவையிம் இவை போன்றவைகளுமான பீடைகளும் ஒழியும் வழி வேறில்லை.

ஒரு துறையுலே வேலை செய்யும் பார்ப்பனர், மற்றோர் துறையிலே வேலை செய்யும் பார்ப்பனருக்கு உதவியாக இருப்பர்; ஒருவரை ஒருவர் பகைத்துக்கொண்டு பாழாகார். ஒருவருக்கொருவர் விளம்பரப்படுத்தி மொத்த உயர்வை வளர்த்துக் கொள்வர். டைகர் வரதாச்சாரியாரின் சாரீரம் கட்டையே தவிர, பாட்டிலே இருக்கும் பிகுவு ஆபூர்வமானது என்று சர்.அல்லாடி கிருஷ்ணசாமி ஐயர் புகழ்வார். சர்.அல்லடியின் மூளையை, இரவல் கேட்கிறார்களாக்கும் இங்கிலாண்டிலே என்று டைகர் கூறுவார். இருவரின பேச்சையும் இந்து ஆசிரியர் சீனுவாசன் எடுத்தெழுதுவார்.

சின்னாட்களுக்கு முன்பு, மேவார் சமஸ்தானத்திலே திவானாக இருக்கும் சரி.டி.விஜயராகவாச்சாரியார், திருவாங்கூர் சென்று வந்தார். திருவிதாங்கூரிலே அவர் பேசும்போது, சிமஸ்தானத்திடைய சீர் சிறப்புகளை எடுத்துக் கூறிவிட்டுத், திருவாங்கூருக்குக் கிடைத்துள்ள திவான் போல் திக்கெட்டும் தேடினாலுமெ கிடைக்குமா? அவருடைய கலியாண குணங்களை ஆயிரம் நா படைத்த ஆதி சேஷனாலும் எடுததுரைகக முடியுமா? என்ற வர்ணிப்பதுபோலப் பேசினார். மன்னர், தமது திவானைக் குறித்து வேறோர் திவான் புகழ்வது கேட்டுப் பூரிப்படையாமலோ, இத்தகைய மோகனரூபனைத் திருவாங்கூர் திவானாகக் கொண்டதே இனி நமது மைந்தனுக்கு என்ன குறை என்று மன்னரின் மாதா மன மகிழாதிருந்திருப்பார்களா! பாருங்கள், அக்கிரகார விளம்பர இலாக்காவின் அருமையான வேலைத் திட்டத்தை! அடுத்த ஆண்டு சர்.சி.பி., மேவார் சமஸ்தானத்துக்குப் போர், அங்கு போய், அஷ்ட திக்குகளிலே அலைரந்து திருந்தாலும், உங்கஙள சமஸ்தானத்திலே திவானாக இருக்கும் சர்.டி.விஜயராகவாச்சாரியாரைப் போல் ஒருவரைப் பெறமுடியுமா? மேவாரின் அதிர்ஷ்டமே அத்திஷ்டம்! என்று பேசுவார். வரா.வின் நடை இருக்கிறதே, அது தனிச்சிறப்பு வாய்ந்தது என்ற கல்கி எழுதுவார்; கல்கியின் சிறுகதையின் சிறப்புத் தமிழ்நாட்டையே பூரிக்கச் செய்கிறது என்று வ.ரா.எழுதுவார்! இன வளர்ச்சியிலே அந்தச் சிறு சமூகம் எடுத்துககொள்ளும் அக்கரை, உலகின் அற்புதங்களிலே ஒன்று. தற்பாதுகாப்பு முறையும் அதுதான். மிகச்சிறு எண்ணிக்கையுள்ள கூட்டம், மற்ற மக்களின் உழைப்பால் வாழ வகுத்துக்கொண்டுள்ள தந்திரமான திட்டத்தைக் காப்பாற்றும் வழி அதுதான். வெள்ளைக்காரர்கள், இங்கு முதலிலே வியாபாரம் செய்ய வந்தபோது, ஊரிலே தனியான இடத்திலே கோட்டை அமைத்துக்கொண்டு, காவலுக்கு ஆள் வைத்துக்கொண்டு இருந்தனர். அத்தகைய கோட்டையிலே ஒன்றுதான் இன்றுள்ள சென்னைக் கோட்டை புதிய நாட்டிலே, வந்துள்ள வெளிநாட்டாரின் வாழ்க்கைமுறை அப்படித்தான் இருக்கும். ஆரியரும் அன்னியராதலால், அவர்களம் அந்த நாட்களிலே தனி இடத்தில், அக்கிரகாரத்தில் வாழலாயினர். வெள்ளைக்கார வியாபார விடுதிகள் பின்னர் ஆட்சிப் பீடங்களாக மாறியது போலவே, அக்கிரகாரங்களும், மக்களை ஆட்டிப் படைக்கம் மன்றங்களாகிவிட்டன. இரு வர்க்கமுமெ உபயோகித்த ஆயுதங்கள் வேறு வேறு. ஆனால் முறையும் பலனும் ஒன்று. ஆமாம்! இன விஷயமாகக் கூடத்தான் அவர்கள் ஒருவருக்கொருவர்

பாத்யஸ்தர்களாமே!

நமது இனத்தின் முறை எப்படி இருக்கிறது? வெளியே சொன்னால் வெட்கக்கேடு. உள்ளே விட்டு வைத்தால் உள்ளக்கேடு. கூட்டு எண்ணணம், கூட்டுணர்ச்சி, கைகொடுத்தல் என்பவைகளைக் கருதார். ஒருவருடைய முயற்சிக்கு மற்றவர் உதவி செய்ய முன்வாரார். உதவி செய்யாவிட்டாலுங்கூட ஆபத்தில்லை, இடைஞ்சல் செய்யாமலாவது இருப்பாரோ! அதுவுமில்லை. எவ்வளவு இடையூறு செய்ய முடியுமோ அவ்வளவும் நடக்கும். ஒரு ஊரிலே மாநாடு என்றால், உண்மையிலே, அது முடிவதற்குள் எனக்குப் பயம் பிடித்தாட்டும். ஏன? எதிரிகள் ஏதேனும் செய்வரோ என்ற பயமா? என்று கேட்பீர்கள். அது அல்ல தோழர்களே! எதிரிகளுக்கு நாம் மாநாடு கூட்டுவது கண்டார்தானா கோபம்? நாம் உயிரோடு உலவுவதே அவர்களுக்குக் கோபந்தான், அவர்களைப் பற்றியல்ல என் கவலை. அதிலே, எத்தனையோ மாஜி நண்பர்கள் உண்டு எதிர்கால நண்பர்கள் பலர் அங்கே இருக்கிறார்கள். ஆனால் என் போன்றோருக்கு ஏற்படும் பயத்துக்குக் காரணம், மாநாடு ஏற்பாடாவதற்குள், நமது தோழர்களிடையே மூன்று பிரிபு உண்டாகம். முறைத்த கண்ணினர் கிளம்புவர். மாநாட்டு வாயிலிலே இன்னவிதமான தோரணங்கள் கட்டவேண்டும் என்று கூறும் கட்சிக்கம் வேறுவிதமான அலங்காரமிருத்தலே சரி என்ற வாதமிடும் கட்சிக்கும் போர் மூண்டுவிடும். மாநாடு, புது பலம் பிளவை உண்க்கும். ஏற்படும் குறை இது. நமது போர் நோக்கத்தைச் சரியாக உணரவில்லை. நமது படை வரிசைகளில் குலைவு ஏற்படுவதற்குக் காரணமும், நமது படைகளுக்கு ஆட்பெருக்கம் ஏற்படாத காரணமும் ஒதுவேயாகும்.

இரண்டோர் வருஷம், ஈ.வெ.ரா.வுடன் சேர்ந்து வேலை செய்தால், ஏதேனும் சரியான சான்சு கிடைக்கும்போது, மனுப்போட்டு, அவருடைய சிபாரிசும் பெற்று, கட்சிக்கு நான் எவ்வளவு கஷ்டப்பட்டேன். இப்போது நான் வேலை தேடுவதும் கட்சிக்க நன்மை தேடத் தானே, என்று வாதாடி, எப்படியாவது, பெரிய வேலையில் சேரலாம் என்ற

நோக்கத்தோடு, வேலை செய்வது, பொதுநலத் தொண்டுமல்ல, சயநலம், கொஞ்சம் தந்திரங்கலந்தது. இதை மிக இரகசியமாகச் செய்கிறாம், யாரும் கண்டுபிடிக்கமாட்டார்கள் என்பது அந்தப் பேர்வழிகளின் கருத்து. கட்சி அவர்களைத் தெரிந்து கொள்ளாமலில்லை. உத்தியோகம் கிடைக்கும்வரை, உரசினதும் உல்லசப்பபடு ததியதும், அது கிடைத்தமும், நான் உத்தியோக விஷயத்திலே மகா நெருப்பு. ஆமாம். நான் தயவு தாட்சண்யம் பார்க்கமாட்டேன் சர். ஒரு ரூல் இருந்தால், அதன்படியேதான் நான் நடப்பேன் என்று பேசவும் தெரியும். ஆனால் அத்தகையவர்களைக் கட்சி காட்டிக் கொடுப்பதில்லை! இன இயல்பை அவர்கள் மறந்தாலும், கட்சிப் பற்றை அவர்கள் கைவிட்டாலும், பழைய நட்புகளை அவர்கள் திரணமெனக்கொண்டாலும், காற்றுள்ள போதே தூற்றிக் கொண்டது மது புத்திசாலித்தனம். இவன் கத்திக் கத்திக் கிடக்கட்டுமே நமக்கென்ன என்று பேசினாலும், கட்சியின் பெயருக்காக அல்ல, தமிழ் மரபிலே இத்தகைய சுகபோகிகள் இப்பது, ஆரிய இனத்துக்குத் தெரியலாகாதே என்பதற்காகவே, கட்சி அத்தகைய காற்றாடிகளைப் பற்றிக் கவலை எடுத்துக்கொள்வதில்லை. வாழ்க்கை வாழ்வதற்கே என்பது அவர்களின் இல்ட்சியமாம்! அவர்களுக்கு மட்டுந்தானா! ஆலகபோனுக்கு அதுவேதான் இலட்சியமாக இருந்தது. ரஸ்புடீனுக்கு இருந்தது. பெரிய பெயர்கள் கூறுவானேன், முடிச்சு அவிழ்க்கும் முனியனுக்கும், கன்னமிடும் கந்தனுக்கம், வேறென்ன இலட்சியம்? அவர்களும் வாழ்க்கை வாழ்வதற்கே என்பதையே இலட்சியமாகக் கொண்டவர்கள். நன்றாக வாழட்டும் அத்தகைய நற்குணநாதர்கள். அவர்களின் உழவு அறுபடை தந்துவிட்டது என்று அவர்கள் திருப்தி கொள்கிறார்கள் போலும்! அவர்களின் செய்ல, கட்சியைக் குலைப்பதுடன், கட்சியினால் ஈடேற வேண்டிய இனத்தைக் கெடுக்கிறது. இத்தகைய இனத் துரோகிகள் இங்கும், இனவிருத்தியையே இலட்சியமாகக் கொண்டவர்கள் அக்கிரகாரத்திலும் இருக்கின்றனர். நநமது போர், தகுந்த அளவு வெற்றி தராததற்குக் காரணம் இதுதான்.

நமது போர் நோக்கம், இரண்டோர் சுயநலமிகளுக்க இடந்தேடிக் கொடுப்பதல்ல. ஆரியரின் மிரட்டலுக்கு ஆளாகியுள்ளவர் களிலே இரண்டொருவருக்கு, ஆரியரின் கொஞ்சுதல் கிடைக்குமாறு செய்வதல்ல. திராவிட இனம், ஆரிய இனத்திடமிருந்து விடுதலை பெறவேண்டும் என்பதே போர் நோக்கம். இந்த இலட்சியத்தைக் கொண்ட இளைஞர்களே தேவை. புல்லுருவிகள், சுகபோக விரும்பிகள்வேண்டாம்.

(திராவிடநாடு - 17.01.1943)

# தீபரவுமுன் !

கடம்பா! கச்சி ஏகம்பா! காமாட்சி மணாளா! அந்தப் பயல்களுக்கு நல்ல புத்தி கொடுத்தாயே அப்பனே! அடியேன் பத்திரிகைகளிலே விடுத்த அறிக்கை கண்டு சர்க்கார் ஏதும் செய்யாது போயினும், சகலருக்கும் தந்தையாம் நீர், அவர்கள் மனதை மாற்றினீரே. உம்மைப் புகழ இவ்வடியேனுடைய ஒரு நாக்குப் போதுமோ என்று பண்டிதமணி கதிரேசன் செட்டியார் அம்மையப்பனைத் துதித்தார்.

சீப்பை ஒளித்து வைத்து விடுவதால் கலியாணமா நின்றுவிடும் என்று ஒரு பழமொழிவிடுத்தேன், பாருங்கள், பயல்கள், திருதிருவென விழித்துக் கரகரவெனச் சுழன்று, இல்லை! இல்லை! கொளுத்துவதில்லை என்று குளறின. நமது பேனாமுனை இலேசானதா? என்று மித்ரன் ஆசிரியர் முகமலர்ச்சியோடு கூறிவிட்டுக கன்னத்தைத் தடவினார். மீசை இல்லை முறுக்கு!

இந்தச் சு.ம.க்களின் செயல் முதுவேனிற் காலப்பித்தம் என்ற கண்டித்தேன், பாருங்கள் இறைவனின் திருக்கூத்தை. மட்கடம் செய்யும் சக்கரம் சுழலும் வேகத்திலே, குடம் தயாராவதுபோல, வேலூரிலே நான் விடுத்த எச்சரிக்கை, கழன்று சென்று சு.ம.க்களின் எண்ணத்தை என் வழிக்கத் திருப்பிவிட்டது என்று சைவத் திருவாளர் சச்சிதானந்தம்பிள்ளை திருவாய் மலர்ந்தருளிவிட்டுக் கந்தரனு பூதியைப் படிக்கச் சென்றார்.

மூன்றாவது மாடியிலே முடுக்காக உலவிக்கொண்டே இந்த ஆசிரியர், ஸ்டாப் இட் - நிறுத்து அதனை என்றுதான் இங்கே நான் ஆர்டர் போட்டேன். அதற்குப் பிறகுமா, அவர்கள் கொளுத்தத் துணிவார்கள் என்று தனக்கத் தானே பேசிக்கொண்டார்.

வேறு பல இடங்களிலே சில்லறைகள், சிரித்துக் கூத்தாடிக் கொளுத்தவில்லை! பணிந்துவிட்டனர்! ஒடுங்கிவிட்டனர். பதுங்கிக் கொண்டனர், என்று பேசின, ஏசின, சந்தோஷத்தைப் பூசிக்கொண்டு சந்தடி கிளப்பின.

சு,ம.க்கள், எதைத்தான் கொளுத்த மாட்டார்கள். இராமாயணமென்றால் என்ன, மனுதருமமானாலென்ன பெரியபுராண மானாலென்ன, அந்தப்

போக்கிரிகள் எதையும் பொசுக்கும். யார் பேச்சையாவது கேட்கவா போகிறார்கள் என்று கண்கசியக் கூறிவிட்டுப் பிறகோர் அசட்டுச் சிரிப்பை வருவித்துக் கொண்டு, ஒரு புத்தகத்தை இதுகள் கொளுத்திவிட்டதாலேயே குடியா முழுகிவிடும் கலையா போகும்? கம்பனின் புகழா புகையாகும்? என்ற பேசிய திருக்கூட்டம்.

அந்தப் பயங்கொள்ளிப் பயல்களா நம்மை மீறி ஒரு காரியம் செய்யும். அறிக்கையும் கண்டனக் கூட்டமும் கண்டதும் வாலைச் சுருட்டிக்கொண்டன. அதுகளுக்கு ஏது அவ்வளவு தைரியம் என்று பேசிக்கொள்கின்றன. எங்கோ ஓர் தமிழ் சங்கத்தில் மட்டும, கொளுத்துவரைக் கைவுட்டதற்காகச் சுயமரியாதைக்கார்களைப் பாராட்டுகிறோம் என்றார் தீர்மானத்தை நிறைவேற்றினர். மற்றவர்கள் - மடிசஞ்சிகள் - மதவாதிகள், இந்துத் தலைவர்கள் பண்டிதர்கள் - கலாவிநோதர்கள். ஆகியோர் யாவரும் 18-ம்தேதியைத் திருவிழழவாகக் கொண்டாடித் தமது தீரப்பிரதாபம் பாடு, ஆனந்தத் தாண்டவமாடினர். சேலம் ரீப்பிரதாபம் பாடு ஆனந்தத் தாண்டவமாடினர். சேலம் சுயமரியாதை மாநாட்டிலே, புராணதிகளைக் கொளுத்துவ்தாகச் சொன்னபடி சுயமரியாதைக்காரர்கள் செய்யவில்லை. ஒவ்வோர் சாராரும் தத்தமது வீரமே இதற்குக் காரணம் என்று கருதிக் கொண்டு பேசுவர். இது இயற்கைதான். எங்கெங்கு இராமாயணம் படிக்கப்படுமோ அங்கெல்லாம் அனுமார் பிரசன்னமாக வீற்றிருந்து இராமகாதையைக் கேட்டு சசிப்பார் என்ற சாவடிச் சுப்பன்கள் சாற்றுவர். அத்தகைய அனுமான், சேலத்திலே இராமாயணத்தைக் கொளத்தப் போகிறார்கள் என்று கேள்விப்பட்டதும், தனது விஸ்வ ரூபத்தைக் காட்டி வாலைக் கரகரவெனச் சுழற்றிப் பற்களை நறநறவெனக் கடித்துச் சேர்வராயன் மலையைச் செண்டுபோல் தூக்கி அடித்து, அட்டகாசம் செய்யவே, சுயமரியாதைக்காரர்கள், அடியற்ற பனையென அனுமனின் காலில் விழுந்து, வாயுபுத்ரா, வல்லமை மிகவோனே, எம்மை ஒன்றும் செய்யாதீர். நாங்கள் உமக்குப் பிரியமான இராமாயணத்தைக் கொளுத்தவில்லை என்ற கூறினர் என்று சாவடிச்சுப்பன் கூட்டம சரடுவிடும். அனுமாரின் ஆர்பரிப்பு, அவரடியார்களின் பதைப்ப், சர்க்காரின் தலையீடு, பத்திரிகைகளின் பாணம் எனும் இவைகட்குச் சுயமரியாதைக் காரர்கள் பயந்து பதுங்க மாட்டார்கள் - பழக்கமும் கிடையாது - அவசியமும இல்லை. பித்தரென்று நூற்றினால், அதைத் கேட்டுச் சித்தத்தைச் சிதறவிடமாட்டார்கள். போக்கிரி என்று திட்டினால் அது கேட்டுப் பொல்லாங்கான நினைப்புக் கொள்ளார். சுயமரியாதைக்காரரின்

போர்முறை, இத்தகைய காரணம், சொல்லால் வெளியாவதைவிட, விரையிலே செயல் மூலம் நிச்சயம் வெளியாகப் போகிறது. அன்று, கோழைகள் என்று சு.மு.க்களைக் கூறினோர், போக்கிரிகள் என்ற தூற்றுவர். அந்நாள் வருகிறது விரைவில்.

சேலத் மாநாட்டிலே, புராணாதிகளைக் கொளுத்தவில்லையே தவிர, எந்தக் காரணத்துக்காக, இதைச் செய்யவேண்டுமென்று சு.ம.க்கள் கருதினரோ, அது நிச்சயம் நிறைவேறிவிட்டது. தமிழரிலே ஒரு சாரார், பகுத்தறிவாளர், உளுத்த நரம்பும் வெளத்த ஓடும இழுநத்துக் கட்டிய கூடடா என்று சித்தர்கள் கூறிடும் இக்கட்டையைச் சொகுசாக வளர்க்க, ஆரியரின் அடிபணியும் பிறவிகள் போலன்றி, உயிரைவிட மேல் என்று கருதும் இயல்பினரான சீர்திருத்தவாதிகள், இராமாயணம், பெரிய புராணம், மனுதர்மம் போன்றவைகள்.

1. ஆரிய மத ஏடுகள்

2. திராவிடரை அடக்க, இழிவு செய்ய, எழுதப்பட்டன, உதவுகின்றன.

3. ஆபாசக் கருத்துகள் கொண்டன. அநாகரிக நிகழ்ச்சிகளைக் கூறுவன, பேதம், கொடுமை முதலியவைகளைப் பக்தியின் பேரால் புகுத்துவன.

4. ஏடுகள் வெளியிடும் கருத்தை ஒட்டிய நடவடிக்கைகளைச் செய்வதால் மக்களின் மூட நம்பிக்கை வளருகிறது, சமுதாயம் கெடுகிறது.

என்ற எண்ணத்தை நாட்டினர் உணர வேண்டுமென்று விரும்பினர், அது நிறைவேறிவிட்டது. நாட்டிலே, எவரும் கடந்த ஒரு வாரகாலமாகக் கனவிலும் நினைவிலும், சுயமரியாதைக்காரர்களைப் பற்றியே கருதினர். சிலர் கண்கசிந்தனர். கை பிசைந்தனர். புராணங்களிலே ஆபாசங்கள் உள்ளனவென்று வறி, அவைகளைத் தீயிலிடக் கிளம்புகின்றதாமே, சுயமரியாதைக் கூட்டம் என்ற கூட்டம் தாங்கள் உயிருடன் இருப்பதைக் காட்டிக்கொள்ள இக்காரியத்தைச் செய்கின்றன என்று அறிவு முதிர்ச்சியினால் எழுதின. உண்மையில் சுயமரியாதைக்காரர்களின் நோக்கம்

அதுவாக இருப்பினும், அதையும் இந்த ஆரியத் திருப்பிரம்மங்கள் தமது அலறல் மூலம் நிறைவேற்றிக் கொடுத்துவிட்டன. இந்து பத்திரிகை, அமெரியையும் ஆஸ்திரேலிய மந்திரி சபையையும், அமெரிக்காவுக்குப் போதனை புரிவதையும் ஆசிரியர் பன்சாலியையும் மறந்து சுயமரியாதைக் காரர்களைப் பற்றித் தலையங்கம் எழுதவேண்டிய அவசியம் தீ பரவா முன்பே ஏற்பட்டுவிட்டது. இந்துவின் அத்தலையங்கத்தைப் பார்த்தவர்கள், தமிழகத்திலே உள்ள உணர்ச்சியை ஓரளவுக்காவது தெரிந்து கொண்டிருப்பார் களன்றோ. ஆங்கில தினசரிகளின்றித் தவிக்கும் சுயமரியாதை இயக்கத்துக்கு ஆரிய ஏடு பய்னபடுவது, ஆச்சரியமான சம்பவமென்பேன்.

கொளுத்தாதுவிட்டவர்கள், கும்பிட்டுக் கோவிந்தா போடவில்லை. ரகுபதி ராகவ ராஜாராம பஜிக்கவிட்லலை. அக்கந்தல்களைப் பட்டுப் பீதாம்பரம் என்ற போற்றவுமில்லை. அவைகளைக் கொளுத்துவதை, அடியோடு கைவிட்டோம் என்ற கூறிடவுமில்லை. வெளுத்துவாங்கினார்கள். அந்த ஏடுகளிலே உள்ள ஆபாசத்தைச் சுட்டுப் பொசுக்கவது கூடாதா? என்ற கேட்டனர். இவைகளை ஆதரிப்பவர்கள் தக்க காரணம் காட்டட்டும் கேட்போம், பதில் உரைப்போம், அதுவரை கொளுத்துவதை நிறுத்திவைப்போம் என்று கூறினர். இதனைப் பணிந்தனர், பயந்தனர் என்ற ஏமாளிகள் எண்ணினால், எண்ணிக் கொள்ளட்டும். திக்கெட்டும தீ பரவட்டும்! ஆரிய ஏடுகள் கரியாகட்டும்! அந்த ஜ்வாலையைக் கண்டு அக்கிரகாரம், நமது ஆதிக்கம் அழிந்தது என்ற அழுட்டுமூ! அநீதியும் அக்ரமமும் அழியட்டும! என்று தமிழர் முழக்கமிடும் காலம் அதிக தூரத்தில் இல்லை. அதுவரையில், ஆரிய தாசர்கள் அகமகிழ்நிது, ஆனந்தமாக இருக்கட்டும்.

100-க்கு 90 பேர், கையெழுத்திடவும் தெரியாத பாமரர்களாக இருக்கும் நிலையிலே சாதாரணக் கல்வி வேண்டுமா? கலை வேண்டுமா? என்ற சு.ம.க்கள் கேட்கின்றனர். இதற்கு என்ன பதில் உரைப்பீர், என்று அவர்களைக் கேட்கிறேன். சம்ப இராமாயணம், பெரியபுராணம், மனுநீதி எனம் ஏடுகளில் உள்ள மதக் கோட்பாடுகளைக் கண்டு மதிப்புத் தருகிறீர்களா அன்றி அவைகளில் உள்ள இலக்கியச் சுவைக்காக மதிப்புத்

தருகிறீர்களா? மதக் கோட்பாடுகளுக்காகத்தான் என்று கூறுவீரேல், அக்கோட்பாடுகள் பகுத்தறிவுள்ள வனால் ஏற்றுக்கொள்ளக் கூடியனவா? இலக்கிச் சுவைக்காகத்தான் எனில் இவைகள் வெறும் கற்பனைகள் என்று திட்டமாக மக்களுக்குக் கூறிடவும் அத்திட்டத்தின்படி புராணிகரின் கருத்துகளைக் கொண்ட விழாக்கள், நடவடிக்கைகள் நடைபெறக் கூடாதென்று ரைக்கவும் தயாரா? கலைப்பகுதி மதப்பகுதி என்று பிரித்திடவும், மக்களிடம் உரைத்திடவம் முன்வருவீரா? என்ற கேள்விக்கு என்ன பதில் கூறுவர் அந்தப் பாதந்தாங்கிகள். முத்தமிழ் கற்றோம், மூலமுணர்ந்தோம், ஞாலமெலாம் பேரெடுத்தோம் என்று பறைசாற்றினால் போதுமா? கலை, கலை என்று கதறினால் போதுமா? இனத்தை அழிக்கும் கலைக்கம் தூக்குக் கயிறக்கம் என்ன வித்தியாசம். உலகிலே, எவ்வளவோ கலைகள் காலத்தால் கரைந்துபோன விறகும், பிதியதாகக் பலைகள் மலரவில்லையா? ஜார் காலக்கலை ரஸ்புடீன் ரசமாக இருந்தது, புரட்சிக்குப் பிறகோ புதுமையான கலை அங்க தோன்றவில்லையா? கலைபோகும் என்று தலையில் உள்ள நிலை கெட்டுக் கூவுபவர்கள், தங்கள் அறிவைக் கொண்டு, புத்துலக நோக்கங்கொண்டு புதுக்கலைகள் இயற்றலாகாதா? தமிழர்களை மூடர்களாக்கும் அந்த மூன்று புளுகுமூட்டைகளை முதுகிலே சுமந்து திரிகிறீரே, அவைகளைத் தீயிலே தள்ளிவிட்டுத், தமிழகத்தின் சிறப்பு. தமிழர கொள்கை என்பன பற்றி ஏன் நீவிர் இலக்கியங்கள் தீட்டக்கூடாது என்ற கேட்டால், இந்தக் கற்றறிந்த கபோதிகள் காகூவெனக் கூவுவதே சிலாக்கியமென்று கருதுகின்றன. இதுதானா அழகு? தோழர் சச்சிதானந்தம் பிள்ளை அவர்கள் கூறுவது போல் சு.ம.க்களின் செயல், முதுவேனிற் காலப் பித்தமல்ல - பருவமே அல்ல. இது குளிர்காலம் - நாட்டிலே இதன் இயல்புப்படி, புராணப் புரட்டர்கள் உடல் நடுக்கத்துடன் உள்ளமும் நடுக்கமெடுத்து, ஏதேதோ உரைக்கின்றனர். இவர்களை, நான், தங்கள் ட்சியை விளக்கித் தாராளமாக, வாதங்களை நீட்ட வாரீர் என்று அழைக்கிறேன். அதைச் செய்ய ஒரு சந்தர்ப்பந்தரவே தீயிலிடுவதைக் கொஞ்ச நாட்களுக்கு அவகாசம். அதற்குள் அவர்கள் சுவடிகளைப் புரட்டிச் சொல்லம்பு திரட்டிக், கள்த்திலே நிற்கட்டும நிற்பாரா? சேலத்திலே, கொளுத்தவில்லைச் செந்தமிழ் நாட்டிலே இனி நமக்கப் பயமேயில்லை என்று மனப்பால் குடிக்கும் தோழர்களே, கேண்மின், சேலத்தில் சென்னையில், நெல்லையில், நாகையில், தஞ்சை திருச்சியில், திருவாரூர் பட்டுக்கோட்டை திருத்துறைப் பூண்டி முதலான இடங்களில்,

தமிழகத்திலே பல்வேறு இடங்களில் பார்ப்பனீயத்தை வளர்க்கும் அந்தப் பழைய கூளங்கள், பக்தியின் பெயரால் மக்களைப் பட்டி மாடுகளாக்கும் அப்பாதக ஏடுகள், ஆரியக் கோட்டைக்கு அமைந்துள்ள ஆபாசக் களஞ்சியங்கள் மக்களின் இழிவுக்கும் மடைமைக்கும் பேதத்துக்கும் பிளவுக்கும் காரணமாக உள்ள அந்தக் காகிதக் கத்தைகள் தீயிலிடப்பட்டு, அதைச் சுற்றித் தமிழர் கூட்டம் நின்று, தீ பரவட்டும்! திக்கெட்டும பரவட்டுமூ! ஜாதிச் சனியன் சாகட்டுமூ! வைதிகப் பிச்சுவெந்து நீறாகட்டும்! என்றும், தாண்டவமாடு தீயே, திருநடனம் செய்! ஆசிரியர் கண்டு மிரண்டு தமது ஆதிக்கம் அழிந்தது என்ற அழுமளவு ஓங்கி நில் என்றும், புகை கப்பிக் கொள்ளட்டுமூ! புல்லர்களின் வாழ்வு பொசுக்கப்பட்டது என்று தெரியட்டும் என்றும் கூறிடும் காலம் வரத்தான் போகிறது.

ஆரியமத ஏடுகள் ஒழிப்பு நாள் நடைபெறப் போகிறது. அதற்குள் உமது அறிவுத் திறனைக் காட்டி அவைகளைக் காப்பாற்ற வாரீர் என்ற அழைக்கிறேன்.

(திராவிடநாடு - 24.01.1943)

# நடமாடும் அபாய அறிவிப்பு

என்ன அக்ரமம்! திருப்பதி மலைக்குச் சென்று வினைதீர்ப்பானுடைய வைரமுடியைத் தூக்கிக்கொண்டு, திருவாபரணங்களைச் சூறையாடித் தடுக்க அந்த பட்டர் கூட்டத்தைச் சிண்டு பிடித்தாட்டி, மலை மீதிருநது கீழே உருட்டி, அட்டகாசம் செய்ததாம் ஒரு கொள்ளைக் கூட்டம். இப்படிப்பட்ட பாவம் செய்தவர்கள் ரௌரவாதி நரகத்தில் வீழ்வார்களே என்று கூறினவர்களைப் பார்த்து இப்போது நாங்கள் படும்பாடு, நரக வேதனையைவிட என்ன குறைந்துவிட்டது. வறுமையெனும் அக்கினிக்குண்டத்திலே தள்ளினீர்கள், மடைமை எனும் க்கிலிட்டு ஆட்டினீர்கள்; பஞ்சமெனும் பாம்புப் புற்றிலே புகுத்தினீர்கள், நோயெனும் நட்டுவக்காலி கொட்டிடச் செய்துர்கள், வேலையில்லாக் கொடுமை எனும் இருப்புலக்கையால் நொறுக்கினீர்கள், இதைவிடக் கொடுமை நரகலோகத்தில் இருப்பதாக நீங்கள் கூறும் கருட புராணத்தில் கூடக் காணோமே. இவ்வளவு கொடுமைகளை அனுபவித்து, அங்கம் துடித்து, ஆவி சோர்ந்தோம், அபயமளிக்க யார் முன் வந்தனர். எங்களுக்கும் அப்பனாமே இவர், இவருக்கு முறையிட்டோம், வீதியில் புரண்டோம், கோவிந்தா என்ற கூறினோம், மஞ்சளுடை தரித்தோம், தலையை மழுங்க மொட்டையடித்தோம்; பலன் என்ன கண்டோம். இங்கே புகுந்தோம், கிடைத்ததை எடுத்தோம் என்று பதில் கூறினார்களாம். இப்படியும் காலம் வருமா?

வழிவிடு! ஓரமாக நில்! ஏ! வரட்டுத் தலைப்பயலே! சத்தம் கேட்கவில்லையா உன் செவிட்டுக் காதிலே! ஜகத்குரு சங்கராச்சாரியார் வருகிறார் பல்லக்கிலே, ஓரமாக நின்று சேவித்துக்கொள்.

பல்லக்கில் வருவது யாரப்பா? ஜகத்குருவா? என்ந ஜகத்துக்கு? என் ஜகம் எது தெரியுமா? உழைத்து அலுத்து உண்ண உணவின்றி வாடிடும் மக்களின் ஜகம். அதற்கா இவன் குரு? என்று ஆர்ப்பரித்து, எவனோ ஒரு வெறியன், தடுத்த பக்தனைத் தலையில் தள்ளிவிட்டு, பல்லக்கைப் பிடித்துக் குலுக்கி, இறங்கு கீழே! நடந்துபார் உலகத்தை! வாடும் மக்களைப் பார்! உன் வேதாந்த விசாரணையை நிறத்து, மக்களின் விசாரத்தைக் கவனி! மனிதத்தன்மை பெறு! என்று ஜகத்குருவை ஏசி, அக்ரமம் செய்தானாம். ஜகத்குரு பயந்தோடினாராம்.

இறக்கடா தலைமீதிருக்கும் மூட்டையை. இகத்திலிருநது பரத்துக்குச் சேதிவிடும் தூனா நீ - இந்தப் பண்டங்களைத் தின்றுதான் ங்கே உள்ள

என் மூதாதையர் வாழ வேண்டுமென்றால், அவர்கள் இறந்து அங்கு போவானேன். நீ உடனே அங்கு போய் அவர்களை இங்கேயே வரச் சொன்னதாகக் கூறு என்று எவனோ ஓர் போக்கிரி புரோகிதரின் மூட்டையை அபகரித்துக் கொண்டு ஆர்ப்பரித்தானாம்.

ஏனய்யா! இது என்ன ஆபிசா, அக்கிரகாரமா? இங்கே, சர்வம் பிர்ம்மமயமாகத்தான் இருக்கவேண்டுமா? தமிழரின் பணத்தைக் கொண்டு நடக்கும் நிலையத்திலே, தமிழன் பங்கா இழுக்கவும், பில்லை துடைக்கவுந்தான் இடம் பெற்றானா? ஓடுங்கள் வெளியே! காலி செய்யுங்கள் இடத்தை! என்று ஓர் பேர்வழி, சீற்றத்தோடு கூவிக்கொண்டே ஆபீசுகளில் நுழைந்து, பிராமண உத்யோகத்ஸ்தர்களை அடித்துத துரத்தினானாம்.

இன்னோரன்ன பிற காட்சிகள் நேரிடுமானால், சமுதாயம் எப்படி இருக்கும், சர்க்காரின் சுழல் துப்பாக்கிக்கு ஓய்வு கிடைக்குமா, நாட்டிலே நிம்மதி இருக்குமா, களமாகி விடாதா, கண்றாவியும் கோரமும் தாண்டவமாடாதா? பார்ப்பனியமெனும் பாம்பு நெளியும் பழமை எனும் படுகுழியில் வீழ்ந்து, தத்தளிக்கம் தமிழர், தமது துன்பம் மலைபோல் இருக்கக் கண்டு, மனங் கொதித்து, இனிப்பட முடியாது இத்துயரை என்று கருதிப் பதைத்தெழுந்து, வந்தது வரட்டுமூ என்று துணிந்து சட்டம் சமாதானம் சாந்தி முதலியன பற்றி மறந்து, ஆத்திரத்துக்குச் சாத்திரமேது என்று கூவிப் பசிப்புலியுடன் போராடுவதைவிட, தண்டனையைத் தழுவிக் கொள்வோம் என்று திகைப்பால் துணிந்து, நமது இந்நிலைக்குக் காரணமென்னவென்று கேட்டு, நாம் இவ்வளவு நொந்து கிடக்கும்போது நோகாமல் பிழைக்க ஒரு கூட்டம் இருப்பதா என்று பதைத்துக கனல் கக்கும் கண்ணினராய், துடிக்கம் தோளினராய், நிமிர்த்திய மார்பினராய், ஆத்திரத்தின் உருவங்களாகி, அழிவெனும் ஆயுதமேந்தி ஆர்ப்பரிக்க நேரிட்டால், நிலைமை என்னவாகும்? நினைத்தாலே பயப்படக்கூடியதாக இருக்கும், பிணங்கள் கீழே உருளும். இரத்தம் ஆறென ஓடும.

சமுதாயப்பற்றும், நாட்டு நலனுங் கொண்ட விவேகிகள், இத்தகைய பயங்கர நாட்கள் வராதபடி, பாதுகாப்புமுறை அமைத்து, பதைப்புக்குப் பரிகாரம் தேடிக், கொதிப்பை அடக்கத் திட்டங்களிட்டுக், குறை களைவர். ஆர்ப்பாட்டக் காரரோடு அந்தப் பஞ்சைகளால் என்ன முடியும்? பயல்களை ஒடோட விரட்டமாட்டோமா? சவுக்கை எடு? தடியினல் குத்து? குதிரைப்படையை ஏவு என்று கூவுவர். புண்பட்ட மனிதரின் பெருங்கடல், கோப அலையைக் கிளப்பிக் கரைபுரண்டோடும் போது, இந்த ஆர்ப்பாட்டக்காரர்கள், அலைமீது பொத்தல் இலைகளாகிவிடுவர். கருத்தழிந்தோரோ அந்த முட்டார்களுக்கு என்ன தெரியும்? ஏதோ இரண்டொருவர் குத்திவிடுகிறார்கள், அதுகள் கூவுகின்றன. அவர்களின் சத்தத்தைக் காதிலே போட்டுக்கொள்ளாமல் இருந்துவிட்டால் சந்தடி தானாக அடங்கிவிடும என்று கூறுவர், பின்னர் புலம்புவர்.

தலைமுறை தலைமுறையாகச் சமுதாயத்திலே கடைசிப் படியில் நின்றுகொண்டு மதத்துறையிலே மடைமையைக் கட்டிப்புரண்டு அரசியலிலே அடிமையாகித் தவித்துப் பொருளாதாரத்திலே உழைத்து அலுத்து, உணவின்றித் தவிக்கும் கூட்டமாகிக் கஷ்டமனுபவித்துத் தற்குறிகளாய் தாசர்களாய்த் தரித்திரர்களாய்த் திகைத்துக் கிடக்கும் தமிழரின் குறைபாடுகளை முறையீடுகளைக் கோரிக்கை களை, கிளர்ச்சிகளை, எச்சரிக்கைகளை, ஆரிய இனம் மதத்துறையிலும் கல்வித் துறையிலும் அரசியல் துறையில் தனக்கிருக்கும் செல்வாக்கை நம்பிச் செவிமடுக்க மறுத்து, உண்மையைத் திரித்து உரைப்பதுடன், உதாசீனம் செய்வதை உண்மையில் விவேகமென்று யாரும் கூற முடியாது. நாம் மேலே தீட்டிய பயங்கர நிகழ்ச்கிகள், என்றேனும் ஓர் நாள் எதிர்காலத்தில், இன்று நியாயமான முறையில் சட்ட வரம்புக்கு உட்பட்டு சமாதான நோக்குடன் கிளர்ச்சி செய்வோரின் கல்லறைகள் மீது புல் முளைத்த பிறகோ ஏற்படின் என் செய்வது என்ற நினைப்புடன், நாட்டுத் தலைவர்கள் நடந்து

கொள்ளவேண்டுமென்பதே நமது வோ. நமது கிளர்ச்சியின் நோக்கம் இதுவென்பதை உணராதார், நாம் வீணாக வகுப்புவாதம் பேசுகிறோம் என்றும், விஷமம் செய்கிறோமென்றும் கூறுவது, தங்களைத் தாங்களே ஏமாற்றிக்கொண்வதோடு, தாங்க முடியாத தொல்லைகளை, வருங்காலம் அடைய இப்போதே அச்சாரம் வாங்குவதாக முடியும் என்போம். உடலுருக்கிக்கு மருந்திடாது வளர்ப்பவரும், அஸ்திவாரம் ஆடிடக் கண்டும், மேலே மாடி கட்டுவோரும், புற்றருகே குடியிருந்துகொண்டு நமக்குத்தான் புன்னாகவராளி தெரியுமே, பாம்பு என்ன செய்யும் என்று எண்ணுபவரும், பாதையிலிருக்கும் பள்ளம் பச்சைக் கொடி படர்ந்திருப்பதால் கண்ணுக்குத் தென்படாததால், பாதையில் பயமில்லை என்று கருதிப் பட்டத்தரசனின் நடை பயில்வோரும், என்ன கதிக்கு ஆளாவரோ, அக்கதிக்கச் சமுதாயத்தைக் கொண்டுவரும் சழக்கர்கள் இன்ற தலைவர்களென்றும், தம்பட்டமடிப்போரென்றம் உலவுங்காரணத்தால், பிறகோர் நாள், என்னென்ன பயங்கரங்கள் நேரிடுமோ என்று அஞ்சியே, இன்றே, இருதயத்திலே சமரச நோக்கமிருக்கும்போதே, பேதத்தை ஒழித்துப. பிளவுகளை அடைத்துப் புண்ணையாற்றிப், புலம்புவோதைத் தேற்றிப், பொல்லாங்கைப் போக்குவோம் வாரீர் என்று, பெரியார் ஈ.வெ.இராமசாமி பன்னெடுங்காலமாகத் தமிழகமெங்கணும் தடிதாங்கிச் சுற்றிக் கூறிவருகிறார். அவர் சொல் கேட்க மறக்கம் பிரம்ம சொரூபங்கள் அவர் போன்ற தலைவர்கள் மக்களைக் கட்டுக்குள் நிறுத்தும் நிலைமையும் மாறி, குறைதீர்த்துக் கொள்ளக் குறுந்தடி எடுத்தலே வழி என்று கூவுவோர் கிளம்புங்காலம் ஏற்பட்டால் என் செய்வது என்ற கவலைகொள்ள வேண்டாமா என்று கேட்கிறோம்.

பயங்கரச் சம்பவங்கள், பதைத்தெழும் பாமரரால் நடைபெற்ற சரிதத்தை அவர்கள் மறந்தனரா? அமைதி குடிகொண்ட ஆலயமென்ற புகழ்பெற்ற ஆங்கில நாட்டிலுங் கூட, எத்தனை எத்தனை புரட்சிகள் நடைபெற்றன.

இறைவனுக்கும் அரசனுக்கும் பேதமேது என்று கூறின நாட்டினரே, தமது மன்னனை மாளிகைக்கெதிரே தூக்கில் மாட்டினது பொய்யா! சிறைக் கூடத்தைத் தூளாக்கி, மாளிகைகளை மண்மேடாக்கி, மன்னரையும் தர்பார் தளுக்கரையும் கொன்று குவித்த பிரான்சுப் புரட்சி, கற்பனைக் கதையா? உலகமே உறமியபோதும், இரத்தவெள்ளம் பெருகியபோதும், படைகள் நடமாடிய போதும், முதலாளித்தனத்தை முறியடித்தே தீருவோம் என்று சூள் உரைத்துச் சளையாது சமரிட்ட சமதர்மச் சிங்கம் லெனின் தோற்றுவித்த சோவியத் நாடு, கற்பனாலோகமா? இத்தகைய சம்பவங்களைத் தெரிந்திருந்தும், தமிழர் கிளர்ச்சியை அலட்சியமாகக் கருதித் தம்மிடம் சிக்கிய தலையாட்டிகளைத் தட்டிக் கொடுத்துத் தமது தர்பாரை நடத்தமுடியும் என்று தர்ப்பா சூரர்கள் இன்னமும் நினைப்பது கண்ணீரும் புன்னகையுங் கொண்ட முகத்தினராக்குகிறது நம் போன்றவர்களை.

எனபே ஒருவரிருவராவது, உண்மை நிலைமையை உணரக் காணும்போது நமக்கு உவகை பிறக்கிறது.

சென்னைக் கிருஸ்தவக் கல்லூரி மாணவரிடையே சொற்பொழிவாற்றிய தோழர் டி.டி.கிருஷ்ணமாச்சாரியார், ஈ.வெ.இராமசாமி போன்றாரைக் குறித்து அலட்சியமாக, ஏனோ தானோவென்று இருத்தல் ஆபத்தானது. ஏனெனில், கவனித்துத் தீர்க்கப்படவேண்டிய மக்களின் மனக்குறையின் சின்னமாக ஈ.வெ.இராமசாமி விளங்குகிறார் என்ற 19-ந் தேதி மாலை கூறினார். அவரது கூர்ந்த மதியை நாம் போற்றுகிறோம்.

அதோ பாறை, அவ்வழி சென்றால் கப்பல் சுக்கு நூறாகும். இவ்வழி வாரீர். என்று கலங்கரை விளக்குக் கூவுவதில்லை. ஆனால், கடலிற்கலஞ் செலுத்துவோர், அவ்வொளி கண்டே தம்வழி வகுப்பர். ஆம்! அவர் சீறிக் கிடக்கும் தமிழரின் சின்னம்! பயங்கர நாட்கள் பிறக்குமுன், ஒரு சிலரின் ஒய்யார வாழ்வுக்காக ஒரு இனத்தை அழிக்காதீர் என்ற சீலத்தின் சின்னம்! அதை உணராதார், சமுதாயமெனம் மரக்கலத்தைச் சுழலிடை செலுத்திப், புயலிடை விடுத்துப், பாறையில் மோதவிடும காரியத்தைச் செய்யும் கயவர் என்போம். அபாய எச்சரிக்கை, பெரியார் இராமசாமி, அதை அலட்சியமாகக் கருதுவோரிடம் அடைக்கலம் புகுவது, ஆபத்துக்கு அச்சாரம் பெறுவதாகவே முடியும். இதனை உணர்ந்து, நல்லுரையாற்றிய தோழரை நாம் மனமாரப் பாராட்டுகிறோம்.

# தீ அணைக்கும் படையினரே !

புராண இதிகாசாதிகளைத் தீயிலிடக் கூடாது என்று திக்கெட்டுமூ முழுக்க மிடுபவர்களே! இன்றிருந்து ஓர் திங்கள் வரை, புராண இதிகாசாதிகள் இருக்கத்தான் வேண்டுமென்பதற்குக் காரணங் காட்டியும், மேற்படி புராணாதிகளைக் கண்டித்துப பகுத்தறிவாளர்கள் வெளியிட்டுள்ள ஆராய்ச்சிகளை மறுத்தும், கண்ணியமாகவும், யோக்யப் பொறுப்புடனும், கட்டுரை எழுதுவீரேல், அவைகளை நாம் வெளியிடவும், அவற்றுக்குச் சமாதானந் தீட்டவும் தயாராக இருக்கிறோம் என்பதைத் தெரிவித்துக கொள்கிறோம். பொது மக்களிடம் இருசாராரும விஷய விளக்கம் செய்வோம், வாரீர்! திகைப்பு, துயரம், பதைப்பு, சந்தேகம் கொண்ட தோழர்கள் புராண இதிகாசாதிகளின் ஆபாசத்தைக் குறித்துச் சுயமரியாதை இயக்கம் கூறும் கருத்துகள் பற்றிக் கேள்விகள் அனுப்பினால், கேள்விக்கேற்ற முறையிலே பதில் அளிக்க திராவிட நாடு தயார், என்பதையும் தெரிவித்துக் கொள்கிறோம்.

சேலம் சுயமரியாதை மாநாட்டில் எக்ஸ்பார்ட்டி தீர்ப்பு கூடாது என்ற கருதியே, வழக்குக்கு வாய்தா தரப்பட்டிருக்கிறது.

ஒரு திங்களில் உமது கட்சிக்கான ஆதாரங்களைக் காட்டுக.

(சுயமரியாதைக்காரர்கள் - திராவிடநாடு - 24.01.1943)

# புராண இதிகாச மனுதரும ஒழிப்பு

கம்ப ராமாயணம் பெரிய புராணம், மனுநீதி முதலிய புத்தகங்களைச் சுயமரியாதைக்காரர்கள் தீ வைக்கப் போவதை குறித்து, இந்து பத்திரிகை 17.01.43-ல் ஓர் உபதலையங்கத்தில் ஓர் ஒப்பாரி வைத்து அழுதிருக்கிறது.

இவ்விதம் சுயமரியாதைக்காரர்கள் செய்கையைக் கண்டிக்க இந்துப் பத்திரிகைக்கு யோக்கியதையுண்டா?

காங்கிரஸ்காரர்கள் பரதேசித் துணியை மூட்டை மூட்டையாய்க் கழுதைபோல் சுமந்து போய்த் தீ வைத்துக் கொளுத்தினபோது, இந்து பேப்பரின் புத்தி புல் மேயப் போயிருந்ததோ? துணிகளை மட்டும கொளுத்தலாமா? அது அறிவுடையவர்கள் செய்கைதானா? தனக்கு வேண்டாதவைகளைக் கொளுத்தினால் அது குற்றமாகாதென்பது இந்துவுன் கருத்தா?

உனக்கு வேண்டாதவைகளைக் கொளுத்த உனக்குச் சுதந்திரமிருக்கும்போது, எனக்கு வேண்டாதவைகளை நான் கொளுத்தினால் நீ என்ன கேட்பது, பாலம் கட்னால் இருகரைக்கும்தானே? உனக்கொரு வழக்கு மற்றவர்களுக்கு ஓர் வழக்கா? இதற்குச் சர்க்கார் உதவி தேடுவது வேறா? நிற்க! சுயமரியாதைக்காரர்கள் கம்பராமாய ணத்தையும், பெரியபுராணத்தையும், தமிழ் அபிமானம் கருதித் தீக்கிரையாக்குவதினின்றும் விலக்கிவிட்டு மனுஸ்மிருதியை மட்டுமூ எரியவிடுவார்களா; அதை தீக்கிரையாக்க வேண்டியது அவசியத்திலும் அவசியம். அதற்காக ஜெயிலுக்குப் போகவேண்டியது நேரிட்டால் ஜெயிலுக்குப் போகும் போதும பின் விடுதலையாய் வந்த உடனும் இந்தப் புண்ணிய கைங்கரியத்தைத் தமிழ் இரத்தம் ஓடும ஒவ்வொருவனும் செய்யவேண்டியதே.

நாய், கழுதை, பன்றி முதலியவை களுடன் நம்மை ஒப்பிட்டுப் பேசும் புத்தகத்தை எது செய்தால் என்ன?

தமிழர்களேசுயமரியாதை எந்தக் காரியமானாலும அதன் விஷய உண்மைகளை ஆராய்ந்து அலசிப்பார்த்து காங்கிரஸ் பத்திரிகைக்

கூற்றுகளில் மயங்கி உங்கள் சித்தத்தைச் சிதறவிடாதீர்கள்.

அ.வ.முத்தையா பிள்ளை, தலைவர் எஸ்.ஐ.எல்.எப். திருநெல்வேலி ஜில்லா.

குறிப்பு:- இவ்வறிக்கை, மனுதர்ம நூலைக் கொளுத்துவதை வண்மையாய் ஆதரித்தும், பெரிய புராணம், கம்ப ராமாயணமாகிய இரண்டினையும் தமிழ்ப் பற்றின் காரணமாகக் கொளத்த வேண்டாமென்றம் வற்புறுத்துகிறது.

மனுஸ்மிருதியில் தமிழ் மக்களை நாய், கழுதை, பன்றி முதலியவைகளுக்கு ஒப்பிட்டுப் பேசியிருப்பதால் அதனை கொளுத்த வேண்டும்.

கம்இராமாயணத்தில், தமிழ மக்களைக் குரங்குகள் என்று தமிழ் மன்னனான இராவணனை அரக்கனென்றும் அயோத்தி அரசனான இராமனைக் கடவுள் என்றும் பேசப்பட்டிருக்கிறதே! இதைக் கொளுத்துவதில் என்ன தவறு?

பெரியபுராணத்தில், தமிழ் மக்களைச் சற்சூத்திரர் அதாவது நல்ல அடிமைகள் என்றம், ஒழுக்கங் கெட்டவர்கள் என்றும், கொலைக்கஞ்சாக் கொடியவர்கள் என்றும், முட்டாள்கள் என்றும் குறிப்பிடப் பட்டிருக்கிறதே! இதைக் கொளுத்துவதில் என்ன தவறு? மொழிப்பற்று ஒன்றை மட்டும் கருதினால் போதுமா? தமிழ் மக்களை முட்டாளாக்கியும் மிருகத்தன்மை கற்பித்தும் உள்ள இத்தகைய நூல்களைக் கொளுத்தாது விடுவது உண்மையான மொழிப்பற்றாகுமா?

ஒரு மொழியினிடத்துப் பற்றுவைப்பது வேறு; அந்த மொழி கற்பிக்கும் அறிவுக் கொவ்வாக் கருததுக்களை ஆதரிப்பது வேறு, தாயைப் போற்றுவதும் தாயை விலைமகளாக்குவதும் ஒன்றுதானா?

இயற்கை அமைப்பும், இனிமையும், சொற்சுவை பொருட்சுவையும் வாய்ந்துள்ள நமது அருமைத் தமிழ்மொழியின் கண், மணியிடையே பவளம் போல் வந்து கலந்துள்ள ஆரிய மொழியையும் அது கற்பிக்கும் அறிவிக்கும் இயற்கைக்கும் பொருந்தாக் கதைகளையும் நுழைத்துத்தானோ தமிழ்ப்பற்றை உணர்த்துவது?

தம் மனைவியை இன்னொருவனுக்கு விட்டுக கொடுத்தால்தான், அந்த சிவனாரின் திருவருள் கிடைக்கும் என்று கூறும் ஒரு புராணத்தை இன்னும் கொளுத்தாமல் இருப்பது தமிழ் மக்களின் தவறென்பதே பகுத்தறிவாளரின் கருத்தாகும்.

சென்னை நக்கீரர் கழக எழுத்தாளர் ஒருவர், மனு தர்ம நூல் இறந்துவிட்டதென்றும், ஆங்கிலேயர்களே மனு தர்ம நூலைத் தள்ளிவிட்டார்கள் என்றும்; கம்பராமாயணத்தை மதக்கண் கொண்டு பார்க்காமல் அறிவுக்கண் கொண்டு பார்க்க முடியும், பெரியபுராணத்தைச் சரித்திரக்கண் கொண்டு பார்க்கும் படியும் எழுதுகிறார்.

சமூக சம்பந்தமான வழக்குகள் முறை மன்றங்களில் நடக்கும்போதெல்லாம் நீதி வழங்குவோர், மனுதர்ம நூலையும் பராசஸ்மிருதி நூலையுமே மேற்கோள் காட்டி வழக்குகளை முடிவு செய்து வருவதை இந்நண்பர் அறியாதிருப்பது பெரிதும் வருந்தத்தக்கதே.

மைசூர் திருவாங்கூர் முதலான ஊர்களில் இருக்கும் குறுநில மன்னரைப்போன்ற ஒரு அயோத்தி அரசனைக் கடவுளாக்கு வதற்காகப் பாடப்பெற்ற கம்பராமாயணத்தை மதக்கண் கொண்டு பார்க்காமல் அறிவுக்கண் கொண்டு பார்த்தாலும் இராமனைக் கடவுளாக வணங்கு என்ற மத முடிவைத்தான் அது கற்பிக்கிறது. எனவே மக்களின் வாழ்க்கை முன்னேற்றத்திற்குத் துணை செய்யாத இதில் அறிவுக் கண்ணுக்கு வேலை எங்குளது?

இனிப் பெரியபுராணத்தைத் சரித்திரக் கண்கொண்டு பார்க்கும்படி எழுதும் இந்நண்பர்க்குச் சரித்திரமே தெரியாதென்று நினைக்க வேண்டியிருக்கிறது. ஆனால், ஒன்று மட்டுமூ உண்மை. அதாவது, ஒரு காலத்திலே தமிழ்நாட்டில் 63 முட்டாள்கள் இருந்தார்கள். அவர்களின் சரித்திரத்தைக் கூறுவதுதான் பெரியபுராணம் என்று சொன்னால் அதை நாம் வரவேற்கிறோம். மற்றும் பெரியபுராணத்தில், மக்களின் அறிவைப் பாழாக்கும் முட்டாள்தனமான கதைகளைத் தவிர, வேறு சரித்திர

சம்பந்தமான உண்மை நிகழ்ச்சிகள் எதுவும் இல்லை என்பதைப் பகுத்தறிவுக்கண் கொண்டு பார்க்கும்படி, நெற்றிக் கண்ணைக் காட்டினும் குற்றம் குற்றமே என்ற கூறிய நக்கீரன் பெயரால் கழகம் நிறுவி, அதன் எழுத்தாளனாக இருக்கும் நண்பரைக் கேட்டுக்கொள்கிறோம்.

(திராவிடநாடு - 31.01.1943)

# பதிகம் பாடுவீர் !

ஏண்டா சுப்பு! காலேஜுக்கு போய்விட்டா வருகிறாய்? என்று அந்த நடுத்தர வயதுள்ள் திருபபிரம்மம் வாலிப சொரூபத்தை ஆச்சரியத்தோடு கேட்டது. சுப்பு சோகத்தோடு, ஆமாம் என்று இழுக்கவே, பெரிய உருவம். இன்னிக்கி காலேஜ் ஸ்ட்ரைக்காமே, நீ மட்டுமூ எப்படிக் காலேஜ் போனே என்று கேட்டிட, வாலிபன், போனேன். எல்லாப் பசங்களுமே நுழைஞ்சுட்டா, நானும் போனேன். ஸ்ட்ரைக் சரியா நடக்கல்லே என்று கூறினான். காலேஜுக்குப் போறவாளைத் தடுக்கலையோ என்று பாணம் விட்டார் பெரியவர். இல்லை என்று கூறாமல் மாணவன் தலை அசைத்தான்.

என்ன இன்னிக்கு? எதுக்காக ஸ்ட்ரைக்? என்று மற்நொருவர் கேட்டார். மாணவன் ஆனந்தமாக, இன்டிபெண் டென்ஸ்டே சுதந்திர நாள் என்று கூறினான்.

என்ன செய்து என்ன சுகம்? நீங்கள் ஸ்ட்ரைக் செய்து என்ன பலன்? இஜின்னாதான் ஒரே அடியாகப் பேசுகிறாரே. என்ன செய்ய முடியும்னே என்று முகாரியில் ஆரம்பித்தார் முதலில் பேசியவர். இரயில் ஓடிக்கொண்டே இருந்தது. மாணவன் மௌனமாகிவிட்டான். என்னால் சிரிப்பை அடக்க முடியவில்லை. சேத்துப்பட்டுக்கும் தாம்பரத்துக்கும் இடையிலே மூளை வேலை செய்வது கண்டு வியந்தேன். மாணவர்களின் கிளர்ச்சி மட்டு என்பதிலே சந்தேகமில்லை. காலேஜுக்குப் போகும் மாணவர் தொகை அதிகமாகவும், தடுக்கும் போகும் மாணவர் தொகை அதிகமாகவும், தடுக்கும் தோழர் தொகை குறைவாகவும் இருந்தால், ஸ்ட்ரைக் எப்படி நடக்கும். அவர்களும் எவ்வளவோதான் வெள்ளைச் சுவர்களைக் கரிமயமாக்கி தலைக்கோயிலை இரைச்சலிடமாக்கிப் பார்க்கின்றனர். முதல் நான் முறுக்கு, இரண்டாம் நான் தளர்ச்சி அடைகிறது. மூன்றாம் நான் முறிகிறது. நாலாம் நாள் நான் முன்னே, நீ முன்னே என்று மாணவர்கள் வகுப்புகளுக்குச் செல்கின்றனர். மும்முரமாக ஸ்ட்ரைக் நடந்தபோது ஒரு ரசமானக் காட்சி ஓரிடத்தில் நடந்ததாம். மாணவிகளின் ஹாஸ்டல் வாயிலில் மாணவர்கள் மறியல் செய்த வாயிற்படியில், குப்புறப் படுத்துககொண்டு கூவினார்கள். மாணவிகளுக்கோ ஸ்ட்ரைக்கில் சேர விருப்பமில்லை. வெளியே போகவேண்டுமென்றாலோ, மாணவனின் உடலை மிதிக்க வேண்டும். எலிசபெத்ராணி ஒரு சமயம் விருநதுக்கப்

போனார்களாம். வழியிலே சேறம் நீருமாக ஓரிடம் இருந்தது. பிரிட்டிஷ்ராணி எப்படி அதிலே கால் வைப்பது! உடனே, பரிவாரத்திலே இருந்த ஓர் வாலிபன், ராலே தனது பட்டு மேலங்கியைத் தரையிலே விரித்தான். எலிசபெத் அம்மையின் கண்களிலே களிப்புக் கனிந்தது. இதழ்கள் அசைந்தன. மேலங்கிமீது கால்வைத்து நடந்தார். ராலே, மேலங்கியை பயபக்தியோடு எடுதது, என்னே என் அதிர்ஷ்டம்! எலிசபெத் பெருமாட்டியின் திருப்பாதங்கள் தீண்டிய பெருமை கொண்ட மேலங்கி பெற்றேன். நானே பாக்கியவான் என்று பூரித்தானாம். பிறகு சர்.வால்ட்டர் ராலே, ஆனான், அரசியின் புன்னகை கிடைத்தது போலவே பிறகு விரோதமும் கிடைத்தது. மாணவர்கள் இதை அறியாதவர்களா? மாணவிகளுக்கு மட்டும தெரியாதா? எனவே, எந்த மாணவி, தன்மீது கால் வைத்து நடந்து சென்றாலும், அந்த மாணவன் புளகாங்கிதமடைந்து அந்தச் சட்டையைத் தனக்குக் கிடைத்த சம்பந்து என்ற கருதியிருப்பானே தவிர, வெகுண்டேதும் கூறியிரான். ஆனால் மாணவிகள் தமது பாதத்தைப் பாதுகாத்துக்கொண்டனர். பார்வை தோஷங்கூடாது என்பதற்காக. எனவே வாயிற்படியிலே இருந்த தோழர்கள், கவிழ்ந்து கிடக்கையில், விடுதியைச் சுற்றி இருந்த வேலியை, மானெனத் தாண்டி மயிலென ஓடி குயிலெனக் கூவினர். பிரதர்! கெட் அப், எழுந்திரு நாங்கள் வெளியே வந்துவிட்டோமே என்று. மாணவர்கள் திருககிட்டுத் தலையைத் தூக்கினர். செல்விகள் திருவீதி நிற்கக் கண்டு திருவிழியில் நீர் பெருக்கி, தம் விடுதி திரும்பினர். எங்கே? என்பீர்கள். ஒரே ஒரு ஊரிலே ஒரு காலேஜ். பெயர் கூறமாட்டேன். அந்த மாணவர்கள் என் நண்பர்கள்!! மும்முரமாக ஸ்ட்ரைக் இருந்தபோதே இது, என்றால் இப்போது செல்ல வேண்டுமா? மார்க்கட் மிக மிக டல்! அது நிற்க, மாணவனை விசாரித்த அந்த மகானுபாவர், ஜனாப் ஜின்னாவைப் பற்றி ஏன் இடையிலே பேசினார் என்றறிய ஆவர் கொண்டேன். பத்திரிகையைப் பார்க்க, அதிலே ஜனாப் ஜின்னாவின் அறிக்கை இருக்கக் கண்டேன்.

இந்நாள் இவ் உபகண்டத்திலே உள்ள அரசியல் தலைவர்கள், சாவி தேடும் வேலையில் இருக்கிறார்கள். காங்கிரஸ், இந்திய அரசியல் சிக்கல் தீர்க்கும் சாவி வைசிராயிடம் இருப்பதாகக் கூறுகிறது. நாட்டிலே அமைதி ஏற்படுத்தி எதிர்காலத்தை உறுதிப்படுதுக் கொள்ளும் சாவி, காங்கிரஸ் தலைவர்களிடமே இருக்கிறது என்று வைசிராய் கூறுகிறார். இந்தியா மாதிரி மிஸ்டர். அமெரியோ, கதவு திறந்தே

இருக்கிறது. சாவி ஏன்? - என்று செப்புகிறார். சுயராச்யமெனும் நவரத்தின கண்டியை இறைத்து வைத்துளள பேழையின் சாவிக்காக, நாட்டுத தலைவர்கள் நாலா பக்கமும தேடுகின்றனர். இருசாராரும், அதாவது, காங்கிரசாரும், சர்க்காரும், சாவி இருவரில் ஒருவரிடம் இருப்பதாகக் கூறிக்கூறி அலுத்த பிறகு. இன்று இருசாராரும், சாவி, ஜனாப்ஜின்னாவிடம் இருக்கிறது என்று கூற முன் வந்துள்ளனர். ஜனாப் ஜின்னா கூறுகிறார். ஓஹோ! இவ்வளவு நாட்களாக இப்படி ஒரு ஆசாமி இருப்பதாகக் கூடக் கூறக் கூசினீர்களே. இப்போது, எங்கெங்கோ தேடித்தேடி அலுத்துத் திக்கெட்டும திரிந்து கெட்டபின் என் நினைவு வந்ததோ என்று கூறினார். போனதை எண்ணிடாதீர் புண்ணியவானே! சாவியைக் கொடும் என்ற நாட்டுக்கு முதற்பிள்ளைகளென்று கூறிடும் தோழர்கள் கேட்க, ஜனாப்ஜின்னா சிரித்துவிட்டு, சிகரெட் பற்றவைத்துககொண்டே, அட பித்துக்கொள்ளிகளா! என்னிடம் சாவி ஏது? யார் கொடுத்தார்கள்? என்று கேட்கிறார். மின் வண்டியிலே மாணவரிடம் பெசிய ஆரியர், இந்தப் பேச்சைக் கேட்டுததான் ஆயாசப்பட்டு, நம்மால் என்ன ஆகும் என்று கைபிசைந்தார். காங்கிரஸ் கேட்டால், சர்க்கார் மறுப்பதா? காஙஙகிரஸ் போர் தொடங்கினால், சர்க்கார் நிலைக்குமா? என்ற சுருதியிலே ஆரம்பமான தேசியகீதம் இன்று, காங்கிரஸ் தலைவர்கள் ஜெயிலிலே இருக்கிறார்களே, ஜனாப் ஜின்னா இப்போது சர்க்காருடன் போராட வேண்டாமா, காங்கிரஸ் தலைவர்களைச் சிறைமீட்க வேண்டாமா? சுயராச்யம் கேட்க வேண்டாமா? என்ற விதமான லாலியில் வந்துவிட்டது.

பித்தஜுரம் வேகமாக இருக்கையில், அலறலும், ஆர்ப்பரிப்பும் அதிகமாக இருக்கும். பக்கத்திலே வைத்தியர் நின்றாலும் பற்களைக் கடகடவென நெறித்துப் பலப்பல பெசச் செய்யும். மருந்து கொடுத்தால், மிரட்டுவான், மனைவி வந்தாலும மருட்டுவான், தலையாணையை அணைப்பான், தலைவிரி கோலமாய்ப் படுப்பான். ஜுரவேகம் குறைந்தாலோ, பித்தம் தெளியும், பேச்சும் குறையும், அலறலும் ஆரப்பரிப்பும் மட்டுப்பட்டுக களைப்பு, ஆயாசம் மேலிட்டு ஈனக்குரல் கிளம்பும், எதிரே நிற்பவர்களைப் பார்க்கும் பார்வையே பரிதாபத்தை உண்டாக்கம். கண்களிலே நீர்வழியும். கைகூப்பிக் கிடக்கம் எவரிடமும் பயபக்தியும் எவரிடமும பாசமும் உண்டாக்கும். இதே நிலையே காங்கிரசுக்கு ஏற்பட்டது. பதவி வெறி பிடித்தாட்டியபோது,

ஜனாப்ஜின்னா, பெரியார் தர்பாரிலே, அவர்கள்மீது கேலியும் கண்டனமுமே பொழியப்பட்டது. லீக் என்று ஒரு கட்சியா? ஜின்னா ஒரு தலைவரா? என்று கேட்கவும், முஸ்லிம்களை மூலையில் இருக்கச் செய்து, இந்து ஆட்க நடத்தலாம் என்ற துணிவும் பிறந்து, பித்தஜுரக்காரன் போல் பிதற்றிக் கிடந்த மஞ்சள் பெட்டிக்காரர்களின் நிலைமை இன்று மேல் மூச்சிட்டுப் போகவே, ஜனாப்ஜின்னாவை வலம்வந்து, அபயமளிக்க மாறு கேட்க வைத்கிறது.

நானா காங்கிரஸ் தலைவர்களைச் சிறயிலிட்டேன் இதுபோது அவர்களை விடுக்க என்று கேட்கும் ஜின்னாவுக்கு மஞ்சள் பெள்டியினர் என்ன மறுமொழி தர முடியும்!

முஸ்லிம் லீகுடன் சமரசம் ஏற்படாமன்பு சட்டமறுப்புக் கிளர்ச்சி செய்வது தற்கொரைக்கு ஒப்பாகும் என்றுரைத்தீரே, ஒய் காந்தியாரே! பிறகு என்ன காரணத்துக்காகச் சட்ட மறுப்புத் துவக்கினீர் என்று கேட்கும் காயிதே அஃலமுக்கு என்ன சமாதானம் கூறமுடியும்!

சாவி கேட்கம் தோழர்களே! இந்தியாவிலே பிரிட்டிஷ் ஈட்டி முனையின் ஆதரவு பெற்று, இந்து ஆட்சியை நிறுவலாம் என்று பஞ்சதந்திரம் செய்கிறீர்கள்; அது பலிக்காது என்று ஜனாப் ஜினனா எச்சரிக்கிறார். பாகிஸ்தான் ஒன்றுதான் பரிகாரம் என்பதைத் திட்டமாகக் கூறுகிறார். இனியேனும், காங்கிரஸ் தலைவர்களின் கருததுச் சீர்படுமா? என்று கேட்கிறேன்.

காங்கிரஸ் தலைவர்கள் சிறையிலே இருக்கின்றனரே, அவர்கள் எப்படி இதற்காக வேலை செய்முடியும் என்று கேட்பவர்களுக்கும் ஜனாப்ஜின்னா ஆணித்தரமாக பதில் கூறி இருக்கிறார். சிறைப்பட்டவர் போக மிச்சமீதிகள் ஏன் இன்னமும நச்சுக் கொள்கையைவிட்டுச சட்டமறுப்பு நாசக் காரியத்தைக் கண்டித்துக் காங்கிரசின் திட்டத்தை மாற்றக்கூடாது. அதற்கேற்ற ஆடகள் இல்லை என்றாலும் இந்து தலைவர்களின் பத்திரிகைகள், ஏன் இந்த நற்காரியத்தைச் செய்யவில்லை. அந்தப் பத்திரிகைகள் சிறையிலா கிடக்கின்றன? என்று ஜனாப்ஜின்னா கேட்கிறார். ரோஷமுள்ள பத்திரிகைகள், இந்தச் சாட்டையைக் கண்டு தலைகுனிய வேண்டாமா? இப்போதும் காங்கிரசைப் புகழ்வதும காந்தி மான்மீயம் எழுதுவதும், லுக்கை இழிப்பதும், சமரசலாகிரியைச் சைனா, அமெரிக்கா, பிரிட்டன் ஆகிய இடங்களுக்கு ஏற்றுமதி செய்வதும், காவடி சுமப்பதும் கண் கசிவதுமாக

உள்ளனவே தரிவ, எந்த இந்த பதிரிகை நெருக்கடி தீர்க்கும் நோக்கத்தோடு பணியாற்றுகிறது.

காங்கிரசின் திட்டம், பெரிலின் பதிப்பு என்பதற்குப் பலகாரணமுண்டு, அதிலே ஒன்றுதான், இந்தப் போக்குக்கு காரணம்.

நார்வே நாட்டுக்கும் எனக்கும் விரோதமில்லை. அதைப் பிடிக்க வேண்டிய ஆசை எனக்கில்லை. ஆனால் மண்ணாசை கொண்ட மாற்றான் நார்வே நாட்டைப் பிடித்துக்கொள்மலிருக்கவே நான் நார்வே நாட்டைத் தழுவினேன் என்றுரைக்கம் ஹிட்லருக்கும், பிற்போக்காளர்கள் ஆட்சி செய்வதைத் தடுக்கவே நாங்கள் இப்பாழான கதவிகளிலே அமர்ந்தோம் என்றுரைத்த காங்கிரசுக்கும், என்ன வித்தியாசம்? அது போலவே ஹிட்லரின் மின்னல் தாக்குதல் போல் சர்ககார்மீது தாக்குதல் துவக்குவதும், அச்சு நாட்டின் இடுக்கித் தாக்குதல் முறையிலே, லீக்மீது ஒரு புறம் காங்கிரஸ் கபடப் படையும் ஏவி இடுக்கித் தாக்குதல் நடத்துவதும் இடையிடையே ஹிட்லர் சமாதான பீரங்கி வேட்டுவிடுவதுபோல், சர்க்காருடனும், லீகுடனும், சமாதானமாகப் போவதாகச் சாகசம் செய்வதுமாகிய காரியங்கள், வர்தாவின் திட்டம் ஜெர்மன் சரக்கு என்பதையே வலியுறுத்துகிறது என்றுரைப்பேன். ஹிட்லரின் படைகளுக்குப் பராக்குக் கூறும் இத்தாலிய தலைவன் முசோலினியின் நிலைமை இந்து மகாசபைச் சூரர்களுக்கு, இந்நிலையிலே, வெட்கம் மானமின்றி எந்த ஜின்னாவைத் தூற்றினார்கனோ, எந்த ஜின்னாவால் ஏதும் செய்ய இயலா என்று அலட்சியமாகப் பேசினார்கனோ, எந்தத் தலைவரை, எமக்கு ஈடா எதிரா? என்று ஏளனம் செய்தார்களோ, அந்த ஜின்னாவிடம், ஐயனே! எமது தலைவர்களை விடுவிட்ட உதவி செய்யுமே. சாவியைத் தாருமே என்று கேட்கின்றனர் என்றால் இந்தப் பல்டியின் முன், கல்லூரி மாணவர்களின் காகிதக் கப்பல் கவிழ்வது எம்மாத்திரம். எனவேதான் ஜின்னாவின் பெயரைக் கூறினதும, நான் மின்வண்டியிலே கண்ட மாணவர், கண்மூடி மௌனியானார், பாபம். கந்துக மதகரியை வசமாய் நடத்தலாம் என்று துவக்கிய தாயுமானார் சிந்தையை அடக்கியே சும்மா இருப்பதரிது என்று முடித்ததுபோல், காங்கிரசன்பர்கள் இப்போது.

கவர்னரின் புகழ்பாடிக் காவடி தூக்கலாம்

கனமாகிவிடலாம், கதிநீயே எனலாம்

கைராட்டைச் சுற்றியே கதராடை மூடலாம்

ககிதக் கணைகள் விடலாம்,

ஜாலமோ பிரயலாம், பேரமோ செய்யலாம், ஜாதி சுகந்தேடி வரலாம்,

வளைந்திடும் பிரிட்டனை வாழ்த்தியோ மிரட்யோ,

வரம்பெற்று வாழ்ந்துவிடாலம்

சீறியே போரிடும் ஜினனாவை அடக்கியே

ஜெயக்கொடி நாட்டலரிதே,

ஜே செல்ல, ஜே சொல்ல நீ வெற்று

நீ வெல்லு என ஜெபிக்கும் வார்தாவாசா!

என்று கந்திப் பதிகம் பாடத்தான் வேண்டும்

(திராவிடநாடு - 31.01.1943)

# இனி என்ன செய்வர் ?

“காற்றடிக்குது! கடல் குமுறுது! கயிறுகளைச் சரிபார்த்துப் பாய்மரத்தைச் சரிப்படுத்து!” கப்பற்றலைவனின் இம்மொழியைக் கேட்டும் கேளாதான்போல் ஒருவன், ஒய்யாரமாகச் சாய்ந்துக் கொண்டிருந்தான். வேறு பலர், இங்குமங்கும் ஓடி வேலைசெய்த வண்ணமிருந்தனர். ஒய்யாரக்காரன் சும்மாவுமில்லை! மரக்கலத்திலே இருந்த ஓர் ஓடத்தை எடுத்திட முயன்றான். கப்பற்றலைவன் அதைக்கண்டு, ‘ஏன் அதைத் தொட்டாய்?’ என்று கேட்க, ஒய்யாரக்காரன், நான் இந்த ஓடமேறி கரைசேரப் போகிறேன், என்று கூறினான். கப்பற்றலைவன் கைகொட்டி நகைத்து புயலால் மரக்கலமே தத்தளிக்கிறது. மை இருட்டு திசை தெரியவில்லை. ஒவ்வொருவரும் பணியாற்றினால்தான், கலம் தப்பும். இந்நிலையில் நீ, ஓடமேறிடுவேன், வழிவிடு என்றுரைக்கிறாயே, இதென்ன பித்தம் என்று கேட்டான். ஓடந் தேடியவன் நான் இக்கடுங்காற்றைப் பொருட்படுத்தேன், இருட்டைப்பற்றிக் கவலை கொள்ளேன். ஓடமேறுவேன், தடுக்க நீ யார்? என்று கோபித்தான், ‘வேண்டாம்’ என்றான் கப்பற்றலைவன்.

‘வேதனை விளைவிப்பேன் - வேலை செய்வோரைத் தடுப்பேன், அடித்தட்டைத் துளைப்பேன்’ என்று ஆர்ப்பரித்தான் கடலிற்புகவிரும்பியவன், அவன் மொழிகேட்ட அவன் சகாக்கள் சிலர் மனந்தடுமாறி, ஏதேனும் செய்ய வேண்டுமென்று கருதினர். இந்நிலையில் கப்பற்றலைவன், கயிறுகொண்டு, கூவினோனை இறுகப்பிடித்துக் கட்டினான், அவன் சகாக்கள், கயிறு அறுக்கவும், கலத்தைக் கெடுக்கவும், பாய்மரத்தைப் பழுதாக்கவும் முனைந்தனர். அவர்களும் பிடிபட்டனர். மரக்கலம் சென்றபடி இருந்தது. புயல் அடங்கத் தொடங்கிற்று. மேகம் கலையலாயிற்று. பிணைக்கப்பட்ட பிழை உளத்தான், பெருங்குரலெடுத்துக்கதறி, இதோநாக்கைப் பிடுங்கிக்கொள்கிறேன்! கண்களைப் பிடுங்கிக்கொள்கிறேன்! கம்பத்திலே தலையை மோதிக்கொள்கிறேன் என்று கூவி, அவிழ்த்துவிடுகிறாயா? இங்கேயே மடியட்டுமா? என்று கேட்டுக்கலாம் விளைவித்திட, கப்பற்றலைவன், என் செவி கெடுமளவு சத்தமிட்டாலுஞ்சரி, உன்சொற் கேளேன்’ என்று கண்டிப்பாகக் கூறிவிட்டான். கூவினோனின் குரல் வலித்து, குரவளை துவண்டது, கூச்சலும் அடங்கிற்று, கலமோ, காற்றையும் இருளையும் வென்று, நேர்வழிச் சென்று கொண்டிருந்தது.

எக்கடலில், எப்போது என்று கேட்பர்! நேசநாடுகள் போர்ப்புயலிற் சிக்கித்தத்தளிக்கும் நேரத்திலே, இந்தியாவுக்குச் சுயராச்யம் கேட்டு, அதற்காகக் கிளர்ச்சி செய்ய ஒரு கட்சி கிளம்பியது. மரக்கலம் புயலிற்சிக்கிய நேரத்தில் ஒய்யாரக்காரன் ஓடம் தேடுவதற்கு ஒப்பாகுமன்றோ! கப்பற்றலைவன், காற்றடிக்கும் நேரத்தில் கலத்தைக் கவனிப்பதா, கடற் கொந்தளிப்பை அறியாது, ஓடமேறிட எண்ணுபவனின் இஷ்டத்திற்கு இணங்குவதா! எனவே கூனினோனை அடக்கிடல் போல், கிளர்ச்சி துவக்கிய காங்கிரசும் அடக்கப்பட்டது. கப்பலில் கயிறு அறுத்தல் போலக், காங்கிரசார் நாட்டுப்போர் முயற்சியைக் குலைத்தனர். பிடிபட்டோன் பெருங்குரல்கொண்டு கூவியதுபோல, காங்கிரஸ் ஏடுகள் கதறின. கட்டுண்டோன் உயிர்போக்கிக் கொள்வேன் என்று மிரட்டியதுபோல காந்தியாரும் 21 நாட்கள் பட்டினி என்று மிரட்டினார். கட்டுண்டோன் வலிகண்டு வாய்மூடியதுபோலக், காந்தியார் தமது பட்டினிகண்டு தாள் திறக்காதது தெரிந்து விரதத்தை முடித்துக்கொண்டார். எனவே, இங்கு நடைபெற்ற, காங்கிரஸ் கிளர்ச்சியையே நாம், கப்பலில் கலாம் விளைவித்தோன் கதைக்கு ஒப்பாகக் கூறினோம். கோபங் கொள்ளாது, தேசியத் தோழர்கள், யோசிக்க வேண்டும்.

நாட்டு நண்பரே! இன்னும் என்ன மிச்சம் இருக்கிறது? அம்புறாத்தூணி தீர்ந்துவிட்டது. நாண் அறுந்துவிட்டது. வில்லும் ஒடிந்தது. கத்தியோ வளைந்துபோயிற்று, இனிக் களத்தில் நின்று பயன் என்ன? என்று கேட்கிறோம்.

கடுங்காற்றில் கலம் சிக்கிய வேளையிலே, பிடிவாதம் பேசினால் பலன் கிடைக்கும் என்று கருதியவன் போலப் போர் நெருக்கடி முற்றியதும், கிளர்ச்சியில் ஈடுபட்டால், கைமேல் பலன் கிடைக்கும் என்று கருதிய காங்கிரஸ் தன் பாசறையிலிருந்த படைக்கலம் அத்தனையையும் உபயோகித்து பார்த்துவிட்டது; பலனோ பூஜ்யம்!

போருக்கு எதிர்ப்பிரசாரம், பட்டாளத்திலே ஆட்கள் சேரக் கூடாது பண உதவி தரக்கூடாது என்ற விஷமப் பிரசாரம், பார் நிலைமைப்பற்றித் தவறான கருத்தை மக்களிடை பரப்பி, பிரிட்டிஷார் தோற்றுவிடுவர் என்று வதந்திகளைக் கிளப்பிப் பீதியை உண்டாக்கும் பிரசாரம்; போர் நேரத்தில், பிறகட்சிகளை மறந்து எமது ஒரு கட்சியையே

கவனிக்கவேண்டும் என்று பேரப்பிரசாரம், பதவிகளைவிட்டு மக்களிடம் சென்று விரைவிலே ஆங்கிலர் அழிவர் என்று செய்த துஷ்டப் பிரசாரம், எனும் இன்னோரன்ன பிரசாரம், அளவு, வகை, திறம் என்பவைகளில் மும்முரமான முறையிலே செய்து பார்த்தாகிவிட்டது.

கூண்டோடு சிறை புகுந்து, நாட்டைக் கொதித்தெழச் செய்ய வேண்டுமென்று, எல்லாக் காங்கிரஸ் தலைவர்களும், யுத்த எதிர்ப்புப் பிரசாரம் செய்து, சிறைபுகுந்து பார்த்தாகிவிட்டது. அதை எடுத்தெழுதிப் பத்திரிகைகள், உலகைக் குலுங்கவைக்கச் செய்ய வேண்டுமென்று முயன்றாகிவிட்டது.

அச்சு நாட்டாரின் உச்சி குளிரும்படி, “வெள்ளையனே! வெளியே போ!” என்றுரைத்துப் பார்த்தாகிவிட்டது. அதன் பொருட்டுக் காந்தியார் உள்பட தலைவர்கள் சிறை சென்றாகியும் விட்டது.

குழப்பம், கலகம், கூக்குரல், தண்டவாளம் அகற்றல் தபாலாபீஸ் தீமூட்டுதல், அதிகாரிகளைத் தாக்குதல், சூறையாடுதல் சட்டமீறுதல் எனும் நாசகாரியத்தை நாடு முழுவதும் செய்து பார்த்தாகிவிட்டது.

ரூஸ்வெல்ட்! சியாங்கேஷெக்கே! என்று முறையிட்டுப் பார்த்தாகி விட்டது.

மாணவர் உலகைத் தூண்டி விட்டுக் கிளர்ச்சி நடத்திப் பார்த்தாகி விட்டது.

பார்லிமெண்ட் மெம்பர்களில் சிலரைக்கொண்டு, பாராளும்மன்றத்திலே பேசச்செய்து பார்த்தாகி விட்டது.

இவைகள் யாவும் பயன் தராது போன பின்னர், காந்தியாரின் பட்டினி எனும் கடைசி ஆயுதமும் வெளிப்பட்டது. “பட்டினியா! பிரிட்டிஷார் இதைப் பார்த்துக் கொண்டிருப்பதா? காந்தியாருக்கு ஏதேனும் நேரிட்டால், பிறகு நிலைமை என்ன ஆகும் என்று எண்ணும்போதே பயமாக இருக்கிறதே” என்ற பிரசாரத்தை நடத்தினர். இன்று ஆரம்பித்தார் என்று கொட்டு முழக்கு நடந்தேறியது.

களைப்பு - குமட்டல் - கைகால் பிடிப்பு - கண் இருண்டது - பேச முடியவில்லை - படுத்தபடி இருக்கிறார் பெருமூச்சுக் காணப்பட்டது - ஆபத்து! ஆபத்து அதிகரிக்கிறது - ஆபத்து நீடிக்கிறது - டாக்டர்கள் கவலையுடன் இருக்கின்றனர் - நாடி ஈனசத்தத்திலிருக்கிறது - பெரிய கண்டம் - பிழைப்பது கஷ்டம் - என்ற முறையிலே, அறிக்கை வெளியிட்டனர் - பத்திரிகைகள் பிரசார குண்டுகளை வீசின. விடுதலை செய்க - என்ற வேண்டுகோள் எச்சரிக்கை, முறையீடு, பிரார்த்தனை - இலண்டன் முதற்கொண்டு இலுப்பூர் வரையிலே கிளம்பிற்று. பத்திரிகைகள் பூராவும் இதனையே பக்கம் பக்கமாக நிரப்பின.

தலைவர்கள் கூடினர், தலைகுனிந்து நின்றனர், தளும்பிய நீர்துடைத்துக் கொண்டனர், "உடனே காந்தியாரை விடுதலை செய்க" என்று தாக்கீது பிறப்பித்து, வைசிராய்க்கும், முதலமைச்சருக் கும் அனுப்பினர், முகத்தில் ஈயாடாது நின்றனர்.

இவ்வளவு ஆயுதமும், ஒவ்வொன்றும் கூர் மழுங்கிவிடவே, அறிக்கைகள், ஆபத்து அதிகரிக்க வில்லை - களைப்பு இருந்தாலும் கண் திறக்கிறார் - டாக்டர்கள் பேசவேண்டாமென்றாலும் பேசுகிறார் - குமட்டல் போகக் கொஞ்சம் இனிப்பான எலுமிச்சைச் சாறு பருகினார் - ஆத்ம சக்தியால் ஆபத்துக் குறைகிறது - ஞாபக சக்தி இருக்கிறது - பத்திரிகைகளைப் படிக்கச் சொல்லிக் கேட்கிறார் - பந்து மித்திரர்களைக் காண்கிறார் குழந்தைகளுக்குக் குல்கந்து தருகிறார் - மகாதேவ தேசாயின் சமாதிக்கு மலர் தூவினீர்களா என்று கேட்கிறார் - விரதத்தை வெற்றிகரமாக முடித்து விடுவார் - மூத்திரக் கோளாறு இல்லை - இருதயம் நன்றாகவே இருக்கிறது - முகத்திலே களை இருக்கிறது - ஆபத்து நீங்கிவிட்டது, விரதம் முடிந்தது, ஆரஞ்சு ரசம் பருகினார் - என்று கூறின.

இடையே மட்டும், ஆட்சியிலே பங்கு கொண்டவர்கள் வெளியேறி இருந்தால், எவ்வளவோ பலன் ஏற்பட்டிருக்கும் என்று யாரும் கூற இடமில்லாதபடி, மோடி, சர்க்கார், ஆனே, எனும் மூவர் நிர்வாக சபையிலிருந்தே வெளி ஏறியும் பார்த்தனர்.

இவ்வளவும், இம்மி அளவு பலனையும் தரவில்லை. இனி என்ன இருக்கிறது, மிச்சம், என்று காங்கிரஸ் அன்பர்களைக் கேட்கிறோம். பலாத்காரச் செயலும், தலைவரின் பட்டினி கிடத்தலும், கடைசி ஆயுதங்கள்! அவைகளும் பயனற்றுப் போயின!! வேறு ஏதேனும்

உண்டோ என்று கேட்கிறோம். நாசகாரியங்கட்குக் காங்கிரசே பொறுப்பு என்பதை அரசியலார் விளக்கி அறிக்கை விட்டுள்ளனர் - அதைக் கண்டித்து எழுதுவதும், காந்தியார் ஆத்மசக்தியால் தப்பினார் என்று எழுதுவதுந்தவிர, காங்கிரஸ் ஏடுகளுக்கும் இனி வேறு வேலை இல்லை.

இனியேனும், காங்கிரசல்லாதாரின் கட்சிகளுடன் கைகுலுக்கிச் சமரசம் உண்டாக்கினாலன்றி, சண்டித்தனம் பலன் தராது என்பதைக் காங்கிரஸ் உணருமா என்று கேட்கிறோம். நெருக்கடி மிக்க நேரத்தில் இத்துணைக் கலவரம் விளைவித்தும், பலன் காண முடியாதபோது, இதே முறை வேறென்றும் பலன் தராது என்பது தெரியவில்லையா என்று கேட்கிறோம். நேர்வழிகாண இனியேனும் காங்கிரஸ் முன் வருமா? என்று கேட்கிறோம்.

14.3.1943

# கனிதேடி அலுத்தபிறகு !

கனிதேடி மரமேறுவோன், முதலில் கண்ணைப் பறிக்கும் கனிகளைப் பறித்துப், பின்னர் தேடத்தொடங்கிச் செங்காயையும் பறித்துச் சேர்ப்பான் அதுவும் தீர்ந்திடின், பிஞ்சிலும் சில பறிப்பான். ஆவலின்மிகுதி. குவியலாக கனிதேட வேண்டும் என்ற விருப்பங் கொண்ட அத்தோழன் தன் விருப்பத்தைப் பூர்த்திசெய்யும் அளவு கனி தாங்காது மரமிருப்பது கண்டு, கனி இலையேல், செங்காய் உண்டு, பிஞ்சிலும் சில உண்டு, என்று படிப்படியாகப், பயன் குறைந்ததையும் குவிப்பதுண்டு. நண்பர் இலக்குவனார், இந்நிலை பெற்றார் என்பது இவ்விதழில்வரும் அவர் தம்வினாக்களால் விளங்கும். சீர்திருத்த மாற்றல் அரசியலார் கடனேயன்றோ, புலவர் அத்துறைபுகல் முடியுமோ? என்ற அவரது கனியே, நான் தந்த விடைக்குப்பிறகு வெறும் துவர்ப்பு என்பது தோழர் மீண்டும் வேறு வாக்கிய அமைப்புடன் விடுத்துள்ளார்.

“சமூக அமைப்பில் குறை காணப்படின் அகற்றவேண்டியது சீர்திருத்தக்காரர் முயற்சியால், ஆட்சியாளர் கடமையாகுமேயன்றி, இலக்கியம் இயற்றும் புலவர்களின் இன்றியமையாக் கடமையாகுமா?” என்றும், ‘புலவர்கள் அனைவரும் சீர்திருத்தக் கொள்கை யுடையவராகவே இருக்கவேண்டுமென்று எதிர்பார்த்தல் தகுதியாகுமா’ என்றும் கேட்டுள்ளார் இலக்குவனார். இவைகேட்கு முன், அவரே, நூல்களில் பிறரை இழிவு படுத்தும் கொள்கை காணில் ஆவனசெய்ய வேண்டியவர் அரசியலார் அல்லவா? என்று கேட்டுவிட்டார், நானும் பதில் தீட்டினேன். அக்கேள்வி கனிஎனில், பின்னர் அதே கருத்தோடுகூடிய இக் கேள்விகள் செங்காய்தானே! அத்தோடு நின்றாரா அன்பர்! கந்தமூலங்கள், சருகு எனத்தக்க வினாக்களையும் விடுகிறார்.

‘கம்பரும், சேக்கிழாரும் தமிழர்களை இழிவு படுத்துவதற் காகவா இந்நூல்களை எழுதினர்” என்று கேட்கிறார். இச்சரகு, கனிபோன்ற கேள்விகளைக் கேட்டு அலுத்தபிறகு, எண்ணிக்கையைப் பெருக்க எழுந்ததன்றி வேறென்னவென்று கேட்கிறேன். நான் வேண்டுமென்று வண்டியைக் கவிழ்த்தேன் என்று கடையாணியைச் சரிபார்த்துக் கொள்ளாத வண்டி

ஓட்டி, குடைகவிழ்ந்த வண்டியிலிருந்து கீழே வீழ்ந்தெழுந்தோர் குறை கூறுகையில் கூப்பிய கையும் இளித்த முகமும் கொண்டு, சமாதானங் கூறுவது போன்றது இக்கேள்வி. தமிழரின் இழிநிலைக்குக் காரணமானதும், இழிநிலையையே உயரியது என்று பலர் கருதும் மனமயக்கத்தை ஊட்டுவதும், தமிழரை அடக்கி ஆளும் ஆரியத்துக்கு ஆக்கம் தேடுவதுமான, விளைவுகள்; கம்பரும் சேக்கிழாரும் இயற்றியன ஏடுகளாக வந்தன, வந்தபடி உள்ளன. அவர்கள் எக்கருத்துக்கொண்டு எழுதினர் என்பது அவர்களின் தனிப்பட்ட பண்பாராய்ச்சிக்குரியதே யன்றி, அவர்களின் செயலால் நேரிடும் விளைவை ஆராய்கையில் எங்ஙனம் எழும். நல்ல குணமுடையவன் ஒரு டாக்டர், அயங்கலந்த மருந்து தருவதற்குப் பதில், நச்சுக்கலந்த மருந்து தந்தான். மருந்துண்டோன் மாண்டான், மற்றவர், பின்னரும் அந்த டாக்டரின் மருந்தைப் பருகிடுவரோ! பார்வைக்கு அழகானவள் பத்தினித் தனத்தை இழந்தவள் எனில், அவளைக் கண்ணகி பூசைக்குக் காவலாக அமைப்பரோ! கம்பரும் சேக்கிழாரும் தமிழரை மறந்தோ, ஆரிய நெறியைச் சரியெனக் கொண்டோ, ஆரிய நிபந்தனையை மீறத்துணியாமலோ, ஆரியர் மகிழ வழி இது என்று கொண்டோ ஏடு எழுதி இருக்கக்கூடும் அன்று அவர்கள் கருத்துட்கொண்டதெதுவோ! விளைவு, வேதனையாக இருத்தலை இன்று காண்கிறோம், எனவே ஏடுகள் நாட்டுக்கேற்றவையாகா என்றுரைக்கிறோம்.

அவர்களின் நிலைபற்றியே தோழர் இலக்குவனார் விடுத்துள்ள வேறு இரு கேள்விகள், இதற்கு விடை தருகின்றன. எனவே எனக்கு அவர்விடும் வினா, அவர்கோரும் விடையை அவருக்குத் தரும் விந்தை நேரிடக் காண்கிறேன்.

‘அவர்கள் அக்காலத்து நிலையைத் தம் இலக்கியங்களில் அமைத்தனரேயன்றிப் பிறிதல்லவே? இலக்கியங்கள் வாழ்க்கைப் படம் - காலக் கண்ணாடி அல்லவா?’ என்றும், ‘இலக்கியங்கள் இயற்றும் புலவோர் அவர் காலத்து உள்ளனவற்றைத் தாம் விரும்பாவிடினும் மறைத்துக்கூறுதல் முடியுமோ? மறைத்துக்கூறுதல் தான் பொருந்துமா?’ என்றும் நண்பர் கேட்கிறாரே என்னை. அதேதான் கம்பரும் சேக்கிழாரும் அந்த ஏடுகளை எழுதியதன் காரணமாக இருக்கும், என்ற விடையாகக் கொள்ள வேண்டுகிறேன். அதிலிருந்து ஏற்படுவதென்ன? அப்புலவர்கள் அவர் காலச் சிறையிலே உழன்றனர் என்பதுதான்! அதுமட்டுமா! பின் சந்ததியையும் சிக்கவைத்தனர்! அந்தச்

சிறைக்கூடத்தை இடிக்கவேண்டுமென்பதே என்போன்றார் நோக்கம். இது தவறல்லவே!

வேறென்ன செய்ய முடியும் அப்புலவர்? என்பீர். கூறுகிறார் கேண்மின், நம் தோழர். 'இப்புலவர்கள் வாழ்ந்த காலம் எவ்வாறிருந்தது? அந்நிலையிலும் முற்போக்கான கொள்கைகளைத் தம் இலக்கியங்களில் புகுத்தியிருக்கின்றனரென்பதையறிவீர்களா?'

அறிவேன் தோழரே! அறிந்தால்தான் அழகுபடக் கூறிடும் திறன் அவரிடம் இருந்ததைத் தெரிந்ததால்தான் அத்திறம் படைத்துக், காலச்சிறையில் உழன்றும், பகுத்தறிவுப் பலகணியைச் சற்றே திறந்தனர் என்பதையும் நான் அறிவதால்தான், அவர்களையே அவ்வளவே செய்ய வைத்தும், அத்தகையவர்களையே சிறைப்படுத்தியதும், அவர்களின் செந்தமிழ்த்திறனையே அடிமை கொண்டதுமான ஆரியத்தை, இனியும் மக்கள் கொள்வதுகூடாது என்ற கருத்துடன் அந்த ஆரியத்தைச், சிறைப்பட்ட சீரிய அப்புலவர்கள் செய்துவைத்த ஏடுகள் நாட்டிலே நிலைக்கச் செய்வதால், நெருப்பிலிடுக அந்த ஏடுகளை என்றுரைக்கிறேன். அதற்காக என்னை நிந்திப்பதா!

மேலும் தோழரே, அங்ஙனம் கூறத் துணிவு பிறந்தமைக்குள்ள பல காரணங்களிலேயே நான் காண்கிறேன். 'இப்புலவர்கள் தம் நூல்களில் கூறியவாறுதான் மக்கள் நடக்க வேண்டுமென்று மதத்தலைவர்போல் கட்டளையிடுகின்றனரா? இவர்கள் கூறியுள்ளன இன்று சட்டமாகக் கொள்ளப்படுகின்றனவா? என்று கேட்டீர். இல்லை என்பதே என் விடை. இல்லாததால்தான், அந்த ஏடுகளை ஆராயவும், ஆபாசங்காணின் கொளுத்துவதன்மூலம் கண்டிக்கவும், எவருக்கும் உரிமை உண்டு என்கிறேன். அவர் எழுதியவை இன்று 'கட்டளை'யென்று நீரும் நானும் கருதுவதில்லை. உமது புலமை உமக்குத் தெளிவைத் தருவதால், அந்த ஏடுகளிலே உள்ளவை 'மதக்கட்டளை' என்று கொள்ள மாட்டீர்; நான் சீர்திருத்த நோக்கமுடையேன், எனவே மதக் கட்டளை எதுவும் என்மனக் கட்டளையைத் தடுக்கவிடேன். பெரும்பாலான மக்கள் நிலை அஃதோ! அவர்களின் நிலைமாற வேண்டாமா! அதற்கென்ன வழியெனில், அவர்கள் முன்னிலையில், அந்த ஏடுகளை எரியிட்டு, 'இதோ காணீர்! இவை மதக் கட்டளையுமல்ல. என்னை அங்ஙனம் கொள்ள வேண்டுமென்று இவ்வேடுகளை எழுதினோரும் கூறினாரில்லை, அவைகளிலே வரும் கருத்துகள் சட்டமுமாகா' என்று கூறவேண்டும்,

அதில் நீர் சேரவேண்டாமோ கூறுமே!

காமுற்றவளின் அங்கங்களைச் சிதைப்பதும், தவமியற்றிய தமிழன் தலையை வெட்டுவதும், அண்ணனைக் கொன்று தம்பிக்குப் பட்டம் சூட்டுவதும், தம்பியின் துரோகத்தைத் துணைக்கொண்டு அண்ணன் தலையைக்கீழே உருட்டுவதும், சட்டமாக இரா! எனவே புலவர், தம் ஏடுகளில் சட்டமென்று கூறிடவில்லை. பிள்ளையைக் கறியாக்கும் பக்தரும், பெண்டை அனுப்பி முக்தி கோருவோரும், இன்று இல்லை, மனித அறிவு வெகுதூரம் முன்னேறியதால், அந்த அறிவுப் பெருக்கத்துக்குத் தடையாக அந்த ஏடுகள் உள்ளனவே, அறிந்தோர், உரைக்காரோ!

தோழரின் சிந்தனைக்கு அதிக சுமைக் கூடாது. மற்றுமுள நான்கு கேள்விகள், அவரது ஆராய்ச்சியின் பிழிவுகள். ‘தொண்டர் புராணமென்று சேக்கிழாரும், இராமகாதை என்று அவரும் தத்தம் நூலுக்குப் பெயரிட்ட கருத்து என்ன? என்று கேட்கிறார். என்ன கருத்து? தொண்டர் வாழ்ந்த மறை இது, தேவன் திருவிளையாட்டு இது என்பதை நாட்டாருக்கு உணர்த்துகின்றனர் என்று கருதுகிறேன். தொண்டர் நிலையும், தேவன் திருவிளையாட்டும், அந்த ஏடுகள் கூறுவன போன்றிருக்கக் கூடாதென்பதற்கே, அந்த ஏடுகளை நெருப்பிலிட வேண்டுமென்று கூறுகிறேன்.

கற்பனையும், உயர்வு தாழ்வு கூறுவதுமான மேனாட்டு ஏடுகள் இல்லையோ என்பது பிறிதோர் கேள்வி. உண்டு, அவை மத நூற்களாக, மகத்துவ ஏடுகளாக, பேறுதரும் ஏடுகளாகக் கருதும் மக்கள் இல்லை. நினைப்பு இல்லை. நிகழ்ச்சியில்லை. எனவே அங்கு நெருப்பு எழவில்லை. அங்கும் போப்பாண்டவரின் பாவமன்னிப்புச் சீட்டுகளை, மதசீர்திருத்தவாதிகள் தீயிலிட்டதும், லூதரின் நூலை, கத்தோலிக்கர் கொளுத்தியதும், சரிதம், சீர்திருத்தக்காரர்கள் நினைப்பதுபோல் இவைகளைக் கற்பனை இலக்கியமென்று பொது மக்கள் கருதத், தீயிலிடல் எவ்வளவு தூரம் பயன்படும்? என்று கேட்கிறார். மக்களைத் திகைப்பிலாழ்த்தும் முதலில், பிறகு எண்ணிடச்செய்யும், எண்ணம் திண்ணமாக எழுச்சியைத் தகும், விழிப்பை அளிக்கும், வீறுகொள்ளச்செய்யும், ஆரிய சூதை வெளியாக்கும், காரியவாதிகளவர், என்ற கருத்தைத் தரும், ஆபாசத்தை அகற்றிடவைக்கும், அறிவுத் துறையைத் திறந்து வைக்கும். இவையும் இவற்றினும் அதிகமும் தீ பரவினால் ஏற்படும். வேறு ஆக்க வேலைகள் இலவா? இது அடுத்த

கேள்வி, உண்டு! ஆக்க வேலைக்கு ஊக்கமூட்டுவதே, தீயிடும் செயல். ஆக்கவேலைக்கு ஊக்கம் பிறந்ததும் இன்று நம்மைக் குத்தும் பேனா முனைகள், அத்துறைபுகும். அதற்கு வழிகோலுவதே, இன்றைய வேலை. இறுதியாக, 'இந்நூல்களைப் பற்றி வரலாற்று ஆராய்ச்சி யாளர் கருத்து என்ன என்பதாகும்! இவை, ஆரிய மார்க்கத்தைத் தமிழகம் ஏற்றுக் கொள்ளுமாறு ஆரியர் துவக்கி நடத்திய கலைக் கொலையின் கருவிகள் என்பதே ஆராய்ச்சி முடிவு! இலக்குவனாரின் கேள்விகள் தீர்ந்தன. அவரது இன்றைய மனநிலை பற்றி எழுதிடின் நான் என்றும்போலவே, கவனித்துப் பதில் இறுப்பேன் என்பதைக்கூறி இதை முடிக்கிறேன்.

தோழர் இலக்குவனாருக்கு விடுத்த விடைகளைப் படித்தபிறகு அவர் மனம் மாறினாரா? என்று திருவாரூர் இள நண்பர் கருணாகரன் என்பார் என்னைக் கேட்கிறார். எனக்கும் அதை அறிய ஆவல்தான், ஆனால், தோழர் இலக்குவனார் தமது கருத்தை இனியும் தெரிவிக்க வேண்டும், திருவாரூர் தோழரின் கேள்விக்குப் பதில் அப்போதுதான் கிடைக்கும். அந்த இள நண்பர், இராமனைப் போற்றும் பகுதிகள் வேறு இலக்கியங்களிலே வருகையிலே என்ன செய்வது என்றும் கேட்கிறார். கம்ப இராமாயணம் காற்றிலே பறந்தோடினால், கிளைகள் தானாகச்சாயும்! மேலும், நான் முதலிலிருந்தே கூறி வருகிறேன், இராமாயணத்தை மதநூலெனக் கொண்டு மக்கள் தலைமீது வைத்துக்கொண்டு தாண்டவமாடுவது போல, வேறு எந்தக் கற்பனைக் கதையையும் கற்பனையைத் தழுவி இலக்கியத்தையும் மதநூலெனக் கொண்டு மனமயக்க மடைவ தில்லை. மற்ற எந்த இலக்கியத்தை மக்கள் படிப்பதனாலும், பார்ப்பனர்களுக்கு ஆதிக்கமும் வருவாயும் அதிகரிப்பதில்லை. ஆரிய உயர்வுக்கு அடிகோலும் "கைங்கரியத்தை" இராமாயணமே செய்கிறது, எனவேதான் அதனைக் கண்டிக்கின்றனர், சுயமரியாதைக்காரர்கள்.

தேவன், இராமன்! அவன் பட்டாபிஷேகம் தடைப்பட்டு காடேக வேண்டி நேரிடுகிறது. நானும் வருவேன் என்று ஜானகி கிளம்பும்போது இராமன், பிராமணர்களுக்கு, ஆபரணங்களைக் கொடுத்துவிடும்படி கூறினான் - இது இராமகாதை, ஏன் தோழர்களே, அந்தச் சமயத்திலும், இராமர், பிராமணருக்கு அந்தத் தானம் தரவேண்டும்! மிதுலைக்கு அனுப்பக்கூடாதா? அயோத்தியிலேயே, ஏழை எளியவருக்குக் கொடுக்கலாகாதா! பரதனிடந்தான் இருக்கட்டும் என்று, ராஜாங்க பொக்கிஷத்திலே சேர்ப்பிக்கக் கூடாதா? வழிச் செலவுக்கு உபயோகப்படட்டும் என்று கையிலே எடுத்துக் கொண்டே

புறப்படக்கூடாதா! பிராமணருக்குத் தானம் செய்தார்! மகாவிஷ்ணுவின் அவதாரம் என்றும், சற்குணரென்றும், சத்தியவானென்றும் போற்றப்படும் இராமனே, பிராமணருக்குத் தானம் கொடுத்தார் என்பதைப் "புண்ணிய கதை" "மோட்ச சாம்ராஜ்யந்தரக்கூடிய புராணம்" "பாராயணத்துக் கேற்றது" என்று கொண்டாடப்படும் புத்தகத்தின் மூலம் மக்கள் சதாகேட்டுக் கேட்டு வருவார்களானால், தமிழ் மக்களே! ஏன், வீணாக நீங்கள் அர்த்தமற்ற சடங்குகள் செய்து, அனாவசியமாக உங்கள் பொருளைப் பிராமணருக்குத் தருகிறீர்கள்" என்று சுயமரியாதைக் காரன் எத்தனை நாள் கூவினாலும், பலன் ஏற்படுமா! இராமபிரானே பிராமணருக்குத் தானந்தந்தார் - கடவுளே இந்த வழிகாட்டினார் - சுயமரியாதைக்காரர் பிராமணருக்குத் தானந்தர வேண்டாம் என்று கூறுவது எப்படிச் சரியாக இருக்கும் என்று பாமரர் எண்ணுகிறார்கள். ஏதேனும் இலக்கியத்திலே, எவனாவது ஓர் அரசன், பிராமணருக்குத் தானம் தந்ததாகக் காணப்படும். அது படித்தோரும், இவ்வளவு பிடிவாதமாக, பிராமணபக்தராக மாட்டார்கள் ஏனெனில், அரசன் ஓர் மனிதன் என்ற மனப்பான்மையுடனேயே மக்கள் அந்த இலக்கியத்தைப் படிப்பார். இராமனோ, தேவன், என்ற நம்பிக்கையுடன் இராமாயணத்தைப் படிக்கின்றனர். அந்த "நம்பிக்கை" சீர்திருத்தவாதியின் முயற்சிகளைக் கெடுத்து விடுகிறது. எனவே அத்தகைய நம்பிக்கையை ஊட்டும் "ஏடு" கண்டிக்கப்பட வேண்டும் என்று கிளர்ச்சி செய்கின்றனர்.

பரதா! நீ சொல்வது, பாமரர் மனப்பான்மை பற்றித்தானே. நாங்கள் அத்தகையவர்களல்லவே! நாங்கள், இராமகாதையையோ, மற்றப் புராணங்களில் வரும் கற்பனைகளையோ நம்புகிறோமா! இலக்கியச்சுவைதானே கொள்கிறோம் - என்று வாதிடும் தமிழ்ப் புலவர்களை நானறிவேன். அவர்கள், இச்சமயம் செய்யவேண்டிய அருமையான பணியை உணராது, வீணாகச் சுயமரியாதைக்காரர்மீது மோதிக்கொள்வது கண்டே நான் வருந்துகிறேன். இராமகாதை வெறுங் கற்பனை என்பதை இப்புலவர்கள், பொதுமக்களிடம் எடுத்துரைக்க முன்வருவதில்லை. காரணம் என்ன? தாங்கள் கற்பனை என்று நன்கு கண்டதை மக்கள் உணராது, இராம காதையை அப்படியே நம்பிக் காரியங்கள் நடத்துவதைக் கண்டும், அதைத் தடுக்க இப்புலவர்கள் சிறுவிரலையும் அசைப்பதில்லை. ஏன்? என்று நான் கேட்கிறேன். அது எமது வேலையல்ல! என்று புலவர்களிலே சிலர் கூறுவர், சீற்றத்தோடு. "சரி, பண்டிதரே! மற்றவர் அக்காரியத்தைச் செய்யும்போது, நீவிர், வாய்மூடிக்கிடக்கலாகாதா? வெறும் இலக்கியத்துக்காகவே மேற்படி

ஏடுகளைப் படிக்கும் நீவிர், அந்த ஏடுகளிலே காணப்படும் அறிவீனங்களை ஞானமார்க்கமென்று நம்பும் மக்களைத் திருத்த, மேற்படி ஏடுகளைத் தீயிலிட்டு, மக்களை அதன்மூலம் தெளியவைக்க வேண்டும் என்று கருதும் சுயமரியாதைக்காரர் கிளர்ச்சி செய்யும்போது நீங்கள் ஏன் குறுக்கிட்டு, வைதிகர் மனமகிழ, பாமரர் நிலைகெட, வேலை செய்கிறீர்கள்' என்று கேட்கிறேன். 'நாங்கள் சும்மா இருக்க முடியவில்லையே? என்றால், அதற்கும் ஒன்றுரைக்கிறேன்' வைதிகர், பாமரர் ஆகியோரின் எதிர்ப்பை, தூற்றலை, நாங்கள் தாங்கிக்கொள்கிறோம். அந்த ஆபத்தான வேலை உமக்கு வேண்டாம். உங்களின் கீர்த்தி குன்றாமல், நீங்கள் பாதுகாப்பான இடத்திலேயே இருங்கள். கல்லும் மண்ணும், வசைவும் விழும் இடத்தில் நாங்கள் நிற்கிறோம். நின்று எமது கட்சியை நிலைநாட்டுகிறோம். உண்மையை உரைக்கிறோம். நீங்கள் அந்தத் தீவிர வேலையில் இறங்காது தனியிடமிருந்து, 'தீயராம் சுயமரியாதைக்காரர் கூறுவது, நிற்க வேண்டுமானால் நாமும் சில ஆபாசங்களை ஒழிக்கத்தான் வேண்டும். நமது புராணாதிகளிலே அறிவுள்ளனவற்றை மட்டுமே நாம் வைத்திருக்க வேண்டும், மற்றவற்றைத் தள்ளவேண்டும்' என்று பேசுங்கள், எழுதுங்கள், புதுக்கருத்து வளர்ச்சிக்கான நூற்களை இயற்றுங்கள். அதைச் செய்யத் தொடங்கினால், எம்முடன் வாதிடவும் போரிடவும், நேரமிராது! நாமிருவரும் போரிடுகையிலே, இருவரையும் சேர்த்து ஏய்க்க ஆரியத் திருக்கூட்டம் தயாரிலிருக்கிறதே, அதுவும் தோற்கும். அது, செய்ய ஏன் நீங்கள் தயாரில் இல்லை? ஏன், 'நாங்கள் வைதிகப் பித்தரல்லர் என்று வாயளவில் சொல்லிவிட்டு, வைதிகருக்கு வக்காலத்து வாங்கிடும் செயல்புரிகிறீர்கள் என்று கேட்கிறேன்.

காங்கிரஸ் 'ஐயர்' பேசுவது லிபரல் 'ஐயருக்கு'ப் பிடிக்காது. ஆனால் இரண்டு ஐயர்களும், ஒருவரை ஒருவர் தாக்கிக்கொள்ள மாட்டார்கள். காங்கிரஸ் ஐயர் சர்க்காரை மிரட்டி, ஆரிய இனநன்மை தேடுவார், லிபரல் ஐயர் சர்க்காருக்கு லாலிபாடி, ஆரிய இன நலனைப் பெறுவார். வேறு வேறு துறை என்று கருதுவரே தவிர மோதிக்கொள்ளமாட்டார். அதுபோல் நீங்கள், இலக்கியமூலம் மக்களை முன்னுக்குக் கொண்டுவரும் கருத்துகளை எடுத்துரைத்து, புராணக் கருத்தைப் பொசுக்குங்கள், நாங்கள் இலக்கியமென்ற போர்வையிலே மக்களை வஞ்சிக்கும் ஆரியத்தைத் தீயிலிடுகிறோம். தீ, கலைக்கு அன்று, கலை என்ற சீலையால் மூடிவைக்கப்பட்டுள்ள ஆரியத்துக்கு இதை உணரலாகாதா!

# சுழல் விளக்கு

ரம்பையின் காதல் படத்தைப் பார்த்துக் கொண்டிருந்தபோது என் நண்பர் தோழர் எஸ்.வி. லிங்கம் ஓர் ஆவலை வெளியிட்டார். காட்சியிலே அந்தச் சமயம், சிங்கார ரம்பை இந்திரனின் சீற்றத்தால் சிலையாக மாறி, சில அந்தணச் சிறுவர்களின் சேட்டையால், ஒருபித்துக்கொள்ளி பிரமச்சாரியால் தாலிகட்டப்பட்டு, இரவு வந்ததும், சிலை உருவிலிருந்து சிங்காரி உருவை அடைந்த சட்டம் நடந்து கொண்டிருந்தது. தோழர் லிங்கம், 'அத்தான்' எனக்கு அதுபோன்ற ஒரு பெண்ணைக் கலியாணம் செய்து வைக்கவேண்டும்' என்று கூறினார். நான் சிரித்தேன். சினிமா ஸ்டார்களைக்

கண்டு சித்தம் சிதையும் நிலைபல தோழர்களுக்கு வர நான் கண்டிருக்கிறேன். தோழியர் வசந்தாவின் 'ரம்பை' வேடம் எவரையும் ரசவல்லிகளைப்பற்றி எண்ணும்படி தூண்டக்கூடியதுதான். ஆனால் லிங்கம், அத்தகைய ஆவலைத் தெரிவிப்பதென்றால் எனக்கு நகைப்புத்தான் வந்தது. ஏன்? அவர் என்ன, சித்தத்தைச் சிங்காரிகளுக்காக சிதைக்காது காக்கும் இயல்பினரா என்பீர்கள்? அது அல்ல காரணம், அவர் 'ஸ்டார்களை' நன்கு அறிந்தவர். ஸ்டார்களைப்பற்றி மேக்அப் தோழர்கள், என்னென்ன பேசுகிறார்கள் என்பது அவருக்குத் தெரியும். எனவே அவர் படக்காட்சியிலே வரும் பாவையருக்காகப் பசி கொள்ள மாட்டார். ஆகவேதான் ரம்பையின் காதல் படத்தைக்கண்டு இந்த மாதிரி பெண் வேண்டும் என்று என் நண்பர் தன் ஆவலைத் தெரிவித்தபோது நான் சிரித்தேன். 'என்ன! வசந்தா போன்ற வனிதையா தேவை?' என்று கேட்டேன்' உருவம், வயது, அழகு, எப்படியேனும் இருக்கட்டும் அத்தான். குணம், இதுபோல இருக்க வேண்டும்' என்றார். எனக்கு வசந்தா அம்மையின் குணம் தெரியாது. எனவே 'வசந்தா சுகுணசுந்தரிதானோ'

என்று கேட்டேன். ‘எனக் கென்ன தெரியும், அந்த ஸ்டாரின் சுபாவம். நான் அந்தக் குணம் என்று குறிப்பிட்டது, வசந்தம்மையின் சொந்தக் குணத்தை யல்ல. அந்த அம்மையின் ‘நடிப்பு’ இருக்கிறதே, ரம்பையாக வந்தார்களே, அந்த ரம்பை போன்ற குணவதி வேண்டும்; காலையில் எல்லாம் சிலையாக இருக்க வேண்டும், மாலையானதும் சிங்காரியாகிவிட வேண்டும்; செலவு இராது. குடும்பத் தொல்லை இராது, ஆனந்தம் உண்டு அலைச்சல் இல்லை, சுகம் உண்டு சங்கடமே கிடையாது’ என்று கூறினார். காட்சியிலே இருந்தவர்களிலே முன்வரிசைக்காரர் முறைத்துப் பார்த்துக் கனைக்குமளவு சிரித்தேன். என் நண்பரின் ஆவலைக்கேட்டு அவருடைய திருமண நோக்கமும், திருமணத்தால் நேரிடக்கூடிய பொறுப்பைப் பாரமாகக் கருதும் கவலையும் அவர் மொழியால் விளங்கிற்று. ஆகவே, திருமணம் செய்து கொள்பவர்கள், எதை எதிர்பார்க்கிறார்கள் என்ற யோசனை யிலிறங்கினேன். நெடுநாட் களுக்குப் பிறகு ஒருநாள் பிரிட்டிஷ் பிரமுகர் ‘சர். வில்லியம் பீவரிட்ஜ் காக்ஸ்டன்ஹால், ரிஜிஸ்டிரார் ஆபீசில் மேயர் என்ற அம்மையாரை மணம் புரிந்துகொண்டார், என்ற செய்தியைப் படித்தேன். மேயர் அம்மையார் ஒரு பாட்டி! நான்கு மக்களும் பேரன் பேத்தியும் உண்டு. சர். பீவரிட்ஜ் 63 வயதானவர்’ 63 வயதான சர். பீவரிஜ் வயோதிக அம்மையைக் கலியாணம் செய்து கொண்டதன் காரணம் என்ன? நம் நாடுகளிலே திருமணம், வாழ்க்கையிலே வசீகரமிக்க இன்பம் நுகரும் சந்தர்ப்பமாகக் கருதுபவர்கள், இந்த நரைத்தலை நாதன் மற்றோர் நரைத்தலையம்மையை நாயகியாகக் கொண்டதன் காரணம் என்ன? இந்த வயதில் காடு வாவாவென்று கூவும் கட்டத்திலே உள்ளவர்கட்கு கலியாணம் ஒரு கேடா? என்றுதான் கேட்பார்கள். ஆனால் அதன் அர்த்தபுஷ்டியுள்ள தத்துவம் தெரிந்தால், அதிசயிக்க மாட்டார்கள். வெளி உலகிலே, கலியாணம் என்பது ‘புத்’ என்ற நரகத்திலே விழாதிருக்கவேண்டி, ஒரு பிள்ளை

பெறும் கருவிக்கு மாலையிடும் சடங்குமன்று, மன்மதபாணமடா! மார்பைத் துளைக்குதடா! என்ற மதனலீலா விநோதச் செயலுமன்று, கலியாணம் என்பது அங்கு வாழ்க்கைக்கு ஓர் துணையைத் தேடிக்கொள்வது என்பதுதான். அது வாலிப விருந்துமட்டுமன்று, வயோதிக காலத்துக்கும் வாழ்க்கைக்கு வேண்டிய ஒரு தேவை. ஆகவேதான் பீவரிட்ஜ் திருமணம் நடந்தேறியது. இங்குள்ள ‘தடிஊன்றிகள் கட்டினவளைக் கட்டையிலே வைத்துக் கொளுத்தியதும், மற்றோர் கன்னியைத் தேடி அலைந்து, கலியாணம் செய்துக்கொண்டு, பிறகு சித்த யூனானி வைத்யர்களிடம் கைகாட்டிக் காலங்கழிப்பர். வாழ்க்கைக்குத் துணை வேண்டும் என்ற எண்ணங் கிடையாது. வாலிப விருந்தாகத் திருமணம் இருக்க வேண்டுமென்று கருதிடும் சிலரும், என் நண்பர் லிங்கம்போல, காலையில் சிலையாக இருந்து மாலையில் மனோகரியாகும் ‘சக்தி’ பெற்ற ஓர் சுந்தரி கிடைத்தால், திருமணத்துக்குத் தயாராவார்கள். சுகவாழ்வில் பற்று, திருமணத்துக்குத் தூண்டுகோலாக இங்கு இருக்கிறது. மேனாடுகளிலே, அத்துடன், அரியதோர் இலட்சிய மாகிய, வாழ்க்கைக்கு ஓர் துணை தேடிக்கொள்வது என்ற கொள்கையும் தழுவி இருக்கிறது. இந்த இலட்சியம் இங்கும் பரவ வேண்டும். மக்கள் வாழ்வு மணம்பெற அதுவே வழி. வாழ்க்கைக்

கோர் துணை தேடிக்கொள்ள வேண்டுவது முறை, அதிலே சாத்திரமும் கோத்திரமும், குறுக்கிடக்கூடாது என்ற கொள்கையுடன், நாட்டை நெடுங்காலமாகக் கரையான்போல் அரித்துவரும் ‘விதவைத்தன்மை’ என்ற கொடுமையையும் களைய வேண்டுமென்று வங்க சர்க்கார், மனைவியை இழந்த ஆடவன் மறுமணம் செய்துகொள்ளக் கருதினால் விதவையைக் கலியாணம் செய்துக் கொள்ள வேண்டும். கன்னியைத் தேடி கலியாணம் செய்து கொண்டால்; தண்டனை விதிக்கவேண்டும் என்றோர் மசோதா கொண்டு வந்துள்ளனர். காலத்திற்கேற்றதும், பகுத்தறிவுக் கொத்ததுமான இந்த மசோதாவைச் சட்டமாக்கி, வங்கம், மற்ற இடங்கட்கும் வழி காட்ட வேண்டும். வைதிகரின் வரட்டுக் கூச்சலைப் பொருட் படுத்தாது வாலிபர்கள் இதற்கான ஆதரவு திரட்டித்

தரவேண்டும். மற்ற இடங்களிலும் இதைப்போன்ற முன்னேற்ற வழி வகை ஏற்படவேண்டும்.

அல்லாபக்ஷே எங்கே!

சிந்து மாகாணத்திலே, அடிக்கடி தமது "ஜெயக்கொடி"யை ஏற்றுவதும் இறக்குவதுமாக இருந்துவந்த "அரும்பெரும் தலைவர்" அரசியல் ஊஞ்சலாடி வந்தவர், வர்தாவரப் பிரசாதத்துக்காக வளைந்து கொடுத்தவரான மாஜி முதலமைச்சர் அல்லா பக்ஷ் இப்போது எங்கே இருக்கிறார்? முஸ்லீம் லீகுக்கு எதிரிடையாக ஓட்டைத் தம்பட்டத்தை அடித்துக் கொண்டிருந்தாரே, ஜனாப் ஜின்னாவை எதிர்த்துப் பேசிக்கொண்டிருந்தாரே, காங்கிரசுடன் குலவிக்கொண்டு லீகின் திட்டங்களை எதிர்த்தாரே, அவர் ஆண்ட மாகாணத்திலே சென்ற வாரம் என்ன நடந்தது தெரியுமோ! நாட்டின் சிக்கல் போக்க, பாகிஸ்தான் ஒன்றுதான் பரிகாரம் என்ற தீர்மானம், சிந்துமாகாண சட்டசபையிலே நிறைவேறியது! மந்திரி சபையிலே உள்ள இந்துமகாசபை மெம்பர்கள், எதிர்த்தனர், பேச்சு மன்றத்திலே பயன் தரவில்லை. சிந்து மாகாண மக்களின் தீர்ப்பு, அல்லா பக்ஷின் நிலைமையைத் தெளிவாக்கிவிட்டது. முஸ்லீம் லீகின் மூலாதாரக் கொள்கையை சிந்து முஸ்லீம்கள் ஆதரிப்பதைக் காட்டிய பெருமை, முஸ்லீம் லீக்கைச் சார்ந்த பிரமுகர்களுக்குரியது. பிரிட்டிஷ் பிரமுகர்கள் பலரின் பித்தம் இதனால் தெளிந்திருக்க வேண்டும்.

அது இல்லாமலா!

காந்திஸ்தான் வேண்டுமென்று கதறுகிறார்களே தோழர்கள், அந்த ஆட்சி எப்படி இருக்குமென்பதற்கு ஓர் உதாரணம் கேளுங்கள், காந்தியாரின் காரியதரிசி மகாதேவ தேசாய் இறந்து விட்டாரல்லவா, அவருடைய எலும்பைப் புனாவுக்கு அருகாமையிலே ஒரு திவ்ய க்ஷேத்திரத்திலே, வைதிக முறைப்படி ஆற்றில் சேர்த்தனராம், தர்ப்பணம் நடந்ததாம், பிராமணர்களுக்கு தட்சணை தரப்பட்டதாம்!! இது காந்தியார் உபவாசத்தை முடித்துக்கொண்டு பாரணை செய்த தினத்தன்று நடந்தேறியதாம். இடையே ஒரு விளக்கம், உபவாசத்துக்கும் பாரணைக்கும் வித்தியாசம் என்ன வென்று எண்ணுகிறீர்கள்? உபவாசத்திலே இனிப்பான எலுமிச்ச ரசம் கலந்த தண்ணீர்!

பாரணைக்கு ஆரஞ்சு ரசங் கலந்த ஜலம்!! இதுதான் வித்யாசம். எலும்பை ஆற்றிலிடல், வைதிகக் கர்மம், தர்ப்பணம், பிராமணருக்குப் பூரி எனும் இத்யாதி ஆரிய தர்மப்படிதான் காந்திஸ்தான் இருக்கும். எனவேதான் இஸ்லாமியரும், திராவிடரும் வேறு "ஸ்தான்கள்"கேட்கின்றனர். அது தவறா?

அவரது அடுத்த அலுவல்!

அன்பர் ஆச்சாரியார், அரசியலில் நடத்திய பல முயற்சிகள் பலனளிக்காது போகவே, முஸ்லீம் லீகுடன் பேசி ஏதேனும் செய்யலாமே என்று எண்ணினார், அதுவும் பலிக்கவில்லை. கட்சியற்றோருடன் கலந்து காரியசித்திக்கு ஏதேனும் இடமுண்டா என்று பார்த்தார், அதுவும் பலனளிக்கவில்லை. ஆகவே காந்தியாரின் உபவாச வெற்றிக்காகப் பிரார்த்தனை நடத்த வேண்டுமென்று பல பிரமுகர்களுடன் சேர்ந்து ஓர் அறிக்கை வெளியிட்டுள்ளார். என்ன செய்வார் பாபம்! அறிக்கை வெளியிடுவதும், சண்டே அப்சர்வர் ஆசிரியரின் குறுக்குக் கேள்விகளுக்குப் பதில் கூறுவதுமே அவருடைய அடுத்த அலுவலாகி விட்டது. ஆண்டார் முன்பு, ஆயிரத்துக்கு மேற்பட்ட தமிழரைக் கூண்டிலிட்டார், அதற்குப் பிறகு, இந்த அலுவலே கிடைத்தது, என்செய்வார்! "கண்ணன் காட்டிய வழி" ஆசிரியர், "காலம் காட்டும் வழி" செல்கிறார் போலும்!!

நிறத்திமிர்!

டாக்டர் ஏ. இலட்சுமணசுவாமி முதலியாருக்கென "ரிசர்வ்" செய்யப்பட்டிருந்த முதல் வகுப்பு இரயில்வே வண்டியில், யாரோ ஒரு வெள்ளையன் ஏறிக்கொண்டு, அதிகாரிகள் எவ்வளவோ கூறியும் இறங்க மறுத்ததாகப் பத்திரிகைகளிலே ஒரு செய்தி வந்தது. இத்தகைய நிறத்திமிரைச் சர்க்கார் அடக்காவிட்டால், சாந்தியையும் சமாதானத்தையும் சட்ட ஆட்சியையும் விரும்பும் மக்களுக்குப் பிரிட்டிஷார் மீது கசப்பு அதிகரிக்கும். வெள்ளை நிறத்தான் என்பதற்காகவோ, வேதிய குலத்தான் என்பதற்காகவோ, யாரும் யாரிடமும் திமிருடன் நடந்து கொள்வதை அறிவும் நாகரிகமும், மனிதத்தன்மையும் ஓங்கியுள்ள இக்காலத்திலே யாரும் சகிக்க முடியாது. உள்நாட்டிலே, உள்ள இனச்சிக்கலால், பொதுவான விடுதலைக் கிளர்ச்சி நடக்கவில்லையேயொழியே, இந்தியாவிலுள்ள எவரும் ஆங்கில ஆட்சி இருந்தே தீரவேண்டு மென்று கருதியில்லை என்பதை, நடப்பது "கிளைவ் காலம்" என்று, எண்ணிக்கொண்டுள்ள சில

வெள்ளையர்கள் உணரவேண்டும். நேசநாடுகளின் "கதியை" நிர்ணயிக்கும் யுத்தசபையிலே ஓர் அங்கத்தினராக இருக்கும் சர். எ. இராமசாமி முதலியாரின் உடன் பிறந்தாரும், ஒரு பல்கலைக் கழகத்தின் துணை வேந்தராகவும், பண்பு மிக்கவருமான டாக்டர் எ. இலட்சுமணசுவாமி அவர்களை அவமதித்ததைத் தமிழர் கேட்டுக் கொதிக்கின்றனர். ஆட்சியாளர் தக்கது செய்வது முறை - செய்தல் வேண்டும். ஜப்பானியராட்சி ஏற்பட்டால், இந்தியாவிலுள்ளவர் களை மட்டுமரியாதையின்றி நடத்துவர் என்று பலமான பிரசாரம் செய்யப்படுகிற நேரத்தில், இத்தகைய நிறத்திமிர் காட்டப்படுவது, போர் ஆதரவு தேடுவதற்கு உதவி செய்யுமா என்பதைச் சர்க்கார் யோசிக்க வேண்டும், மேலோரின் மனதைப் புண்ணாக்குவதை விட பைத்தியக்காரதனமான தவறை ஒரு சர்க்கார் செய்ய முடியாது! எனவே, நடந்த சம்பவத்தை விசாரித்து, ஆவன செய்யச் சர்க்கார் முன் வர வேண்டும்.

அடிமேல் அடி!

சோவியத் சம்மட்டி அடி, நாஜிப்படையை நொறுக்கிவிட்டது. ரிஜாவ் ரஷியரிடம் பிடிபட்டது. ஜெர்மன் ரஷியப்போர் ஆரம்பித்தபோது முதல் பாய்ச்சலில் பிடிபட்ட பிரதேசந் தவிர மற்ற இடங்களை நாஜிகள் இழந்துவிட்டனர். நாலாபக்கமும் சூழ்ந்துக் கொள்ளப்பட்டதால் நாஜிகளுக்குச் சரியான நஷ்டம்! அதைப்போலவே, ஆப்பிரிக்காவிலும் அச்சுப்படைகளுக்கு நஷ்டந்தான்! அச்சுக் கூட்டாளியான ஜப்பானுக்கோ, சென்ற வாரம், பிரம்மாண்டமான நஷ்டம் ஏற்பட்டது. ஆஸ்திரேலியாவைத் தாக்க ஒரு பெரும் ஜப்பானியக் கப்பற்படை, விமானத் துணையுடன் சென்றது. அதனை பிஸ்மார்க் கடலில், நேசநாட்டு விமானங்கள் தாக்கி, அழித்தன. ஜப்பானுக்கு ஆள் சேதம் மட்டும் 15000. பல பெரிய போர்க்கப்பல்கள் கடலடி சென்றன. இத்தகைய பெரிய நஷ்டம் இதுவரை ஜப்பானுக்கு ஏற்பட்டதில்லை. ஜப்பானின் கடற்பலத்துக்கே, பிஸ்மார்க் சம்பவம் ஊனமுண்டாக்கி விட்டது. ஆஸ்திரேலியாவுக்கு ஆபத்து நெருங்கியதை நேசநாட்டு வெற்றி தடுத்துவிட்டது. சிங்கப்பூரருகே பிரிட்டிஷ்

கப்பலான பிரின்ஸ் ஆப் வேல்ஸ், ரிபல்ஸ் இரண்டையும் ஜப்பானிய விமானங்கள் தாக்கி மூழ்கடித்ததை அச்சுப் பிரசாரர்கள் பிரமாதமாகப் பேசினர். அமெரிக்கர்கள் பவழக்கடலில் ஜப்பானியருக்கு விளைவித்த சேதம் அபாரம். அதைவிட அதிகமான நஷ்டம், பிஸ்மார்க் கடலிலே, ஜப்பானியருக்கு ஏற்பட்டுவிட்டது. இப்போது அச்சுப் பிரசாரகர்கள் வாய்மூடிக் கொண்டனர். இதே சமயத்தில் அடிமேல்அடி கொடுத்து ஜப்பானை மட்டந்தட்ட வேண்டும். சீன வீராங்கனை, மாடம் சியாங், இதனை அமெரிக்காவெங்கும் வலியுறுத்திப்பேசி வருகிறார். இந்நிலையிலே, பர்மாமீது படை எடுக்கும் திட்டத்தை, பருவ நிலையை உத்தேசித்து ஒத்தி வைத்திருக்கிறார்கள் என்று நேசநாட்டு நிபுணர்கள் கூறுகின்றனர். பர்மாமீது பாயாவிடினும் உடனடியாக அந்தமான் தீவையாவது நேசநாடுகள் தாக்கிப்பிடிக்க வேண்டும். பர்மாவைப் பிடிக்கவும், அந்தமானைப் பிடிக்கவும் தேவையான தளவாடம் இந்தியாவிலே குவிந்துவிட்டது. அதற்கும் மேலாக, சீனாவுக்கு அனுப்பவும், இங்கு தளவாடம் தேக்கப்பட்டு வருகிறது. ஆகவே, சக்தியை யுக்தியாக உபயோகித்து அந்தமான் தீவை முதலிலே பிடித்து விட்டால், சென்னை மாகாண கடலோரத்திலே இன்றுள்ள கவலை குறையும். நேசநாடு இதை உணர்ந்து காரியம் நடத்த வேண்டும்.

14.3.1943

# காடிக் கழகம் !

‘யாரப்பா பரதன் என்ற பேர்வழி?’

* * *

“ஏன், நான்தான், என்ன விசேஷம்?”

* * *

கேள்வி கேட்டவரின் கோபம் என் பதிலால் கொஞ்சம் குறைந்ததுபோல் காணப்பட்டது. கோபக்குறிமாறிக், கொஞ்சம் பரிதாபக்குறி உண்டாயிற்று. “நீதானா? ஆளைப்பார்த்தால் சாதுவாகத் தெரிகிறதே” என்று அந்தக் கதருடையார் கூறிவிட்டு, என்னை ஏற இறங்கப்பார்த்தார். ஒரு சமயம், தன்னுணர்வாளர் களின் அன்றாட வாழ்க்கையைப்பற்றி விசாரிக்கக் கிளம்பிய “புதுக்கூட்டு” அனுப்புவித்த பரிசோதகரோ என்று ஐயுற்றேன். வந்தவர், எதிரே இருந்த நாற்காலியிலே உட்கார்ந்துகொண்டு, ‘தம்பி பரதா! முன்பு, இந்தி எதிர்ப்பு நடந்ததே அக்காலத்திலே நான் உங்கள் கூட்டங்களுக்கெல்லாம் வருவதுண்டு. இப்போது நீங்கள் செய்யும் காரியத்தைப் பார்த்தால்...” என்று கூறி பெருமூச்செறிந்தார். “என்ன செய்வது பெரியவரே! உலகிலே, எல்லோருக்கும் பிரியமான, பிடித்தமான காரியத்தைச் செய்ய முடிகிறதா! நாங்கள் துவக்கும் காரியம், யாரைத் தாக்குகிறதோ அவ்வப்போது அவரவர்கள் மனம் கசப்படைகிறது. அதைப் பார்த்து, அவருக்கு இது பிடிக்காதே, இவருக்கு அது பிடிக்காதே என்று தலையைச் சொரிந்துகொண்டு யோசித்து யோசித்துக் காரியத்தைச் செய்ய வேண்டுமானால், நாங்கள் தலையாட்டித் தம்பிரான்களாகி, உடலூட்டி வளர்க்கும் இடந்தேடி அதற்கேற்ற முறையிலே இயல்புகளை அமைத்துக் கொள்பவர்களாகி, உள்ளத்தைக் கள்ளர் குகையாக்கி, உடலைச் சுமையாக்கித் திரியவேண்டுமே தவிர, உலகுக்குப்

பயன்படக்கூடிய ஒரு காரியமும் செய்ய முடியாதே! கதை தெரியுமோ உமக்கு, தந்தையும் மகனும் கழுதை விற்கப் புறப்பட்டு, வழியிலே போவோர் வருவோரின் யோசனைகளை கேட்டுப்பட்டபாடு! ‘என்று நான் உரைத்துக்கொண்டிருக்கையிலே, அந்தப் பெரியவர், இடைமறித்து, “கதை கிடக்கட்டும் தம்பி! அந்தக்காலத்திலே உங்களோடு சேர்ந்து, ஊரூருக்குவந்து, பேசியிருக்கிறேன்” என்று தன் கதையைத் துவக்கினார். “உண்மைதான்! இப்போது நாங்கள் செய்வது பிடிக்காது ஒதுங்கி நிற்கிறீர் போலும்” என்று நான் கூறினேன். தலையை அசைத்தார் வேகமாக, தடியைத் தட்டினார் கோபத்தோடு. மடியை அவிழ்த்தார், திருநீற்றுப் பொட்டலத்தை எடுத்தார், பிரித்தார் முருகா, முருகா, முருகா என்று மும்முறை மூன்று விதமாகக் கூவினார், நெற்றியிலே பூசிக்கொண்டார்.

“வாலிபனடா நீ.”

“ஆமாம், வாலிபன்தான்.”

“வேண்டாமடா உனக்கு இந்தப் புத்தி.”

“அக்ரகாரம் முழுவதும் அதையேதான் கூறுகிறது.”

“நாயக்கருடன் சேர்ந்து பாழாகாதே.”

“பாழகவில்லை. சேர்ந்து, சீரிய தொண்டாற்றப் பழகுகிறேன்.”

“என் கோபத்தைக் கிளறாதே.”

“நான் கிளறவில்லையே! நீரே கிளறிக் கொள்கிறீர்.”

இந்த உரையாடலும் முடிந்தது. பிறகு அவர் சாந்தமாகப் பேசலானார். ‘அன்று நான் பெரியாரைப் போற்றினேன். இன்றோ, கண்டால் வண்டி வண்டியாக வைதிட வார்த்தைகள் உள்ளன’ என்றார்.

“அது புதிதா! அதுபோல், நம் நாட்டிலே பலர், அவரை ஒரு சமயம் புகழ்வதும், மற்றோர் சமயம் தூற்றுவதுமாக இருப்பதை நான் அறிவேன். வேலூர் கோட்டை வெளியிலே இராமகாதையைக் கண்டித்துப் பெரியார் பேசுகையிலே,

கோபித்தெழுந்து கூவி, தன் குள்ள உடல் குலுங்க ஆடி, குழப்பம் விளைவித்துப் பிறகு கோலிழந்து, மேலாடை இழந்து, காலின் நிலை இழந்து தவித்த 'ஒரு துறவி,' அந்தக் கோபத்தைத் துறந்து, சுயமரியாதை இல்லத்தில் நுழைந்து, தூபதீபமேந்தி உழைத்து, துதிபாடி ஊரைவலம் வந்து, 'பெருமை அறியாது பிழைபல செய்தேன்! பெரியாரின் அருமை தெரியாது ஆத்திரங்கொண்டேன். இன்றே கண்டேன் அவர் குணத்தை அதை உமக்கு விண்டேன், அவர் முன் தெண்டனிட்டேன்' என்று திருத்தாண்டகம் பாடினார், திரு உண்டி சேர்த்துத் திருமடம் அமைத்துத் திருத்தொண்டு புரிவேன் தீர இராமசாமிப் பெரியாருக்கு என்று பேசி, பெரியாரை எதிர்த்தோரை ஏசி, போய்விட்டது என்னைவிட்டு பழையமாசு என்றுகூறி, சிறையும் புகுந்து வெளிவந்து, சிறையிலே நான் கண்ட காட்சியை என்னென்பேன் என் ஐயனை! தமிழரின் தலைவனை! நித்தநித்தம் கண்டேன். சிறைக்கூடத்திலே, மணற்பரப்பிலே, மாலை நேரத்திலே அவருடன் பேசி மகிழ்ந்தேன், மட்டற்ற இன்பம் கொண்டேன்' என்று மக்களிடம் கூறினார், ஆனால் இன்றோ பெரியாராம் பெரியார்? எதிலே? பேய்க்குரல் கிளப்புகிறார் என்று தூற்றுகிறார், இந்த முதுமையில் மூன்றாவது கட்டம் அவருக்கு இருக்கக் காண்கிறேன், மற்றொருவர் பெரியார் பற்றுக்கொண்டு, பித்தம் தெளிய ஈ.வெ.ரா. எனும் மருந்தொன்றிருக்குது என்று பாடியவர் இன்று, 'என்ன தெரியும் இந்த நாயக்கருக்கு! இராமசாமி என்ற பெயரை வைத்துக்கொண்டு, இராமாயணத்தைக் கொளுத்துவதா! தன்னையே கொளுத்திக் கொள்வது போன்றதல்லவா அது? என்று கூறிக் குமுறுகின்றார். இங்ஙனம், பலர் பலவித மாறுதலை அடைந்தனர். அதுபோல் தாங்களும் மாறினீர் போலும் என்று நான் கூறினேன், வந்தவர், 'பலர் பெரியாரிடம் இப்போது கோபித்திருப்பதைத் தெரிந்து கொண்டுதான் இருக்கிறாயா?' என்று ஆச்சரியத்துடன் கேட்டார். "நன்றாகத் தெரியும்! கோபத்தால் அமைக்கப்படும் புது கூடாரத்திலே கூடிடுவோர் ஒருவரை ஒருவர் நம்பாத ஓங்காரச் சொரூபிகள் என்பதும் தெரியும்' என்று நான்கூறிவிட்டு, 'காங்கிரஸ் பார்ப்பன சபை என்று அவர் கூறியதும், பார்ப்பனர் கோபித்தனர், ஜஸ்டிஸ் கட்சி சீமான்களின் சிங்காரக் குழவியாகக் கிடக்கிறது, வெளியே வர மறுக்கிறது என்று பேசியதும், சீமான்கள் சீறினர், வர்ணாசிரமத்தைக் கண்டித்ததும், குளக்கரைகள் கூவின, பழமையைக் கண்டிக்கிறார், இது கண்டு பழமை

விரும்பிகள் பதறுகின்றன. இது சகசந்தானே! என்று நான் சொன்னேன். ‘சரி! சரி! இனிமேல் நான், இந்தக் கிளர்ச்சிக்காக என் மூச்சைப் பிடித்துக்கொண்டு, மூலை மூலையாக ஓடி, உள்ளே இருக்கும் புலவரைப் பிடித்துக் கட்டுரை தொடுத்திடச்செய்து, அதைப் பத்திரிகைகளிலே போட்டுப், படித்து மகிழப் போகிறேன்’ என்று கூறிவிட்டு வெளியே போய்விட்டார். போகத்தால் வெளியே அவசரமாகப் போனதால், அவர் மடியிலிருந்து கீழே விழுந்து விட்ட துண்டுக் கடிதத்தை எடுத்துக்கொள்ள மறந்துவிட்டார். கூப்பிட்டுக் கொடுக்கத் தெருவரை சென்றேன். வந்தவரின் வண்டி வேகமாகச் சென்று விட்டதால், துண்டுக் கடிதத்தை என்னவென்று பார்த்தேன்.

இலாபம்

1. கம்ப இராமாயணத்தைக் கொளுத்த வேண்டுமென்று நாயக்கர் கூட்டம் கூறுகிறது. இதனைச் சாக்காக வைத்துக்கொண்டு, கம்ப இராமாயணத்தையும், கலையையும் காப்பாற்றுவதற்

காகக் கிளம்பினோம் என்று சொல்லி, நாயக்கரைத் திட்டச் சந்தர்ப்பம் உண்டாக்கிக் கொள்ளலாம்.

2. புராணப் பிரியர்களைக் கூட்டி இலக்கியப் பாதுகாப்புக்காக வேலை செய்ய வேண்டுமென்று பேசி, உண்டி குலுக்கிப் பணந்திரட்டலாம்.

3. புலவர்கள் கூட்டத்தோடு உலவி, நம்மையும் ஒரு புலவன் என்று பாமர மக்கள் நம்பும்படி நடந்துகொண்டு புகழ் தேடலாம்.

4. கோயில்கள், மடங்கள், பஜனைக் கூடங்கள், சத்திரம், சாவடிகளில், நமது ஆதிக்கம் வளரச்செய்யலாம்.

5. மதத்திற்கு ஆபத்து என்று மாரடித்தழுது மடாதிபதிகளிடம் திருவோடு நீட்டிப்பணம் பறிக்கலாம்.

6. பார்ப்பனப் பத்திரிகைகள் நம்மைப் பாராட்டி எழுதும்.

7. பக்திமான் என்று பெயரெடுத்துப் பழைய நாற்றத்தை மறைத்து

விடலாம்.

8. அந்திய காலத்தில் அரோகரா கூறி, வயிறார உண்டு, உடலாற உருண்டு, சுகமாகச் சுருண்டு கிடக்கலாம்.

நஷ்டம்

1. புலவர்கள், நமக்கிருக்கும் இலக்கிய அறிவுபூஜ்யம் என்பது தெரிந்து கேலி செய்வார்கள்.

2. உண்டி குலுக்கினாலும் பணம் அதிகம் சேராது, அவர் பணம் திரட்டி மோசம் செய்தார், இவர் எடுத்துக்கொண்டு ஏப்பமிட்டார் என்று கூறியிருப்பதால், நாம் போய்ப்பணம் கேட்டால், யாரும் நம்பமாட்டார்கள். முன்பு ஒரு தலைவரின் பெயரைக் கூறிப் பணந் திரட்ட முடிந்தது, பத்திரிகைகள் சில விளம்பரந்தந்து நம்மைத் தூக்கிவிட்டன, இரதம் ஜோடித்துக் கூட ஊர்வலம் வைத்தனர், இன்று அத்தகைய "வலிமை" கிடைக்காது, எனவே பணம் சேராது.

3. பொதுக்கூட்டங்களில் பேச வேண்டும்! யாராவது கூப்பிட்டால்தானே! அப்படிக் கூப்பிட்டாலும், "வாழ்க" ஒலிகூறி, சுற்றிநின்று பாதுகாப்புதர யாரிருக்கிறார்கள்! பட்டை நாமங்களும் பூச்சுப்பொட்டுகளும், பகவான்மீது பாரத்தைப் போட்டுவிட்டு, நம்மைவிட்டு ஓடுவார்கள், குழப்பம் வந்தால், தள்ளாத பருவத்திலே, ஏன் நமக்கு வம்பும் வல்லிடியும்.

4. பார்ப்பனப் பத்திரிகை, நமது பழைய பேச்சுத் தெரிந்தால், நம்மைப்பற்றி ஓர் எழுத்தும் புகழாது!

5. மடாபதிகளை மிரட்டினால், பக்தர்கள் "நீயும் சு.ம. போல் பேசுகிறாயே" என்று கோபிப்பர். மடாதிபதிகளோ, நமக்கு வாய்க்கரிசி போடாமல், ஆரிய ஏடுகளுக்குத் தூபமிட்டால், நமக்கு என்ன கிடைக்கும்.

6. எவ்வளவுதான் "பக்திமான்" என்று வேடம் போட்டாலும், சீக்கிரத்தில் கலைந்துவிடுமே.

7. நாயக்கரைத்திட்ட இது ஒரு சந்தர்ப்பமாகக் கொள்ளலாம் என்று ஆசைதான் இருக்கிறதே தவிர, வழி இல்லையே! அந்தப் பயல்கள் இருக்கிறார்களே சு.ம.க்கள்! சும்மாவிடமாட்டார்களே! எங்கே போய்ப்பேசித், தப்பித்துக்கொண்டு வரமுடியும்?

8. நமது பழைய விஷயங்களை சு.ம.க்கள் பகிரங்கமாக்கத் தொடங்கினால், என்ன செய்வது?

நான் படித்து முடிப்பதற்குள், என்னுடன் வாதாடிவிட்டு வெளியே போன தோழர், மேல் மூச்சு வாங்க வாங்க, ஓடிவந்து, என் கையிலே இருந்த கடிதத்தைச் சரேலெனப் பிடித்திழுத்தார், ஒரு பாதி அவரிடமும் மறுபாதி என்னிடமும் தங்கிவிட்டது. அந்தப் பாதியையும் அவரிடமே தந்துவிட்டு "இலாப - நஷ்டக் கணக்குச் சரியாகத்தான் பெரியவரே எழுதியிருக்கிறது. இதை யோசித்துப் பார்த்துவிட்டுப் பிறகு, காரியத்திலே இறங்குவதே யுத்தம். ஆழந்தெரியாது காலைவிட்டு விட்டுப்பிறகு அவதிப்பட வேண்டாம். "மாஜி" என்பதற்காக, நெடுநாட்களுக்கு, நாங்கள் உன் போன்றாரின் மதிகெட்ட செயல்களைக்கண்டும் சும்மா இருந்துவிட முடியாது. குலைக்கும் நாய்மீது கல் விழும், கழுதை கத்தினால் தடிதாக்கும், ஆனால் அடிவிழும்வரை அந்தப் பிறவிகள் தமது கீதத்தை யாரும் அடக்க மாட்டார்கள் என்றே எண்ணுவது வழக்கம். ஒரு காலத்தில், சு.ம.வுடன் இருந்தவர் என்ற "யோக்யதை"யை, இன்று ஈனச்செயல் புரிந்து இழந்துவிட வேண்டாம். இன்று பெரியார் துவக்கியுள்ள கிளர்ச்சி பிடிக்கவில்லையானால் ஒதுங்கி நிற்பது புத்திசாலித்தனம் மோதிக் கொள்வது பைத்தியகாரத்தனம், தூற்றுவது போக்கிரித்தனம்; வாதிடத் தெரிந்து, வகையறிந்த "விவேகிகளே" வாய்மூடிக் கொண்டனர், வறட்டுக் கூச்சலிடவே கற்ற மண்டூகங்களின்கதி, என்னாவது! - இதை யோசித்துப் பாருமய்யா! - என்று கூறினேன். அந்தக் கிழவர், இக்கடிதத்தை நீ ஏன் படித்தாய் இது எங்கள் கழகக்கூட்ட நிகழ்ச்சியாயிற்றே என்று குளறினார். பேஷ்! கழகமா! பெயர் என்ன கழகத்திற்கு? என்று கேட்டேன். கிழவர் பதிலுரைக்காமலே வெளியே ஓடலானார் அவர் காதில் விழும்படி கூவினேன், உங்கள் கழகத்துக்குச் சரியான பெயர் தருகிறேன், சூட்டிக் கொள்ளுங்கள், காடிக்கழகம்! அதுதான் சரியான பெயர்.

வீரன் அதே நேரம் உள்ளே நுழைந்தான், விஷயத்தைக்

கூறினேன், விலாநோகச் சிரித்து விட்டு, காடிக் கழகம் என்று பெயர் தருவானேன், என்று கேட்டான். "பழமை இருக்கிறதே வீரர் அதுகாடி போன்றது! அதைப்பருகிய போதையால் உளறிக்கொண்டு கிடக்கும் கூட்டத்துக்கு அது பொருத்தமான பெயர்தான்! மேலும் ஒரு பழமொழி யுண்டல்லவா, "எல்லாம் சொல்லுமாம் பல்லிகாடிப் பானையிலே விழுமாம்" என்று, அதுபோல, முன்பு நம்முடன் சேர்ந்து, ஆரியத்தை அழிக்க வேண்டும். தமிழ் வீரியத்தை வளர்க்க வேண்டும், பார்ப்பனப் புரட்டைப் பொசுக்க வேண்டும், அதைப் பெரியார் இப்படி இப்படிச் செய்யவேண்டும் என்று பேசிக் கொண் டிருந்துவிட்டு, இன்று அதே ஆரியத்திலே போய் வீழ்ந்துவிட்ட வீணர்களின் கூட்டத்திற்கு வேறென்ன பெயரிடுவது. காடிக்கழகம் மேலும் தனது வெறிமொழியைக் கூறிடின், சாடிட வேண்டும். ஆகவே வீரா, நீ அதுகளின் போக்கைக் கவனித்துக் கொண்டிரு, மீண்டும், அக் குடுக்கைகள் கூவினால், உன் பழைய சவுக்கை எடுத்துவீசி, சவுண்டிகளுக்குச் சவுக்கடி கொடுக்க வேண்டும்' என்றேன் நான். 'வந்தாயா வழிக்கு' நான் ஆரம்ப முதலே சொன்னேன், இதுகளுக்குச் சவுக்கடிதானப்பா தரவேண்டும், நீ ஏதோ அறிவுரை கூறுகிறாயே அந்த மரமண்டைகளுக்கு ஏறுமா? என்று கூறினேன், கேட்கவில்லை. சரி! இனி நீ, உண்மையிலேயே கலை உணர்ந்து பேசும் கண்ணியர்களுக்குப் பதில் கூறுவதோடு இரு, காடிக்கழகத்தார் கத்த ஆரம்பித்தால், நான் எடுக்கிறேன் என் சவுக்கை, நானும் சவுண்டிகளுக்குச் சவுக்கடி தந்து நெடுநாட்கள் ஆகிவிட்டன.' என்று கூறினான். "செய்யப்பா" என்று சம்மதித்து விட்டேன், அதைச் சவுண்டிகளுக்குத் தெரிவிக்கின்றேன்.

21.3.1943

# புலியின் கிலி !

நுனிமரமேறி அடிமரம் வெட்டிக் கொண்டிருந்த முட்டாள், அவ்வழியே வந்த மிராசுதாரரைப் பார்த்துச் சிரித்தபடி, "உங்க பண்ணையிலே இந்த ஏழைக்கு ஒரு வேலை தரப்படாதா? நாயா உழைச்சி, உங்கள் காலடியிலே விழுந்து கிடப்பேனே! எந்தக் காரியத்தையும், திறமையாகச் "செய்வேன்" என்று கூறி, வேலை கேட்டால் மிராசுதாரன் என்ன பதில் கூறுவான்?

புல் தடுக்கிக் கீழே வீழ்ந்த கால் நடுக்கி கோபுரத்தின் விளக்கை ஏற்ற நான் போகிறேன்! என்று கூறினால், யார்தான் சிரிக்க மாட்டார்கள்.

இருமலால் வதையும் வைத்தியரின் வீட்டு வாயற்படியிலே, "தீராத இருமலைத் தீர்த்துவைக்கும் சூரணம் விற்கப்படும், விலைசகாயம்" என்று தீட்டப்பட்ட விளம்பரப் பலகை தொங்கினால் வீதியிற்போவோர் எள்ளி நகையாடாரோ!

தந்தையை வீட்டைவிட்டு வெளியே துரத்திவிட்டுத் தாயைச் சாவடியிலே தலைவிரி கோலமாக உருளச் செய்துவிட்டுத், தர்பார் நடத்தும் தன்னலக்காரன், ஊருக்குப் பஞ்சாயத்துக்கூறும் தலைவனாக்கப்பட்டால். அந்த ஊரின் கதி ஏதாகும்! கள்ளப் புருஷனைக் கொல்லைப் புறத்திலே மறைந்திருக்கச் செய்தவிட்டு, வீதிக்குவந்து, அடுத்த வீட்டுக்காரியை 'அடி! போடி விபசாரி!' என்று வசைபாடும் வனிதையை என்ன கூறி வாழ்த்துவது? லோபி, வள்ளல்கள் கதை படிப்பதும் கோழை பட்டாளத்தைப் பார்வையிடும், செவிகெட்டவன் சிந்து பாடிடு கேட்போம் என்றுரைப்பதும், ஏற்றுக்கு! அதுபோல், அநீதியும் அக்ரமமும், ஆபாசமும், அநாகரிகமும், அறிவீனமும் ஆணவமும், ஜாதிவெறியும் நெளியும் நிகழ்ச்சியை நாட்டிலே கண்டு சீறி எழுந்து அதனை அழிக்கவோ, அடக்கவோ முன்வரும் மாண்பின்றி, அது இல்லாது போயினும், அதைக்கண்டு வெட்கித் தலைகுனிந்து, துக்கித்துக் கண்ணீர் பெருக்கும் நெஞ்சு நெகிழ்ச்சியும் காட்டாது, கண்மூடி வாய் மூடியாவது கிடப்போம் என்று கடையரின் நிலையும் இன்றி, மமதையுடன், மானங்கெட்டதன்மையை மறைக்க மேதாவி என்ற மேலாடை போர்த்துக்கொண்டு அந்த அக்ரமத்துக்கு ஆதரவுகாட்டி, விபரீதத்திற்கு வியாக்கியானம் கூறிக்கொண்டு, இந்நாட்டிலே நிலவும் ஏடுகளும். "திருப்பிரம்மங்களும்"

கடல்கடந்து காணப்படும், அநீதிகண்டு இங்கு மாரடித்துக் கொள்வதையும், இந்தியரின் மானத்தை வெள்ளையர் கெடுக்கின்றனர் என்று கூவிக்கண்ணீர் வடிப்பதையும், நீதி இல்லையா, நேர்மையில்லையா என்று கேட்டுக் கைபிசைந்து நிற்பதையும், இந்தியர் ஆற்றிய தொண்டுகளை மறக்கலாமா என்று பல்லிளிப்பதையுங் காணும்

போது நமக்கு, முட்டாள் வேலைக்கு மனுப்போடுவதும், புல்தடுக்கி கோபுரமேறுவேன் என்று கூறுவதும், பிணியாளன் மருந்து விற்பதும், அநியாயக்காரன் ஊரதிபனாவதும், விபசாரி ஆசாரம் பேசுவதுங்கூட, அவ்வளவு நகைப்புக்கிடமாகத் தோன்றவில்லை! நாட்டிலே நடைபெறும் அநீதிக்குப் பக்கமேளம் கொட்டும் சுக்கிரநீதிகள், ஆப்பிரிக்காவிலே இந்தியருக்கு இழைக்கப்படும் அநீதிகண்டு கலங்குகிறோம், கொதிக்கிறோம், என்று கலம் கலமாக எழுதும்போது, நமக்குச் சிரிப்பும் சீற்றமும் கலந்தெழுகிறது. எவ்வளவு ‘அப்பாவிகளாக’ மக்களைக் கருதிக்கொண்டு, இந்தக் கேடர்கள் சாணக்கியம் செய்கின்றனர்! எவ்வளவு நெஞ்சழுத்தம்!

தென் ஆப்பிரிக்க நாட்டிலே இந்தியர்களுக்குப் பெருந்தீங்கு விளைந்துவிட்டதாம்! இங்கு அதற்குத் தேசியத் தூதர்களின், உதடு வீங்கிவிட்டது, கண்டனப் பேச்சுப் பேசிப்பேசி! கண்கள் சிவந்து விட்டன. கோபத்தாலும் கொதித்துக் குதித்த கண்ணீராலும்! இருதயம், தில்லை நடனசபாபதியாகிவிட்டது! என்ன தீங்கோ என்று கேட்பீர்! தென் ஆப்பிரிக்காவிலே குடியேறியுள்ள இந்தியர்களுக்கு, உரிமை இல்லையாம்! ஓட் இல்லையாம்! அங்குள்ள வெள்ளையர்கள் இந்தியரை அவமதிப்பாக நடத்துகிறார்களாம்! வெள்ளையர், கருப்பர் என்ற வித்யாசம், துவேஷம் காட்டப்படுகிறதாம். ஓ! என் சோதரரே! ஒரு சேதி கேளீர்! என்று தேசியத்தாள் ஓலமிடுகிறது. இடையே அலைகடல் மட்டும் குறுக்கிடவில்லையானால், இந்த அக்ரமத்தை ஒரு நொடியிலே ஒழித்துவிட முடியுமே என்று கனல்கக்கிக் கூவுதும் காகிதக் கட்டாரி ஆடுவதும் காண்கிறோம்.

நிறத்திமிரை நாம் பலமாகக் கண்டிக்கிறோம். மனிதனை மனிதன் மரியாதைக் குறைவாக நடத்துவது, மடைமை, கொடுமை என்பதைக் கூறக்கூசோம். கறுப்பர் என்று வெள்ளையர், கடுமொழி புகன்றிடுவது கற்றறி மூடர்நிலையில் சில பலர் அங்குமுளர் என்பதையே காட்டுகிறது

என்று என்றும் கூறிடத்தயங்கோம். பேதங்கள் ஒழிக்க, பேதைமை ஒடுங்க, அநீதி அழிக்கப்பட, அக்ரமம் துடைக்கப்பட, எத்தகைய கஷ்ட நஷ்ட மேற்றுப் போரிடவும் மறக்கோம். மேதாவிகள் இத்தகைய பேதங்களுக்கு என்ன மினுக்குக் கருத்துரை கூறினாலும் மயங்கோம். ஆம்! எங்கும் நீதி நிலவவேண்டும் என்பதே நமது போர் முழக்கம். ஆப்பிரிக்காவிலோ, அண்டார்ட்டிக் தீவிலோ, அக்ரமம் எங்கு இருப்பினும், அதை எந்த இனத்தான், நாட்டான், வளர்ப்பினும், அதைக் கண்டிக்காது விடோம். ஆகவே ஆப்பிரிக்காவிலே இந்தியருக்கு அநீதி என்று நாட்டு நண்பர்கள் தீப்பொறி பறக்கக் கூறியதுகேட்டு, அதனை ஆராய்ந்தோம். என்ன அந்த அநீதி?

தென் ஆப்பிரிக்காவிலே, டர்பன் நகரிலே இந்தியர்கள் பெருவாரியாகச் சொத்து வாங்கிக்கொண்டு வருகிறார்கள் என்று, “புகார்” கிளம்பிற்று. அதை விசாரணை செய்யப் பிரிட்டிஷ் சர்க்கார் ஒரு கமிஷன் நியமித்தனர். அநீதி இதுதான்! இந்த மாபெரும் கேடு சூழப்பட்டு, மனங்கசியும் மாபெருங்கூட்டத்தின் தொகை எத்தனை கோடி? எத்தனை இலட்சம்? என்று எண்ணுகிறீர்கள். 25 ஆயிரம்! இருபத்தைந்தாயிரம் இந்தியர், பரந்த இப்பூபாகத்தில் பல்வளம் நிறைந்திருந்தும், கடல் கடந்து சென்றனர்! வேற்றுநாட்டிலே தங்கினர், வீடு வாசல் தேடினர். அதிகமான தொகையினராக இந்தியர் பெருகி, ஆப்பிரிக்காவிலே சொத்துகளை வாங்கிவிட்டால், தமது சொந்தநலன் பாதிக்கப்படுமே என்று அங்குள்ள வெள்ளையர், விசாரணை துவக்கினர். வேதனை இதுதானாம்! பரம்பரையாக இங்கு வாழ்ந்து, பாதுஷாக்களைக்கண்டு, பலநூறு ஆண்டுகள் நாட்டைப் பரிபாலித்துவந்த 10 கோடி முஸ்லீம்களுக்கு, இன்றும், “முரடன்” என்று இழிபெயரிட்டழைத்து, ஊரிற் குடியிருக்க ஒதுக்கிடந்தந்து, உண்டிச் சாலைகளிலே அவன் மானம் கெடும் விதத்திலே, ஓரத்தில் இருக்கச் செய்து, சில இடங்களிலே உள்ளே நுழையவே அனுமதி மறுத்து, இரயில்வே நிலையங்களிலும், இந்துபானி - முஸ்லீம்பானி - என்று நீரும் வேறு வேறாகித்தந்து, அவனது நிழலும் தனது

புனிதத்தன்மையைக் கெடுக்கும் என்ற நினைப்புடன், இங்கு நிகழ்ச்சிகள் உள்ளன. இதனைப்போக்க இம்மியும் மனமின்றி, இந்த அநீதியை அக்ரமத்தை சகித்துக்கொண்டும், வளர்த்துக்கொண்டும், முஸ்லீம்கள் அன்னியர் என்று துவேஷப்பிரசாரம் புரிந்து கொண்டும், ஒதுக்கினீர், ஆகையால் ஒதுங்கினோம் என்றுரைத்து, நாமிருவரும் கலந்து வாழ முடியாதபடி, பிரிந்து விட்டோம், எனவே எங்களுக்குத் தனி அரசு வேண்டும் என்று அப்பத்துக்கோடி மக்கள் கிளர்ச்சி செய்தால், அதனையும் அடக்க, எம்முறையும் சரியே என்று எண்ணிடும் கூட்டம், ஆப்பிரிக்காவிலே இந்தியருக்கு அவமதிப்பு வந்து விட்டதற்காக, இங்கு அடிவயிற்றிலடித்துக் கொள்கிறது. இந்த விநோத நீதியை வேறெங்காவது காணமுடியுமா? மதுவிலக்குப் பிரசாரத்தைக் குடியனிடம் ஒப்படைப்பதுபோல, மத மமதையும் இனச்செருக்கும், குல ஆணவமும் கொண்ட கூட்டம், வெள்ளையருக்கும் கறுப்பருக்கும் வித்யாசம் ஏன்? என்று மனித நீதி பேசுகிறது! எவ்வளவு துணிவான சூது!! ஆறுகோடிக்கு மேற்பட்ட, பழங்குடி மக்களை நாட்டுப் பட்டாக்காரரைப் பாதுகாவலரை, பாட்டாளி மக்களைப், பரிதாபத்துக்குரிய பஞ்சமராக்கி, எலும்புந் தோலுமாக்கி, மலமும் சிறுநீரும் புழுவும் பிறவும் நிறைந்த ஊர்க் கோடியை அவர்களுக்கு உறைவிடமாகத் தந்து, எருமை புரளும், நீர் பருகி எச்சில் உண்டு, எடுபிடி ஆளாகி உழன்று, மேனி கருத்துத் தலைகாய்ந்து, உடல் ஒடிந்து, இரத்தம் சுண்டி, சரிந்த மண் சுவரிலே, சுரைக்கொடி படரவிட்டுக் கூரையாக்கி, கிழிந்த கோணியைக் கதவணியாகக் கொண்டு, பறைகொட்டியும் பாடுபட்டும், உழுது உழன்றும், ஊர்க்காவல் புரிந்தும், ஊசலாடும், “தீண்டாதாராக” வைத்துக்கொண்டு - நந்தன் காலத்துக்கு முன்பிருந்து டாக்டர் அம்பேத்கார் காலம் வரையிலே இந்த அநீதியை, அக்ரமத்தை ஒழிக்காது இருந்ததுடன், இந்த ஜாதிமுறை ஒழியவேண்டும் என்று கூறிச் சீறிப் போரிடும் சீர்திருத்தவாதிகளைச் சதியால் வீழ்த்திச் சனாதனத்தைக் காப்பாற்றி, வர்ணாசிரமத்தை வளையாது ஒடியாது இருக்கச் செய்துவரும் கூட்டம், அங்கே ஆப்பிரிக்க நாட்டிலே, டர்பன் நகரிலே இந்தியருக்குச் சொத்து வாங்க உரிமையில்லையே, என்று பரிதாப மேலிட்டுப் பரணிப்பாடுகிறது! அன்னைக்கு அரைவயிற்றுக் கஞ்சி

இல்லை, ஆடலழகிக்கு ஆபரணம் தருகிறான், ஆணழகன்! இங்கு, இஸ்லாமியரை இழித்தும், பழங்குடி மக்களைப் பாழ்படுத்தியும் வரும் பாதகத்தைக் களைய முன்வர வீரமும் நெஞ்சுறுதியும், நேர்மையில் நாட்டமும் நீதியில் கவலையும், மனிதாபிமானத்தில் அக்கரையும் கொள்ளாத "மகானுபாவர்கள்", ஆப்பிரிக்காவிலே இந்தியருக்குச் சொத்துரிமை வாங்கிதரப் பேரிகை கொட்டுகின்றனர். எவ்வளவு பெருநோக்கம்! எத்துணை உரிமை ஊக்கம்!! யார் கூறவல்லார் இவர் தம் பெருமையைத் தலைநிமிர்ந்து வாழமுடியாது, தத்தளிக்கிறான் தமிழன். அவன் ஆண்ட தரணியில் இன்று அவன் தாசனாகித், தரித்திரனாகித் தன்னை மறந்தவனாகித் தவிக்கிறான். காடு களைந்தும் கல் பிளந்தும், பாதை அமைத்தும் பல்லக்குச் சுமந்தும்; வண்டி ஓட்டியும் வரகரசி சேர்த்தும், குப்பை கூட்டியும் குகதியும் வெட்டியும், பில்லை அணிந்தும், கல்லைச் சுமந்தும், காலந்தள்ளுகிறான். வானத்தை நோக்குகிறான், 'வராதா சாவு' என்று வரங்கேட்கிறான்' இன்றைக்கிருப்பாரை நாளைக்கு இருப்பாரென்று எண்ணவோ திடமில்லை என்று அழுகிறான். ஐந்தடித்துண்டு, இதற்கு ஒன்பது வாசல், என்று அழுகுரலில் வேதாந்தம் பேசுகிறான். அவன் இந்நாட்டு மன்னர்குடி! இங்கு ஆண்டவரின் வழி வழி! இனம்பல இயல்பு பெறாமுன்பு, ஒளிவிட வாழ்ந்தவன்! மண்டலங்கள் அமைத்தவன். மரக்கலங்கள் செலுத்தியவன், மலர்த்தோட்டத்தில் உலவியவன், மானத்தோடு வாழ்ந்தவன், மறத்தமிழன்! அவன் இன்று சொந்தநாட்டிலே, பிறருக்கு, ஒரு சிறு கூட்டத்துக்குச், சூதுச்செல் வருக்கு, சுகபோக விரும்பிகளுக்கு, அடிமை! இதைக்கூற, மாற்ற, மனமில்லாது கெடுமதியெனும் படுகுழியில் படுத்துறங்கும் "பண்புடையோர்"தான், ஆப்பிரிக்கா நாட்டிலே அநீதி என்று ஆர்ப்பரிக்கின்றனர்.

ஊராருக்கு நீதிகாட்ட நாட்டினருக்கு நலன் புரிய முன்வரக் காணோம். சுதேச ஊழலைப் போக்கச் சிறுவிரலும் அசையவில்லை. பரதேசம் போனவர்க்குப் பட்டா வாங்கித்தர இங்கு ஜல்லடம் கட்டுகின்றனர், ஜாரின் சாயல்கள்! நிறத்திமிர் கண்டிக்கும் வீரர்கள், இங்குள்ள ஜாதித்திமிரைக் கண்டிக்க முன்வரட்டுமே பார்ப்போம். ஆப்பிரிக்க நாட்டிலே, இந்தியருக்கு உரிமை வாங்கப் போரிடும் சூரர்கள், இந்தியாவிலே இந்தியர் என்று எவரையும் அழைக்கும் சொல்லுக்கேற்ப, எவருக்கும் சம உரிமை வாங்கப் போரிட வேண்டும் என்ற சூடுசொரணையை மறந்திருக்கக் காரணம் என்ன என்று கேட்கிறோம். நீதியும் நேர்மையும், உரிமையும் உயர்கொள்கையும், கடல் கடந்தால் தான்பெற வேண்டும் போலும்!

இங்கு உழைத்து அலுத்து, உரிமை உண்டு, அதை இழந்தோம் என்பதையும் மறந்து உள்ள மக்களுக்குத் துணைபுரிவார் இல்லையா! இங்குள்ள அநீதியைப்போக்க ஒரு கரம் கிளம்பலாகாதா ஒருநா அசையலாகாதா! ஏன் தேசியத் திருஷ்டி அங்கெல்லாம் பாய்வதில்லை! ஆரியஸ்தான் அப்பக்கம் திரும்பவிடுவதில்லை என்பதன்றி வேறென்ன கூறமுடியும்!

ஆப்பிரிக்காவிலே வெள்ளையர் வாழுமிடங்களிலே கறுப்பர் வசிக்க வீடு பெற அனுமதிக்கப் படுவதில்லையாம், இதுகூறி அழுகிறது ஒரு தேசியத் தினசரி. வேதியர் வீதியில், அதன் ஆசிரியர் வேண்டப்படுபவராக, விருந்துண்ணும் நேசராக, விளையாடும் அன்பராகக் கருதப்படலாம். ஆனால் அன்பர் சொக்கலிங்கனாரின் இனம், அந்தப் பூசுரபுரத்திலே இன்றும் வாழ அனுமதி கிடைக்காது! பார்ப்பன ஓட்டலிலே இன்றும் தமிழனுக்கு வேறு இடந்தான்! தமிழன் செல்வமிகுதியால் ஒருநாள் கட்டிய கோயிலிலே, தமிழனுக்கு உரிமை என்ன இருக்கிறது? பூஜைக்காக அமர்த்தப் பட்டுப், பூச்சூடிச், சந்தனம்பூசி, பூரித்துக் காணப்படும், பூசுரனிடம், பயபக்தியுடன் நின்று, பழமும் சூடமும் அவனைத் தொடாமல் எட்ட நின்று தந்து தட்சணையும் தந்து தொலைவினில் நின்று, தபாலாபீசில், தந்திச் செய்தியை எழுதிக் கொடுத்துவிட்டு, எட்ட நின்று போய்ச் சேருமா என்று அதிகாரியைக் கேட்பதுபோல், அர்ச்சகனின் சகஸ்ரநாமம் முடிந்ததும், ஆண்டவனிடம் என் முறையீடுபோய்ச் சேர்ந்ததா என்று கேட்டுவிட்டு, வீடு திரும்பு கிறான். குளக்கரைகளிலே வேறுவேறு படித்துறை! கல்லூரிகளிலே வேறுவேறாகச் சாப்பிடுமிடம். எங்கு இருக்கிறது தமிழனுக்கு உரிமை! இதைக்கேட்க எந்த அறிவாளி முன்வருகிறான்? எந்தத் தேசியத்தலைவன் கேட்கத் துணிகிறான்? எந்த ஏடு கேட்க முனைகிறது? ஏன், இதற்கெல்லாம் மௌனம், ஆப்பிரிக்க நாட்டு அநீதிக்காக ஆர்ப்பரிப்பு, இந்த விசித்திரத்தை நாட்டினர் காண்கின்றனர், ஆனால் கண்மூடிக் காலங்கழிக்கின்றனர்.

அறிவுபெற கல்விக் கூடங்கள் அமைக்கப்படுகின்றன. குருட்டு நோக்கமும், மூடமதியும், போக்கும் மருந்து என்று பெயராம் கல்விக்கு! அத்தகைய கல்விச்சாலைகளிலே என்ன நிலைமை காண்கிறோம். அண்ணாமலைப் பல்கலைக் கழக மாணவர் விடுதியிலே ஒரு வைதிக உணவுமனையாம்! அதை விட, வைதிக மாணவருக்கு மனமில்லையாம்! அந்த மாணவரின் அந்த அற்புதமான உரிமையில் குறுக்கிட அதிகாரிகளுக்கு இஷ்டமில்லையாம்! நாட்டுக்கு விடுதலை தேட,

அண்ணாமலைப் பல்கலைக் கழக அறிவுச் சுடர்கள், ஆறடி மேலெழும்பி, பத்தடி முன்னால் பாய்ந்து, பாய் மரமற்ற கப்பல்போல் ஆடினர்! தங்கள் கண்முன் காணப்படும் பேதத்தை மறந்தனர்!

தஞ்சை திருவையாறு கல்லூரியில், சமபந்தி விடுதி அமைப்புக்கு, நாடெங்கும் அமளி கிளப்பி, ஏடெல்லாம் வைதிகரின் இருதயத்துடிப்பை எடுத்தெழுதிப் போரிட்டன. சங்கராச்சாரி முதல் சாஸ்திரிவரையில், பிராமணச் சிறுவர்களுக்கு நேரிட்ட இந்த மகத்தான ஆபத்தைக்கண்டு மனம் பதறி, அழுதனர். அக்குரலைக் கேட்டு இந்நாட்டுத் தமிழர், என் செய்தனர்? ஏதும் அறியேன் பராபரமே என்று இருந்து விட்டனர். இந்நிலை உள்ள நாட்டிலே உள்ள ஏடுகள் தான், வெள்ளையர் கறுப்பரை அவமதிக்கலாமா, இதைக் கண்டும் நாம் வாளாயிருக்கலாமா என்று, வெட்கம் மானமின்றி, எழுதுகின்றன. தூ! தடித்த தோலரே!!

இதே நேரத்திலே, விஞ்ஞானக் கல்லூரியிலே வைதிகம் தலைவிரித்தாடுகிறது. இந்நாட்டிலே அறிவு வளர்ந்தால் அக்ரமம் அழியும் என்றனர், நம் நாட்டுக் கல்வி நிலையங்களிலே ஜாதிபேதம் குடி கொண்டே இருக்கக் காண்கிறோம். சாதாரண அறிவை விட விஞ்ஞானம் பரவினால், விவேகம் பிறக்கும் என்றனர். விஞ்ஞானக் கல்லூரியில் விவேகம் விளங்கும் விதம் கேளீர்!

பெங்களூர், விஞ்ஞானக் கல்லூரியில், மாணவர்களுக்குச் சமபந்தி விடுதி கட்ட ஆரம்பித்தனர் கல்லூரி உணவு விடுதியில், சமபந்தி உணவு கொள்ள இசையும் மாணவரே சேர்க்கப்படுவர் என்று அறிவித்து, அதற்கு இசைந்தவரிடம் கையொப்பம் பெற்றனர். கட்டடம் எழும்பிக் கொண்டிருந்தது, மாணவர்கள் உள்ளத்திலே வைதிகம் குடைந்து கொண்டே இருந்தது. சமபந்தி விடுதிகூடாது என்று கிளர்ச்சி, அதற்குச்சில மாணவர் உண்ணாவிரதம், அதற்கு “இந்து” பத்திரிகையின் வக்காலத்து, இவ்வளவும், இத்திங்கள் நடந்தன! ஆப்பிரிக்க நாட்டிலே இந்தியருக்குச் சமஉரிமை இல்லையா என்று தேசியச் சங்கநாதம் கிளம்பிய நேரத்திலேயே பாரதபூமியில் ஆரிய தர்மம் அழிவதா? என்று சயன்ஸ் கல்லூரியில் படிக்கும் மாணவர்களிற் சிலர் சனாதனச் சங்கத்தை ஊதினர். கட்டடம் மேல் எழும்பவில்லை. பாதியில் நிறுத்தப்பட்டு, மாணவர்களின் குறை என்ன என்று கல்லூரி

நிர்வாகிகள் விசாரிக்கின்றனர். வழக்குரை காதை நடக்கிறது. மேலான விஞ்ஞானப் படிப்புக்கு வந்துள்ள மாணவர்களின் மனப்பான்மை இதுவெனில், மடிசஞ்சியின் மனநிலை பற்றிக் கூறிவரவேண்டும். இவைகளைக் கண்டு வெட்கப்படாத ஏடுகள், ஆப்பிரிக்க நிலைமை கண்டு வெட்கப்படுகின்றன, துக்கப்படுகின்றன. நூலணிந்த ஓர் சிறு கூட்டத்தின் வால் வளர்வதைத் தடுக்க கோலோச்சுபவரும் முனைய வில்லை இத்தகைய துக்ககரமான நிலைமையில், தமிழன் விடுதலை பெற, தன்மானம்பெற, தன்னரசுபெற, ஆரியம் அழிக்கப் பட்டாலன்றி வேறென்ன வழி இருக்கிறது. ஆப்பிரிக்காவிலே, 25 ஆயிரம் ‘இந்தியர்’ அவமதிக்கப்படுவதற்கு, இவ்வளவு துடிக்கின்றனர். இங்கு இஸ்லாமியரும் திராவிடரும் இழிவாக நடத்தப்படுவதற்கு யார் துடிக்கின்றனர், யார் அவர்களுக்காக முன்வருகின்றனர்! புலிக்குக் கிலி வந்தால் எலிக்கு அரசு கிடைக்குமாம்! ஆரிய அரசு இன்று இம்முறையில்தான் ஏற்பட்டது.

21.3.1943

# அவருக்கு இவர் எழுதினால் ! - I

திரு. வி. கலியாணசுந்தரனாருக்கு, சர். பி.டி. இராசன் அவர்கள்

முதலியார்வாள்!

நமஸ்காரம், நாட்டரசன் கோட்டையிலே நீர்பேசினதாக வெளிவந்த ஒரு பிரசங்கத்தைப் படித்ததும், இந்தக் கடிதத்தை எழுதவேண்டுமென்று என் மனதிலேபட்டது. நான் கலைகிலை தெரிந்தவனல்லன். மெருகுமுலாம் தெரியாது. மனதிலே பட்டதை அப்படியே சொல்லுபவன். அந்தப் பிரசங்கத்தைப் படித்தபோது, எனக்கு உண்மையிலேயே மகா கோபந்தான். இவ்வளவு தமிழ்ப் பற்றும், சைவப்பாசமும் கொண்டவர், ஈரோடு நாயக்கருக்கு ஒருபடி மேலே போய்விட்டாரே என்று வருத்தந்தான். ஈரோடுக்காரர், தமது அபிப்பிராயத்தை ஒளிக்காது குறைக்காது பல வருஷங்களாகக் கூறுகிறார். அவர் இஷ்டம், அது எனக்குக் கஷ்டமில்லை. ஆனால், சுயமரியாதைக்காரர் எனக்குப் பிடிக்காது என்று கூறும் சைவர்கள் சார்பாக நீர் இருக்கிறீர் என்று சைவ உலகம் பூரித்திருக்கிறது. அத்தகைய அன்பராகிய உள்ளங்கள், முருகன் என்றால், பழனியிலே உள்ள சாமி அன்று, முருகன் என்றால் அழகு என்று பெயர், தனது அழகை ஓம்பினர், போற்றினர் என்று பேசினீரே, இது தருமமா! சுயமரியாதைக்காரர்கள் கண்டிக்கிறார்கள் என்பதற்காகச் சாட்சாத் சுப்பிரமணியப் பெருமானையா தாங்கள் இப்படிக் காட்டிக் கொடுப்பது. முருகன் என்றால் பழனிமலையப்பனல்லன் என்று சொன்னீரே, பதறுகிறதே என் மனம். பாலசுப்பிரமணியருடைய பாதக மலங்கள் சாட்சியாகச் சொல்கிறேன், இதைவிடப் பச்சையாகப், பகிரங்கமாக நாத்திகம் பேசிவிடலாம். முருகன் என்றால் அழகுதான், வேறு அல்ல, என்று சாதிக்கிறீர். முதலியார்வாள்! அழகு எதிலே இல்லை. அன்று அலர்ந்த ரோஜா, அடவி, ஆறு, மலை, மேகம்,

அதைக்குடைந்து வெளியே வரும் நிலவு, வானவில், கடல், கன்னி, கற்கோட்டை, சிலை எதிலே இல்லை. ஏன் அழகு இங்கெல்லாம் இருக்க, முருகன் என்ற தனிச்சிருஷ்டியை மட்டும் மக்கள் பூஜிக்கின்றனர். இதை என்னால் கேட்டுச் சகிக்கமுடியவில்லையே. முருகன் அழகு, என்று முடிக்கிறிரே, கச்சிக் குமரகோட்டம், திருச்செந்தூர் வேலாயுதர், சிக்கல் சிங்காரவேலர், பழனி மலையப்பன், திருத்தணித் தண்டபாணி, என்று திருத்தலங்களும் ஆங்கு திருவிழாக்களும், ஏன் அழகை ஓம்ப, இயற்கையை உணருவோம், என்று இருக்கலாமே காவடி எடுப்பதும், கந்தா, முருகா, வள்ளி மணாளா, என்று பூஜிப்பதும், ஏன் வெறும் அழகுதான் முருகன், என்றால், வள்ளி திருமண சத்கதா காலட்சேபங்களும், சூரசம்மாரத் திருவிழாவும், வேலு மயிலும் சேவலுடனே வீதிவலம் வருவதும், தேவையில்லையே. அழகைப் போற்றுவோம், வளர்ப்போம், அதற்கு அந்தக் கோயில்களிலே ஆறுகாலப் பூஜை ஏன், அந்தாதி பாடுவானேன். உலாவும் உற்சவமும் ஏன்? ஊர் மக்கள் பணத்தைச் செலவிடுவது ஏன்? மலரிலே அழகு கண்டால், சூடுவோமே தவிர, அதற்குப் பூசை புரிவோமா - என்றால்லாம், சுயமரியாதைக்காரர் கேட்பார்களே, என்ன பதில் கூறுவீர். சிவனாரின் மைந்தன், வள்ளி மணாளன், விநாயகரின் இளையோன், திருமாலின் முருகன், என்ற திவ்ய புராணங்கள், முருகன் என்றால் அழகுதான் வேறன்று என்ற உமது விபரீதம் உண்மையானால், இருக்கத் தேவையில்லையே. முருகர் தலங்களிலே, அழகுப் போட்டி நடத்துவோமா? அங்கு உள்ள செல்வத்தை அழகு வளர்ச்சிக்குச் செலவிடுவோமா? கூறும். ஏனய்யா, இப்படி முருகனை நிந்திக்கிறீர். வள்ளியம்மைக்கு வாட்ட மூட்டுகிறீர். மகாபாவம்! முருகன் மகாசக்தி வாய்ந்தவர். இலேசாக எண்ணக்கூடாது. இப்படி எல்லாம் பேசுவதை விட, வெளிப்படை யாக சுயமரியாதைக்காரராகலாம், எனக்கு அது சம்மதம். ஆகவே நாட்டரசன் கோட்டையிலே பேசியபடி மறுபடியும் பேசி, நாத்திகத்துக்கு அஞ்சி, தத்தவார்த்தக் காட்டிலே நுழையும் ஆத்திகர் என்ற பெயரெடுக்காதீர். முருகன் மீது பாரத்தைப் போட்டு விட்டேன். எல்லாம் அவன் செயல்.

தங்களிடம் பெருமதிப்புக்கொண்ட

பி.டி. இராசன்

# சாமான்யமல்ல !

நீங்களே இதைப் பாருங்கோ! எவ்வளவு நேர்த்தியாக இருக்கு - இதன் அருமை, உங்களைப் போலத் தெரிந்தவாளுக்குத் தெரியுமே தவிர, மத்தவர்களுக்கு என்ன தெரியும், எப்படித் தெரியும், சொல்லுங்கோ! ஒண்ணுமில்லே ஒரு சேதி கேளுங்கோ, நம்ப நாராயணபுரம் ஜமீன்தார் இந்தச் சரக்கு இங்கே இருக்கிறது தெரிந்தா போதும், கடையை முற்றுகை போட்டு விடுவார். உயிர் அவருக்கு இதன்மேல். சாயம் நிற்குமோன்று சந்தேகப்படுவீர் - சந்தேகமே வேண்டாம், விலையைப்பற்றிப் பேசவே கூடாது. 150க்குத் தம்படி கூடக் குறையாது, வழக்கப்படி 5% தள்ளுபடி உண்டு. உம்ம கொழுந்தை இருக்கு பாருங்கோ, கோமளம், அது உடுத்தினா, பேஷாயிருக்கும். என் கையாலே தர்ரேன், யோசிக்காமே எடுத்துண்டு போய்ப்பாரும். திவ்யமான நாள்.

கலாமோகன் ஸ்டோர், மானேஜர் கந்தசாமி ஐயரின் இந்த வர்ணனையின் அழகு, அவர் பிரித்துக்காட்டி, ஒழுங்காக மடித்து, கலர் காகிதம்போட்டு, காலண்டர்கூட வைத்து, “பாக்” செய்து கொண்டிருந்த சேலையின் நேர்த்தியைவிட நேர்த்தியாக இருந்தது. ஆசாமி அளக்கிறான் என்பது, அ.உ.க. அளகப்பச் செட்டியாருக்கு ஒருவாறு தெரியும், என்றாலும், தெரிந்தவாளுக்குத்தான் இதன் அருமைத் தெரியும் நாராயணவரம் ஜெமீன்தாருக்கு இதன்மீது உயிர் என்று ஐயர் சொல்லிவிட்ட பிறகு, சேலை நேர்த்தியில்லை என்று சொன்னால், தனக்கு நாகரிகம் தெரியாது என்று சொல்வாரோ என்ற பயம். 150 ரூபாய் கொடுத்துவிட்டுப் போனார். கந்தசாமி ஐயர், மூன்று வருஷங்களாக மூலையிலே கிடந்த சனியன் தொலைந்ததே என்று சந்தோஷப்பட்டார்.

கச்சேரி அபூர்வம் என்று பலர் சொல்லவே அவன் அங்கு சென்றான். அவர் பாடியதோ அவனுக்குப் புரியவில்லை, ஆனால் அதை வெளியே சொல்லவோ முடியவில்லை. பலர் தலையசைத்தது கண்டு இவனும் அசைத்தான். தலைகள் மட்டுமா ஆடின, கண்கள் சுழன்றன. காதிலே தொங்கிய “லோலக்கை” ஆட்டிவைத்த ஒரு கன்னியைக் கண்டார். பக்கத்திலே இருந்தவர், நகை வியாபாரி. லோலக்கின்மீது

நாட்டம் விழுந்த நண்பரின் செவியில் மெல்லச் சொன்னார், புஷ்பராகம் என்று. ‘தெரியுமே! அருமையாகப் பாடுகிறார். இவர் எப்போதுமே புஷ்பராகந்தான் அருமையாகப் பாடுவார்’ என்றான். அந்த அப்பாவி, புஷ்பராகம் என்பது இராகத்தின் பெயர் என்று தவறாகக்கருதி. நகை வியாபாரி சிரித்த சத்தம் கேட்டுச் சபையிலே பலர், சத்து! சத்து! என்று அதட்ட வேண்டி நேரிட்டது. அந்த ஆள் சிரிக்காமல் என்ன செய்வான்!

* * *

வர்ணனையைக் கேட்டு அதை மறுக்கும் வகை தெரியாது, அதிக விலை கொடுத்துச் சேலை வாங்கிய செட்டியாரும், சொல்லுவது எதையென்று தெரிந்துகொள்ளாது, தன் அறியாமை

யைப் பிறர் தெரிந்துகொள்ளக் கூடாதென்று கருதி, தலையாட்டித் தம்பிரானாக இருந்த இளித்தவாயனும், இனித் தைரியமடையலாம், ஏனெனில் இவர்களைத் தோற்கடிக்கும் பேர்வழிகள் தோன்றி விட்டார்கள்.

என்ன இருந்தாலும் சார், கலையைக் கெடுக்கக்கூடாது, பாருங்கோ, என்று பழமையால் பிழைக்கும் கூட்டத்தினன், அதற்கு வரும் ஆபத்தைப் போக்க ஆள் பிடிக்கும் வேலையிலே இறங்கும்போது பேசுவான். அதைக் கேட்கும் “அப்பாவி” கலை எனக்கென்ன தெரியுமய்யா? என்று கூறிவிட்டால், மதிப்புப் போய்விடும் என்று பித்துக்கொள்ளி எண்ணங்கொண்டு ‘ஆமாம்’ என்று ஆமோதித்துத் தன் மேதாவித்தனம் நிலைநாட்டப்பட்டு விட்டதாக எண்ணிக் கொள்கிறான். கலை என்ற சாக்குக்கூறி, தன் கபடச் சரக்கை விற்க முனையும் அந்த வலைவீசி, கலையை ரசிக்கத் தெரியாதவர்கள், கம்ப இராமாயணத்தைக் கொளுத்துவோம் என்று கூறுகிறார்கள். இது எவ்வளவு அக்ரமம் பாருங்கோ. நம்ம பெரியவாள் சிரமப்பட்டுத் தேடிவைத்த கலையை இழப்பது, தர்மமா? உங்களக்குத் தெரியாததை நான் என்ன சொல்லப் போகிறேன்! கம்ப இராமாயணத்திலே எவ்வளவு அருமையான கலை இருக்கிறது. அதற்கு உலை வைக்கிறார்களே” என்று குமுறுக்குகிறார். கம்ப இராமாயணத்திலே இல்லாத கலை உலகிலே ஏது? அதையா அழிக்கப்போகிறார்கள். என்ன அக்ரமம். அடடா! கேட்பார் இல்லையா?

என்று “அப்பாவி” கலை தெரிந்தவனாகக் காட்சி தரவேண்டும் என்று கருதிப் பேசுகிறான். ‘சரி, இந்த ஏமாளியைக் கோடரிக்குக் காம்பாகக் கொள்ளலாம் என்று கோணலாட்சிக்கார நாணல் வீரன் தீர்மானித்து விடுகிறான். கலை என்றால் காசுக்கு எத்தனை குலை என்று கேட்கும் நிலையில் உள்ள “பலதுகள்” இப்போது, கலாநிபுணர்களாகி, கலாசேவகர்களாகி, கலா பாதுகாவலராகி, கலா ரசிகராகி, கலா வீரராகி விட்டனர். கலை தெரியாது என்று கூறுவது கௌரவத்துக்குக் குறைவு என்று ஏமாளிப்பத்தியால், இன்று எங்கெங்கோ கிடந்த ஏகாந்திகள், எக்காளமிடும் கலைக்காவலராகி விட்டனர்.

மெகலா எனும் ஆங்கிலேயனைவிட, கிண்டி குதிரைப் பந்தயம், இங்குள்ளவர்களுக்கு ஆங்கில ஆசானாகி உதவி செய்தது, ஒருவிதத்திலே, கையொப்பமிடவே கண்ணும் கையும் கருத்தும் நடுங்கும் பலருக்கு இப்போது, வின், பிளேஸ், ஜாக்கி, எச். பிளாக், ப்ளுக், டபில் இவண்ட், டோட் என்று சில ஆங்கிலப் பதங்கள் தெரியும். இலாபந்தானே என்று கேட்பீர்கள். இந்த அரை குறை அவசரப் படிப்புக்காக அவர்கள் செலவிட்ட தொகையும், செருப்புத் தேய மார்வாடியிடம் நடந்த அலுப்பும், வீட்டிலே மூண்ட அமளியும், அடகு வைத்த அலங்கோலமும் தெரிந்தால், இந்த அற்ப சுகத்துக்காகவா இவ்வளவு அல்லல் என்று கூறுவீர்கள்.

கிண்டி, ஆங்கில ஆசானானதுபோல இப்போது, சுய மரியாதைக்காரர்கள் துவக்கியுள்ள கம்ப இராமாயணக் கண்டனக் கிளர்ச்சி, பலருக்குக் கலை உணர்ச்சியை ஊட்டி விட்டதாகத் தெரிகிறது. ஏ! அப்பா! எத்தனை விழாக்கள், மாநாடுகள், கழகங்கள், சொற்பொழிவுகள், சூளுரைகள், கலைக்காக! கலையே! நீ காணாய், கலைகல்லா உன் அடியாரை, தலை நீ குனிவாய், இந்தத் தம்பிரார் நிலை உணர்ந்தால் என்று நான் கூடப்பாடிடலாமா என்று தோன்றுகிறது, அவ்வளவு கலாநிபுணர்கள் இப்போது கிளம்பியிருக்கிறார்கள். இந்தக் கூட்டத்தின் பெருக்கம், தமது ஆதிக்க வளர்ச்சிச் சருக்கம் என்பது தெரிந்த பழமையால் பிழைக்கும் பரப்பிரம்ம சொரூபிகள், பகவானே! எங்களையும் படைத்து, இந்த ஏமாளிகளையும், படைத்தாயே, உன் கருணையை எப்படிப் புகழ்வோம் என்று ஏத்தித் தொழுது, இனி நம் ஏப்பம் குறையாது. தொந்தித் தளராது, சந்தனம் குறையாத, என்று பூரிக்கின்றனர். வலையிலே சிக்கிய இந்த வகையிலாதாரைக் கண்டால், வேதகாலமுதல் வலைவீசி வாழ்ந்த வேதியக் கூட்டம், மகிழாமலா இருக்கும்.

ஆற்று வெள்ளத்திலே அடித்துக்கொண்டு போகும்போது நரி கூவிற்றாம், உலகம் போச்சே! என்று கரையிலே இருந்த கருத்திலாதான், நரியைத் தூக்கிக் கரையில் சேர்த்து, "எந்த உலகம் போச்சய்யா!" என்று கேட்டானாம், நரி நகைத்துக்கொண்டே, "என்னை நீ கரைசேர்த்திராவிட்டால் எனக்கு உலகம் போச்சு என்று தானே பொருள் - நான் செத்திருப்பேன், அதைத்தான் உலகம் போச்சே என்று கூவினேன்" என்று சொல்லக்கேட்ட அந்தச் சோற்றுத் துருத்தி 'அப்படியா விஷயம்! நான் எங்கேயோ ஏதோ ஓர் உலகம் முழுகிவிட்டதோ என்று நினைத்தேன்' என்று கூறினானாம்! இந்தக் குட்டிக்கதையை (அன்பர் ஆச்சாரியார், குட்டிக் கதை கூறும் என் உரிமையில், பரதன் நுழையலாமா என்று கேட்க மாட்டார் என்று நம்புகிறேன்) ஏன் கூறினேன் என்றால், சுயமரியாதைக்காரரின் புரட்சி வெள்ளத்திலே வீழ்ந்து மூச்சுத் திணறும் ஆரியம் எனும் நரி, "கலை போச்சே! கலை போச்சே! என்று கதறுவத கேட்டு, கருத்திலாத கபந்தங்கள், உடன் முழக்கமிட்டு, ஆரியத்தை வாரி அணைத்து முத்தமிட்டு, 'கலையா போகிறது' என்று கேட்கின்றனரே, ஆரியம் அந்தரங்கத்திலே என்ன கருதுகிறது என்பதறியாமல் என்று நான் பரிதாபப்பட்டு, நரி தப்பிடப் பேசியது போல, ஆரியமும் தான் தப்ப இதைக்கூறுகிறது என்பதை இனியாவது கபந்தங்கள் உணரமாட்டார்களா என்ற ஆசையால்தான் இக்கதை சொன்னேன்.

இன்றைய கிளர்ச்சி, நமது பெரும் போரிலே, ஒரு முக்கியமான கட்டம். கட்டாய இந்தியை ஒழிக்கத் துவக்கிய போர், மொழியிலே கிளம்பிற்று, தமிழனுக்குத் தமிழே வேண்டும் என்று முழக்க மிட்டோம் வெற்றி பெற்றோம், தமிழனுக்குத் தமிழ்க்கலையே வேண்டும், ஆரியக்கலையை அணைத்துக் கொண்டு, உடல் புளகாங்கிதமடைவதாக எண்ணி உண்மையில் புண் கொண்டோராகி விடவேண்டாம், என்று இப்போதே கூறுகிறோம். இடையிலே தமிழனுக்குத் தமிழ் இசையே வேண்டும் என்ற கிளர்ச்சி துவக்கப்பட்டு, வெற்றி கிட்டியது. இந்தக்கட்டம், ஆரியத்துக்கு ஆட்டம் அதிகம் கொடுக்கக்கூடியதாகையால், அவர்கள், தமது சாணக்கியத்தைச் சரமாரியாக உபயோகிக்கின்றனர், அதனால் பாம்பைப்பழுது என்று கொண்டு சிலர் பாழாவது கண்டு நான் பரிதாபப்படுகிறேன்.

கலையினிடம் தங்கட்கே விசேஷமான அக்கரை இருப்பதாகக் கருதும் சிலரின் செயலும் சொல்லும், எனக்குக் கோபத்திற்குப் பதில் சிரிப்பே மூட்டிவிடுகிறது. 'அட பித்துக்கொள்ளிகளா! எவ்வளவு சுலபத்திலே ஆரியத்தின் சூதுக்கு இரையாகி விடுகிறீர்கள்' என்று கூறிட நினைத்தேன், மரமண்டைகட்கு மதியூட்டச் சுலபத்தில் முடியாதே என்று திகைத்தேன். சிந்து ராஜ்யாபதியாக வேண்டுமென்ற ஆவல்கொண்டு, பீர்பகாரோ என்பவன், ஆர்ப்பரித்து, ஆள்திரட்டி, ஆயுதம் வீசி, சட்டத்தைச் சாய்த்துச் சமாதானத்தைக் கெடுத்தான் - கட்டம் தனக்குத் திட்டமாகக் கிடைக்கும் என்று எண்ணினான்! கடைசியில் அவன் கதி என்னவாயிற்று? தலை போயிற்று! சிலர், இயக்கத் தலைவராக வேண்டும், அல்லது தங்கட்கு முதல் தாம்பூலம் தருபவர் எவரேனும் தலைவராக வரவேண்டும் என்ற எண்ணத்தால் உந்தப்பட்டு, வேலை செய்கின்றனர். அவர்கள் இந்தக் கிளர்ச்சியிலே நுழைந்தால், தமது நோக்கம் ஈடேறும் என்று கருதுகிறார்கள். இன்று உள்ள நிலையும்போய் பீர்பகாரோவின் தலை போனதுபோல் போகுமே, என்பதைக் கோபபோதை குறையும் வேளையிலாவது யோசித்துப் பார்க்கட்டும் என்று அவர்கட்குக் கூறுகிறேன். நீ என்ன கூறுவது, நான் என்ன கேட்பது? என்று இரட்டித்துப் பேசுவார்களானால், மெத்தச் சரி மேதாவிகளே! நீங்கள் கருங்கற் சுவரிலே மோதிக் கொள்வதை யுக்தி என்றோ, வீரமென்றோ கருதினால், செய்யுங்கள், பிறகு சிகிச்சை பெறுங்கள் என்று கூறி, விட்டுவிடுவதன்றி வேறென்ன செய்ய முடியும். நான் என்ன மடாதிபதிகளிடம் போய் மடிபிச்சை கேட்க முடியுமா? மதபரிபாலகர்களின் மனமகிழ முன்னோடியோ, பின்பாடியோ இருக்கமுடியுமா? எனக்கென்ன வேறு வேலையா இல்லை! அன்றோர் நாள் அளவளாவினோமே, அநியாயமாக அலைந்து கெடுகிறார்களே, என்ற பரிதாப உணர்ச்சிக்காகவே இவ்வளவும் கூறுகிறேன். பெரியாரும் அவரது அந்தியகால சீடரும் என்று கூறிடும் பெருந்தகையினர், இதுவரை தாங்கள், யாராரைக் குருவாகக்கொண்டு, என்னென்ன வேடம்பூண்டு, எத்தனை வகை தெந்தினம்பாடி வாழ்ந்தனர், என்பதை எண்ணிப்பார்த்தால், வேடிக்கையாக இருக்கும். அந்திய காலம் பெரியாருக்கு என்று, இந்த "என்றும் பதினாறுகள்" கூறியும் அந்தியக்கால சீடரென்று நமது இயக்கத் தோழர்களிலே யாரையோ

நையாண்டி செய்தும் காலந்தள்ளும் பேர்வழிகள், தமது அந்தியக்காலத்திலே; சந்தி சரிக்கும் நிலை தமக்கு ஏற்படாதபடி, பாதுகாப்பு ஏற்படுத்திக் கொள்ளட்டும் பாவம்!

தூற்றலும் பயமுறுத்தலும், கேலியும் கிண்டலும் செய்து பார்த்துத் தோற்றபிறகு, ஒரு மாஜி, தமிழர் தளபதி ஒருவரிடம் சென்று, முறையிட்டுக் கொண்டாராம், "நாயக்கருக்கு நீங்களாவது இந்த நூலைக் கொளுத்த வேண்டாம் என்று சொல்லக்கூடாதா?" என்று கசிந்து கூறினாராம். தளபதி, "நூலைக் கொளுத்தினால் உங்கட்கு என்னய்யா நட்டம்" என்று கேட்டாராம். துள்ளிக் குதித்து அந்தத் தோழர் "கலை போகுதே!" என்றாராம். "அவ்வளவுதானே! சரி! நாளைக்கே, கம்ப இராமாயணம், பெரிய புராணம் ஆகியவைகள், வெறும் கற்பனைகள், அவைகள் நமது இன மக்களின் ஒழுக்க போதனைக்கோ, சமயக் கோட்பாடுகளுக்கோ, சமுதாய நீதிகளுக்கோ, தகுந்த ஏடுகளல்ல. அவைகளிலே உள்ள கலை நுட்பங்களை மட்டும், கற்று உணர்க, மற்றவற்றைக் கொள்ளற்க" என்று தமிழ்ப் புலவர்கள் மாநாட்டிலே தீர்மானம் நிறைவேற்றிப், புத்தகங்களின் முன்னுரைகளிலே சேர்த்து, மக்களுக்கும் அறிவித்து விடுங்கள்; பெரியாருக்குக்கூறி, நூலைக் கொளுத்தும் வேலை வேண்டாம் என்று பிறகுநான் நிறுத்திவிடுகிறேன் என்று கூறினாராம். முறையிட்டுக்கொண்ட முதியோர் முறைத்துப் பார்த்து, முருகா! என்று பெருமூச்சுக் கலந்த அர்ச்சனை செய்துவிட்டு, வீடு திரும்பினாராம். இந்தத் திருமுறைகள் திருப்திபெற, அந்தத் தளபதி கூறிய ஒருவழி இருக்கிறது. அதை ஏன் செய்யக்கூடாது என்று கேட்கிறேன். கலை, சாமான்யமன்று என்று கதறினால் போதுமா!

28.3.1943

# பாகிஸ்தான் நாள் !

மார்ச் 23ந் தேதி, முஸ்லீம் சரிதத்திலே, ஒரு முக்கியமான நாள்! பத்துக்கோடி முஸ்லீம்களின் கண் திறக்கப்பட்ட தினம், பாதுஷாக்கள் பக்கீர்களாகிய பரிதாபத்தைத் துடைத்து, பழைய பண்புடன், இஸ்லாமியர், எவருக்கும் அடிமையாகாது, தனி நாடு பெற்றுத் தன்னரசு பெறவேண்டுமென்று, தரணியோர் உணரத் துந்துபி முழக்கிய தேதி! பாகிஸ்தான் எமது பிறப்புரிமை அதைப்பெற்றே தீருவோம் என்று முஸ்லீம் லீக் மாநாட்டிலே லாகூரிலே, பரணி பாடியது, மார்ச் 23ல் தான்.

பாட்டாளி மக்கட்கெல்லாம் ஒரு மே தினம்! புரட்சி இயக்கத்தினருக்கெல்லாம் ஒரு அக்டோபர் தினம்! அதுபோல், பிறைக்கொடியினருக்கு, மார்ச்சு 23 என்பது மகத்தான நாள்! இஸ்லாத்தின் மாண்பு கெடாதபடி, இந்து ஆட்சியின் ஏவலராகி நலியாதபடி, உரிமை பூத்திட ஓர் உன்னத பூங்கா அமைக்கப்பட்டு, அதற்கு உழைப்பெனும் எருவும், உணர்ச்சி எனும் நீரும் தரப்பட்ட நன்னாளாகும். இரண்டரை ஆண்டுகள் நடைபெற்ற மமதையாள ராட்சிக்குப் பத்துக்கோடி மக்கள் விடுத்த பதில் வெளிவந்த நாளாகும்.

ஜனாப் ஜின்னாவின் சங்கநாதம் பலுஜிஸ்தான் முதல் வங்கம் வரை, காஷ்மீர் முதல் கள்ளிக்கோட்டை வரை, பரவி, புதியதோர் எழுச்சியை உண்டாக்கிய நாள்! பாராளும் தந்திரங்கற்றோம், பயமில்லை என்று எண்ணிடும் ஆங்கிலரும் பயந்து, இனிப் படை திரண்டுவிடுமே என்று பதைத்திடச் செய்த சிறந்த நாள் உரிமையையிழந்த மக்கள் விழியிழந்த கரிபோல் வயலழித்து வரம்பு கெடுத்து வகைகுலைவது போலாவர், என்பதை அறிந்து உரிமைபெற உழைக்க வேண்டுமென்ற உறுதி தோன்றிய நாள். அந்த நாளை மறந்திடுவார் எவரும் இல்லை.

ஆங்கிலயருக்கு அச்சமூட்டிய நாள்.

காந்திக் கூட்டத்தினருக்குக் கலக்கமூட்டிய நாள்.

இந்துமகா சபையினருக்கு இருதயத் துடிப்பு உண்டாக்கிய நாள்.

இஸ்லாமியருக்கு, இன எழுச்சி எனும் இளமை முறுக்கேறிய நாள்.

தமிழருக்கோ அந்நாள் - தோழமையின் களிப்பையும், பெரியாரின் பெருமதியையும் உணரும் வழி தந்த நாள்.

எந்தப் பாகிஸ்தான் திட்டத்தால், இஸ்லாமிய இனம் எழுச்சி பெற்றதோ, எந்தத் திட்டம் ஆங்கிலருக்கு அச்சமூட்டிக் காங்கிரசைக் கலக்கி இந்து மகாசபையைத் துடித்திடச் செய்ததோ, அந்தப் பாகிஸ்தான் திட்டம், தமிழர் தலைவர் தயாரித்த திராவிட நாட்டுப் பிரிவினைத் திட்டத்தின் தம்பி என்பது அறியும், எந்தத் தமிழன்தான் தலை நிமிர்ந்து நில்லான்! உலகே கண்டு அதிசயிக்கும் திட்டமான பாகிஸ்தான் பேசப்படுவதற்கு இரண்டாண்டுகளுக்கு முன்பே - பெரியார், நமக்குத் திராவிட நாடு பிரிவினைத் திட்டத்தை அளித்தார். அவர் வழிகாட்டினார், தமிழரின் விழியிலே ஆரியத்திரை இடப்பட்டிருப்பதால் வழி தெரியவில்லை. என் செய்வது! ஜனாப் ஜின்னா விடுத்துள்ள செய்தியில், பாகிஸ்தான் திட்டம் பலமடைந்திருப்பதையும், இஸ்லாமியர் இரும்புக் கோட்டை போன்ற அமைப்புப் பெற்றதையுங் கூறித் தமது மக்களைப் பாராட்டுகிறார். தமிழர் தலைவர் இதுபோல் தமிழரைப் பாராட்டக்கூடிய விதத்திலே எங்கே தமிழர்கள் நடந்து கொண்டனர்? இதனைத் தமிழர் யோசிக்க வேண்டும். மார்ச் 23ஆம் தேதி ஓர் இனமக்களைத் தட்டி எழுப்பிற்று. துயிலுறும் தமிழர் அந்தத் தோழர்கள் தோள்தட்டுவதைக் கேட்டாகிலும் விழித்தெழுந்து வழி தெரிந்து, இஸ்லாமியருடன் தமது பிரிவினை இயக்கத்தை இணைத்துக் கொண்டு, வெற்றிபுரி நடக்கலாகாதா என்று கேட்கிறோம்.

வீர இஸ்லாமியரின் விழிப்பும், எழுச்சியும், மார்ச் 23ஆம் தேதி தந்தது. அதை அவரும் மறவார், நாமும் மறவோம். விடுதலைப் போர்முரசு கொட்டப்பட்ட அந்நாள், ஒரு பொன்னாள்!

28.3.1943

# அந்த மனோலயம்

சென்னை மாகாணத்திலே அரசியல் கட்சிகளே வேலை செய்வதில்லை அரசியல் தேக்கமாகிவிட்டது. இது நல்லதன்று, ஜனநாயக வளர்ச்சிக்கு உகந்ததன்று, மக்களின் நல்வாழ்க்கைக்கு வசதிதரக்கூடியதன்று- ஆங்கில மெயில், இதுபோல, அரசியல் கிளர்ச்சி தேக்கமடைந்து விட்டதே என்று அழுகுரல் கிளப்பி, ஒரு தலையங்கம் எழுதுகிறது. காங்கிரசார் காடாளச் சென்றனர், மற்றக் கட்சிகள், காங்கிரசுக்கு மாறுபாடான கொள்கை கொண்ட கட்சிகள், ஏன் பணியாற்றக்கூடாது, அவைகள் மூலையிலே முடங்கிக் கிடக்கின்றனவே என்று முகாரி பாடுகிறது.

சூட்சுமம் என்னவென்றால், ஜஸ்டிஸ் கட்சி ஏன் வேலை செய்வதில்லை என்ற கேள்வியை, வேறுவிதமான வாசகத்திலே, மெயில் கேட்கிறது. மெயிலுக்கு ஜஸ்டிஸ் கட்சியிடம் அன்பும் அக்கறையும் பிறந்ததால், இதுபோல் கேட்கவில்லை. ஆங்கிலேயரே எங்கும் ஆளும் நிலைமை இருப்பதற்கு காரணம், ஜஸ்டிஸ் கட்சி ஒதுங்கிக் கெண்டதுதான் என்று, நையாண்டி செய்ய இது ஒரு சந்தர்ப்பம் என்று மெயில் இவ்விதம் எழுதுகிறது. ஏதோ, ஜஸ்டிஸ் கட்சியை நையாண்டி செய்யவாகிலும் நினைப்பு வந்ததே. ‘காருண்ய துரையவாளுக்கு’ அதுவரை, வந்தனங்கூற வேண்டும் போலும்!

மெயில் பத்திரிகை பேசுவதுபோல நமது இயக்கத் தோழர்களில் கூடச் சிலர், ஜஸ்டிஸ் கட்சி எங்கே? ஜஸ்டிஸ் கட்சி என்ன செய்கிறது? என்று கேட்பது, தமது மேதாவித்தனத்திற்கு ஓர் எடுத்துக்காட்டு என்று கருதுகின்றனர். சர்க்காரிலேகூட இத்தகைய ஒரு மனப்பான்மை உண்டு. ஜஸ்டிஸ் கட்சித் தலைவரும், தொண்டர்களும் இவ்விதமான நையாண்டிகளைக்கேட்டு வெட்கி, ‘என்ன சார்! செய்யச் சொல்கிறீர்கள்? நீங்கள் சொல்கிறபடி கேட்கிறோம்’ என்று அஞ்சலி செய்து கூறிடுவர், என்று கருது கின்றனர் பாபம்! ஜஸ்டிஸ் கட்சித் தலைவரும் தொண்டர்களும் இன்று, இத்தகைய நையாண்டிகளைக்கேட்டு, உடனே விழுந்தடித்தழும் நிலையிலே இல்லை. குற்றங்கூறுவோரின் விழியிலே உள்ள பழுது தெரிந்து, நகைக்கிறது ஜஸ்டிஸ் கட்சி.

ஜஸ்டிஸ் கட்சி நன்றாக வேலை செய்கிறது - என்ற சர்ட்டிபி

கேட், சர்க்காரிடமிருந்து எப்போது கிடைக்குமென்று எண்ணு கிறீர்கள்! "நல்ல குதிரை! கொள்ளும் போட வேண்டியதில்லை. எவ்வளவு சவாரிக்கும் சளைக்காது, உதைக்காது, மூலை போகாது, சொன்னபடி கேட்கும்" என்று குதிரைக்குச் சர்ட்டிபிகேட்டு கொடுக்க வண்டியோட்டி எப்போது தயாராவான், குதிரை அவனுடைய சவுக்குக்கு முதுகு காட்டிக் கொண்டு உழைத்துக் கொண்டிருந்தால் தான்! அதுபோலத் தான், "வெள்ளைக்கார சர்க்கார், விஷ்ணு அவதாரமாச்சே! காருண்யம் பொருந்திய துரைமார் துரைத்தனமல்லவா அது. கடவுளே பார்த்து அனுப்பிவைத்த தர்மகர்த்தாக்களல்லவா" என்று ராஜபக்தி கீதம்பாடி, கவர்னர் தரிசனம் கலெக்டரின் கைகுலுக்கு, கான்ஸ்டெபிளின் சலாம், ஆகியவைகளுக்குப் பூரித்து, குனிந்த திருமேனியாய், கும்பிட்டு நிற்கும் பக்தனாய் இருந்தால், "ஆஹா! ஜஸ்டிஸ் கட்சி, நன்றாக வேலை செய்கிறது" என்று வெள்ளை வேதியர்களும் அவர்களின் ஏடும், கூற முன்வரும். ஜஸ்டிஸ் கட்சியை, "வா" என்று அழைத்ததும், சர்க்கார் மாளிகைக்குள் ஓடவும், "போ" என்றால், வெளியே போகவும், சித்தமாக இருந்தால் மட்டுமே வெள்ளை வர்க்கம் புன்சிரிப்புடன், "ஜஸ்டிஸ் கட்சி நன்றாக வேலை செய்கிறது" என்று பேசும். மனுகாலந் தொட்டு இருந்து வரும் அநீதிகளை ஆதரிக்கிறீர்களே என்று ஜஸ்டிஸ் கட்சி, சர்க்காரைக் கேட்கக் கூடாது. நாகரிக ஆட்சி, நல்லாட்சி, ஜனநாயக ஆட்சி என்ற பட்டம் இருக்கிறதேயொழிய, ஆட்சித் திட்டம், ஆரியருக்கு அனுகூலமானதாகத்தானே இருக்கிறது. எங்களின் சமுதாய இழிவுகள் போக வழி செய்யவில்லையே! எங்களை ஆரியமத சமுதாய விலங்கிலிருந்து விடுவிக்கவில்லையே. அந்த விலங்குகள் முறியாதிருக்கத்தானே உமது முறை பயன்படுகிறது - என்று சர்க்காரைக் கேட்கக்கூடாது. நாட்டுக்குப் பழங்குடி மக்கள் நாங்களாயிற்றே. எங்களின் கோரிக்கைதானே, ஆட்சி மன்றத்திலே அங்கீகரிக்கப்பட வேண்டும் என்று வாதாடக்கூடாது. வரி செலுத்த நாங்கள், ஆட்சிப்பரி ஏற

ஆரியரா? என்று உரிமை முழக்கம் புரியக்கூடாது. உத்தியோக மண்டலம், பார்ப்பன மயமானாலும், சட்ட திட்டங்கள் மனு மாந்தாதா காலத்துக் கோட்பாடுகள் கொண்டதாக இருப்பினும், ஜஸ்டிஸ் கட்சி சர்க்காரைக் கண்டிக்கக்கூடாது, சலாமிடத் தவறக்கூடாது. அப்போதுதான் துரைமார்களின் துரைத்தனம், "ஜஸ்டிஸ் கட்சி நன்றாக வேலை செய்கிறது" என்று வாயாரக்கூறும் - மனமார அது எண்ணுவது என்ன என்று தெரியாது; ஜஸ்டிஸ் கட்சி, இத்தகைய "நல்ல காரியத்தைச் செய்ய" இன்று இசையவில்லை. ஆகவேதான் ஜஸ்டிஸ் கட்சி வேலையே செய்யக் காணோமே என்று மெயில் கேட்கிறது. ஜஸ்டிஸ் கட்சியின் போக்கும், மனப்பாங்கும், இன்று எப்படியாவது ஆளவேண்டும் என்ற விதத்தில் இல்லை! ஆட்சி பெறுவதற்காக, ஆங்கிலர் அடிவருடவோ, ஆரிய ஆங்கிலேய ஆலிங்கனத்துக்கு லாலி பாடவோ, கூப்பிட்ட குரலுக்குப் பதில்கூறிப் பில்லை அணியவோ, மறுக்கிறது. தயவு, தாட்சண்யம் என்பவைகளைவிட, உரிமை, நீதி என்பவைகளையே முன்னணி நிறுத்திவிட்டது. பதவியைவிட, தன்மானப் பதக்கமேமேல் என்று கூறுகிறது. இடம் பிடிப்பதைவிட, சமுதாய மன இயலை மாற்றி அமைப்பதே முக்கியமான காரியம் என்று கருதுகிறது. இனிக்கப்பேசி இலாபம் பெறத்துடிப்பதைவிட, இன எழுச்சிக்காகப் பணியாற்றி இடுக்கண் வரினும் ஏற்றுக்கொள்ள வேண்டும் என்ற மன நிலையில் இருக்கிறது. இது ஆங்கிலருக்கு ஆனந்தமூட்டாது என்பது தெரியும். ஆகவேதான், ஜஸ்டிஸ் கட்சி வேலை செய்யக் காணோமே! என்று மெயில் கேட்கிறது.

ஜஸ்டிஸ் கட்சிக்கு எவ்வளவு சிக்கலான அரசியல் திட்டத்தைத் தந்தாலும் செம்மையாக ஆளத் தெரியும் என்பது, இரட்டையாட்சியைத் திறம்பட நடத்திக் காட்டியதிலிருந்தே புத்தியுள்ள வருக்குப் புலனாகியிருக்கும். ஆனால், ஆளத் தெரிந்ததுடன், ஆட்சி முறையை மாற்ற ஒருபெரும் மனப்புரட்சியையும் உண்டாக்க ஜஸ்டிஸ் கட்சிக்குத் தெரியும் என்பதைக் காட்டவே இன்று, ஜஸ்டிஸ் கட்சி எங்கே? என்று மெயில் கேட்க வேண்டியவிதத்திலே, ஜஸ்டிஸ் கட்சி ஒதுங்கி நிற்கிறது. ஒதுங்கி நிற்கிறது என்றால் ஒடிந்து விட்டது என்று ஓட்டை மண்டைகள் உளறட்டும். ஒதுங்கி நிற்கிறது என்றால் அதன் உண்மைப்பொருள்,

அரசியலைக் கைப்பற்ற வேண்டும் என்ற ஒரே நோக்கத்துக்காக எத்தகைய இழிவுகளையும் ஏற்றுக்கொள்ள மறுத்து, ஆட்சி செய்யும் நிலையைப் பெறுவதற்கோர் காலம் வரும், இன்று, ஆட்சி முறை நமது இன முன்னேற்றத்துக்கான விதத்திலே மாற்றுவதற்காகச், சமுதாயத்திலே ஒரு புதுசக்தியை உண்டாக்கும் பணியாற்றுவோம் என்ற நோக்கத்துடன் பணியாற்றுகிறது என்பதே பொருள். இது மந்தமதியினருக்குச் சுலபத்திலே புரியாது.

ஜஸ்டிஸ் கட்சி என்றால், ராஜபக்தியாட வேண்டிய கட்சி என்று தவறான கருத்தை எப்படித் துரைமார்கள் கொண்டுள்ளனரோ, அதுபோல் ஜஸ்டிஸ் கட்சியினருட் சிலர், கட்சி என்றால், பதவி, இல்லையேல் கௌரவ நிலை அதுவுந் தவறினால் அதிகாரிகளிடம் பழகும் அந்துஸ்து, அதுவும் இல்லையேல், கண்டிராக்டு! அவ்வப்போது பட்டம்! இதுதான் கட்சி வேலை செய்கிறது என்பதற்கு அத்தாட்சி என்று கருதுகின்றனர்! இப்போது ஜஸ்டிஸ் கட்சியின் இவைகளைப்பெற முடியாது. ஒரு நல்ல புடவை உண்டா! போட்டுக்கொள்ள நகை உண்டா! கைச்செலவுக்குப் பணம் உண்டா! என்ன சுகங்கண்டேன், உன்னைக்கட்டிக் கொண்டு, என்று, கைபிசைந்து, கண்ணீர்விடும் சில 'பத்தினிகள் பாதி ராத்திரி வேளையில் பிறர் பக்கமேவி 'பாவிமதனன் செய்யும் தீமை'யைப் போக்கிடும் பண்புடன் இருப்பதுண்டு. அதுபோல, 'என்ன சார் சௌகரியம் ஜஸ்டிஸ் கட்சியிலே சேர்ந்து ஒரு நாமினேஷன் உண்டா! ஒரு ராவ்பகதூர் உண்டா? ஒரு பென்சு மேஜிஸ்டிரேட் வேலை உண்டா? ஒரு சின்னக் கண்டிராக்டாவது கிடைக்கிறதா? என்று சலித்துக்கூறும் சில சமயசஞ்சீவிகள் அரசியற் சோரம் போகவோ, சொல்லை விற்கவோ, தயங்கினதில்லை என்பதை நான் கூறமுடியும். ஏன்! என் நண்பர் ஒருவர் இருக்கிறார். அவர், 'ஜஸ்டிஸ் கட்சி இப்போது என்ன வேலை செய்கிறது? அதற்கு இருந்த யோக்யதையே போய்விட்டது' என்று புலம்பினார் என்னிடம். 'என்ன' என்று கேட்டேன். 'அதை ஏன் கேட்கிறாய்! முன்பெல்லாம் இதே சென்னையிலே எத்தனை டீபார்ட்டிகள், நடக்கும்! எவ்வளவு அருமையான விருந்துகள் இருக்கும்! ஒரு எலெக்ஷன் வந்துவிட்டால், எத்தனை பிளஷர் பறக்கும், எவ்வளவு பணம் குவியும், அந்த ஜோரே ஜோர்! இப்போது ஒன்றுமில்லையே! மகாநாடு பிரசங்கம், பே, என்று

இதிலே வந்துவிட்டது, கட்சியிலே ஒன்றுமில்லையே” என்றார். ஜஸ்டிஸ் கட்சி என்றால், கேளிக்கை, விருந்து குஷி இவைகளுக்குச் சந்தர்ப்பம் தரும் சாதனம், என்பது அந்த நண்பரின் நினைப்பு, இன்றைய ஜஸ்டிஸ் கட்சியிலே இவை கிடையாது, ஆகவே, அவருக்கு ஜஸ்டிஸ் கட்சி போய்விட்டது என்று தோன்றுகிறது, துயருறுகிறார்.

ஜஸ்டிஸ் கட்சியின் மூலம், யாரார் எதை எதைப் பலனாகப் பெறமுடியும் என்று எண்ணுகிறார்களோ, அவர்கள் யாவருக்கும், இன்று, ஜஸ்டிஸ் கட்சி ஒரு வேலையும் செய்யவில்லை என்றே தோன்றும்! ஜஸ்டிஸ் கட்சி ஒரு வேலையும் செய்யவில்லை என்று அவர்கள் கூறுவதிலே புதைந்துள்ள பொருள், ‘எனக்கு இலாபந்தரக் கூடிய ஒரு வேலையையும் ஜஸ்டிஸ் கட்சி செய்யக் காணோமே’ என்பதுதான். சுகபோகத்துக்காக ஜஸ்டிஸ் கட்சியின் விசுவாசிகளாக இருப்பவர்களுக்கு இன்று ஜஸ்டிஸ் கட்சியிலே ‘சுவை’ நிச்சயம் இருக்காது. ஆனால் ஒரு கட்சியின் ஜீவ சக்தி அத்தகைய சுகபோகிகளின் ஆதரவினால் வளர்வதல்ல. சிலருடைய உழைப்பும் உறுதியும், இரத்தமும் கண்ணீரும் வியர்வையுமே, ஒரு கட்சிக்கு ஜீவசக்தி தரும் அந்தப் பணியில் ஈடுபடும் பேர்வழிகள் ஜஸ்டிஸ் கட்சியிலே இருக்கிறார்கள், அவர்கள்தான், ஜஸ்டிஸ் கட்சி, சுகபோகத்துக்காக ஜஸ்டிஸ் கட்சியை விசுவாசிக்கும் அன்பர் குழாத்துக்குப் பலன் அளிக்கும் விதத்திலே, ஜஸ்டிஸ் கட்சி வேலை செய்வதைவிட, வேலை செய்யாதிருப்பது மேல் என்று கருதுகின்றனர்.

‘அந்தக் காலத்திலே சார்! பனகலைப்போய்ப் பார்த்து, ஒரு மகாநாடு போடப்போகிறோம் என்று சொன்னால் போதும், உடனே அவர், சந்தோஷப்பட்டு, செக்புக்கிலே ஒரு ஏடு கிழித்து, இதைச் செலவுக்கு வைத்துக்கொள்ளப்பா என்று சொல்லுவார்! இப்போது எங்கே நடக்கிறது! பெரியாரிடம் சொன்னால், சரி, தேதியைத் தெரிவியுங்கள் வருகிறேன் என்று சொல்கிறாரே தவிர, ஆதரிக்கவில்லையே’ என்று குறை கூறும் சிலர் எனக்குத் தெரியும். நான், அவர்களை ஆமோதித்து விட்டு, வாயைக் கிளறிப் பார்ப்பது வழக்கம். கிளறினால் வருமே, பனகலின் பணம் மாநாட்டுக்குச் செலவாயிற்றா, இந்தக் கட்சி அபிமானியின் களிப்புக்கும் கூத்துக்கும் செலவாயிற்றா என்ற உண்மை.

“திண்டுக்கல்லிலே மாநாடு போட வேண்டுமென்று சொன்னோம். சரி என்றார், செக் கொடுத்தார், மாற்றினோம். நேரே மதுரைக்குப் போனோம். அங்கே நமது கட்சிக்காரரைப் பார்த்துவிட்டு, ஒரு வாரம்

தங்கினோம். அடடா! எவ்வளவு ஜோர் தெரியுமா! ஒரே சீட்டாட்டந்தான். இராத்திரியிலே ரசபானம்! செக்தொகை காலியாகிவிட்டது. பார்த்தோம், உடனே ஒரு கமிட்டி போட்டு, பனகல் சொன்னார் பணம் திரட்டச் சொல்லி என்று, இரண்டு நாள் மதுரையிலே வசூல் செய்தோம், பணத்துக்கு என்ன பஞ்சமா? காண்டிராக்ட் கட்டாயம் வாங்கித் தருகிறோம் என்று சொன்னோம். பணம் கிடைத்தது. பிறகு ஒரு ஜெமின்தாரிடம் போனோம், மகாநாட்டுக்கான சாப்பாட்டு வசதிகளை உங்களைத்தான் செய்யும்படி, ராஜா சொன்னார் என்றோம், அவர் போட்டார் பெரிய கொட்டகை, ஜாம் ஜாமென்று சமையல், பாரேன் மாநாடு பல ஜோர்!" - இது தான், ஜஸ்டிஸ் கட்சி நன்றாக வேலை செய்த காலம் என்று கூறிக்கசியுந் தோழர்களின் நினைவுகள்! பாவம்! இன்று மாநாடு என்றால், சொற்பொழிவுடன் முடிகிறது - அவர்கள் விரும்புவது, பலரசங்கள் - அதற்கு இடமளிக்காத கட்சியும் ஒரு கட்சியா, என்று கதறுகிறார்கள்.

"கட்சியின் நிலை கிடக்கட்டுமய்யா, நீர் அதற்காகச் செய்த வேலை என்ன, இப்போது செய்யும் காரியம் என்ன, அதைக்கூறுமே" என்று கேட்டுப்பாருங்கள் அந்தத் தோழர்களை. 'இதுதானே உங்கள் துடுக்குத்தனம், நான் வேலை செய்கிறேன், இல்லை, அதைப்பற்றிப்பேசாதே. கட்சி ஏன் மந்தமாகி விட்டது' என்று கேட்பர். தனித்தனியாக ஆட்கள், தத்தம் சுகபோகம் கட்சியிலே கிடைக்கவில்லை என்று குறை கூறிக்கொண்டு, கட்சிக்காக ஒரு சிறு காரியமும் செய்யாதிருந்தால் அவர்களின் இயல்புக்கு அகராதி என்ன பதத்தைத் தருகிறது என்று தேடாமல் இருக்க முடியுமா கூறுங்கள்!

ஆளும் சந்தர்ப்பங்கள் ஏற்படும்போது, ஜஸ்டிஸ் கட்சியிலே சந்தடியும் சந்தோஷமும், இருந்துவிட்டு, காரியம் முடிந்ததும், கடுகடுத்த முகமும் கல்லறைக்காதையும், கட்சிக்காகவா இதை எனக்குத் தந்தார்கள், என் திறமைக்காக என்ற வறட்டுப் பேச்சும், வரசித்தி விநாயகரின் தயவு, சர்வசக்தி தாயத்தின் மகிமை, இளையராஜாவின் தயவு இன்னாரின் சிபார்சு என்று கட்சி தவிர மற்ற எதை எதையோ காரணமாகக் காட்டுவதுதானே பலரின் பண்பாகிவிட்டது. இதைக் கட்சித் தொண்டர்கள் கண்டு கசிந்து கண்ணீர் பெருக்கின வெள்ளத்திலேதான் நாம் இன்று மிதக்கிறோம். இந்நிலை வந்ததன் காரணம் என்ன? எப்படியோ கட்சிக்கு உயிர் இருக்க வேண்டுமானால், பதவிகளைப் பிடித்துப் பலருக்குப் பலதானம் தரவேண்டும் என்ற பித்த முதிர்ச்சியல்லவா! ஜஸ்டிஸ் கட்சித் தளபதிகள், பலர்! அவர்களுக்கும்

கட்சிக்கும் உள்ள தொடர்புகளின் ரகம், பலப்பல! அவர்களிலே நீறு பூசிகள், நாமதாரிகள், உண்டு. அவர்களிலே யாரை எந்தப் பதவியில் அமரும்படி செய்தால், எந்தவிதமான பலன் தமிழருக்குக் கிடைக்கும் என்று நிச்சயமாகக் கூறமுடியாது! எத்தனையோ முறை நமது கட்சியினர் 'இவரா இப்படிச் செய்தார்?' என்று ஆச்சரியமும் ஆயாசமும் கலந்த குரலில் கேட்கும் விதத்திலே, கட்சியால் இடம் பெற்ற தோழர்கள் காரியங்களைச் செய்துள்ளனர். காரணம் என்ன? சர்க்கார், கட்சிக்கும் தனக்கும் நேரான தொடர்பை வைத்துக் கொள்ளாமல் இருப்பதுதான்.

இந்த யுத்த காலத்தைக் கவனியுங்கள். காங்கிரஸ் ஒத்துழைக்க மறுக்கிறது. சர்க்காரின் கடமை என்ன? ஒத்துழைக்கும் ஜஸ்டிஸ் கட்சியிடம் யுத்த ஆதரவுக்கான அலுவல்களை ஒப்படைக்க வேண்டியதுதானே. ஆள் பிடிக்கும் வேலையிலே, சர்க்கார் இறங்கு வானேன்? ஆள் பிடிக்கும் வேலையிலே சர்க்கார் இறங்கினால், எந்த ஏணி, சர்க்கார் மாளிளைகச் சுவரைத் தாண்ட உதவி செய்யும் அளவு உயரமாக இருக்கிறதோ அந்த ஏணியிடம் கும்பல் கூடுகிறது! யார், யாரால் பலன் பெறுகிறார்களோ, அவர்கள் கட்சியைவிட, அந்தத் "தூக்கிவிடுபவர்" தனக்குச் சிலாக்கியமானவர் என்று துதிபாடத் தொடங்குகின்றனர், கட்சியிடமே, அந்த "உரிமைகள்" தரப்பட்டிருக்க வேண்டும். சர்க்கார் அதைச் செய்யாததால்தான், நமக்கு நியாயமாகக் கிடைக்க வேண்டியவைகள், ஏதோ தயவுக்காகக் கிடைப்பது போலக் கிடைக்கின்றன! உரிமையைப் பெற பிச்சைக்கிண்ணி ஏந்த எல்லோரும் சம்மதிப்பதில்லை. இச்சமயம் தவறினால் மறு சமயம் வாய்ப்பதரிது என்ற கருத்துடையோரும், படமுடியாதினித் துயரம் நான் பட்ட தெல்லாம் போதும் என்ற மனப்பான்மையினரும், மேலாடை கீழ் விழ ஓடிச் சென்று, கிடைத்ததை எடுத்துத் தின்று, தமது அரசியல் ஆரோக்கியத்தைப் பாழாக்கிக்கொண்டு, நொந்து போகின்றனர்.

ஜஸ்டிஸ் கட்சிக்குச் சர்க்கார் சலுகைகள் காட்டத் தேவை யில்லை. நியாயமான உரிமைகளை வழங்குவதை மறக்காதிருப்பின், கட்சியின் நிலையே இன்று வேறுவிதமாகி இருக்கும். இன்று கட்சிக்காகக் கண்ணீர் விடும் மெயில் இதுவரை, ஜஸ்டிஸ் கட்சியின் முறையீடுகளைக் கவனித்ததுண்டா? ஜஸ்டிஸ் கட்சிக் கிளர்ச்சிகளை வெளியிட்டதுண்டா? மாநாடுகளையும் பொதுக் கூட்டங்களையும் மக்களறியும்படி, விஷய விளக்கம் செய்ததுண்டா? ஜஸ்டிஸ் கட்சித் தலைவர்களின் சொற் பொழிவுகளைச் சரியாகப் பிரசுரிக்கிறதா? ஏதோ தயவுக்காகத் தாட்சணியத்துக்காகச் சிற் சிலருக்குச் சில சமயம் இடந்

தருகிறதேயல்லாமல், கட்சிக்குக் காட்டவேண்டிய "நீதி" என்ற விதத்திலே மெயில் எப்போதாவது நடந்ததுண்டா? மகாசனங்களின் மனோபீஷ்டங்களும், அல்லாடிகளின் அலுவல்களும், ஆச்சாரியாரின் குட்டிக் கதைகளும், அம்முகளின் அலங்காராதிகளும், அடையாறு விசேஷாதிகளும், மைலாப்பூர் மாண்புகளும், திருவல்லிக்கேணி திருவிழி நோக்குகளும், மாம்பல மான்மீயங்களும், மெயிலுக்கு இனிக்கிறது, இடமிருக்கிறது இவைகளைப்பற்றி எழுத, பெரியார் பேசினால், ஏச என்றைக்காவது எடுத்தாள நினைக்கிறதே ஒழிய, குமாரராஜா பேசினால், சர்க்காரை அவர் ஆதரிக்கிறார் என்ற சந்தனத்தை அவருக்குப்பூச முன் வருகிறதேயொழிய ஒரு முக்கியமான கட்சியின் கருத்துகளைக் கட்சியின் தலைவர்கள் தெரிவிக்கிறார்கள் என்ற முறையிலே, அவைகளைப் பிரசுரித்ததுண்டா? அவ்வளவு உதாசீனம் செய்யும் மெயிலுக்கு இன்று உருக்கம் ஏற்படுவானேன்?

வெள்ளையர் மனப்பான்மை ஒன்றுண்டு. காங்கிரசைக் கண்டிக்க ஜஸ்டிஸ் கட்சி இருக்க வேண்டும், அதற்கு மேல் ஜஸ்டிஸ் கட்சி வேறொன்றும் செய்யக்கூடாது. ஏன்? காங்கிரசைப் பற்றி வெளியுலகம் கேட்கும்போது, இதோ ஜஸ்டிஸ் கட்சி காங்கிரசைக் கண்டிக்கிறது என்று காட்ட மட்டும் ஜஸ்டிஸ் கட்சி பயன்பட வேண்டும். ஆனால், ஜஸ்டிஸ் கட்சி காங்கிரசைக் கண்டிப்பதுடன், சர்க்காரின் போக்கையும் கண்டித்து, உண்மையான உரிமைப்போர் முழக்கமிட்டு, இன எழுச்சிக்கான காரியம் செய்யத் தொடங்கினால், ஜஸ்டிஸ் கட்சியிடம் சர்க்காருக்குக் கோபம்ஜஸ்டிஸ் கட்சி ஆனால் துரைமார்களின் கோபத்தைக்கண்டு, ஜஸ்டிஸ் கட்சி, தன் மூலாதார உரிமைகளை இழக்க முடியுமா!

முஸ்லீம் லீக், இந்தத் துறையிலே தன் நிலையை மிகச் சரியாகப் பக்குவப்படுத்தி விட்டது. அதன் சவுக்கு, காங்கிரசின்மீது, விழுமளவு, சர்க்கார் மீதுந்தான் விழுகிறது. ஆகவேதான், லீக் என்றால், வெள்ளையர் முகம் பயத்தால் வெளுத்துவிடுகிறது. இஸ்லாமிய இனத்தின் கட்டுப்பாடு, லீகின் தலைவருக்கு, ஆயிரம் "இந்து" பத்திரிகைகள், பத்தாயிரம் பஜாஜ் பிர்லாக்கள், பல இலட்சம் ஆச்சாரியார்கள், சேர்ந்து தரக்கூடிய பலத்தை இரண்டாண்டுகளிலே தந்துவிட்டது.. ஜஸ்டிஸ் கட்சி எந்தத் தமிழருக்காக உழைக்கிறதோ, அந்தச் சமுதாயத்திலே, கட்டுப்பாட்டைக் கெடுக்கும் மனப்பான்மையே மதமாக, ஒற்றுமைபெறும் நிலையைக்

கெடுப்பதே கலையாக இருக்கிற காரணத்தால், சமுதாயம் இருப்புக் கோட்டையாகவில்லை. இந்தக் குறையைப் போக்கும் மிக முக்கியமான அடிப்படையான காரியத்தையே இன்று ஜஸ்டிஸ் கட்சித் தலைவர் செய்து வருகிறார். அதனால்தான், துரைமார் களுக்குத் துயரமும், சுகபோகிகளுக்குச் சலிப்பும், உண்டாகிறது! என் செய்வது, விழலுக்கு நீர் பாய்ச்சுவதைவிடக் கழனியைத் திருத்தி அமைப்பதல்லவா முக்கியம்! அதுதான் இப்போது நடைபெற்று வருகிறது.

ஜனாப் ஜின்னா, சென்னைக்கு வந்திருந்தபோது, அவரைக்காண ஜஸ்டிஸ் கட்சித் தலைவரும், தளபதிகளுமாக இருபத்தி இரண்டு பேர் சென்றனர். அவர்கள் ஒவ்வொருவரும் திறமையும் பண்பும் உடையவர்களாக இருப்பது கண்ட ஜனாப் ஜின்னா "இவ்வளவு பெரிய பெரிய தலைவர்கள் இருக்கும் போது, என்ன குறை தமிழருக்கு" என்று கேட்டார். பெரியார் சொன்ன பதில், நமது நெஞ்சைப் பிளக்கக்கூடியது. ஏன் வெற்றி கிடைக்கவில்லை என்று சலித்துக்கொள்வோரின் கண்களைத் திறக்கக்கூடியது. என்ன சொன்னார் பெரியார்? "ஜின்னா அவர்களே தமிழர் சமுதாயத்திலே ஒற்றுமை உண்டாவது சுலபத்திலே முடியாது. நாங்கள் 22 பேரும் ஒரே கட்சியினர். ஆனால், இந்த 22 பேரும் 22 வேறு வேறு பிரிவினர்! ஜாதியிலே!" என்று கூறினார்.

ஜஸ்டிஸ் கட்சி என்ன வேலை செய்கிறது என்று கேலிக்கோ, சலித்தோ கேட்கும் அன்பர்கள், இதைத்தான் யோசித்துப் பார்க்க வேண்டுகிறேன். ஜஸ்டிஸ் கட்சி, துரைமார் மனங் குளிரவோ, சுகபோகிகளின் ஆசை தீரவோ, வேலை செய்வது சரியா, அந்தக் காரியத்தைவிட்டு இன எழுச்சிக்கான காரியத்தைச் செய்வது சரியா என்பதைக் கூறுங்கள்! இந்த இன எழுச்சியை உண்டாக்க, இன்னின்ன பதவிகளைப் பெற்றால்தான் முடியும் என்று யார் கூறுவர்! இதை எவரும் செய்யலாம்! ஆனால் சிலரே செய்கின்றனர்! அந்தச் சிலரையும் நையாண்டி செய்வதே சமூக சேவை என்று "சில சீலர்கள்" எண்ணுகின்றனர். கடமையைச் செய்யும் எவனும், கடமை உணராதானின் கபட எண்ணம், தன் கால் மண்ணுக்குச் சமம் என்றே கருதுவான், கடனாற்றுவான், பணியாற்றுவான். அந்தப் படைக்கு இப்போது ஆட்கள் வேண்டும். நீர் சேரத்தயாரா! அந்தப் படையினருக்குப் புத்துலகக் கவி, பாரதிதாசன் இதோ இப்பாடலை தருகிறார்.

"தாயின்மேல் ஆணை

தந்தைமேல் ஆணை

தமிழகமேல் ஆணை

தூய என்தமிழ்மேல்

ஆணையிட்டே நான்

தோழரே உரைக்கின்றேன்.

நாயினும் கீழாய்

செந்தமிழ் நாட்டார்

நலிவதை நான் கண்டும்

ஓயுதல் இன்றி

அவர்நலம் எண்ணி

உழைத்திட நான் தவறேன்"

ஆம்! நாயினும் கீழாய் நலியும் செந்தமிழ் நாட்டாருக்கு விடுதலை, நாலாறு பேருக்கு நல்ல பதவிகளும், பத்தாறு பேருக்குப் பானக வாழ்வும் கிடைக்கும் விதமாக ஒரு கட்சியை நடத்திச் செல்வதால் கிடைக்காது. இன எழுச்சியே அதற்கு வழி! அதைச் செய்ய அதிகார பீட அலங்காரங்கள் தேவையில்லை. தாலமுத்துகளும் நடராஜன்களும், தலையும் வயிறும் காய்ந்திருந்தாலும், இன மானமும் உரிமை ஞானமும் காயாது உள்ளம் கள்ளச்சிந்தனையின்றி உள்ள வாலிபர்களும் வேண்டும். அவர்களுக்கே, பாரதிதாசன் மனோலயத்திலே அக்கீதம் அமைத்தார்.

4.4.1943

# புலித்தோல் போர்வை !

இந்து மதத்திலே உள்ள இழுக்குகளைப் போக்கத்தான் வேண்டும் - அழுக்கு மூட்டைகளை ஒழிக்கத்தான் வேண்டும். ஜாதி பேதங்களைப் போக்கத்தான் வேண்டும் - பழைய ஏற்பாடுகளை ஒழிக்கத்தான் வேண்டும் - இந்து மதத்திலே உள்ள கறைகளைப் போக்க வேண்டுமேயல்லாமல், அதையே ஒழிப்பது, அல்லது, நான் இந்து அன்று என்று கூறுவது கூடாது என்று சிலர் போவதுண்டு. இஸ்லாமியருக்கு இடங்கொடுக்கக் கூடாது என்று எச்சரிப்பர், இந்து மார்க்கத்திலே பார்ப்பன ஆதிக்கம் இருப்பின் அதை ஒழிக்க முனைவோம், ஆனால் இந்து மார்க்கத்தை விட்டுவிடக் கூடாது என்று பேசுவர். இந்துக்களுக்கே இந்தியா சொந்தம் - இந்தியாவில் இந்துக்களின் ஆட்சியே ஏற்படவேண்டும் என்று முழக்கமிடுவர். இவர்கள் வீரசவர்க்காரின் இராமசேனையினர்.

பாகிஸ்தானை எதிர்க்கப் படை திரட்டும் இவர்கள், தமதிஷ்டம் போல், இந்துஸ்தான் ஆட்சி ஏற்படுத்தினால், என்ன காண்போம் என்பதற்கு, இதுபோது ஓர் அருமையான எடுத்துக்காட்டுக் கிடைத்திருக்கிறது.

தந்திரத்தால் ஊரை ஏமாற்றித் திரிந்த ஒருவன், கழுதைமீது புலித்தோலைப் போர்த்து, இருப்புச் சங்கிலியால்கட்டி வீட்டுக்குள் வைத்துக்கொண்டு, வீதியில் வருவோர் போவோரிடம், புலியைக் கட்டிப்பழக்கும் என்னிடம் எந்தப் போக்கிரிப் பயலாவது வாலாட்ட முடியுமா? என்று கூறி மீசை முறுக்கி வந்தானாம். நெடுநாட்கள், அவன் கூறினதை நம்பினர் மக்கள். ஓரிரவு பூர்ணசந்திரன் அழகுடன் பிரகாசித்தான். வீதியிலே போன பெண் கழுதை தன் பெருத்த குரலெடுத்துப் பாடிற்று. உள்ளே புலித்தோல் போர்த்துக்கிடந்த ஆண் கழுதைக்குக் "குஷி" பிறந்துவிட்டது. அவ்வளவுதான், அது ஆரம்பித்தது பதில் கீதம்பாட. தந்திரக்காரன் தடிகொண்டுத் தாக்கினான். கீதம் அதிகப்பட்டது, கும்பல் கூடிவிட்டது, உள்ளே சிலர் சென்று பார்க்க, புலித்தோல் கீழே புரளக் கழுதையின் முதுகில் தடியடி நடந்திடக் கண்டு, தந்திரத்தால் ஊரை ஏய்த்தவனைக் காதைப் பிடித்திழுத்துக் கன்னத்திலறைந்தது. 'ஏடா, போக்கிரி புலித்தோல் போர்த்த கழுதையைக் கொண்டா ஊரை ஏமாற்றி வந்தாய்' என்று கண்டித்தனர் என ஒரு கதை கூறுவர்.

இந்த மார்க்கத்தைப் புனிதமாக்க, அவ்வப்போது தோன்றிய அடியார்கள், மகாத்மாக்கள், மகரிஷிகள், பாஷ்யக்காரர்கள், ஆச்சார்ய புருஷர்கள் ஆகியோர் செய்ததைவிட, அதிமேதாவித் தனமான காரியத்தைச் செய்யும் திறமை தமக்குண்டு என்று பேசிககொண்டுள்ள, இந்து மகாசபைத் தலைவருள் ஒருவரான பாய் பரமானந்தர் சின்னாட்களுக்கு முன்பு, டில்லி சட்ட சபையிலே, சட்ட மெம்பர், சர். சுல்தான் அகமத், இந்துக்களிலே பெண்களுக்கும் சொத்துரிமை தரப்படவேண்டும் என்ற மசோதாவை ஆதரித்துப் பேசுகையிலே, இந்து மார்க்கத்தைப் புனிதமாக்கி, இஸ்லாமியரின் ஆதிக்கத்தை ஒடுக்கப்போவதாக ஓங்காரக்கூச்சலிடும், பரமானந்தர், மிகுந்த சோகமுற்று, முகத்தைச் சுளித்துக் கொண்டு, மார்பிலே அடித்துக்கொண்டு அழுது, அத்தீர்மானத்தை எதிர்த்தார். பெண்களுக்குச் சொத்துரிமை கூடாதாம்! ஜாதி பேதமெனும் பித்தத்துடன், மாதரை இழிவு செய்யும் மடைமையும், இந்து மார்க்கமணியின் ஒளியன்றோ, அதை எங்ஙனம், பரமானந்தர் கைவிடுவார்? ஆளப்பிறந்தவன் ஆண் மகன், அவனிஷ்டத்துக்கு, ஆடிப் பிழைக்க வேண்டியவள்தானே பெண்.

“அதோ, தலைமீது கூடையுடன் செல்லும் தையல் யார் தெரியுமோ? மகா உத்தமி, பெயர், நளாயினி.”

கூடையிலே என்ன தெரியுமோ? அவள் புருஷன், அவனோர் ரிஷி, குஷ்டத்தால் வாதாடுகிறான், எனவே, அவனை அப்பத்தினி கூடையில் உட்காரவைத்துத் தூக்கிச் செல்கிறாள். தேவாலயத் துக்கா? இல்லை. திருக்குளத்துக்கா? இல்லை. வேறோர் ரிஷியின் பர்ணசாலைக்கா? இல்லை, இல்லை, அவருடைய தாசி வீட்டுக்கு!!

இந்து மார்க்கம் புனிதமானதாகச் சோலைகளிலே பர்ண சாலைகளும், அங்கு வேத ஒலியும் வேள்விப் புகையும் இருந்த அந்த நாட்களிலே, பெண்களின் நிலைமை, எப்படி இருந்ததென் பதற்கு, நளாயினி கதை ஓர் எடுத்துக்காட்டு. புருஷனின் மனதின்படி நடப்பதன்றி வேறு உரிமை கிடையாது. அத்தகைய அதியற்புதமான மார்க்கத்தின் தலைவர், மாதருக்குச் சொத்துரிமையா தருவார்.

அடுப்பூதும் பெண்ணுக்குப் படிப்பு ஏன்? கல்லென்றாலும் கணவன், புல் என்றாலும் புருஷன். பெண்களுக்குச் சுதந்திரம் கொடுத்தால், பேராபத்து வருமே, என்ற இன்னோரன்ன கூற

முடியாதல்லவா, பெண்களுக்குச் சொத்துரிமை கொடுத்து விட்டால், உயர்வகுப்பென்று உறுமிக் கொண்டு, பிறரை அடக்கியாள்வதும், ஆண் என்று ஆர்ப்பரித்துப் பெண்ணை இழிவு செய்வதுந்தானே, பரப்பிரம்ம சொரூபிகளின் புனித இந்து மார்க்க நீதிகள். அதை இழக்க எப்படிப் பரமானந்தர் துணிவார், பாவம்.

1943ல், உலகு அதிவிரைவில் முன்னேறிய பிறகு, இந்த நாற்றத்தை, நாலாறு பேர் முன்னிலையில், வெட்கமின்றிப் பேசிட முன் வந்தாரே இந்த இந்து மகாசபை வீரர், இவரை, எந்தக் கண் காட்சிச் சாலைக்கு அனுப்புவது, இந்து ஆட்சியிலே, மாதருக்கு, இதுதான் கிடைக்கும்.

ஒரே குடும்பத்தின் மணிகளிலே, ஒன்று மாணிக்கமாக்கப் பட்டு, மற்றொன்று, மண்ணாங்கட்டியாக்கப் படுகிறது. சொத்து சுதந்திரம் ஆணுக்கு. சமையற்கட்டிலே வேகவும், சயனக் கிரஹத் திலே சாயவும், பெண். இந்த அநீதியை நீக்கி, பெண்களுக்குச் சொத்துரிமைதர, சீர்திருத்தவாதிகள், நீதிவான்கள், வற்புறுத்திப் பேசத்தொடங்கி, ஆண்டுகள் பலவாயின. இன்று, இதை எதிர்க்கும் அவ்வளவு பஞ்சாங்கப்புத்தி படைத்தவராகத்தான், இந்து மகா சபைத்தலைவர் இருக்கிறார், இதைத் தீவிரவாதிகள் கவனிக்க வேண்டுகிறோம்.

வாதாடினார், அவ்வேதியர். விசித்திரமான வாதம், பெண்களுக்குச் சொத்துரிமை தந்தால், குடும்பச் சொத்துரிமை தந்தால், குடும்பச் சொத்துப் பங்கிடப்பட்டுச் சிதறுமாம், எவ்வளவு பேதைமை பாருங்கள். ஒரு குடும்பத்திலே எட்டு ஆடவர் பிறந்து சொத்துரிமையால், பாகப்பிரிவினை செய்து கொள்கின்றனர். ஏர், ஒருவனுக்கும்; எருமை ஒருவனுக்கு, இடுப்பொடிந்த பசு மற்றொருவனுக்கு, கூரை கெட்டவீடு ஒருவனுக்கு, கரம்பான வெளி மற்றொருவனுக்கு, என்று சொத்துப் பிரிவினை நடக்கிறது, பாய் பரமானந்தரின் வாய் அது சமயம் மூடிக்கிடக்கிறது. ஆணுக்குத் தருவதுபோலப் பெண்ணுக்கும் சொத்துரிமை தர வேண்டும் என்று கேட்டால், தேள் கொட்டிய மந்தியின் தந்தினம் போல், ஆடுகிறார். மாதரை இழிவு செய்யும் இம்மகானுபவருக்கு அங்கேயே, ரேணுகா எனும் அம்மையார், சரியான சவுக்கடி கொடுத்தார். இந்து மகாசபையின், யோக்யதை எப்படி இருக்கிறது என்பதை மக்கள் தெரிந்து கொண்டனர்; புலித்தோல் கீழே வீழ்ந்ததும், தந்திரக் காரனின் சூது, ஊராருக்குத் தெரிந்த கதை போல்.

4.4.1943

# அரக்கு மாளிகை !

கேள்விகள் எழுதிடுவேன்! - இது மற்றோர் வகையினரின் போர் முறையாகி விட்டது. கேள்விக்கேற்ற பதில்தானே தரமுடியும். ஒருவர் அனுப்பியிருக்கும் கேள்வித்தாளைப்படித்து விலாநோகச் சிரிக்கவேண்டி நேரிட்டுவிட்டது. அவர் எவ்வளவு "தெளிவு" கொண்டவர் என்பதற்கு தலைப்பிலேயே உதாரணம் ததும்புகிறது. 24-1-43 திராவிடனில் விஷயம் கண்டனம் - இதுதான் தலைப்பு! இதன் பொருள் என்ன! கிளர்ச்சி சிலர் உள்ளத்திலே மருட்சியை உண்டாக்கிவிட்டது பாருங்கள்! திராவிடன் நின்று ஆண்டு பலவாயின - நடப்பது திராவிட நாடு! இதை உணராமலோ, உணர நேரமோ, பொறுமையோ இல்லாமலோ இருக்கும் அவசர வாதிதான், கேள்விகள் விடுக்கிறார். ஒரு சோறு பதம் பார்ப்போம்.

இராமாயணமென்பது சாமான்யமன்று! இது அவருடைய திருவாக்கு. சரிதான், ஸ்வாமிகளே, சீதாசமேத ஸ்ரீராமச்சந்திரர் கதை சாமான்யமானது அன்றுதான்! அதை ஸ்ரவணம் செய்த ஓர் பக்தன் இராமாயணம் சாமான்யமன்று, அது ஓர் ஆள் பளு இருக்கிறதே என்று கூறினதாகக் கேள்வி! ஸ்வாமிகளின் அனுபவம் எப்படியோ - என்று அவருக்குப் பதில் கூறாதிருக்க முடியுமா சொல்லுங்கள்!

ஒவ்வோர் நாளும், இராமாயணம் கேட்கச்சென்று தூங்கிவிடுவானாம் ஒரு பாட்டாளி. அவன்மீது உட்கார்ந்தபடி, அனுமன் தோள்மீதேறி அரிபகவான் தசகண்டனுடன் போரிட்ட கதையைக் கேட்பது வாடிக்கையாம் ஒரு குறும்பனுக்கு! 'ரமாரமண கோவிந்தா! கூறியதும், உறங்குபவன்மீது சவாரி செய்பவன், எழுந்திருக்க, உறங்குபவனும் எழுந்து விழுந்து கும்பிட்டுவிட்டு வீடு செல்வானாம். அந்த ஏமாளி சொன்னான் யாரோ கேட்டதற்கு, 'இராமாயணம் சாமானியமா, அது ஒரு ஆள் பளுவுள்ளதாச்சே' என்று. அதுபோல் யாராருக்கு, எவ்வெவ் வகையிலே அனுபவமிருக்கிறதோ அதற்கேற்றபடி "சாமான்யமா இல்லையா" என்பதைக் கூறமுடியும். நாடகத்திலே அனுமார் வேடம் போடுந் தோழர் சொல்லுவார் இராமாயணம் என்றால்

சாமான்யமா! எவ்வளவு ஆடவேண்டும், குதிக்க வேண்டும், முகத்தைச் சுளிக்க வேண்டும், வாலிலே நெருப்புப் பந்தம் கொளுத்திவிட்டால், ஜாக்ரதையாக இருக்கவேண்டும், அடேயப்பா! இராமாயணமென்றால் சாமான்யமா, என்று அந்தத் தோழர் கூறுவார். என்னைக் கேள்விகேட்ட 'ஸ்வாமிகள்' எத்தகைய அனுபவத்தால், இராமாயணம் சாமான்யமன்று என்று கூறுகிறாரோ, தெரியவில்லை. இவ்வளவு வைதிகத்திடம், நான் என் பேனா முனைக்கு வேலை தரக்கூடிய கேள்விகளை எப்படிப் பெற முடியும்! கேளுங்கள், அந்தச் சுவாமிகளின் மற்றோர் மணியை! சில ஏடழப்பின் பல ஏடுண்டே! இந்தப் பிராசத்துக்கு என்ன பொருளோ! முன் பல் போனால், கடைப்பல் உண்டே என்று பல் உதிர அறை வாங்கியவன், கூறிடவும் முடியும், பொருளற்ற பிராசம் பேசுவது என்ற நோய் பிடித்தால். பல ஏடு இருப்பின் இருக்கட்டுமே! சில ஏடு அழிப்பது போதும், சிந்தனைக்கு வேலைதா! கண்டனத்தைத் தெரிவிக்க! புரட்சி மனப்பான்மையைக் கிளற! கடையிலே பத்துடன் இரும்பு இருப்பின், ஒரு டன் விற்றானதும், ஒரு டன் போனால் ஒன்பது உண்டே என்று பிராசம் பாடினாலாவது பொருளுண்டு. ஆரிய ஆதிக்கத்தை அழிக்க மக்களைத் தயாரிக்கும் வேலைக்காக, ஆரிய ஏடுகளிற் சிலவற்றைக் கொளுத்தி, உணர்ச்சியையும், உத்வேகத்தையும், எழுச்சியையும் உண்டாக்குவதே எமது வேலை என்பதை, எழுத்தில் எது அனுப்பினாலும், "திராவிட நாடு" இதழில் இடம்பெறுமென்று எண்ணிய அந்த ஸ்வாமிகளுக்குக் கூறுகிறேன். அவர் ஓர் இரும்பு வியாபாரியாம்! இராமாயண புத்தகம் என்று வேறு நினைவுடன் இருக்கையில், ஏதாவது இரும்புச் சாமானை எடுத்துப்பார்த்து, ஏ! அப்பா எவ்வளவு பாரமாக இருக்கிறது இராமாயணம். இது ஸாமனிய மல்லவே! என்று அவர் முடிவு செய்திருக்கலாம். அத்தகைய தீர்ப்பிலே நான் தலையிட முடியுமா!!

அவர் போற்றும் அந்த இராமாயணத்திலே, ஆயுதம் இழந்த இராவணனை, இராமன், இன்று போய் நாளை வா! என்றார் என்று எழுதியிருக்கிறார்கள். அதுபோல் நான் கூற அனுமதி கோருகிறேன், "ஸ்வாமிகளே! ஸாரமேயற்ற சரடுகள் வேண்டாம். ஏதாவது சத்தான கேள்விகள் இருந்தால் அனுப்புங்கள்." என்று கூறுகிறேன். கலை சம்பந்தமாக தமிழர் நிலை சம்பந்தமாக, ஆரிய - திராவிட இன சம்பந்தமாக, உலகக் கருத்துகள் சம்பந்தமாக, கேள்விகள் இருக்கட்டும்!

வெறும் ஊமைக் கூச்சல் வேண்டாம்! வேறு வேலை இருக்கிறது செய்ய!!

நான் எழுதியனுப்பிய ஸாமான்யமான கேள்விகளல்ல என்று ஸ்வாமிகள் கூறிக்கொண்டு, ஸாயங்கால வேளைகளைக் கழிக்கலாம். ஸத்ததா காலட்சேபம் அதுவாக இருப்பின், நான் எப்படி அதைத்தடுக்க முடியும்! நடக்கட்டும்!! ஏன், சுயமரியாதைக்காரர்கள், ஏடுகள் சிலவற்றை எரியிட எண்ணினர், என்பதைத் தெளிவாகத் தெரிந்து கொள்வது சாமான்யமான காரியமன்று, ஸ்வாமிகளே!

நாடாண்ட ஓர் இனம், ஓடாண்ட கூட்டத்தால் ஒடுக்கப்பட் டிருக்கும், நெஞ்சம் வேகும் நிலையை மாற்ற, நாட்டிலே மெல்ல மெல்லக் கிளம்பும் புரட்சிப் புயல், அது! சாமான்யமன்று!!

* * *

சில தோழர்கள், பிரச்னை நன்றாக விளக்கப்பட வேண்டும் என்பதற்காக, வினாக்கள் அனுப்புகின்றனர். அவர்கட்கு என் நன்றியறிதலைத் தெரிவித்துக்கொள்ளுகிறேன். ஆனால், ஆரிய ஏடுகளைத் தீயிலிட வேண்டுமென்று எந்நோக்கத்துடன் கூறுகிறோம் என்பதையும் அவர்கள் எண்ணிட வேண்டுகிறேன். அடிக்கடி நான் எழுதி வருகிறேன், புராணக் குப்பைகள் அவ்வளவையுமோ, வெறுங் கற்பனைகள் முழுவதையுமோ, பிற மத நூற்கள் யாவற்றையுமோ கொளுத்த வேண்டுமென்றன்று, இப்போது நாம் கிளர்ச்சி செய்வது. பிறமத போதனைக்குச் சாதனமானதும், நம்பொணாப் புராணம் நிரம்பியதும், கற்பனை மலிந்ததுமான ஏடுகள், தமிழரால், புனித நூல், பக்திமார்க்க ஏடுகள், வீடு பெற வழி செய்வன, என்ற முறையில் ஏற்றுக் கொள்ளப்பட்டும், போற்றி வளர்க்கப்பட்டும் இருப்பதையே நாம் கண்டிக்கிறோம். இலக்கியமென்றால் அதிலே கற்பனையே இருக்கக்கூடாது என்று கூறவுமில்லை, பிற இனத்தவரின் மார்க்க நூற்களைப் படிக்கவே கூடாது என்றுங் கூறவில்லை. பிற வளர்க்க வழிகேடுகளை, நமது இன மார்க்கம் என்று நம்பி மோசம் போய்விட்டோம் என்ற எச்சரிக்கை செய்கிறோம். நாட்டிலே, நமது மத ஏடுகள்” என்று ஆச்சரியப்படுவதினாலேயே, தமிழர்களுக்கு ஆரிய அடிமையாக இருப்பது கண்டு மனந்துடிக்காது, தோல் தடித்துப் போயினர். இராமனைப் பற்றியும், கம்பனுக்கும் முற்பட்டவர்கள் சத்தம் நூற்களிலே குறிப்பிட்டுள்ளனரே. கலித்தொகையில் உளதே,

சிலப்பதிகாரத்தில் உளதே, என்று நண்பரொருவர் கேட்டுள்ளார். கலித்தொகையும், சிலப்பதிகாரமும், இலக்கியங்களென்று மதிக்கப்பட்டுப் போற்றப்பட்டு வருகின்றனவேயன்றி, மார்க்க நூற்களென்று கொண்டாடப்பட்டோ, பாராயணம் செய்யப்பட்டோ, அவைகளிலுள்ள நிகழ்ச்சிகள், பூஜை, விரதம், நேமநிஷ்டை, திருவிழாக்களாக ஆக்கப்பட்டோ இல்லை என்பதை அன்பர்கள் அறிய வேண்டுகிறேன். கோப்பெருந்தேவிக்குக் காப்புக்களையும் விழாவோ, கோவிலன் பிறந்த தின விழாவோ, கண்ணகி திருமணமோ, விசேஷ பூஜா நாட்களாக இல்லை, ஆனால், சீதா கலியாணம், ஸ்ரீராமநவமி, கொண்டாட்டங்கள் உண்டு. அதிலே ஆரியருக்குக் கொண்டாட்டம் என்பதை நான் கூறத் தேவையில்லை. தமிழரின் நெறியையும், மனப்பாங்கையும், ஆரியத்துக்குத் துதிபாடும் விதமானதாக்கி விட்ட நூற்களையே நெருப்பிலிட வேண்டுகிறோம்.

ஒரு வேடிக்கையான விஷயம்! மகா விஷ்ணுவின் பல அவதாரங்களிலே, தமிழர் வணங்கும் நிலை, இராமகிருஷ்ணன் எனும் இரு அவதாரங்கட்கு மட்டுமே ஏற்பட்டது. மற்றவைகள் ஏதோ எப்போதே பேசப்படுவதோடு முடிந்து விடுகிறது. வராக அவதாரத்துக்கு வடை பாயசத்துடன் பூஜை தினங் கிடையாது, மச்சாவதாரத்துக்காக நோன்பு நைவேத்தியம் மக்கள் செய்வதில்லை, கூர்மாவதாரத்துக்குக் கொண்டாட்டங்கள் நடை பெறுவதில்லை, வாமனாவதாரத்துக்கு வைபவங்கள் நடை பெறுவதில்லை, பரசுராமனுக்குக் கூடப் படாடோபமான பூஜைகள் நடப்பதில்லை, கிருஷ்ண ஜெயந்திகளும், இராமநவமிகளுந்தான் நிலைபெற்றுத், தமிழரின் நினைப்பிலே இடம் பெற்றுவிட்டன. ஏன்? இலக்கியப் பாதுகாவலர் இதற்குச் சற்றுத் தம் ஆராய்ச்சியைச் செலவிட வேண்டுகிறேன்.

இலக்கியங்கள் கூடாதென்றுங்கூறவில்லை, இலக்கியங் களிலே, கற்பனையலங்காரங்கள் இருத்தலாகாதென்றுங் கூறவில்லை. ஆனால், எவை தமிழரின் கருத்தைக் கெடுத்து, நிலையை நொறுக்கி, ஆரியரின் அடிபணிய வைக்கின்றனவோ அவைகளே நமக்காகா என்றுரைக்கிறேன். இதனைத்தான் தோழர்கள் தெளிவாகத் தெரிந்துகொள்ள வேண்டுகிறேன். இதை உணர்ந்தால், இராமனைப்பற்றி இன்னின்ன ஏடுகளிலேயும் குறிப்புண்டே என்று வினா எழாது. கம்ப இராமாயணத்தைக் கொளுத்தினதும், ஆரியமே அன்றோடு அழிந்தொழியும் என்றா சுயமரியாதைக்காரர் கூறுகின்றனர். ஆரியத்தை மக்கள் ஒதுக்கிவிடத் துணிவு கொண்டனர் என்பதற்கு

அச்செயல் ஒரு சான்று! தமிழருக்குள்ள ஆரியமோகம் அழிக்கப்படவேண்டும் என்பதற்கு உணர்வூட்டும் ஒரு செயல், ஒரு தூண்டுகோல்.

கம்ப இராமணத்தைக் கொளுத்தி விட்டால் போதுமா என்று கேட்பதுடன், ஒரு தோழர், பிறமொழியிலே முழு நீள இராமாயணம் இருக்குமே என்றும், வால்மீகி இராமாயணம் இருக்குமே என்றும் கூறுகிறார். உண்மையில் வால்மீகி இராமாயணத்தைத்தான் அப்படியே மொழிபெயர்த்திருப்பின், ஆரியக் கடவுள்கள், பத்தினிகள், வீரர்கள் யோக்யதை வெட்ட வெளிச்சமாகித் தமிழர் கேலி செய்து வெறுத்தொதுக்கக்கூடிய வேண்டாப் பொருள்களாகி விட்டிருக்கும். ஆரியரின் வாழ்க்கை முறையின் வக்கிரங்களும், அரசுகளிலே நேரிட்ட சதிகளும், குடும்பங்களிலே உண்டான கலகங்களும் அப்படியே தமிழர் அறியும்படி கம்பர் செய்திருப்பின், தமிழர், ஆரியரை ஒரு காட்டுமிராண்டிக் கூட்டமென்று கேலி செய்திருப்பர்; இன்று காலில் விழுந்து வணங்குவது போன்ற கேவலமனப்பான்மை வந்திருக்காது. ஆனால் கம்பர் தமது, தமிழ் முழுவதையும் ஆரியப் பாத்திரங்களின் மீது அழகுறப்பூசித், தமிழர் நெஞ்சத்திலே அவை இடம் பெறச் செய்தார். அவரது திறமை, நமக்குப் பயன்படாமல், வேதகாலமுதல் நமது வாழ்வைக்கெடுத்து வந்த ஆரியத்துக்குப் பயன்பட்டது. அற்புதமான சிற்பி, ஆனால் கட்டியிருப்பதோ அரக்கு மாளிகை. ஆகவேதான், அதைக் கொளுத்திவிட கூடாது என்று கூறுகிறோம்.

ஏதோ, பரதா! கம்ப இராமாயணத்திலே ஏதாவதோர் பாடலை எடுத்துப் பதம் பிரித்துப் பொருள் உரைத்து, இதனால் தமிழர் இழிவு செய்யப்பட்டுள்ளனர் என்று காட்டு பார்ப்போம், என்று தமிழ்ப் பண்டிதர்கள் கேட்கின்றனர். நோக்கம் என்ன? பாடலைப் பதம் பிரித்து பொருள் உரைத்தானதும் தமிழ்ப் பண்டிதர், தலைப்பாகையைச் சரிப்படுத்திக் கொண்டு, மூக்குக் கண்ணாடியைத் துடைத்துப் போட்டுக்கொண்டு, தொண்டையைக் கனைத்துக்கொண்டு, “அவர் பொருள் உரைத்தது தவறு பதம் பிரித்தது தவறு” என்று ஆரம்பித்து, வெறு பொருள் உரைத்திடத் தொடங்குவார். ஒன்றுக்கு ஒன்பது பொருள் உரைக்க ஓயுங்கூட்டமல்ல அது! புத்தியில்லாதவன் என்ற பதத்தைப்

புத்தியில் - ஆதவன் என்று பிரித்தாராம் ஒரு பண்டிதர்! அத்தகைய வேலைத்திறனைக் காட்ட, பாட்டு எடு, பதம் பிரி என்று கேட்கின்றனர் என்பது யாருக்குத் தெரியாது. எனவே, விவாத வீரர் என்ற பெயருக்காகவே, வேலை செய்வதைவிட்டுத், தமிழரின் வாழ்வில் எவ்வளவு தேவையிருக்கிறதென்பதை அறிந்து, அதைப்போக்க, ஆரிய மோகம் போகவேண்டு மென்பதை உணர்ந்து, அம்மோகத்தை அமோகமாக ஊட்டும் ஏடுகளைத் தீயிலிடத்துணிவு கொள்ள வேண்டுமென்று, அந்தத் தோழர்களுக்குக் கூறுகிறேன்.

கம்பர் விழாக்கள் நடத்தியும், கலை மாநாடுகள் கூட்டியும், புலவர்கள் தத்தம் கற்ற வித்தையைக் காட்டும் விளையாட்டைச் செய்ய முனைகிறார்களே தவிர, நாட்டிலே உள்ள மக்களின் நினைப்பிலே ஊறிக்கிடக்கும் நச்சு எண்ணங்கள் போக்கிட ஏதும் செய்வதில்லையே என்று இரங்கத்தான் வேண்டி இருக்கிறது. புது உலகத்துக்கான எண்ணம் எழ ஓர் இலக்கியம் இயற்ற ஏன் இவர்கள் முன்வரக் கூடாது என்று நான் கேட்டால் கோபித்துக் கொள்கிறார்களே தவிர, ஏடும் எழுத்தாணியும் ‘எடுத்துக்கொண்டு உட்கார்ந்து, ‘இதோ பார்’ என்றுகூறி எழுதிடக் காணோம்! எப்படி எழுதுவார்கள்? வரப்பிரசாதம் பெற்றவர்களே கவி பாடுவார் எனும் கதைகளையும், ஆண்டவனே முதல் அடி எடுத்துக் கொடுத்தால்தான் அருட்பாடல் பாட இயலும் என்ற கதையையும் படித்துப் படித்து தன்னம்பிக்கை தேய்ந்து போன பிறகு, தேவாலயம் சுற்றவும், தெரிந்த பாடலுக்குப் புது விருத்தியுரை எழுதவும் அவர்களால் முடியுமே தவிர, இன எழுச்சியும் தமிழ்த் தரணியின் விடுதலைக்கு கருத்துக்கொண்ட “கலை” செய்யும் நிலை அவர்கட்கு வரவில்லை!! ஆகவே தான், அவர்கள் அறிவும் திறனும் படைத்தவர்களாக இருந்தும், பழைய அரக்கு மாளிகைகளில் குடி இருப்பதே மேல் என்று கருதுகிறார்கள். “ஐயன்மீர்! வெளியே வந்துவிடுங்கள், அரக்கு மாளிகைகளைக் கொளுத்தப் போகிறோம்” என்று சுயமரியாதைக் காரர்கள் கூறுகின்றனர். தீ என்றதும், அத்திருக்கூட்டம் திகில் கொள்கிறது, பாபம்!

11.4.1943

# 22- ல் 22!

நான் என்ன சும்மாவ இருந்தேன் இதுவரையில், நரம்பு முறிய வேலை செய்து கொண்டுதானே இருந்தேன். நன்றி இல்லாத எஜமானர், நாயே! பேயே! என்று தூற்றுகிறார் என்று நொந்து கொண்டு பேசினான், மாளிகையின் வேலையாள். எஜமானர் தன்மீது சீறி விழுகிறார். தன் உழைப்பிற்கேற்ற ஊதியம் தருவதில்லை என்று சலித்துக் கொள்கிறான். உண்மையிலேயே, உழைப்பு என்னமோ அதிகந்தான்; பலன்தான் பூஜ்யம்! காலை 6 மணிமுதல் இரவு பத்துவரையில் மாளிகையிலே அங்கும் இங்கும் ஓடி ஆடி, கைகால், அலுக்கப்பாடுபடுகிறான். ஓய்வில்லை. யாராவது அவன்படும் பாடு கண்டால் பரிதாபப் படுகிறார்கள், சரியான உழைப்பாளியப்பா இவன். இவனுக்கு என்ன பணம் கொடுத்தாலும் நஷ்டமில்லை; மிகக் கஷ்டப்பட்டு வேலை செய்கிறான் என்று கூறாமல் இரார். ஆனால் அவனை வேலைக்கமர்த்தியுள்ள எஜமானனுக்குத்தானே, அவன் செய்யும் காரியத்தின் பலாபலன் தெரியும்.

ஏலே! என்னடா சத்தம் அங்கே?

ஒன்னுமில்லிங்க, கண்ணாடி டம்ளர் கீழே விழுந்தது பாருங்கோ, அந்தச் சத்தந்தான்.

அட பாவி! ஏனடா கண்ணாடிப் பாத்திரத்தைக் கீழே போட்டுவிட்டாய்?

கண்ணாடி தானுங்களே, வழவழன்னு இருக்குது, நழுவி கீழே விழுந்து போச்சிங்க.

* * *

தாண்டவா! எங்கேயடா போகிறாய்?

எங்கேயுமில்லிங்க. கொழந்தை அழுததுங்க அதைக் குளத்தங்கரைக்குத் தூக்கிக் கொண்டு போகிறேன்.

அட சனியன் பிடித்தவனே, குளத்தங்கரையிலே, குழந்தைக்கு என்னடா வேலை?

எனக்கு வேலை இருக்குதுங்களே. அழற கொழந்தையை விட்டு விட்டு எப்படி வெளியே போக மனசு வருதுங்க? நான் கொளத்திலே குளிச்சி முழுகறதுக்குள்ளே, கொழுந்தையும் அங்கே இங்கே ஆடி சந்தோஷமாயிடுங்க.

அட தடியா, நீ கொளத்திலே முழுகிக்கொண்டிருக்கும்போது குழந்தை தவறி குளத்திலே விழுந்தா என்ன செய்வது?

இது தெரியாதுங்களா? விழுந்தா தூக்கிவிட மாட்டேனுங் களா?

* * *

எஜமானனுக்கும் அந்த ஏடு பிடிக்கும் இத்தகைய போர் நித்த நித்தம், மணிக்கு மணி நடந்தவண்ணம் இருக்கும்.

ஓட்டைப் பாத்திரத்திலே நீர் நிரப்புவான், ஒடிந்த பாண்டத்தை உரியில் வைப்பான், துணி கிழியத் துவைப்பான், தோட்டத்து வாசலைத் திறந்து விட்டுத் தூங்குவான், அவன் எக்காரியம் செய்தாலும், ஏதாவதோர் நஷ்டம், நேரிட்டே தீரும். வேலை செய்யாத நேரமும் கிடையாது, ஒரு வேலையாகிலும் விவேகங் காட்டிய வாடிக்கையுங் கிடையாது. இப்படி ஒரு தடித்தாண்ட வராயன் நமக்கென்று வந்து சேர்ந்தானே என்று வீட்டுக்குடையோன் தலைமீது அடித்துக் கொள்கிறான். இவ்வளவு பாடுபடுகிறோம், நம்மிடம் பட்சமாக இவர் இருப்பதில்லையே என்று வேலையாள் ஏங்குகிறான். வெளியே இருப்பவருக்கு என்ன தெரியும்? தாண்டவன் சளைக்காது உழைக்கிறான் என்று புகழ்ந்து வருகின்றனர்.

இவ்விதமான குடும்பக் கோலாகலத்துக்கொப்பாக இருக்கிறது காந்தியாரின், நாட்டு விடுதலை உழைப்பு! பன்னெடுங்காலம் பாடுபடுகிறார் - சிறை புகுந்தார் - என்று கூறாதார் இல்லை - கும்பி ஒரு கூட்டமும், உண்டு. ஆனால், பாடுபடுவதால் விளைந்த பயன் என்ன என்று, அச்சம் தயை தாட்சணியம், மயக்கம் இன்றி, நிறுத்துப் பார்த்துரைக்கும் எவரும், இதுவரை ஏற்பட்ட பலன் பூஜ்யம்! என்றே கூற வேண்டி வரும் - நெஞ்சிலே நேர்மையிருப்பின்.

உழைப்பு மட்டும் போதாது, பலன் வரும் விதமான பக்குவமான முறையுடன் பாடுபடவேண்டும். புறம்போக்கு நிலத்திலே, விதை தூவி விட்டால். முளை கிளம்பிப், பயிராகிக் கதிர் விடாது. அதுபோலவே, நாட்டு விடுதலையிலோ நாட்டமோ, அதற்கான உடலாட்டமோ மட்டும் போதாது. பலன் அளிக்க உழைப்பு, மதியைத் துணை கொண்டதாக இருத்தல்வேண்டும். இருந்திருப்பின், காந்தியாரின் இருபது ஆண்டுகளுக்கு மேற்பட்ட உழைப்பு, இதுவரை, பெரும்பலன் தந்திருக்கும்.

“சோவியத் நாட்டிலே, தோழர் ஸ்டாலின், 22 ஆண்டுகளிலே, இணையில்லா வெற்றி பல பெற்று, ரஷிய மக்களை வதைத்த பலப் பயங்கரப் பிரச்னைகளைத் தீர்த்து வெற்றி பெற்றார். ஆனால் காந்தியாரோ, 22 ஆண்டுகளிலே 22 பிரச்னைகளைக் கிளப்பினார், ஒன்றையாவது அவர் தீர்த்து வைக்கவில்லை, ஒன்றுக்காவது பரிகாரம் கிடைக்கக்காணோம்” என்று, டில்லி சட்டசபையிலே தோழர், ஜம்னாதாஸ் மேத்தா, கூறினார். மேத்தாவின், அந்தக் கண்டனம், காந்தி பக்தர்களுக்குக் கண்ணீர் உண்டாக்கியிருக்கக் கூடும். என்ன கர்வம் இந்த மேத்தாவுக்கு என்று அவர்கள் கர்ஜனை செய்யவுங் கூடும். ஆனால், நிதானமாக யோசித்தால் தோழர் ஜம்னாதாஸ் மேத்தா கூறியபடி, 22 வருஷத்திலே ஸ்டாலின் போன்ற தலைவர்கள் பெற்ற வெற்றியுடன், இந்த 22 ஆண்டுகளாகக் காந்தியாரின் முயற்சிகள், பலன் தராமற் போனதை ஒப்பிட்டுப் பார்த்தால், கோபம் நீங்கிச் சோகம் பிறக்கும்.

இந்து முஸ்லீம் ஒற்றுமை, சுதேசி, தீண்டாமை ஒழிப்பு, கிராமப்புனருத்தாரணம், கதர், மதுவிலக்கு, பொது மொழி, ஒத்துழையாமை சட்டமறுப்பு பதவி ஏற்பு, வார்தா திட்டம் எனும் இன்னோரன்ன பல பிரச்னைகள் காந்தியாரால் நாட்டிலே நடமாடவிடப்பட்டன, ஆனால் இன்றுவரை, ஒன்றாவது தீர்க்கப்பட முடியவில்லை. தீரும் மார்க்கமும் தெரியக்காணோம். இந்து முஸ்லீம் ஒற்றுமை எனும் பிரச்னையைக் காந்தியார் எடுத்தாண்ட விதம், தற்குறித் தாண்டவராயன், வழவழப்பான கண்ணாடிப் பாத்திரத்தை எடுத்துக் கை தவறிக் கீழே போட்டுவிட்டு, தூளைத்துடைப்பங் கொண்டு கூட்டிய கதைபோல் முடிந்தது.

ஒற்றுமை பேசி, இன்று எமக்குத் தனிநாடு தேவை என்று முஸ்லீம்கள் கேட்கும் நிலையே பலனாகக் காண்கிறார். பிற பிரச்னைகளின் கதியும்

இதுபோலவே முடிந்தது. பூனா ஒப்பந்தத் திலே அன்று கையொப்பமிட்டு தனித்தொகுதி உரிமையை ஆதித்திராவிடர் இழந்ததன் காரணம் என்ன? காந்தியாரின் பட்டினிப் பயமுறுத்தல். அதே பயமுறுத்தலுக்கு இன்று ஆங்கிலேயர் விடுவித்த பதில் என்ன? “காயமே இது பொய்யடா. வெறுங் காற்றடைத்த பைய்யடா” என்று பாடினர்.

இந்த இருபத்தி இரண்டாண்டு, காந்தியாருக்கு மக்கள் தந்த ஆதரவு அலைகடல்போல் பெருகிற்று, பத்திரிகைகளின் ஒத்துழைப்பு அமோகமாக இருந்தது, நிதியோ குன்றெனக் குவிந்தது. ஆயினும் பலன் இல்லை. இவ்வளவு பலம் வேறோர் தலைவருக்குத் தரப்பட்டதுமில்லை, வேறெந்தத் தலைவருக்கும் இவ்வளவு தோல்விகள் கிடைத்ததில்லை. ஏன்? இதைத்தான் நாட்டு நண்பர்கள் என்று தங்கட்கே கூறிக்கொள்ள உரிமை உண்டு என்று நாவசைக்கும் தோழர்கள், நன்றாகச் சிந்தித்துப் பார்க்க வேண்டும். மலை மழையால் கரையுமா, கரைந்தால், அது மலையன்று, மலை

போற் காணப்பட்ட மண்மேடு என்பதைக் கூறவேண்டுமா? காந்தி பக்தர்கள், 22ல் 22 என்ற இந்த மேத்தா மொழியை, ஆழ்ந்து, சிந்திக்க வேண்டுகிறோம். இந்தத் திங்கள், நாட்டு மக்களின் சிந்தனைக்குரிய வாசகம், இதைவிட வேறு தேவையுமில்லை. 22ல் 22!!

11.4.1943

# அன்பழைப்பு

மதவேடம் புனைந்துள்ள மகாத்மாவை, வியாபாரக் கோமான்களும், அரசியல் சூதாடிகளும், பயன்படுத்திக் கொள்கின்றனர்.

அவர்களின் பண மூட்டைகளே கோட்டைச்சுவராக, காங்கிரஸ் எனும் கட்சிக்கு அமைந்திருக்கிறது.

காங்கிரஸ் என்ற கட்சி, ஆதி நாட்களிலே, ஜனநாயகம் பேசிக்கொண்டிருந்தது; பிறகு நாளாவட்டத்தில் அது ஒரு சர்வாதிகாரச் சதிகாரர் கூடமாகிவிட்டது.

பிற கட்சிகள், இலட்சியக்காரர்கள் ஒருவரையும், ஆட்சியாளராக இன்றுள்ள அன்னியர், பொருட்படுத்தக்கூடாது என்பது, காங்கிரசின் திமிர் வாதம்.

நாட்டிலே காங்கிரசே பெரிய கட்சி; இந்துக்களே மெஜாரிடி, ஆகவே காங்கிரஸ் கூறுகிறபடி நடந்து, ஜனநாயகக் கொள்கையின் படி, பெருவாரியான மக்களாக உள்ள இந்துக்களிடம் கட்சியை ஒப்படைக்க வேண்டும் என்பது காங்கிரசின் கிளர்ச்சிக் குரல்.

மேனாட்டுச் சமுதாய அமைப்பு, ஒரு நாட்டிலே ஒர் இனம் பெருவாரியாக இருக்கும் விதமாகவும், சமுதாயத்திலே அந்த இனத்துக்குள் உயர்ந்த ஜாதி, தாழ்ந்த ஜாதி, என்ற இழிந்த மனப்பான்மை கொண்ட பேதங்கள் இல்லாத விதத்திலும் இருக்கிறபடியால், அங்கு, எங்கு, பெருவாரியாக எந்தக்கூட்டம் இருக்கிறதோ, அக்கூட்டத்திடம் அரசாளும் உரிமையைத் தருவதான ஜனநாயக முறை, ஏற்றதாகவும், நடைமுறையில் வசதி தருவதாகவும் இருக்கிறது.

பார்லிமெண்டரி ஜனநாயக முறை எனும், இந்த ஏற்பாடு, இந்தியாவுக்குப் பொருந்தாது; ஏனெனில், இந்தியா பல இனம் கொண்ட ஒரு கண்டம். எனவே இங்கு, பார்லிமெண்டரி ஜனநாயக ஆட்சி முறை, சரியாக வேலை செய்யாது.

இனத்திற்கோர் இடமென்று பிரிக்கப்பட்டு, அந்தந்த இடத்து மக்களுக்குச் சுயநிர்ணய உரிமை தரப்பட்டு, ஆட்சி அமைக்கப்பட

வேண்டும்.

காங்கிரஸோ, இதனை மறுக்கிறதுடன், பார்லிமெண்டரி ஜனநாயக ஆட்சி வேண்டுமென்று கிளர்ச்சி செய்கிறது.

அந்தக் கிளர்ச்சியை, இந்தியாவைச் சுற்றி எதிரிகள் உலவும் பயங்கர வேளையிலே, பிரிட்டிஷாரின் பிடி, பர்மா, மலாய், பகுதிகளிலே தளர்ந்தது தெரிந்ததும், கிளர்ச்சியை வலுவாக்கிக் கொண்டு, வெள்ளையனே! வெளியே போ! என்ற இயக்கமாக மாற்றி அமைத்தது.

விஷமத்தைத் தடுக்க, காங்கிரஸ் தலைவர்கள் சிறைப்படுத்தப் பட்டனர்.

உடனே, நாட்டிலே, பல்வேறு இடங்களிலும், மிக முன்னேற்பாடு, பணச் செலவு, ஆள் அம்பு அமைப்பு ஆகியவைகளுடன் கூடிய, நாச வேலை நடந்தது; குழப்பம், கொலை, கொள்ளை, தீ மூட்டுதல், அடிதடி, ஆகியவைகள் நடக்கலாயின. சர்க்கார் இவைகளை அடக்கக் கடுமையான முறைகளைக் கையாண்டனர்.

காந்தியார் உண்ணாவிரதமிருந்தார், விடுதலை செய்க என்ற கிளர்ச்சி நடந்தது; பலிக்கவில்லை; காந்தியாரின் உண்ணாவிரதம் வெற்றிகரமாக முடிந்தது; காங்கிரஸே, கலவரத்துக்குப் பொறுப்பாளி என்று, சர்க்கார் குற்றப் பத்திரிகை வெளியிட்டுள்ளனர்.

இவைகளையே முக்கியமான அம்சங்களாகக் கொண்டு, இந்தியா மந்திரி அமெரி பார்லிமெண்டிலே பேசினார்; காங்கிரசார் கோபிக்கின்றனர். அமெரி கூறியபடி, இதற்கு முன்பே, வேறு பலரும் கூறியுமுள்ளனர்.

இவைகளிலே எதை எதை ஆதாரபூர்வமாக மறுத்து வாதிட, எந்தத் தேசீயத் தோழர் விரும்பினாலும், “திராவிட நாடு” “ஊரார் உரையாடல்” என்ற தனிப்பகுதியில் அவர்கட்கு இடமளிக்கவும், பதில் உரைக்கவும், தயார் என்பதை மகிழ்ச்சியுடன் தெரிவித்துக் கொள்ளுகிறோம். வீணான சந்தேகமோ, அனாவசியமான சஞ்சலமோ, ஒருவருக்கொருவர் கோபமோ கொண்டு குமுறிக் கிடப்பதைவிட, வெளிப்படையாக விவாதித்து, பொது அறிவைத் துலங்க வைத்துக் கொள்வதுடன், அபிப்பிராய பேதங்களை நீக்கிக்கொள்வது நலம் என்ற கருத்தைக் கொண்டே, இந்த

அன்பழைப்பை விடுக்கிறோம். நாட்டு நண்பர்கள் இதனை ஏற்றுக்கொண்டு, அடுத்த இதழுக்கே தமது விளக்கம், கேள்வி சந்தேகம், மறுப்பு ஆகிய எதை வேண்டுமானாலும் அனுப்பக் கோருகிறோம். இவை எம்மிடம் இல்லை, கேலி, கிண்டல், தூற்றல், அசைவு ஆகியவைகளே உண்டு என்று கூறி, அவைகளையே அனுப்புவதானாலும், சரியே, பெரிய குப்பைத் தொட்டியும் இருக்கிறது, எம்மிடம் ஓர் அகராதியும் இருக்கிறது.

இஷ்டப்படி செய்யட்டும்!

11.4.1943

# அவருக்கு இவர் எழுதினால் ! - II

அமெரிக்க நாட்டு தலைவர் மிஸ்டர் பிலிப்சுக்கு துருக்கி பத்திரிகைக் கோஷ்டித் தலைவர் ஆதே எழுதுவது:

அன்புள்ள மிஸ்டர் பிலிப்ஸ்!

நான் என் சகாக்களுடன் இந்தியா முழுதும் சுற்றிப்பார்த்து, அழகிய பூபாகத்திலே காணப்படும் பலவகை வளங்களையும், பலவகையான தட்ப வெட்ப நிலைமைகளையும், இயற்கை அழகையும், கண்டுகளித்ததுபோல் தாங்களும் களித்திருப்பீர்கள். பாரோர் புகழும் தாஜ் மஹாலும், பம்பாய்க் கடற் கோட்டையின் வாயற்படியும், லாகூர் மசூதிகளும், குதுப்மினாரும், கூடகோபுரங்கள் நிறைந்த பழையகாலப் பட்டிணங்களும், காசி, கயா, பிரயாக் முதலிய இந்து மத பீடங்களும், விந்தியமலையும் அதை அடுத்துள்ள திராவிட நாடும் அதன் வனப்பும், எங்கட்கு மகிழ்வு தந்தபடி தங்கட்கும் தந்திருக்கும்.

வெளி நாட்டிலிருந்து வருகிற எவரையும், புன்னகையாலோ, இன்மொழியாலோ பரவசப்படுத்தி, தமது கட்சியே நாட்டின் விமோசனத்துக்கு ஏற்ற கட்சி, மற்றவைகள், வெறும் சூட்சிச் சபைகள் என்று கூறிடும் சமர்த்தர்கள் பலர், அங்கு தலைவர்களாக, பத்திரிகாசிரியராக இருக்கின்றனர் என்பதை நான் கூறத் தேவையில்லை, தாங்களே நேரிலே அவர்களைக் கண்டீர்கள். நாம் ஏதாகிலும், கொஞ்சம் சபலத்தைக் காட்டினோமோ, தீர்ந்தது, நாம் அவர்களின் நாட்டியப் பொம்மைகளாகி விடுவோம். நாங்கள் இதிலே சர்வ ஜாக்ரதையுடன் நடந்து கொண்டோம். அவரவர்கள் சொல்லிக்கொண்டு வந்ததை எல்லாம் கேட்டுக்கொண்டு, தலையாட்டினோம், உங்கள் அபிப்பிராயம் என்ன என்று கேட்டபோதெல்லாம், இந்தியாவின் வனப்புகளைப் புகழ்ந்தோம், மற்ற உள்நாட்டுப் பிரச்னைகளிலே சிக்கிட மறுத்துவிட்டோம். துருக்கியின் நேசத்தைப்பெற, அச்சு நாட்டினரும், நேச நாட்டினரும், போட்டியிட்டுக்கொண்டு, புன்னகை காட்டி, கை குலுக்குவதைக் கடந்த நான்காண்டுகளாகக் கண்டு வருகிறோம், இதிலே எங்கள் நாடு, எந்த இராஜ தந்திரத்துக்கும் இறையாகாது, தப்பியே வருகிறது. துருக்கியின் இந்த மாண்பு, எங்களிடம் இருக்கிறதென்பதை, எமக்குத் “தூபதீப நைவைத்தியமிட்டு” வாழ்த்தியவர்கள் தெரிந்துக் கொண்டார்கள். தங்களிடம் மட்டுமென்ன! அவர்களின் ‘பாச்சா’ பலிக்குமா! எல்லாக்

கட்சித் தலைவர்களையும், கட்சியில்லாத் தலைவர்களையும் கண்டு பேசினீர்கள். பார்த்தீர்களா, அங்கே இருக்கும் உள்நாட்டுப் பகையை! ஒன்பது, பத்து கோடிக்குமேல் உள்ள முஸ்லீம்கள் காந்தி இயக்கத்தைத் துளியும் ஆதரிக்கவில்லை; தங்கட்குத் தனிநாடு தேவை என்று கூறி வருகின்றனர். உண்மையிலேயே அந்த இலட்சியம் மிகச் சிறந்தது என்பதைத் தாங்கள் உணர்ந்திருப்பீர்கள். பொதுவாக, பிரிட்டிஷ் சாம்ராஜ்யத்தின் மீது அமோகமான துவேஷத்தையோ, எதிர்ப்பையோ கிளப்பிவிட காந்தி இயக்கத்தால், முடியவில்லை. வண்டி வண்டியாகக் காகிதக் கணைகள் விடுகின்றனர். பயன் இல்லை. பட்டாளத்திலே இலட்சம் இலட்சமாக ஆட்கள் சேர்ந்து வருகின்றனர். எல்லைப்புறத்திலிருந்து கேரளம்வரையிலே, போர் ஆதரவுக்கான முயற்சிகள் பலமாக இருக்கிறது, தங்கள் கண்களிலே படாமலா இருக்கும்? செவியிலே விழும் சத்தத்தைக் கொஞ்சம் சட்டை செய்யாது, நமது கண்களிலே படும் காட்சிகள் கூறும் பாடத்தைக் கவனித்தால்,

1. காந்தி இயக்கத்தின் கனவு பலிக்கவில்லை.

2. பத்துகோடி முஸ்லீம்களின் "பாத்யதை"யைப் பற்றிப் பாராமுகமாக இருக்க முடியாது.

3. காந்தி இயக்கத்தால், போர் ஆதரவைக் கடுகளவும் போக்க முடியவில்லை என்று தெரிகிறது.

எது எப்படியிருப்பினும், இந்தியாவைச் சுற்றிப் பார்க்கும்போது, நம் போன்றவர்கள் காதுக்கு அதிக வேலை கொடுப்பதைவிட, கண்களுக்கு அதிக வேலை தந்தால், சரியான படம் பிடித்துப், பாடம் தெரிந்துகொள்ளலாம். நாங்கள் பிடித்த படத்தை இனி எமது பத்திரிகைகளிலே வெளியிடுவோம். உங்கள் படம் வெளிவரும் நாளை ஆவலோடு எதிர்பார்த்துக் கொண்டிருக்கிறோம்.

இப்படிக்கு,

ஆதே.

11.4.1943

# அவருக்கு கோபமாம் !

அவர் மிகக் கோபத்தோடிருக்கிறார், ஆம், முன்னாள் முதலமைச்சர் ஆச்சாரியாரைத் தான் குறிப்பிடுகிறோம். வேத வேதாந்தங்களையும், மார்க்க அரீலியரின் மணிமொழிகளையும் கற்று, ஜனபரிபாலனம் முதல் சிசு பரிபாலனம்வரை தெரிந்த அந்தத் திருச்செங்கோட்டுத் தவசியார்தான், கோபத்தோடிருக்கிறார்.

“தெரியுமோ விஷயம்? நம்ம சத்யமூர்த்தி காலமாயிட்டார்” என்ற சோகச் செய்தியைக் கூற எவரேனும் சென்றால் கூட, “சரி, அந்த ஆசாமியும் இந்தச் சமயமாகப் பார்த்துத்தானா செத்துத் தொலைக்க வேண்டும்” என்று கோபித்துக் கொள்வார். ஆமாம், அவரே வாய்விட்டுக் கூறிவிட்டார், எனக்குக் கோபம் தாங்க முடியவில்லை” என்று. “இந்தி எதிர்ப்பின் போது, நாட்டிலே நடைபெற்ற கிளர்ச்சியைக்கண்டு கோபித்துக் கொண்டாரோ, அதை விட அதிகக் கோபமாகவா இருக்கிறார்” என்று கேட்டு அவருடைய கோபத்தை மேலும் கிளறி விடவேண்டாம், என்று, இந்தி எதிர்ப்பாளரைக் கேட்டுக் கொள்கிறோம்.

பால், சுண்டக்காய் வேண்டுமென்று, அடுப்பிலே தீயைக் கிளறிக்கிளறி விட்ட நேரத்தில், பால் கொதித்துப் பொங்கி வழிந்து கீழே போனால், இல்லாளுக்குக் கோபம் வரத்தானே செய்யும். கண்ணாடிப் பாத்திரத்தை மிகச் சுத்தமாக வைத்திருக்க வேண்டு மென்று, ஒருமுறைக்கு மும்முறை கழுவித் துடைத்துக் கொண்டிருக்கையிலே, தவறிக் கீழே விழ்ந்து தூளானால், யாருக்குத்தான் கோபம் வராது!

## அந்தக் குதிரை

ஆச்சாரியாரே, சற்று நேரம் கீழே இறங்கி, சிரமபரிகாரம் செய்து கொண்டு, காலடியிலே சமையல் செய்து சாப்பிட்டானதும், மீண்டும் சவாரி செய்வோம் என்று நம்பித்தான் அந்தப் பதவிக் குதிரையை விட்டுக் கீழே இறங்கினார். கூப்பிட்டால் ஓடிவரும் என்றும் கூடச் சொன்னார். பாருங்கள் இப்போது கூப்பிட்டால் வரவில்லை, இழுத்துப் பிடித்து நிறுத்தினால், முரட்டுத்தனம் செய்து கொண்டு ஓடுகிறது, அவரைக் குப்புறக் கீழே விழச் செய்கிறது அந்தக்

குதிரை! அவருக்குக் கோபம் வராமலிருக்குமா!!

“நானும் பொறுமையை இழக்காது, அலுக்காது சளைக்காது, சமரசத்துக்குப் பாடுபட்டுப் பார்க்கிறேன், முடியவில்லையே. இனி நான் என்ன செய்வது, எனக்குக் கோபம் குதிரையைப் பறிகொடுத்து நெடுநாட்களாகிவிட்டனவே, இப்போது கோபம் இவ்வளவு வரக்காரணம் என்ன என்று கேட்பர். நாட்கள் பல ஆயினவே தவிர, ஆசை நரைக்கவில்லை, முயற்சி நிற்கவில்லை. அன்றுமுதல் இன்றுவரை அவர் அந்தக் குதிரையைக் தேடிப் பிடிப்பதன்றி வேறொன்றும் அறியார் பராபரமே என்றே கூற வேண்டியிருக்கிறது.

எந்தக் காங்கிரசே என் உயிர் என்று கூறினாரோ அதைத் துறந்தும் பார்த்தார். பலன் பூஜ்யம்.

எந்தப் போர் முயற்சியை எதிர்த்துச் சிறை சென்றாரோ, அதற்குப் பிரசாரம் புரியலானார், பலன் மீண்டும் பூஜ்யம்.

எந்தச் சர்க்கார் மாளிகைகளைச் சுற்றுவது, கேவலம் என்று கூறி வந்தாரோ அதே மாளிகைகளைச் சுற்றினார். பலன், உடலுக்கு அலுப்பு, உள்ளத்துக்குச் சோர்வு.

எந்தக் காந்தியாரைக் கண்கண்ட கடவுள் என்று துதித்தாரோ, அவரையே எதிர்த்தார். பலன், பல இடங்களில் பலவிதமான குழப்பம். எந்தப் பாகிஸ்தானைப், பசுவை வெட்டுவது என்று கண்டித்தாரோ, அதற்கே ஆதரவாகப் பேசியும் பார்த்தார், பலன், ஜனாப் ஜின்னாவின் புன்னகை, சவர்க்காரின் சீற்றம். எந்தச் சப்ரூ கூட்டத்தைச் செல்லாக்காசு என்று கேலி செய்தாரோ, அதே கூட்டத்தோடு கலந்து காரியமாற்றிப் பார்த்தார். பலன், பூஜ்யமே!

மகஜர் அனுப்புவது மன்னார்சாமிகளின் காரியமல்லவோ என்று பேசினவரே, மகஜர் அனுப்பிப் பார்த்தார், பலன் மறுபடியும் பூஜ்யமே! இதனால் அவருக்குக் கோபம் வருவது சகசந்தானே! கோபம் வந்ததுகண்டு நாம் ஆச்சரியப்படவில்லை, இவ்வளவு தோல்விகளுக்குப் பிறகும், அவருடைய மனங் குழம்பாமலிருக் கிறதே, அதற்கே ஆச்சரியப்படுகிறோம்.

காந்தியாரின் உண்ணாவிரதத்தால் விளையக்கூடிய மகத்தான ஆபத்துக்களை விளக்கினார், தலைவர்களைத் திரட்டினார், தந்திகள் அனுப்பினார், ஆனால், ஆகாகான் அரண்மனை திறக்கப் படவில்லை.

ரசமான உவமை

இந்தச் சர்க்காரை என்னவென்று கூறிக்கண்டிப்பதய்யா! ஒரு மகாத்மாவின் ஆவி துடித்துக் கொண்டிருக்கும்போது, இந்தச் சர்க்கார், அலட்சியமாக இருந்தார்களே என்று கேட்டவர் பலர். அக்கூட்டத்திலே ஆச்சாரியார் இருந்து அலறினார், அறிவுறுத்துகிறேன் என்றார், பலன் காணாது திகைத்தார். டாக்டர் சி.ஆர். ரெட்டியார், சர்க்காரின் நிலைமையை விளக்கினார் அழகுற. இந்தி எதிர்ப்பின்போது ஸ்டாலின் ஜெகதீசன் என்பவனின் உண்ணா விரதத்தைப் பற்றி எப்படி ஆச்சாரியார் சர்க்கார் அலட்சியமாக இருந்தனரோ, அதைப்போலக், காந்தியாரின் உண்ணாவிரதத்தைப் பற்றி இந்திய சர்க்கார் கவலையற்று இருந்தனர், என்று கூறினார். ஆழமப்பா உன் கருத்து, மெய்தானப்பா அழகாக இருக்குதப்பா, என்று பாடிடவுந் தோணும், டாக்டர் ரெட்டியாரின் அந்த அழகிய விளக்க உரை படித்தோருக்கு. தொட்டது துலங்கவில்லையே என்ற துயரமின்றித், தொடாதது எது என்று தேடித்திரிய ஆச்சாரியார் தயங்கவில்லை. மீண்டும் ஒரு மகஜர், வைசிராய்க்கு. இவருடன் மற்றும் பல தலைவர்கள்! கட்சியில்லாத் தலைவர்கள்தானே என்று அன்பர்கள் கேலி செய்யக்கூடாது. சுதேசமித்திரனுக்கு அது சுரீல் எனப்படுகின்றது. மகாகனங்களையும் மாஜி மந்திரிகளையும், பிரதம பாதிரிகளையும், கோடீஸ்வரர்களையுமா இப்படிக் கூறுவது என்று மித்திரன் கேட்கிறது. காக்கைக்கும் தன் குஞ்சு பொன் குஞ்சு என்ற பழமொழியை மித்திரனுக்குப் பதிலுரையாகத் தரலாமா என்று அன்பர்கள் எண்ணுவர். வேண்டாம், வேறு ஏதேனும் காரியம் செய்வோம், சுபாவத்தின்படி அமையும் சொற்களுக்குப் பதிலுரைக்க வேண்டியது அவசியமுமல்ல, பலனுமிராது.

இம்முறையும் வழக்கமான தோல்வி ஆச்சாரியாரை வாரி அணைத்துக் கொண்டது. காந்தியாரைப் போய்க் கண்டு பேச அனுமதி வேண்டும், இதுவே மகஜரின் கருத்து. இதற்கும் அனுமதி கிடைக்காமற் போகவே, ஆச்சாரியாருக்குக் கோபம் மூண்டிருக்கிறது. இப்படிச் செய்து கொண்டே இருந்தால், பகிரங்க எதிர்ப்பு படுதா எதிர்ப்பாகிவிடும் என்று பயமுறுத்துகிறார்.

துணிவாகப் பகிரங்க எதிர்ப்பு நடத்தினார், அதை அடக்கவும் தயார், பயந்து பதுங்கித் தாக்கினால், அதை ஒடுக்கவும் தயார் - என்று கூறும் நிலையிலே சர்க்கார் இருக்கிறது. சண்டைக் கப்பலையும் அடக்க முடியும் என்பது போருக்கு மட்டுமன்று, ஆச்சாரியாரின் மிரட்டுக்கும், அது பதிலுரைதான்.

வேறு வழி கோபித்துப் பயனில்லை ஸ்வாமிகளே! அரசமரத்தைச் சுற்றி வந்தால் மட்டும் அடிவயறு கனக்காது. சர்க்காரிடம் சரசமாடியோ, விரசங்காட்டியோ, இருப்பது மட்டும் போதாது. டில்லிவரை போக வேண்டாம்! வேறு இடங்களிலே உள்ளவர்களைத் தேடுங்கள், அவர்களின் கிளர்ச்சிகளுக்குச் செவி சாயுங்கள், பிறகு பாருங்களேன் ஆகாகான் அரண்மனையின் கதவு மட்டுமன்று, அமெரியின் காரியாலயங்கூடத் திறக்கப்படுகிறதா, இல்லையா என்று! இதுவே ஆச்சாரியாருக்கு நாம் அனுப்பும் அன்புகலந்த யோசனை. அவர் கண்ணன் காட்டும் வழி செல்பவராக இருக்கலாம், நமது வழி பிடிக்காமலிருக்கக்கூடும்!

## தரிசன நோக்கம்

உண்மையிலேய நாம் தெரிந்து கொள்ள விரும்புவது ஒன்றுண்டு. காந்தியாரை இப்போது போய்ப் பார்த்து ஆச்சாரியார் என்ன புதிய நிலைமையை விளக்கப்போகிறார்? எந்தப் புதிய சம்பவத்தை விவரிக்கப் போகிறார், என்ன புதுக் காரணங்கூறி காந்தியாரின் நிலையை மாற்றப் போகிறார். ஏன் இப்போது காந்தியாரைக் கண்டால் போதும் என்று கூறுகிறார்.

காந்தியார் சிறைபுகுமுன் இருந்த சிந்தனையும் நிலைமையும் இன்று எது மாறிவிட்டது. காந்தியாருக்கும் மே.த. வைசிராய் அவர்கட்கும் நடந்த கடிதப் போக்குவரத்தைவிட, இருசாராரின் நினைப்புகளையும் விளக்க வேறு என்ன தேவை? எதற்காக இப்போது ஆச்சாரியார் காண வேண்டாமோ! என்று பாடுகிறார் - இது நமக்கு விளங்கவில்லை!

சிக்கலைத் தீர்க்க இதுதானா வழி? வேறு இல்லையா? மீண்டும் மீண்டும் ஆச்சாரியார் இந்த துரைமார் தலத்துக்குப் போவதையே வேலையாக வைத்துக்கொள்ளாமல், சுதேசமருந்து உட்கொள்ள வேண்டுகிறோம். முதலிலே தமிழகத்தில் உள்ள பிரச்னையைக் கவனிக்கட்டும். பிறகு வடதிசை ஏகி வகையான முறையில் முயல்வோம், சர்க்கார்

மாளிகைக்கெதிரில் நின்றன்று, ஜனாப் ஜின்னா, டாக்டர் அம்பேத்கார் ஆகிய இனத் தலைவர்களின் இல்லங்களில் வீற்றிருந்து.

## வீரர் செயல்

மாரெத் அரணைத்துளைக்க, நேசநாட்டுப்படைகள் சென்றபோது, இந்தியாவினின்றும் சென்ற வீரர்கள், அஞ்சா நெஞ்சினராக முன் சென்று, எதிரியை முறியடித்தனர்.

மாயூநதிக்கரையிலும் வங்கத்தை அடுத்தும், பர்மா வரையிலும் உள்ள விண்முகட்டைத் தொட்டுக்கொண்டு, இந்திய விமானிகள் பறக்கின்றனர்.

கொந்தளிக்கும் கடலில், கொடிய சப்மெரைன் தொல்லை களைப் பொருட்படுத்தாது, இந்தியக் கடற்படையினர் வீர தீரச் செயலாற்றுகின்றனர் - எனும் இன்னோரன்ன காட்சிகள், உலகுக்கும், பிரிட்டிஷ் ஏகாதிபத்தியத்துக்கும், இனி ஏகாதிபத்திய மெனும் நுகத்தடியில் இந்தியாவைக் கட்டி வைத்து, வெள்ளை வயலை உழச் செய்து வாழ முடியாது என்பதை விளக்குமேயன்றி கட்சி யில்லாத் தலைவர்களின் காகிதக் கணையோ, கதவு தட்டும் கண்ணியரின் கதறலோ, சாவி தேடும் வீரரின் விம்மலோ, சப்ரூ ஜெயகர்களின் ஜெபமாலையோ, ஆச்சாரியாரின் அம்மானைகளோ இந்த விழிப்பை பிரிட்டிஷாரிடை உண்டாக்காது என்று கூறுவோம்.

கொள்கையை வேம்பென்று கருதித் தீண்டாத ஜாதிபோல், பொது உடைமை ரஷியாவை, இன்றைய வல்லரசுகள் ஒதுக்கி வைத்திருந்தன. ஆனால், ரஷிய மக்கள் நாஜிகளை எதிர்த்துப் போரிடுகையிலே காட்டிய வீர தீரத்தைக்கண்டு, இனி ரஷியாவை ஒதுக்கி வைத்து விட்டு உலகப் புனரமைப்புச் செய்ய நினைப்பதே பைத்தியக்காரத்தனம் என்று, பிரிட்டிஷ், அமெரிக்க அரசியல் தலைவர்கள் பேசக் கேட்கிறோம்.

துறைமுகங்களிலெல்லாம் துரைமார் சர்க்காரும், உள் நாட்டிலெங்கும் உரத்த குரலோனின் ஆட்சியும், ஊரெங்கும் ரோகமும் சோகமுமாக இருந்த சீனாவிடம் இன்று, வல்லரசுகள் அன்பும் ஆதரவும், மதிப்பும் காட்டுவதன் காரணம், சீனா, ஜப்பானியத் தாக்குதலை இவ்வளவு கஷ்ட நஷ்டங்களுக்கிடையே, தீரமாகப்

போரிட்டு வரும், வீரத்தைக் கண்டதால் உதித்த வியப்பேயாகும்.

கிப்லிங் கீதம்!

“மேனாடு மேனாடுதான்

கீழ்நாடு கீழ்நாடுதான்”

என்று ஏகாதிபத்திய எக்காளமிட்ட ஆங்கிலக் கவி ருடியர்ட் கிப்லிங்கூட, மேனாடு கீழ்நாட்டைவிட மேலான நாடு என்று ஆணவமாகக் கவி அமைத்தபோதிலும், அதே கவியிலே “ஆனால் இரு பலவான்கள் சந்திக்கையில், மேனாடுமில்லை, கீழ்நாடுமில்லை” என்று கூறினார். இன்று ஆளப்பிறந்த கூட்டம் என்று மனப்பால் குடித்துக்கொண்டு, கறுப்பர் நம் கால் பிடிப்பர் என்று கர்வமாகக் கருதிக்கொண்டிருந்த வெள்ளை வீரர்கள், எந்த விமானங்களிலே, மேகமண்டலத்தில் தாவிச் சென்று எதிரி விமானங்களைத் தடுத்துப் போரிடுகின்றனரோ, எத்தகைய கடற் போர்களில் ஈடுபடு கின்றனரோ, எவ்விதமான அரண்களைப் பிளக்கும் அரிய போரில் பங்கு கொள்கின்றனரோ, அதே காரியங்களில் “கறுப்பர்கள்” வெள்ளையர் பாடங்கற்க வேண்டிய விதத்திலே வீரப் பணியாற்றுவதைக் காணும்போது, மேனாடு மேலான நாடு, கீழ் நாடு கீழான நாடு என்று கீதம்பாட முடியுமா? மத்யத் தரைக்கடலிலே சைப்ரஸ் தீவெனும் கடற்கோட்டைக் காவலுக்கு இந்தியாவிலிருந்து சென்றுள்ள வீரர்கள் பொறுப்பேற்றுள்ளனர் என்ற செய்தி, நாட்டின் எதிர்காலத்திலே கவலைகொண்ட உள்ளத்தினருக்கு எவ்வளவு உணர்வு தருகிறது. சைப்ரஸ் தீவுக்குத் தலைமீது அச்சு நாடுகள், காற்புறத்திலே அச்ச படைகள், சுற்றிலும் சுழல், ஜெர்மன் சப்மெரைன், அதன்மீது கொயரிங்கின் கோரப்பறவைகள். இத்தகைய கடற்கோட்டைக் காவலுக்கு இவ்வளவு பயங்கரமான இந்த யுத்தத்தின்போது, எந்தப் பூபாகத்து மக்கள் அமர்த்தப் பட்டுள்ள னரோ, அவர்களிடம், சுயாட்சியை ஒப்படைத்தால் நாட்டுக்கு ஆபத்து என்று பொருளற்ற சுருதியை வாசிக்க இனி முடியுமென்று நாம் எண்ணவும் மறுக்கிறோம். எனவேதான், இந்தியாவினின்றும் சென்ற போர் வீரர்கள் புகழ்பெறும் போதெல்லாம் நாம் பூரிக்கிறோம்.

மகிழ்ச்சி!

அவர்கள் சிந்தும் இரத்தம், பேசுவதைவிட, உயர்தரமான சுயராச்ய முழக்கம் வேறு இருக்க முடியுமா! அவர்கள் இந்தியாவின்

சுயமரியாதையைக் காப்பாற்றுவதைப்போல, வேறு யார் இன்று காப்பாற்றுகிறார்கள்! அவர்களைத்தான் அன்பர் ஆச்சாரியார், காங்கிரசில் இருந்த காலை, கூலிப்படை என்று கூசாது கூறினார். பொது மக்கள் உள்ளத்திலே, கேலியும் கிண்டலும் தாண்டவமாடும் விதத்திலே பேசினார். அந்தப் போர் வீரர்கள், சம்பளம் பெறுகிறார்கள். எனவே அவர்கள் கூலிப்படை என்று வாதாடிய ஆச்சாரியாருக்கு மாதம் ஐந்நூறு தராமலா, மந்திரி வேலை பார்க்கச் சொன்னார்கள், (அலவன்சுகளை தள்ளிவிட்டே பேசுவோம்.) என்று கேட்டால் என்ன பதில் உரைக்க முடியும்?

காய்ச்சல் நீங்கியதும், குளறல் அடங்கிற்று என்பது போல, ஆச்சாரியார், காங்கிரசை விட்டு வெளியே வந்ததும், இத்தகைய பேச்சை ஓரளவுக்கு நிறுத்திக் கொண்டார். கனல் கக்கியது மாறி இன்று அவருடைய விழிகள் புனல் சொரிகின்றன.

## சக்தி இல்லை

ஆனால், காய்ச்சலால் மெலிந்த திரேகத்தில் திடமுண்டாகாத போது வேகமாக நடப்பின், கீழே களைத்து விழுவதுபோலக், காங்கிரசை விட்டு நீங்கிய பிறகு, அங்கு இருந்ததால், கெடுத்துக் கொண்ட அரசியல் ஆரோக்கியத்தைச், சரிப்படுத்திக் கொள்ளாமல், சமரச ஏணி தூக்கிக் கொண்டு, சர்க்கார் மாளிகைச் சுவரிலே சாத்தி விட்டு, மேலே ஏறுகிறார்; கால்வழுக்கிக் கீழே விழுகிறார்; யார் நான் வழுவுவதைப் பார்த்துச் சிரிப்பது என்று கேட்டுக் கோபித்துக் கொள்கிறார். “ஐயா! உமக்கு இருக்கும் சக்தி போதாது, அந்தச் சுவரைத் தாண்ட” என்று கூறினால், கோபித்துக் கொள்கிறார்

18.4.1943

# கலாரசிகர்கள்

இலக்கியம், இசை, சிற்பம் எனும் கலைகளைக்கண்டு களித்து, அவைகளின் நுண்பொருள் உணர்ந்து இன்புற்று, கலாரசிகர் எனும் பெயர் பெற்றுக் கலையை உணர நேரமும் நினப்பும் நிலையுமில்லாப் பெரும்பாலான மக்களிடம், கலையின் மாண்புகளைப் பற்றிக்கூறும், கனவான்களுக்குத் தன்மான இயக்கம், தமிழனின் அறிவுக்கு ஊறுதேடுவதும், மானத்தை மாய்ப்பதுமான கொள்கைகளையே காட்சி தரப்பட்ட, இலக்கியங்கள், இனி இருத்தல்கூடாது, என்று கூறுவது, கோபமூட்டி விட்டவுடன், கலை குலையுமோ என்று கோபமும் பிறந்திடச் செய்து விட்டது. இக்கலா ரசிகர்கள், கவியின் பொருளை பிரித்துக் கூறி, வியந்து பேசி, எவ்வளவு ரசம்! எத்துணை அழகு, என்னென்ன அலங்காரங்கள், இத்தகைய கலையை இழப்பதா என்று கூறிக் கசிந்துருகுவதும், விம்முவதுமாக இருப்பது கேட்டு, தன்மான இயக்கம் தீ மூட்டி, அதன் மூலம் என்ன சாதிக்க வேண்டும் என்று எண்ணிற்றோ, அதிலே பகுதி வேலை, தீ எழுமுன்னரே, நடந்தேறி வருவது கண்டு மகிழ்கிறோம்.

கதையைத்தள்ளு, கட்டுக்கதைகளை விடு, காவியத்தைக் கவனி, - என்று கூறும், கலாரசிகர்கள், தன்மான இயக்கத்தாரிடம் வம்புக்கு நின்றாலும், கவலையில்லை; இன்றாவது சற்று உரத்த குரலில் ஊரார்முன் அச்சத்தை மறந்து பேசுகிறார்களே, கதையைக் கவனியாதே, கலையைமட்டும் கவனி என்று - அதுவரையில் நாட்டுக்குப் பெரியதோர் இலாபமே என்று கூறுவோம்.

அதே கலைகளுக்கு இருப்பிடமாக உள்ளன வென்பதற்காகக், காவியங்களைக் கண்ணிலொத்திக் கொண்டும், கும்பிட்டுக் கூத்தாடியும் வந்தகாலம் மலை ஏறி, கதை ஆபாசமாக இருந்தால், கற்பனை அழகைக்கண்டு களிப்போம் என்று கூறி, காடும் நாடும் வர்ணிக்கப்பட்டுள்ள காட்சியைப்பார், இடையும் நடையும் எவ்வளவு அழகாக வர்ணிக்கப்பட்டிருக்கிற தென்பதைப் படித்துப் பார், கமலமுகமும் கலசக் கொங்கையும் எவ்வளவு அபூர்வமான முறையிலே சித்தரிக்கப்பட்டிருக்கிறது என்பதைக் கவனி, என்று கலா ரசிகர்கள் கூறும் காலம் தோன்றியிருப்பது, இலாபந்தானே.

கதை உண்மையா - இப்படியும் ஒரு சம்பவம் இருக்குமா - என்று

கேட்டுவிட்டால் போதுமே, ஆஹா! இதே கலா ரசிர்களின் முகம் எப்படிச் சிவக்கும்! இன்று, எவ்வளவோ மாற்றம்!

கலையை அழிக்கக்கூடிய காரியமோ கலை அழிந்துவிடக் கூடிய காரியயத்தனம், என்று கலாரசிகர்கள் கூறுகின்றனர். இனிக் கலையைக் காப்பாற்றப், புது இதழ்கள் மலருமாம், வசந்தம் வீசுமாம், முருகு தோன்றுமாம், இனத்தின் நிலையைக் குலைக்காது, எழுச்சிக்கும் விழிப்புக்கும் துணை செய்யும் கலையொன்று மேலும் ஓங்க வேண்டுமென்பது நமது விருப்பம். தன்மான இயக்கத்தாருக் குக் கலாரசிகத்தன்மை கிடையாது, இனியேனும் கலாரசிகர்கள், தமது கருத்துக்கள், வாதத்திற்கும் ஆராய்ச்சிக்கும் தோற்கா என்பதை நிரூபிக்கப் பாடுபடவேண்டுகிறோம். கலாரசிகர்கள், காவியம் பல படித்தது, சொகுசான சுமையாக இராமல், நாட்டுக்கு நல்வழி வகுத்திடும் திறனை அவர்கட்கு அளிக்கவேயாகும் என்பதை அறிந்து நடக்க விரும்புகிறோம்.

கலாரசிகர் என்றால், சாமி சத்தியபாமா மெட்டிலே ஒரு புதுப்பாட்டுக் கட்டுவது, கந்துகமதக்கரியை வசமாய் நடத்தலாம் என்ற கானத்தை இசைத்தலும், திருப்போரூரான் மீது ஒரு திருத் தாண்டகம் அமைத்து விட்டேன் என்று கூறித்திருப்தி கொள்வதுந்தான் என்று கருதியும், வாடியிருந்த கொக்குக்கும் வாய்க்கொரு மீன் கிடைத்ததும், ஆற்றை வென்று அடைந்தேன் இப்பரிசை என்று எண்ணி இறுமாப்பதுபோலப் பதவிப் பசியும், போகதாகமும் தீர, ஒரு வாய்ப்பாக வேலை கிடைத்ததும், இது வேல் முருகன் அருள் என்று சுருதிபாடி, அதிலே பிறர் இலயிக்காவிட்டாலும், தானாகிலும் இலயித்து, முத்தே, இலட்சுமியே, மோகனச் சரச்சாங்கியே, என்று கோவைபாடிக் கூத்தாடி, முன்னாள் தொடர்புகள், மூலகாரணங்கள் என்பவைகளை அடியோடு மறந்து, பாடலைப் படித்துப் பதம் பிரித்துப் பொருளுரைத்து, இவ்வளவு அருமையான காவியத்தை மடையர்கள் எரிக்கப்போகிறார்கள் என்று சுடுசொல் கூறிடுவதும் - இவையே கலாரசிகர் என்ற நிலைக்கேற்ற நிகழ்ச்சி என்று கொண்டும், நெறி தவறும் நேயர்களுக்கு இனிச் சில கூறுவோம்.

இளந்தூய மணிகளே, இயம்புவீர், இன்று நாடு உள்ளதற் குறித்தனத்திலே, கலா ரசிகர்கள் என்று உலாவரும் உத்தமர்கள், ஏட்டில் உள்ளதை நாட்டார் உண்மை எனக்கொண்டு உழன்று, உறுதி

கெட்டு நெறிமறந்து திரிவதைத் தடுக்க நீவிர்செய்யப் போவதென்னை?

உமது உள்ளத்துக்கு உல்லாசமும், உரைக்கு வாசமும், (உடலுக்குச் சிலபேருக்குக் காசமும்) தரும், அழகிய சுவைமிகு, அதிரசயலங்காரக் கற்பனைகள். பாமரரின் அறிவுக்கேணியின் மீது பாறையாகி விடுவதைப்போக்கிட, நீவிர் செய்தது ஏதேனும் உண்டோ, கூறவல்லீரோ.

போர் முரசு கொட்டுவீர், பொற்காசு திரட்டுவீர், ஆசை மொழி பேசும் சில நேசமே பிடித்தலைந்து பானகம் பருகி மகிழ்வீர், ஐயிரண்டு திங்கள் சுமந்தாளெனினும் அம்மை, அருகிலிருக்காதே என்பீர், அஞ்சுகமெனக் கொஞ்சி, கஞ்சக முகங்காட்டி மஞ்சம்புகும் மாது தனது நெஞ்சநிலை தெரியாது தஞ்சமெனப்புகன்று, பஞ்சவடி வருடி வாழ்வீர், என்பன போன்ற சித்திரநடை பயில, நீவிர், காவியத்தைக் கற்கப் புகுவது உண்மையாக இருக்கலாம், ஆனால், பாமரர் நிலை அதுவோ? அவர்கள் அக்காவியங்களிலே இழைந்து கிடக்கும் வாழ்க்கை முறை, நீதி நெறி, அரசு அமைப்பு, கடவுட் கோட்பாடு, ஆகியவைகளைத் தேவைக்கெனக்கொண்டு தமது நினைப்பையும் நிலையையும், கெடுத்துக் கொண்டிருப்பதைக் கண்ட உமது கண்களில், காவியத்திலே சித்தரிக்கப்பட்டுள்ள கதாநாயகி கானகம் ஏகினாள் என்று படிக்கும்போது நீர் சுரப்பதுபோல நீர் சுரப்பதுண்டா?

வாழ்க்கையில் வசதி, கலாரசிகத்தன்மையை உமக்கு அளித்திருக்கக் கூடும். ஆனால், கலை என்ற சாக்குக்காக நீவிர் சந்தைக்குக் கொண்டுவரும் அந்தச் சரக்கு, தமிழரின் வாழ்க்கை யிலே ஆரிய நச்சுப்புக வேலை செய்வதை நீர் மறுக்க முடியுமா? அதைப் போக்க உமது திட்டம் என்ன? என்ற இன்னோரன்ன கடாவுதல்களுக்குக் கலா ரசிகர்கள், பதில் கூறுவாரா என்று கேட்கிறோம்.

சிலந்திக்கூடு எவ்வளவோ அழகியதாய், வசதியதாய், தோன்றுவதாலேயே, பூச்சிகள் அதிலே புகுந்து பார்க்கின்றன; உலவச்சென்று உயிரிழக்கின்றன, அதுபோலவே ஆரிய இனம் வீசிய வலை, கலையாகத் தோன்றுகிறது, அதிலே சிக்கினோர் சீரழிகின்றனர்.

பார்ப்பனியத்தை ஒழிக்க வேண்டும். ஜாதி பேதத்தை ஒழிக்க வேண்டும் என்ற முழக்கமிடும் ஒரு தமிழ்த்தலைவர் தமது

இல்லத்திலேயே பார்ப்பனியங் கலந்த நிகழ்ச்சி - ஓர் திருமணம் என்று வைத்துக்கொள்வோம். நடைபெற்றால், சற்றே மனம் அயர்வாரல்லவா! என்ன நிலை நேரிட்டது, எந்தப் பார்ப்பனிய ஒழிப்புக்காக நாம் பாடுபட்டுத் தலைவராகி, நமது மொழியால், மக்களுக்குப் புதுவழி வகுத்துத்தந்தோமோ, அதே பார்ப்பனியத்துக்கு, நாம் நமது இல்லத்து நிகழ்ச்சிக்கு இடமளிக்க வேண்டி நேரிட்டதே என்று தன்னைத்தானே நொந்து கொள்ளாமலிரார். பிறகு, அவருக்கு, மன ஆறுதல், எப்படிக் கிடைக்கும், கலை தருகிறது. கம்ப இராமாயணத்தைப் படித்தால், அதிலே சாட்சாத் ஸ்ரீஇராமச்சந்திரரே பிராமணபூஜை செய்கிறார், என்று காணப்படுகிறது. ஆண்டவனே அக்குற்றம் செய்தார், நாம் செய்ததில் தவறு என்ன இருக்க முடியும் என்று ஒருவாறு திருப்தி பெறலாமல்லவா. மன அமைதிக்குச் சிலர், தலையைத் தழுவிக் கொள்கின்றனர், வலி தெரியாதிருக்க அபின் தின்பதுபோல!

கோரமான கர்ஜனை, பசியோடு சிங்கம் பயங்கரக் கூச்சலிடுகிறது. காட்டிலேயன்று, நாட்டில், யாருமில்லா இடத்திலன்று, ஆயிரக்கணக்கான மக்கள் ஆனந்த ஆரவாரம் செய்யும் விளையாட்டு வெளியில், சிங்கம் சீற்றத்தோடு பாய்கிறது, எதிரே உடல் நடுங்கி நிற்கிறான் ஒருவன், அவன் அதனுடன் எதிர்த்து நிற்க வேண்டும், சிங்கம் அவன் கழுத்தைக் கடிக்கும். அவனுடைய கதறல், குருதி பீறிட்டு வெளிவருவது போல, மற்றவரின் கூச்சலைப் பிளந்துகொண்டு வெளிவரும் சிங்கத்தின் வெற்றிகண்டு மக்கள் ஆரவாரிப்பர், பரிதாபத்துக்குரிய அவன் ஆவி சோரும், சிங்கம் அவனை இரையாகக்கொண்டு, சீற்றம் தணிந்து நிற்கும். காட்சி முடிந்தது, என்று மக்கள் கைகொட்டுவர்; வேறு காட்சி தொடங்குமுன், மது அருந்துவர், விருந்துக்கு ஒருவரையொருவர் அழைப்பர், சுழல் விழிக்காரிகள் சுந்தரரூபர்களைக் கண்டு சொக்குவர், அந்தப்புர இரகசியங்கள் பேசப்படும். அந்த விளையாட்டு வெளியிலே, மணலிலே, இரத்தம் குழைந்து கிடக்கும், சின்னாபின்னமான அங்கங்கள் சிதறுண்டுகிடக்கும். மிருகேந்திரனிடம், மனிதன் தள்ளப்பட்டு,

இந்தப் போட்டியிலே மனிதன் மாள்வதை வீர விளையாட்டு என்று விளம்பி, கண்டு களித்து "ஆஹா, சிங்கத்தின் கர்ஜனை எவ்வளவு பயங்கரமாக இருந்தது தெரியுமா, வந்த உடனே அவன் அலறினாலும் ஒரே நடுக்கமெடுத்து விட்டது. ஓர் அடி, ஆள் செத்தான், இரத்தம் பீறிட்டது - என்று காட்சியை விவரித்துப் பேசிக்கொண்டு ஆயிரக் கணக்கிலே ஆடவரும் பெண்டிரும், ஆனந்தமாக விழாக் கொண்டாடுவர், ரோம் சாம்ராஜ்யத்திலே, முன்னாளில். பள்ளமான இடத்திலே, இந்தப்படுகொலை நடைபெறும், அதைச் சுற்றி அமைக்கப்பட்ட, உயரமான பாதுகாப்பான இடத்திலே அமர்ந்துகொண்டு ஆடை அணி அழகொளிவீச ஆனந்தமாகச் சிங்கத்திடம் "சீமானின் அடிமை" அடிபட்டுச் சாகும் வீர விளையாட்டைக் கண்டுகளிப்பர், போகத்தில் புரண்டு கிடந்த ரோமாபுரி மக்கள். மிருகத்துக்கு மனிதனை இரையாக்கி அதைக்காண்பது ஒரு களிப்பா, இரக்கமே இல்லையே என்று கேட்பர் இன்று. ரோம் மக்கள், மனதுக்குச் சந்துஷ்டி தேடியபோது நாட்டில் காட்டுக்காட்சி அமைத்து அதைக்கண்டு மகிழ்வது, வீரம், கௌரவம், என்றும் கருதினர். அந்த வீணர்களின் விழி களிப்பால் கூத்தாடியது, காட்டு அரசனிடம் சிக்கி, மனிதன் மாண்டது கண்டு, உயிர் இழக்கச் சிலர், அதைக் கண்டு களிக்க ஆயிரவர். ரோம் இந்நிலையை வீர நிலை என்று கருதிப் பூரித்தது, பெருமை பேசிற்று, மனிதனின் உயிருக்கு, ரோமாபுரி உல்லாசகர்கள், மதிப்புத் தரவில்லை. போகபோதையிலே தலைகால் தெரியாது ஆடினர்.

இன்று தமிழகத்திலே, இத்தகைய உல்லாசர்கள் உள்ளனர். அவர்கள், பாமரர்களைப் படுகுழியில் இருக்கச் செய்து, கொடிய மிருகங்கள் கடித்துக் கொல்லவும், அவர்கள் கோரக் கூச்சலிடவுங் கண்டும், கேட்டும் பாதுகாப்பான, உயர்ந்த இடத்திலே அமர்ந்துகொண்டு, பாமரர், படுகுழியில் படும் அவதிகண்டு "அறியாமை யின் விளைவு - விதியின் விளையாட்டு" என்று பேசிக்கிடக்கின்றனர்.

அடிமைப் படுகுழியில் வீழ்ந்து கிடக்கும் பாமர மக்கள்மீது, ஆரியக் கொள்கைகள் எனும் விலங்கினங்கள் பாய்ந்து கடித்துக் கொல்ல, குன்றின்மீதமர்ந்து, குறுநகையுடன், கலா ரசிகர்கள் உள்ளனர் என்று

கூறுவோம்.

ரோமாபுரி உல்லாசர்களுக்கும், நாட்டு நிலை, மக்கள் நிலை கெடக் கருவியாக இருக்கும் ஆரியக் கோட்பாடுகள், கலை எனும் மினுக்கிலே இருக்கும் காரணத்துக்காக அதனைத் தழுவிக் கொள்ளும், இந்நாட்டுக் கலாரசிகர்களுக்கும், என்ன வித்தியாசம் என்று கேட்கிறோம்.

25.4.1943

# அவருக்கு இவர் எழுதினால் ! - III

திருவிதாங்கூர் திவான் சர். சி.பி. இராமசாமி ஐயருக்கு, ஜகத்குரு சங்கராச்சாரியார்,

பத்மனாபபரிவாக, ஸ்ரீகடாட்ச சம்பூர்ண, பரப்பிரம்மகுல ரட்சக சர். சி.பி. அவர்களுக்கு, ஜகத்குரு சங்கராச்சாரி சுவாமிகள், சர்வமங்களானீபவந்து கூறிச் சாய்க்கும் ஸ்ரீமுகம் என்னையோ வெனில், அகிலாண்ட கோடி பிரமாண்ட நாயகனார் ஆதிபகவான் தமது முகத்திலிருந்து, பிராமண குலத்தை உற்பத்தி செய்த காலந்தொட்டு, கலியுகாதி சந்தேகாதிகளும் சஞ்சல சங்கடாதிகளும் சம்பவிக்கும் இந்தக் காலத்திலும், சனாதன சம்ரட்சணார்த்தமாகத், தங்களைப் போன்ற அபூர்வ மனுஷ்யாள் அவதரிக்கிறார்கள்.

மத்தக் குலத்தவாளைப் போல, நீச பாஷையாம் இங்கிலீஷ் பாஷையைப் படித்த மாத்திரத்தாலே, மன மாற்றம் அடையாமல், ஜீவனார்த்த உபயோகமாக அந்தப் பாஷையை வைத்துக்கொண்டு, இதர, சத்காரியாதிகளுக்கு, நமது புண்டரீகாதிகள் புவியில் தோற்றுவித்த புராதன முறைகளைக் கெடாமல் காப்பாற்றும் சேவையிலே, நமது பிரம்ம குலம் ஈடுபட்டிருக்கிறது. இல்லையானால், மனு முதல்வாதிகள் மகாசிரமப்பட்டு, ஏற்படுத்தி வைத்த வர்ணாஸ்ர தர்மம் நசித்துப்போய் சர்வம் ஜெகன்னாதமாகி, நமது குல மேன்மை கெட்டுப் போய் விட்டிருக்கும். ஹரி ஹரமாயா விநோத காலமுதல், இன்றுவரை, நமது குலம், சரீரப்பிரயாசை யின்றி, சேவகத் தொழிலின்றி, சூத்ராளைப் போல, உழவு, அடிமை என்னும் காரியங்கள் செய்யாது, சுகஜீவிகளாய், மேனியில் அழுக்கேறாது, சொர்ணகாந்த சொரூபிகளாய் வாழ்ந்து வரக் காரணம், எந்தத் தேசத்தார் எவ்வளவு மாறினாலும், என்னென்ன அபூர்வ நிலை பெற்றாலும், இங்கு ஆதி நாட்களில் ஏற்பட்ட ஆச்சார அனுஷ்டானாதிகள் நிலைத்திருக்க, பிராமண குலம், சேவை செய்வதேதான்.

இதுகாண, எம்மனோருக்குப் பரம சந்துஷ்டி ஏற்படுகிறது. ஒரு தன வைசியர், ஸ்தாபித்த, சர்வ கலாசாலைக்கு, நீர் திவானாக இருக்கும் திருவாங்கூர் ராஜ்யாதிபதி ஒரு இலட்சம் சம்பாவனை செய்ததாகக் கேள்விப்பட்டோம், பிரம்மகுல திவான், க்ஷத்திரிய குல மன்னனின் பணம், ஒரு வைசிய குலத்தாரின் பாடசாலைக்குப் போகவும், அதன்

மூலமாக சூத்ரர்களுக்குப் பயன்படும் படியுமான, காரியம் நடக்கிறதைக் கண்டு சும்மா இருப்பதோ என்றெண்ணிச் சோகித்தோம். ஆனால், இப்போது, முழு உண்மை தெரிந்து மகா சந்தோஷமானோம்.

மேற்படி இலட்ச ரூபாயை நிதியாகக் கொண்டு, கிடைக்கும் வட்டித் தொகையில், தேவ பாஷையாம் நமது சமஸ்கிருத மொழியிலே பாண்டித்யம் பெற்றவாளுக்கு, வேதாந்த சிரோன் மணிக்கு வெகுமதி அளிக்க வேண்டுமென்று, தங்களிடமிருந்து அண்ணாமலை சர்வ கலாசாலையாருக்கு உத்தரவு சென்ற செய்தி கேட்டுப், பரமேஸ்வரனைத் துதித்து, உமது பிரம்மகுல பக்திக்காக மெச்சி இந்த ஸ்ரீமுகம் அனுப்பினார்.

கற்றது நீசபாஷை, ஆனால் தேவபாஷையிடம் அத்யந்த பிரியம் இருப்பதும்; செல்வமும்; சுகசம்பத்தும், சுந்தர சொகுசும் தங்கு தடையின்றிக் கிடைத்து, சுகானுபவராய் இருந்தும், வேதாந்

தத்திடம் வாஞ்சையும் கொண்ட வேதிய சிகாமணிகள் உள்ளவரை, நமது பிராமண குலத்தை யாராலும் ஏதும் செய்ய முடியாது, என்ற திட சங்கல்பம் சுலபத்திலே எழும். இந்தச் சூத்ராளின் விழிப்பும், மறுப்பும், இத்தகைய புருஷாள் இருக்கு மட்டும், நமது குலத்தை என்ன செய்ய முடியும்?

சம்பூர்ண சுகானுபவரசிகராய் ஸ்ரீகடாட்ச பூஷிதராய், வாழ்ந்து, பிராமண குலதர்மத்தை ரட்சிக்கக்கடவீர்.

ஸ்ரீசங்கராச்சாரியார்,

ஜெகத்குரு.

# மானமும் மனையும் !

அருமையான பிரசங்கம் சார்! அன்று மகாகனம் சாஸ்திரியார், சரியான சவுக்கடி கொடுத்தார், ஜெனரல் ஸ்மட்சுக்கு!

எவ்வளவு அக்ரமம் பாருங்கள், ஆப்பிரிக்காவிலே இந்தியருக்குச் சொத்து வாங்க உரிமை இல்லையாம், டர்பன் நகரிலே அவர்கள் ஒதுக்கிடத்திலேதான் வசிக்க வேண்டுமாம். வெள்ளையர் இருக்குமிடத்துக்குப் போகக்கூடாதாம். இதனை, அன்று சென்னை கோகலே மண்டபக் கூட்டத்திலே மகாகனம் சீனுவாச சாஸ்திரியார் பலமாகக் கண்டித்தார்.

இந்தியரின் சுயமரியாதையைப் பறிக்கும் ஆப்ரிக்க சர்க்காரின் சட்டத்தை இந்திய சர்க்கார் கண்டிக்கிறது.

காங்கிரஸ், முஸ்லீம் லீக், ஜஸ்டிஸ் கட்சி, இந்துமகா சபை, ஆகிய எல்லாக் கட்சிகளும் கண்டித்துள்ளன, இந்திய சர்க்காரும் கண்டிக்கிறார்கள்.

நாடெங்கும் மேலே குறிப்பிட்ட விதமான பேச்சுத்தான்! எந்த ஏடும் இதைத்தான் எழுதிடக் கண்டேன். நான் நம் நாட்டவருக்கு ஆப்பிரிக்க நாட்டிலே நேரிட்ட அவமரியாதை வேண்டும், என்று கூறவில்லை. ஆப்ரிக்க சர்க்காரின் போக்கைக் கண்டிக்காமலிருக்கப் போவதுமில்லை. ஆனால், இன்று இதற்கு மாரடித்தழும், மகாகனங்கள், இங்கு, மனுவின் திட்டம் இன்றும் நடைமுறையிலே இருக்கிறதே அதனை கண்டிக்கக் காணோமே என்று எண்ணியே ஏங்குகிறேன். தமிழகத்திலே தாழ்த்தப்பட்டு, கொடுமைப் படுத்தப்பட்டுக், கவனிப்பாரற்றுத், தாசராக இருப்பதைவிட, கடல் கடந்து ஆப்பிரிக்கா சென்றாலாவது, இங்குள்ள கண்ணியர்களின் ஆதரவு மொழியைப் பெறலாம் போலும் என்ற எண்ணம் உண்டாகாமலிருக்குமா, கூறுங்கள். எனக்கு மட்டும் அனுமதி கிடைத்தால் நிச்சயமாக நான் டர்பன் நகரம்போய் அங்கு பெருமையுடன் வாழ்வேன்!

என்னப்பா பரதா! அங்கே ஆப்பிரிக்காவிலேதான் இந்தியருக்கு, அவமானம் நேரிட்டிருக்கிறதாமே! ஜெனரல் ஸ்மட்ஸ் இந்தியரை அவமதிக்கும் அநீதியான ஒரு சட்டம் நிறைவேற்றி யிருக்கிறாராமே,

அங்கே போனால் பெருமையாக வாழலாம் என்று கூறுகிறாயே, இது என்ன பித்தம், என்று கேட்பீர்கள்.

பித்தமன்று, தோழர்களே, சற்றே கேளும் சேதியை. இன்று, ஆப்பிரிக்காவிலே நடக்கும் அக்ரமத்தைப் பெரிய பெரிய தலைவர்கள் கண்டிக்கிறார்கள்; சர்க்காரும் கண்டிக்கிறது, பத்திரிகை

களெல்லாம் கண்டிக்கின்றன. இவ்வளவு "ஆதரவு" தமக்கத் தாய் நாட்டிலே இருப்பது கேட்டால், ஆப்பிரிக்காவிலே இருக்கும் இந்தியர், பூரித்துப் பெருமை கொள்ளமாட்டார்களா! நான் மட்டும் இப்போது டர்பன் நகரிலே இருந்தால், ஜெனரல் ஸ்மட்சை இலட்சியமும் செய்யமாட்டேன். என் தாய் நாடு எனக்காகப் பரிந்து பேசுகிறது பார், என்று பெருமிதத்துடன் பேசுவேன், ஆனால் தோழர்

களே, அவ்விதம் கூறிக்கொள்ள இங்கு முடியவில்லையே! இங்கு, ஒரு ஜாதி தவிர மற்ற எவரும், பன்னெடுங்காலமாகப் பட்டு வரும் அவமரியாதையைக் கண்டிக்க இத்தனை பெரிய தலைவர்கள் தலைநீட்டினதில்லையே. சொந்த நாட்டிலே அடிமையாக இருந்து, அழுத கண் துடைக்கவோ, ஆறுதல் கூறவோ ஆதரவு தரவோ, எவரும் முன் வராதது கண்டு, துயரால் தாக்குண்டு, நொந்து கிடப்பதைவிடத், தூரதேசம் சென்று, அங்கு அன்னிய சர்க்காரால் அவமதிக்கப்பட்டு, அதைக்கேட்டுச் சீறிடும் தாய்நாட்டாரின் தயவு கிடைக்கப் பெறுவதை நான் மகிழ்ச்சியோடு வரவேற்பேன். நான் சொல்வது சரியன்று என்று கருதினால், மேலே படியுங்கள் விஷயத்தை, பிறகு யோசியுங்கள்.

ஓய்! கேட்டயளோ, ஒரு சங்கதி. இந்தப் பஞ்சமா இருக்காளேன்னோ, அவா, இப்போ தலைகீழான்னா நிக்கிறா! வீதியிலே நடக்க வேணுமாம், திருக்குளத்திலே இறங்கணுமாம், கோயிலிலேயும் நுழைய வேண்டுமாம். விபரீதமான்னா இருக்கு, கலிகாலமன்னோ!

அது சரி, குப்பு தீட்சதரே! காலம் போற போக்குப்படி போகணுமேல்லோ. பஞ்சமான்று ஏளனமாகப் பேசிண்டிராதேயும், அவாதானே. பரம்பரையா நாட்டை

ஆண்டவா? இப்போதுங்கூட, அவா இல்லாவிட்டா, நாட்டிலே என்ன காரியம் நடக்கும், யோசியுங்கோ. அவாளுடைய அதிருப்தியைக் கிளப்பிவிட்டா, மகா மோசமாகிவிடும், தீட்சிதரே.

ரொம்ப நன்னாயிருக்கு உம்ம வாதம், உசத்தி ஜாதி, மட்ட ஜாதின்னு ஒண்ணுமே கிடையாதோ. சர்வம் ஜெகன்னாதம் என்கிறீர். ரொம்ப இலட்சணம்.

ஆதிதிராவிடர்களுக்கு உரிமை தராமற்போனா இனி நாட்டிலே நாம் நிம்மதியாக வாழ முடியாது. உழவுத் தொழில், ஊர் காக்குந் தொழில் முதல், அவாள்தானே செய்துண்டு இருக்கா. அவாளுடைய உழைப்பை வாங்கிக்கொண்டு, ஊர்க்கோடியிலே ஒதுக்கிடத்திலே, சேரியிலே அவாளைத் தள்ளிவைப்பது மகாதர்மமோ?

சாஸ்திரிக்குப் புத்தி ஏன் இப்படிக் கெட்டுப்போச்சு. ஜாதி ஆச்சாரத்தை இப்படியா காற்றிலே பறக்கவிடுவது. ஏதோ, பஞ்சமா வேலை செய்கிறாள். அதுக்கு அவாளுக்கு வயிறாரச் சோறு போடவேண்டியது தர்மம், முறை. அதற்காக அவாளை நம்மோடு சரிசமமாகச் சேர்த்துக் கொள்வதா? ஜெகத்துக்கு இது ஏற்குமோ?

சனாதனச் சலசலப்பு இதுபோன்றதாகவே இருக்கும். நந்தன் காலமுதற்கொண்டு டாக்டர் அம்பேத்கார் காலம் வரையிலே இந்தக் கொடுமையை இங்கு ஒழிக்க, மகாகனங்கள் முயன்றனரா! இல்லை! அநீதியைக் கண்டால் அவர்கள் மனம் கொதிக்கவில்லையா? அக்ரமத்தை அவர்கள் கண்டிப்பதில்லையா? உரிமை உணர்ச்சியை அவர்கள் உன்னதமானதென்று உரைப்பதில்லையா? ஏட்டிலே, இவைபற்றி ஏழுகலம் எழுதுவர்; பேசுவர். ஆனால் நாட்டிலே நடக்கும் அநீதிக்கு அவர்கள் சிறுவிரலையும் அசைப்பதில்லை. ஏன்? இங்கு நடைபெறும் ஜாதி அகங்காரச் செயல், மதமமதை, குலச்செருக்கு, ஒரு சிறு கூட்டத்தை மேனி வாடாது, குனியாது நிமிராது, நகத்தில் அழுக்குப்ஞ்டாது, நெற்றி வியர்வை நிலத்தில் சிந்தாது, வாழ ஓர் தந்திரத்திட்டம் வகுத்துக் கொடுத்திருக்கிறது. அதனைக்கெட வொட்டாமல் ஞ்பர்த்துக் கொள்ளவே தமது கல்வி கேள்விகளைப் பயன் படுத்துகிறார்களே தவிர, நாட்டுப் பழங்குடி மக்கள் நலிவதைக் கண்டு.

“நாயினும் கீழாய்

செந்தமிழ் நாட்டார்

நலிவதை நான் கண்டும்

ஓயுதல் இன்றி,

அவர் நலம் எண்ணி

உழைத்திட நான் தவறேன்"

என்று அந்த வீரக்கவி பாரதிதாசன் போல், கூறுவார், எவருளர்! இன்றும், தீண்டாத ஜாதி என்றோர் கூட்டத்தைத் தாங்குகிறது இந்தப் புண்ய பூமி! எத்தனையோ முறை இருடபவாகன ரூடராகச் சிவபெருமான் வந்து வந்து போனாராம், பத்துமுறை அவதரித் தாராம் பரந்தாமன். பக்தகோடிகளோ எண்ணிக்கை யிலடங்காது, ஆழ்வாராதிகளும் நாயன்மார்களும் வந்து வந்து போயினர், பிரபந்தங்களுக்கும், திருவாசகங்களுக்கும், அருட்பாக்களுக்கும், கிரந்தங்களுக்கும், பாஷியங்களுக்கும், தத்துவார்த்தங்களுக்கும், விசாரணைகளுக்கும், சித்துகளுக்கும் ஜீவன்முக்தர்களுக்கும் கவிவாணர்களுக்கும் கலாரசிகர்களுக்கும் பஞ்சமில்லை; ஆனால் இந்தப் பாதகமோ இன்றுவரை நீங்கினதாகத் தெரியவில்லை. ஏட்டைக் காக்கக் கோட்டைகள் எழுப்பிடும் வீரர்களுக்குக் குறைவில்லை. நாட்டை நாசமாக்கும் ஜாதிக்கொடுமை எனும் நச்சரவை ஒழிக்கவோ, நாடி முறுக்குள்ளோர் இன்னமும் முன்வரக்காணோம். நாட்டுத் தலைவர்களின் நயனங்களோ, நேரிசை வெண்பாவிலும், அறுசீரடியிலும் இலயிக்கும்போது, நீரோ மன்னன், ரோம், தீயிலே மூழ்கியபோது வீணையிலே இலயித்திருந்தானாமே, அந்தச் சம்பவத்தையே நினைவிற்குக் கொண்டு வருகிறது.

"தீண்டாதோர்" என்று சூடிடப்பட்டுள்ள தோழர்கள் நிலைமை மட்டுந்தானா, கேவலமாக இருக்கிறது. முதலியார், நாயுடு, பிள்ளை, கவுண்டர், செட்டியார், நாயகர் என்ற பல்வேறு பட்டங்கள் சூட்டிக் கொண்டுள்ள "பெருங்குடி மக்கள்" இருக்கிறார்களே, அவர்கள் நிலை என்ன? இன்றும் பார்ப்பனருக்கு வேறு நீதி, இவர்களுக்கு வேறு. ஒன்றாக இருந்து சாப்பிட, ஒரே இடத்திலே நின்று தொழ முடியாது. பார்ப்பனரின்றி, சுபாசுப காரியங்களை நடத்த முடியாது. மோட்ச லோகக் கதவின் திறவுகோல் இன்றும் பார்ப்பனரிடமே இருப்பதாக இவர்களின் நினைப்பு. இன்றும் இவர்கள் யாவரும், கவர்னர், திவான், மந்திரி, மாநிதிக்கடையோர், மகா மகா பண்டிதர், மகா மகா ரசிகர்,

என்று, என்னென்ன விருதுகள் கொண்டு இருப்பினும், சூத்திரரே!! இந்த நிலைமை கண்டு, கொதித்து எழுந்து, படை திரட்டிப் போர்புரிந்து, பழமையை வீழ்த்திப் புத்துலகச் சிற்பத்தைச் சமைக்கவேண்டிய வீரர்கள், பழைய ஏட்டுக்குப் புதுப்பொருள் காண்பதிலும், சாய்வு நாற்காலியிலிருந்து கொண்டு சந்தமமைப்பதிலும், காலத்தைத் தள்ளுகின்றனர். தன் குஞ்சுகளைக் கொல்ல வரும் பருந்து முன், கோழி சீறிப் போரிடுகிறது, இங்கோ அரிமா போன்றோர் ஆமைகளாயினர், அந்தோ!

பதவிப்பாசம் சிலரைப் பாசறை புகவொட்டாது தடுக்கிறது. பணமெனும் பொறியிலே சிக்கினர் சிலர், பண்பாடு எனும் சருக்கு நிலத்திலே நர்த்தனம் செய்கின்றனர் வேறு சிலர்! ஆக, பார்ப்பனப் பிரமுகரோ, பாதகத்தைப் போக்க முன் வரமாட்டார்கள், குல நலத்தை உத்தேசித்து. தமிழ்த்தலைவர்களோ, குலை நடுக்கத்தால், இப்பணியாற்ற முன்வர மறுக்கின்றனர், தமிழர் விடுதலை பெற வழிதான் என்ன? இறைவன் திருவடி நிழலடைவதன்றி வேறொன்றும் வேண்டோம், என்று பாடிட வேண்டியதுதானா?

ஒரு நாய்மீது மற்றோர் நாய் பாய்கிறது, இரண்டும் குலைப்பது, அந்த எச்சில் இலைக்காக! அந்த இரண்டு நாய்களையும் அடித்துத் துரத்திவிட்டு, அந்த எச்சில் இலையிலே குழைந்து கிடக்கும் சோற்றைத்தின்று உயிரைக் காப்பாற்றுகிறானே, அவன் தமிழன், ஆரியனல்லன். எச்சில் இலை, வீட்டுச் சாக்கடை ஓரம்! நாயுடன் சண்டை, இது தமிழரின் நிலைமை!

தர்மச் சாப்பாடு திருவையாற்றுக் கல்லூரியிலே! அதனைச் சமபந்தியாக இருந்து சாப்பிட மறுத்தனர், பார்ப்பன மாணவர். அந்தப் பார்ப்பனர் சிறாரின் செயல் சரியே என்று ஜெகத்குருப் பார்ப்பனரும் மகாகனம் பார்ப்பனரும் ஆதரித்தனர். நாயுடன் எச்சில் இலைச் சோற்றுக்குப் போரிடும் தமிழ்த் தோழனுக்காகப் பரிந்து பேச, தமிழர் தலைவர்களுக்கு நேரம் ஏது? எவ்வளவு நிகண்டு படித்து முடிக்க வேண்டும்! தனிப்பாடல்களைத் திரட்ட வேண்டாமா? கலைக்குச் சேவை செய்ய வேண்டாமா? காவியங்களைப் பாதுகாக்க வேண்டாமா? கவிதா ரசத்தைப் பருகிக் களிக்க வேண்டாமா?

அவர்களுக்கு, இந்தக் “கண்றாவிக் காட்சியை”க்காண நேரமேது? கலையிலே இலயிக்கும், அவர்களின் கண்முன் கானாறும், குன்றும், கோலமயிலும், கோகிலமும், மாதர்முகமும், பண்பாடும் வண்டினமும், தோன்றிடக் காரணமுன்டே தவிர, எச்சில் இலைக்கருகே இருந்து சோற்றுக்கு அலையும் தோழன், குப்பை கூட்டிவிட்டு கொடும் பசியால் குமுறும் தோழன், மலைபிளப்போன், கல்லுடைப்போன், கட்டை வெட்டுவோன், கை வண்டி இழுப்போன் ஆகிய பாட்டாளி மக்களின் உருவம் தெரியுமா?

இங்ஙனம் தம்மவரால் அலட்சியப்படுத்தப்பட்டு, எதிரிகளால் எள்ளி நகையாடப்பட்டு வாடிடும், தமிழ்த் தோழர்களுக்கு, விடுதலைக்கு வழி விழிப்பு, எழுச்சி உரிமைப்போர் என்பதன்றி வேறென்ன உளது?

இங்கு இருந்துகொண்டு இவ்விழிவுகளைச் சகித்துக்கொண்டு, கொடுமைகளைக் கண்டிக்க எவரும் முன் வராதது கண்டு, மனம் ஒடிந்து நடைப்பிணமாகக் கிடப்பதைவிடக் கப்பலேறி ஆப்ரிக்கா சென்று அங்கு அன்னிய சர்க்காரினால் அவமதிக்கப்படுவது அவ்வளவு பெரிய கொடுமை என்று எனக்குத் தோன்றவில்லை.

உன்னிடம் உதைபட்டுச் சாவதைவிட, நான் எங்காவது, ஏரி குளம் குட்டையிலே வீழ்ந்து இறப்பதே மேல் என்று கூறிடும் பரிதாபத்துக்குரியவர்களை நீங்கள் கண்டதில்லையா? அதுபோலவே, இங்குள்ள பலரும் கருதுவர், ஒரு நிமிடம், இங்கு தங்களுக்கு உயர்ந்த ஜாதி என்போர் செய்யும் அக்ரமத்தைப்பற்றி யோசித்தால் இன்றும், கோயில் பிரவேசம், குளத்தில் உரிமை பல கோடி மக்களுக்கு இங்கு இல்லை, இங்கு ஆள்வது ஜெனரல் ஸ்மட்சுமன்று! இன்றும், முழங்காலுக்கு மேல் வேட்டி கட்டி நடக்காத ஆதித்திராவிடரை, அடித்துத் துன்புறுத்தும் பண்ணைகள் உள்ளன! மேளமடித்துச் சென்ற குற்றத்திற்காக, சேரி கொளுத்தும் ‘சீலர்கள்’ இன்றும் வாழுகிறார்கள்! செருப்பணிந்தது குற்றமென்று, மிலாருகொண்டு “தீண்டாதானை” அடித்த மிராசுதாரர்கள் இப்போதும் உள்ளனர். இங்கு, பிரதி தினம் நடைபெறும் இத்தகைய கொடுமைக்காகக் கோகலே மண்டபத்திலே கூட்டங்கள் நடப்பதில்லை, மகாகனங்கள் வீராவேசச் சொற்பொழிவு களாற்றுவதில்லை, தேசியப் பத்திரிகைகள் தீப்பொறி கிளப்பும் தலையங்கங்கள் தீட்டுவதில்லை. இங்கு பழைய முறையைத் திடீரென்று

மாற்றக்கூடாது, பொதுஜன அபிப்பிராயத்தை வளர்க்கா முன்பு அவசரப்பட்டு ஏதும் செய்ய முடியாது, சட்டம் செய்து பயன் இல்லை, இதற்கு ஏற்றபடி சமுதாய மனப்பான்மை மாறவேண்டும், படிப்படியாகத்தான் சீர்திருத்தம் செய்ய முடியும் - என்று, பலப்பல பேசுவர். வகுப்புத் துவேஷம் கூடாது என்று வாதிடுவர்! நமக்குள் இருக்கும் தகறாறு நாளாவட்டத்தில் தீர்ந்து போகும் என்று நயவஞ்சகம் பேசுவர், ஆனால் நடைமுறையை மாற்றவோ முன்வாரார், நாமத்தை வேண்டுமானால், ஆதி திராவிடர் என்று இருப்பதை அரிஜன் என்று மாற்றுவர், ஆனால் நிலையை மாற்ற, நீதியை நிலைநாட்டத் துணிவதில்லை.

“இந்தியாவுக்கு மட்டும் சுயராச்யம் தருவோம்” என்று ஒரு பிரகடனம் வெளியிட்டுவிட்டால், வீட்டுக்கோர் வீமன் கிளம்பி, வெள்ளைக்காரரின் எதிரிகளை நொடியிலே நொறுக்கிவிட மாட்டார்களா, என்று வீரமும் விவேகமும் ததும்புவதாகக் கருதிக்கொண்டு பேசுகின்றனரே. தேசியத்தியாகங்கள், அவர்களைக் கேட்கிறேன், “நாட்டு நண்பர்களே! நவயுகவீரர்களே! பாரதச் சூரர்களே, சுயராச்யத் தீரர்களே! ஒருநாள், உமது தலைவர்கள் கூடி நாளை முதல் இந்நாட்டிலே, தீண்டாமை இருக்கக்கூடாது, ஜாதிக்கொடுமை ஒழிய வேண்டும், ஒரு ஜாதி உயர்வு மற்றது தாழ்வு என்ற ஏற்பாடு ரத்தாகிவிட்டது” என்றோர் தீர்மானத்தை நிறைவேற்றிவிட்டுச் சேரியுங்கூடாது அக்கிரகாரமும் கூடாது, பள்ளுப்பறை எனும் பழிமொழியுங்கூடாது பார்ப்பனன் எனும் பாதக மொழியுங்கூடாது இங்கு ஒரே குலம், என்று கூறினால், ஆறு கோடி ஆதித்திராவிடர் அகங் களித்து, “அப்படியா, இடிந்ததா இறுமாப்பெனும் கோட்டை, தகர்ந்ததா தர்ப்பா சூரரின் ஆதிக்கம், ஒழிந்ததா பேதம், என்று முழக்கமிடுவர், அந்த முழக்கம், அமெரியின் செவியில் வீழ்ந்தால் எப்படி இருக்கும். “தந்தோம் சுயராச்யம்” என்ற தந்தி இலண்டலினிலிருந்து பறக்காதா!

வேங்கையைப் பாயாதே என்று சாந்தோபதேசம் செய்து, நயவஞ்சகத்தை இனிவிட்டுவிடு என்று நரிக்கு நீதிநெறி உரைத்துப் பலன்காண முடியுமா? காலையிலே தலைகுனிந்து நின்று ‘ஆமாம்’ கூறும் பேர்வழி, மாலையிலே கடையிலிருந்து திரும்பும்போது, வெறியால் வீரனாவது போல, பார்ப்பனியம், பதுங்கும் நேரத்திலே, பயந்ததுபோல் பாசாங்கு பேசும், ஆனால் சனாதனச் சோமரசம் பருகியதும், மீண்டும் தலைகால்

தெரியாது ஆடும், இத்த இயல்பை மாற்ற முடியாதெனவேதான், சொந்த நாட்டிலே சுயமரியாதைக் காகப் போரிடுக என்று நான் கூறுகிறேன். ஆப்பிரிக்காவில் நேரிட்ட அவமரியாதைக்காக அங்கம் பதைத்தழும் "தலைவர்களை"க் கேளுங்கள், "ஐயா! இங்கே நடக்கும் இந்த இழிவுகள் கொடுமைகள் ஒழிக்க முன்வர மாட்டீர்களா என்று, மகாகனங்களைக் கேளுங்கள், இங்குள்ள சனாதனியும், அவன் பாதந்தாங்கிகளும் செய்யும் அநீதியைவிட ஜெனரல் ஸ்மட்ஸ் செய்வது கொடுமையா? டர்பன் நகர் கொடுமை சகிக்காது, அங்குள்ள ஓர் ஆதித்திராவிடத் தோழர், தாய் நாடு திரும்பி விடுகிறார் என்றால், அவர், இங்கே வந்ததும், சேரிக்குப்போக வேண்டுமென்று கூறுவீரே யல்லாது, அக்ரகாரத்திலே இடமளிப்பீரா? என்று சாஸ்திரிகளைக் கேளுங்கள். வெள்ளையருக்கு ஒரு நீதி கருப்பருக்கு வேறு நீதி என்ற முறையிலே காரியம் நடத்தும் ஸ்மட்ஸ் ஆட்சியைக் கண்டித்து விட்டுத் தாய் நாடு திரும்புவோருக்கு, இங்கு நீங்கள் தரப்போகும் நிலை என்ன என்பதைத் தயவு செய்து கூறுங்கள். "அங்கேண்டி மகளே ஆலாய்ப் பறக்கிறாய், இங்கு வந்தால் காற்றாய்ச் சுழலலாமே" என்ற முதுமொழிப்படி இருக்குமே தவிர, இன்று உங்கள் ஆதரவுக்குப் பாத்திரமாக உள்ளவர்களின் நிலை, இங்கு வேறுரீதியானதாக இருக்குமா, கூறுங்கள் - என்று சாஸ்திரிமார்கைளக் கேளுங்கள். ஜெனரல் ஸ்மட்சை கண்டிக்கும் அந்தக் கண்ணியர்கள், இங்கு ஆட்சி செய்யும் சனாதனத்தைச் சாடிடத்தயாரா என்று கேளுங்கள், "ஆம்" என்று உரைத்து, உரைக்கேற்பச் செயல்புரியின் நான் இங்கிருக்க விழைவேன், இல்லையேல். இங்கிருப்பதைவிட, டர்பன் நகரவாசமே மேல் என்று கருதுவேன்.

அங்கு வெள்ளையன் வாழும் இடத்திலே நான் வாழ இடம் வாங்க முடியாதே தவிர, வெள்ளையனைக் கண்டதும், "சாமி" என்று கூப்பிட வேண்டி இராது; கடவுளிடம் என் குறையைக் கூறிட அந்த வெள்ளையனுக்குப் பணம் தந்து, தாசனாகக் கொள்ள வேண்டி இராது; நான் பார்த்தால் அவன் தன் உணவு கெடும் என்றோ நான் தொட்டால் அவன் உடல்

தீட்டாகுமென்றோ கருதி என்னை எட்ட நில், கிட்ட வராதே தொடதே என்று கடிந்துரைக்க மாட்டான். ஆப்பிரிக்காவிலே சொத்து வாங்க உரிமை இல்லை, இங்கோ "இகபரம்" எனும் இரண்டுக்கும் வேதியனின் தயவின்றி, எக்காரியமும் நடைபெறாதே! கலாரசிர்கள் கண்களிலே ஒத்திக்

கொள்ளும் கம்பன், விதியும் அவர் ஏவ நிற்கும் என்று பார்ப்பனருக்கேயன்றோ "விதி"யை நடத்துவிக்கும் அதிகாரத்தை அளித்திருக்கிறார். இத்தகைய குருபீடமாக இராது, ஆப்ரிக்க வெள்ளை வேதியரின் ஆட்சி, ஆப்ரிக்காவிலே, மனை இல்லை வாங்க, இங்கோ மானம் பறி போகிறது, பார்ப்பனீயத்தால் இரண்டிலே எது அதிக கொடிது? யோசியுங்கள். ஆப்பிரிக்கா நாட்டிலே, மனை பெறும் உரிமையைப்பெற நாடே சீறி எழுந்திடக் காண்கிறோம், இங்கு பல கோடி மக்கள், மானத்தை இழக்கும் விதமாக வாழ்க்கை முறை வைதீக ஏற்பாட்டின்படி அமைக்கப்பட்டு, பாதுகாக்கப்பட்டு இருக்கிறதே இதற்காக நாட்டிலே, சுயமரியாதைக்காரர் தவிர வேறு எக்கூட்டமும் ஏன் என்று கேட்கவும் துணிவின்றி இருக்கிறது. மனைபெற நடத்தும் கிளர்ச்சிப், போர் பெரிதா, மானம்பெற நடத்தப்படும்போர் பெரிதா? நீங்கள் வேண்டுவது, மண்ணா, மானமா! பதில்கூற வேண்டாம் - செயலிலே நாட்டுங்கள்.

மானமென்ற நல்

வாழ்வெனக் கொண்டு

வாழ்ந்த என்மறவேந்தர்

பூனைகள் அல்லர்

அவர்வழி வந்தோர்

புலிநிகர் தமிழ்மாந்தர்.

- என்று தமிழரைச் சித்தரிக்கிறார் பாரதிதாசன் உண்மைதானே?

2.5.1943

# ஆஜ்மீர் வாயிலில்

ஆஜ்மீர் வாயலில், அந்த மெலிந்த, ஆனால் எஃகுக் கம்பி போன்ற உருவம் உள்ளே நுழைந்தபோது, தக்பீரும் ஜிந்தாபாதும், டில்லி நகரையே குலுக்கிவிட்டதாம். அதைவிட அதிகமான உள்ளக்குலுக்கு காங்கிரஸ் கோட்டைகளிலும் துரைமார்கள் வட்டாரத்திலும் உண்டாயிருக்கும். ஆடம்பரமான ஊர்வலம் கண்ணுக்கோர் காட்சியாக அமைந்திருந்தது. ஆனால், அது ஆரிய ஆங்கிலேயக் கூட்டுப்படையினரின் கருத்துக்கோர் மிரட்சியாக அமைந்தது. அம்பாரியிடப்பட்ட யானைகள், பேரிகை தாங்கிய ஒட்டகங்கள், நகாராவுடன் குதிரைகள், இசைக்கருவியுடன் பட்டாள பாவனையுடன் சென்ற லீக் காலாட்படைத் தொண்டர்கள், குதிரைப்படையினர், பிறகோர் அலங்காரமான மோட்டார் அதிலே, அமீரேமில்லத் அமர்ந்திருந்தார். அவருடைய நாமம், இலட்சம் பேர்களின் நாவிலே நர்த்தனமாடிற்று. இந்த ஆடம்பரங்கள், காங்கிரசுக்குப் புதிதன்று, ஒரு பிர்லா மனது வைத்தால் இதுபோல மாதமோர் ஊர்வலம் நடத்த

முடியும் காங்கிரசால்; சர்க்காருக்கும் இது சாதாரணமே, ஆனால், இந்த ஆடம்பரமன்று, அவர்களின் மருட்சிக்குக் காரணம். ஜனாப் ஜின்னா. இவ்வாண்டு மாநாட்டிலே எதிரிகள் மிகப்பாடுபட்டுக் கட்டி வைத்த தப்புப் பிரசாரக் கோட்டை மூன்றினைத், தகர்த்தெறிந்தாரே, அதுவே அச்சத்தை அவர்களிடை புகுத்திவிட்டது. பாருங்கள் அதன் விளைவை, பத்திரிகைகளிலே. மோமீன் எதிர்ப்பு, அஹ்ரார் எதிர்ப்பு, அகாலி எதிர்ப்பு, அகண்டிகள் எதிர்ப்பு என்று எத்தனை எதிர்ப்புகளைக் கொண்டு வந்து சபையிலே நிறுத்திக் காட்டவேண்டிய நிர்ப்பந்தம் லீகின் எதிரிகளுக்கு ஏற்பட்டுவிட்டது பாருங்கள்.

எந்த டில்லி நகரிலே, இவ்வாண்டு முஸ்லிம் லீக் மாநாடு கூடிற்றோ, எந்த டில்லி நகரிலே இஸ்லாமியரின் எழுச்சிச் சித்திரம் அழகுறக் காணப்பட்டதோ, அதே டில்லி இஸ்லாமிய

சாம்ராஜ்ய பீடமாக விளங்கி, இஸ்லாமிய சக்கரவர்த்திகள் சகலவித சௌந்தரியத்துடன் ஆண்ட மாண்பின் இருப்பிடமாக விளங்கி, வீர வாழ்வுக்கும் இஸ்லாமிய பண்பாட்டுக்கும் தலைமைஸ்தானாக விளங்கிற்று என்பது, வரலாறு படித்தோர் அறிவர். பெரும்போர் வீரன் பாரும், யூகமிகு ஹிமாயூனும், சீர்திருத்தப் பிரியன் ஷெர்ஷாவும், அலங்கார பூஷிதன் அக்பரும், அல்லாவின் ஊழியன் அவுரங்கசீபும், மற்றும் பல பாதுஷாக்களும், உலவிய இடத்திலே, அன்று ஜனாப் ஜின்னா கெம்பீரமாக உலவினார். அதே டில்லியிலே, சரிந்த சாம்ராஜ்யத்தைக் காணச் சகியாது ஒளி இழந்தன போலும் என்று எண்ணத்தக்க விதத்திலே கண்ணிழந்து ஷாஆலம் சக்கரவர்த்தி சோகபிம்பமாக வீற்றிருந்த வரலாறும், அதே டில்லியிலே. பாதுஷாக்கள் பண்புடன் ஆண்டுவந்தபோது, வெள்ளையர், வைத்தியராகவும் கவியாகவும், யாத்ரீகராகவும் வியாபாரியாகவும், ஆங்கு நுழைந்து, மாளிகையில் புக மனுப்போட்டு, அனுமதி கிடைத்ததும் அகமகிழ்ந்து, தர்பார் சென்று தலைவணங்கி நின்று, உபசார மொழி பேசி, பாதுஷாக்களின் புன்னகைக்குத் தவங்கிடந்த வரலாறு ஜனாப் ஜின்னாவின் நினைவினில் நடனமாடாதிருக்குமோ!

அங்கு இப்போது வைசிராய் மாளிகை! லின்லிதோபிரபு இராசப் பிரதிநிதி. டில்லி நகர வரலாறும் அதன் இன்றைய அமைப்பும், காட்டும் பாடம் கவர்ச்சி மிக்கது.

சோபிதமான அந்த சுகந்தபுரியிலே, முஸ்லீம் லீக் மாநாடு கூடிற்று, இணையில்லா ஜனாப் ஜின்னாவின் தலைமையில்.

காங்கிரசின் கைப்பாவைகளான முஸ்லீம்கள் மந்திரிகளாக இருந்த காலம் ஒன்று இருந்தது. வந்தே மாதரம் பாடுவோம், கேட்கப் பிரியமில்லையானால், போகலாம் வெளியே என்று முதலமைச்சர் மொழிந்த காலம் ஒன்றிருந்தது. முஸ்லீம் லீக் என்றொரு கட்சியா? என்று பண்டித ஜவஹர் பதட்டப் பேச்சாடிய காலம் ஒன்றிருந்தது. காங்கிரசாட்சிக் காலம். அது கரைந்து, விடுதலை விழா நடந்து, முஸ்லீம்கள் வீறு கொண்டெழுந்து பாகிஸ்தான் எனும் சூளுரைத்துத் தோள்தட்டும் காலம் பிறந்து விட்டதால், இம்முறை, மாநாட்டு மேடையிலே பல மந்திரிகள், வைசிராய் நிர்வாக சபை மெம்பர்கள்

உயர்தரப் பதவி வகித்து அனுபவம் பெற்றவர்கள், சிகந்தரின் சகாக்கள், வங்கச் சிங்கங்கள், சிந்து மாகாண ஜெயவீரர்கள், இன்னோரன்ன பிறர் அமர்ந்திருக்க, நடுநாயகமாக வீற்றிருந்த ஜனாப் ஜின்னா, வீர உரையாற்றினார். அந்தச் சொல்லம்பு, சூதுக்காரர் அமைத்திருந்த மூன்று முகாம்களை முறியடித்தன.

1. ஜனாப் ஜின்னாவுக்குச் சுதந்திரப் போராட்டத்திலே நாட்டமில்லை.

2. ஜனாப் ஜின்னாவுக்கு ஒற்றுமையிலே விருப்பமில்லை.

3. பாகிஸ்தானில் முதலாளி ஆட்சி இருக்கும்.

இம்மூன்ற போக்கிரித்தனமான புகார்கூறி அதனால், லீகையும் அதன் தலைவரையும் ஒடுக்கிவிடலாம் என்று மனப்பால் குடித்துவந்த தேய்ந்த மதியினருக்கு ஜனாப் ஜின்னா தமது தலைமைப் பிரசங்கத்திலே "தெளிவு" ஏற்படச் செய்தார், ஆனால் பாவம் அவர்கள் நெளிகிறார்கள் அந்தச் சவுக்கடிபட்டதும்.

(1) இந்துக்களே, வாருங்கள், சமரச கூடத்துக்கு, நாம் ஒன்றுபட்டு, வெள்ளையரை விரட்டுவோம், வாரீர்.

(2) காந்தியார், லீக் கோரிக்கையை ஏற்றுக்கொள்வதாக எனக்குக் கடிதம் எழுதட்டும், அதைத்தடுக்க இந்தச் சர்க்கார் துணியாது. அக்கடிதம் கிடைத்தால் ஒற்றுமைக்குண்டான வேலைகளைத் துவக்கலாம்.

(3) இலட்சக் கணக்கான முஸ்லிம் மக்கள் உண்ண உணவின்றித் தவிப்பதைக் காண்கிறேன், இந்நிலையே பாகிஸ்தான் அமைப்பிலும் இருக்குமானால் அத்தகைய பாகிஸ்தானை நான் வேண்டேன். முதலாளிகளே! நிலச்சுவான்தாரர்களே! காலத்திற் கேற்ற வண்ணம் திருந்துங்கள். இல்லையேல் ஆண்டவன்

தான் உங்களைக் காப்பாற்ற வேண்டும், நாங்கள் வாரோம் காப்பாற்ற இம்மூன்று கணைகள், எதிரிகளின் மூன்று முகாம்களைத் தகர்த்துவிட்டன. பாகிஸ்தான் முதலாளி ஆட்சியன்று, மக்களாட்சி, என்பதை ஜனாப் ஜின்னா தெளிவாக்கிவிட்டார். அன்னியராட்சியை

அகற்றத்தாம் துடிப்பதை விளக்கிவிட்டார், ஒற்றுமைக்குத்தான் சித்தம் என்பதையும்கூறி, வழியுங் காட்டிவிட்டார். வீரம், சமரசம், கருணை எனும் மூன்று ரசங்கள் அவரது சொற்பொழிவிலே இழைந்து காணப்படுகின்றன, ஜனாப் ஜின்னாவிடம் இஸ்லாமிய உலகு ஏற்கனவே வைத்துள்ள அன்பு இவ்வாண்டு அவராற்றிய அரிய உரையின் பயனாகப் பன்மடங்கு அதிகமாகிவிட்டது. வீரத் தலைவரின் வழியைத் தமக்கும் உகந்ததென்று திராவிடத் தோழர்கள் தீர்மானிக்கின்றனர். பாகிஸ்தான் ஜிந்தாபாத்! ஜனாப் ஜின்னா ஜிந்தாபாத்!

(திராவிடநாடு - 02.05.1943)

# வசந்தகாலத் தாக்குதல்

இதுவரையில், நாம், கலை, காவியம் என்ற காரணம் காட்டியும், கற்பனைச் சுவை காலக்கருத்து என்ற சாக்குக் கூறி, கம்பஇராமாயணம் பெரிய புராணமெனும் ஆரிய ஏடுகளைத் தீயிலிடுவதைத் தடுக்க முனைந்த தோழர்கள் விடுகணைகளை ஏற்று நின்றதுடன், அவர்களின் காரணங்கள் வெறும் போலி என்பதனை விளக்கி வந்தோம். இனி, நாம் இக்கலைவாணரின் கணைகள் வரின் வரவேற்கத் தயாராகவே இருக்கிறோம், என்றாலும், இனி நாமும் ஓரளவு தாக்குதலில் இறங்காமுன்னம், கலை, கலை, என்ற சல சலப்புக் காட்டிக்கொண்டு, சந்து பொந்துகளிலிருந்து கிளம்பும் பேர்வழிகளின் கூச்சலை ஆதரித்தவராவோம் என்று அஞ்சியே வசந்தகாலத் தாக்குதலைத் துவக்கத் தீர்மானித்துள்ளோம். இனி, அடுத்தடுத்துவரும் இதழ்களில், நாம்விடும் வினாக்களுக்கு விடையிறுக்க, கலைவாணர் முன்வர வேண்டுகிறோம். அவர்களின் விடைகளை, “திராவிடநாடு” வெளியிட்டுத் தமிழகத்தின் தீர்ப்புக்கு எதிர்நோக்கி நிற்கும் என்று உறுதி கூறுவோம்.

சித்திரத் தமிழை எத்துறைக்கேனும் பயன் படுத்துவதே நோக்கமெனக்கொண்டு விருதுநகர் சுயமரியாதை மாநாட்டிலே, வீரச்சுவையைக் காட்டினோம், இதுபோது சைவரும் அதிசயிக்கச் சைவம் பேசிப் பண்பாடிடுவோம், வைதீகரும் வியக்கும் விதமான வறட்டு வாதத்தைக் காட்டுவோம், அஞ்சுவது யாதொன்றுமில்லை இனி அஞ்சவருவதுமில்லை என்று கூறுவோம், என்று பேசிடும் சமயச் சைவர்கள், விடும் வினாக்களையல்ல நாம் குறிப்பிடுவது. அவை நமக்கு ஓய்வு நேர விளையாட்டுக்குப் பயன்படட்டும். அந்த இளந்தூயமணிகளையல்ல நாம் காணவிரும்புவது; உண்மை யிலேயே நாம் தவறான கொள்கை கொண்டிருக்கிறோம் என்பதை ஆதார பூர்வமாக விளக்கி நாம் தவறு செய்பவராகத் தோன்றினால் நம்மைத் தடுத்தாட்கொள்ளக்கூடிய உரிமையும் தகுதியும் படைத் செந்தமிழ்ப் புலவர்களையே நாம், அன்புடன் அழைக்கிறோம், விடையளிப்பீராக என்று. இராமாயணம் என்பது ஆரிய திராவிட போராட்ட காதை என்றும்; இராமன் ஆரியன், இராவணன் தமிழன் என்றும், நாம் கூறுகிறோம். இதை மறுத்திடும் அன்பர்களை மூன்று கேள்விகள் கேட்கிறோம்.

1. இராமாயணம் ஆரியதிராவிடப் போராட்டம் என்ற ஆராய்ச்சிக் கருத்துகளை வெளியிட்டவர்களை நீவிர் இதுவரை மறுத்துக் கூறி, உமது வாதத்தைச் சரித இலக்கிய ஆராய்ச்சியாளர் மன்றம் ஒப்புக்கொள்ளச் செய்ததுண்டா? இல்லையேல், இனியேனும் செய்யும் உத்தேசமுண்டா?

2. ஏற்கெனவே ஆராய்ச்சியாளர்கள் வெளியிட்ட முடிவுகளைத் திருத்தவும், அடியோடு மாற்றவும் உங்கட்கு, அந்த ஆராய்ச்சி யாளர்களுக்குக் கிடைத்த சான்றுகளை விட, வேறு விசேஷமான சான்றுகள் கிடைத்துள்ளனவா? உண்டெனில், அவையாவை?

3. நீவிர் இதுபோது வெளியிடும் புதுமையான கருத்தைச், சரித ஆசிரியர்கள், கல்லூரிகள், ஆகிய பீடங்களிலே ஒப்புக்கொள்ளச் செய்ய முன் வருவீர்களா?

இராமாயணம் ஆரிய திராவிடப் போராட்ட காதை என்றும், இராவணாதியர் தமிழர், இராமனாதியர் ஆரியர் என்றும், இதுவரை கூறியுள்ள ஆராய்ச்சியாளர் பலர். அவர்களிற் சிலரின் மொழிகளை ஈண்டு தருகிறோம். நம்மிடம் போரிடும் புலவர்கள், இந்த ஆராய்ச்சி அரண்களைத் துளைத்துத் தகர்த்துவிட்டுப் பிறகு நம்மீது பாயட்டும், என்பதற்காக.

“தாம் செய்த வெறியாட்டு வேள்விகளை அழித்தமை பற்றியே, அவ்வாரியர் பெரிதுஞ் சினங்கொண்டு, அவ்வேளாளரையும் அவருள் அரசரான வேளிரையுந் தாசியர் இராக்கதர், அசுரர், என்று இகழ்ந்து கூறி அவரைத் தாழ்த்துதற் பொருட்டுப் பொய்யான பல புராணக் கதைகளையும் எழுதிவைப்பாராயினர்.

“இராமன் காலத்தில் தென் இந்தியா “தஸ்யூக்கள்” என்ற ராக்ஷசர்களுக்குச் சொந்தமாக யிருந்தது. இவர்கள் ஆரிய முனிவர்கள் செய்து வந்த யாகத்தை எதிர்த்தார்கள். இருந்தாலும் வட இந்தியாவிலிருந்து வந்த ஆரியர்களைப்போலவே இந்த ராக்ஷசர்கள் என்பவர்களும் நாகரிக மடைந்திருந்தார்கள்.

“காடுகளிலிருந்த மக்கள் யாரென்பது இராமருக்கும் அவரைச்

சேர்ந்த ஆரியர்களுக்கும் தெரியாது. அழகில்லாதவர்களைக் குரங்குகளென்று அழைத்தார்கள். அவர்களிலேயே மிகுந்த பலமும் தைரியமும் செல்வாக்கு முடையவர்களை அரக்கர்களென்று அழைத்தார்கள். தென் இந்தியாவில் வசித்த மக்களே இப் பெயர்களால் அழைக்கப்பட்டார்கள்.

“இராமாயணக் கதையானது புரோகித வகுப்பாருக்கும் யுத்த வீரர் கூட்டத்திற்கும் உண்மையாகவே நடந்த சச்சரவையும் சண்டையையும் குறிப்பதாகும். இவ்விஷயமானது இலக்கிய உருவத்தில் உபநிஷத்துகளிலுமிருக்கிறது. ராமன் தென் இந்தியாவிலுள்ள ஆரியரல்லாத கூட்டத்தோடு நட்புக் கொண்டான். அவர்களே குரங்குகளென்றும், கரடிகள் என்றும் வர்ணிக்கப் பட்டிருக்கிறார்கள்.

“இராமாயணகதைக் காலத்தில் தென் இந்தியா முழுதும் ஆரியரல்லாதார் வசித்து வந்தார்கள். இவர்களைத்தான் இராமாயணத்தின் ஆசிரியர் குரங்குகளென்றும், கரடிகளென்றும், இலங்கையி

லுள்ள ஆரியரல்லாத மக்களை அசுரர்களென்றும் வர்ணித்து எழுதி இருக்கிறார்கள்.

“ஆரியரல்லாத தேச மக்கள் காடுகளுக்குள் விரட்டப் பட்டார்கள். அதுவும் போதாதென்று அவர்களை ராக்ஷசர்கள் என்றும் அசுரர்கள் என்றும் ஆரியக் கவிகளும், ஆரியப் புரோகிதர்களும் நூல் எழுதிவைத்தார்கள். ஆரியரல்லாதார்களுக்கு, ஏற்கனவே இருந்த தஸ்யூ அல்லது விரோதி என்ற பெயர் நாளடைவில், பிசாசு, பூதம், ராக்ஷசன் என்ற பெயர்களாக மாற்றப்பட்டது.

“இராமாயணக் கதையானது ஆரியர்களுடைய பலத்தைக் குறிப்பிடவும் அவர்களுடைய எதிரிகளும் விரோதிகளுமாகிய திராவிடர்கள் எவ்வளவோ உயர்ந்த நாகரிகத்தை அடைந்திருந்துங் கூட, அவர்களை மிக மோசமான, கேவலமான முறையில் சித்தரித்துக் காட்டுவதற்காகவும் எழுதப்பட்டதாகும்.”

“வெற்றி பெற்றவர்களுக்கு இயற்கையாக ஏற்படும் அகங்காரத்தில் பிராமணர்கள் தங்கள் விரோதிளாகிய தஸ்யூக்களைக்

குரங்குகளென்றும், கரடிகளென்றும், எழுதி வைத்தார்கள்.”

“இராமாயணக் கதையின் உட்பொருள் என்னவெனில் ஆரிய நாகரிகத்தின் தலைவனுக்கும் இராவணனுக்கும் நடந்த சண்டையே யாகும்.”

“இரண்டு இதிகாசங்களும் ஆரியர்கள் பரவிய பருவங்களை வெகு தெளிவாய்க் குறிப்பிடுகின்றன. மகாபாரதம் கங்கை நதி வெளியில் அவர்கள் பரவியதையும், இராமாயணம் தென் இந்தியாவை அவர்கள் கைப்பற்றியதையும் உணர்த்துகின்றன.”

இன்னோரன்ன பிற ஆராய்ச்சியாளர்களின் ‘தீர்ப்பை’ நம்மை எதிர்க்குமுன், கம்பதாசர்கள் தகர்த்தெறிய வேண்டாமா? அதனை இதுவரை செய்தனரில்லை. இனியேனும் செய்ய இயலுமா? எங்கே பார்ப்போம்!

(திராவிடநாடு - 02.05.1943)

# செவிச்சுவை !

வேட்டையாடிக் களைத்து வீடு திரும்பும் மன்னன் ஒருவன், ஏதோ சத்தம் கேட்டுப்பக்கத்திலிருந்த மந்திரியைப் பார்த்துப் பேசுகிறான்.

மந்திரி! என்ன சத்தம் அது?

மன்னவா! இந்த நிர்மானுஷ்யமான காட்டிலே, மிருகங்களின் கூச்சலன்றி வேறென்ன இருக்கும்.

யூகம் வேண்டாம், உற்றுக்கேள். அதோ, ஆஹோ! பக்தர்கள், சிவனடியார்கள், அரகரா, அரகரா, என்று பூஜிக்கிறார்களே, உன், செவியிலே அது கேட்கவில்லையா?

ஓடாதீர் அரசே! சிவனடியார்கள் இங்கு ஏன் வரப் போகிறார்கள்.

மன்னன், ஒரு குளத்தங்கரையை அடைந்து, சாஷ்டாங்கமாக விழுந்து வணங்குகிறார். மந்திரி, ஆச்சரியத்துடன், அரசனின் செயலைப் பார்க்கிறார். குளத்திலே ஏராளமான தவளைகள் கத்திக் கொண்டிருக்கின்றன. (நீர் வழியுங் கண்களுடன் மன்னன் மந்திரியை நோக்கி,) “மந்திரி! கேட்டாயா கீதத்தை! சிவ சிவா, சிவசிவா என்று இந்தப் பக்தர்கள் பாடுவதைக் கேள் - என்று கூறிட, மந்திரி, “அரசே, கரகரவென்று தவளைகள் கத்துகின்றனவே, அந்தச்சத்தம் தங்கள் செவியிலே சிவ சிவ என்று கேட்கிறது போலும் என்று கூறுகிறார். அரசரோ, இரு கை கூப்பித் தொழுதவண்ணம், சிவ நாமத்தை உச்சரிக்கும் இச்சீலர்களை இதுவரை கவனியாதிருந்தது மகா பாவம். மந்திரி! பொன்கொண்டு வந்து இக்குளத்திலே கொட்டு, சிவனடியார்கள் எடுத்துக்கொள்ளட்டும். நீரிலே உள்ளனரே, பக்தர்கள்; குளிர் தாக்குமே! பட்டுப் பீதாம்பரங்களைக் கொண்டு வந்து வீசு, சிவனடியார்கள் அணியட்டும் என்று உத்தரவிட, மந்திரி, ஐயோ! குளத்திலே வரட்டுக் கூச்சலிடும் தவளைகளை, மன்னன் இப்படித் தவறாகக் கருதினானே. இவன் செவி இருந்தவாறென்னே! இவன் மதிசூன்யமாயிற்றே” என்று எண்ணி ஏங்குகிறான். மன்னனோ, அந்தக் காட்டுக் குளத்திலே கத்திடும் தவளைகளின் சத்தத்தைச் சிவ பஜனைச் சத்தமென்றே எண்ணுகிறான் - அவன் செவியிற் சுவை கண்ட சீலன்!! என்று போற்றும் திருக்கூட்டம் ஒன்று இன்றுமிருக் கிறது. அர்த்தமற்ற சத்தம், அக்கூட்டத்துக்கு

ஆனந்தமூட்டும். தவளை கத்தியது சிவ நாமமாக ஓர் மன்னனின் செவிக்குச் சுவை தந்ததாமே, அது போல, எவ்வளவு ஆபாசமான கதையாக இருப்பினும், அறிவுக்குப் பொருந்தாத விஷயமாக இருப்பினும் சீர் கண்டு சொக்கி, அணிகண்டு அகமகிழ்ந்து, உவமை கண்டு உளம் பூரித்து, என்ன சுவை! எவ்வளவு இனிமை! என்று கூறிக் கூத்தாடுவர். அம்மட்டோ! அவர் கேட்டு மகிழ்வது போலப் பிறரும் கேட்டு மகிழவில்லையே என்றும் சோகிப்பர். சோதிப்பதுடன் நிற்பரோ! இல்லை! இரு கை தூக்கி, இமயவனைத் தொழுது "செவியிற் சுவையுணரா மாக்களைப் பொசுக்குமே என்று வேண்டுவர். என் செய்வது? யாராருக்கு எவ்வெக்கருத்து இனிக்கிறதோ அவர்களுக்கு, அக்கருத்தினுக்கேற்ற ஒலி இனிமை பயக்கும். மற்றவருக்கோ அது தலைவலியாகத்தானே இருக்கும். மன்னன் "பிறைசூடியிடம்" பித்தம் கொண்டவன், ஆகவே அவனுக்குக் காட்டிலே தவளைகள் கத்திய சத்தம் செவிக்குச் சுவை ஊட்டிற்று. ஆனால் அவன் செயல் தகையால் மதி மங்கிய மன்னன் செயலால், என்ன பலன் உண்டாக முடியும்! சிவனிடம் பக்தி பூண்டு, சிவனடியாரிடம் அன்பு கொண்டவனாக இருப்பது, தவளையின் குரலைச் சிவநாமா பஜனை என்று எண்ணுமாறு செய்ததென்றால், அதனைப் பித்தம் - போதை - மனமயக்கம், அறிவுச் சூறை என்று கூறுதல் தவறா?

செவிச்சுவை இல்லாத மாக்கள்மீது செந்தமிழ்ப் புலவர் சீறுகின்றனராம், கத்துவது தவளை என்று கண்டு கூறிய மந்திரி மீது மன்னன் வெகுண்டதுபோல.

தஞ்சைக் கரந்தைத் தமிழ்க் கல்லூரியிலே சின்னாட்களுக்கு முன்னர் விரிவுரையாளர் சிலர் கூடினராம், ஏடு பற்றிப் பேசினராம், பழம்பாடலில் உள்ள சுவையினை எடுத்தோதினராம், பின்னர் பரிதாபங்கலந்த குரலுடன் கூறினராம், 'பண்டை நூற்களிலுள்ள சுவையினை உணராச் செவி படைத்த மாக்கள் சிலர், கம்ப இராமாயணத்தையும், பெரிய புராணத்தையும் தீயிலிட எண்ணு கின்றனரே" என்று. மலர்ந்தது இது! ஆனால் மனதிலே அம்மொழியழகினர் மகேஸ்வரனைத் துதித்திருக்கக்கூடும், செவியிற் சுவையுணராமாக்களைச் சுட்டெறியும் என்று. கைலைக்கு அவர்கள் குரல் எட்டிற்றோ இல்லையோ நானறியேன்.

எட்டினாலும், அவர் குரல் கேட்டு விஷயமுணரும் நிலையிலே சிவனார் இருக்கிறாரோ இல்லையோ, தெரியாது. நந்தி மிருதங்கம் கொட்ட, நாரதர் தம்பூரு மீட்ட பார்வதி பாட, அவர் ஆனந்தத் தாண்டவமாடிக் கொண் டிருந்தால் இந்த அருந்தமிழ் பயின்ற புலவரின் புலம்பல், செவி புகுவதற்கு முடியாதல்லவா! நர்த்தனவேளையாக இராமல், நாயகி யுடன் லீலை புரியும் நேரமாக இருந்தாலும், புலவரின் பொன்மொழி அவர் செவி புகாது, அதிலும் அவர் ஆயிரம் (தேவ) ஆண்டு அன்ன ஆகாரமின்றி பார்வதியுடன் கலவிச்சுகத்திலே ஈடுபட்ட பக்காப் பேர்வழி! (ஈரோட்டுப் பாவிகள் கருட்டிய புனைச் சுருட்டல்ல இக்கதை. புராணப் புலவர்களின் ஆபரணம்.)

கைலைவிஷயங் கிடக்கட்டும், கரந்தைப்புலவர்கள், செவியிற் சுவையுணராமாக்கள் என்று செந்தமிழ் நயத்துடன், நொந்த உள்ளத்திலிருந்து எடுத்துவீசிய இச்சொல்லம்பு, சுயமரியாதைக்காரர் மீது ஏவப்பட்டது என்பதை நான் சொல்லவேண்டுமா! அவர்கள் தானே ஆரிய ஏடுகளைத் தீயிலிட வேண்டுமென்று கூறுகின்றனர். அவர்களுக்கு, மேற்படி நூற்களிலுமுள்ள சுவையை உணர முடியவில்லை. அவர்கள் மக்களல்ல, மாக்கள் - என்பது அத்தக்கோரின் தீர்ப்பு. நமது மறுப்பு அவர்களுக்கு வெறுப்பாகத்தான் இருக்கும், என்ன செய்வது, இப்படியும் சில பிறப்பு! என்று ஒருவரையொருவர் எண்ணிக்கொள்வதோடு, ஒருவரப்பு இருக்கட்டும் என்பது என் விருப்பு. பிறகு அவர்களின் அறிவின் விரிப்பு விடும் இடமெங்கும் அவர்கள் உலவட்டும், நான் தடுக்க முடியாது.

சுவையுணரா மாக்களாகிய சுயமரியாதை கேட்பது, இதுதான், “ஐயன்மீர்! சுவை சுவை, என்ற சுருதி பாடுகிறீரே சொற்சுவையா, பொருட்சுவையா நீவிர் குறிப்பது எதனை கவிதையழகையா? கருத்தழகையா, அணியழகையா, ஆண்டவனைப் பற்றி ஏடுகளிலே காணப்படும் கொள்கையழகையா? எதனைச் சுவை என்று கூறி, இதனை இம்மாக்கள் உணர வில்லையே என்று மாரடித்துக் கொள்கிறீர்.

கெஞ்சுகின்றேன் அஞ்சுகமே

பஞ்சபாணம் மிஞ்சுவதால்

தஞ்சமென வந்தேன்

பஞ்சணையில் கொஞ்சிடவே

வஞ்சியே வந்திடுவாய்

என்று அவர் பாடினார், நான் அதிலே இலயித்துப்போனேன். அவர் தொட்டார், நான் துவண்டேன், அவர் இழுத்தார் நான் சுருண்டேன், என்று காமச்சேட்டையாடிய ஒருவனுடைய, கவிச்சுவையால் தன் கற்பை இழந்ததாகக் கூறினால், அந்த மங்கை நல்லாளின் தமிழ்ப்பற்றை என்னென்பது! செவிச்சுவைச் செல்வி வாழ்க!" என்று போற்றுவீரா! செவிச்சுவைபற்றிக் கவலையற்று "ஏடா, மூடா! ஏதேதோ உளறுகிறாய் போடா" என்று காமக் கூத்தனைக் கடிந்துரைத்து ஒருவள் துரத்தினால், சீச்சீ! செவிச்சுவையுணரா மாக்கள் கூட்டத்தினளாகவன்றோ அவள் இருக்கிறாள்" என்று ஏசுவீரோ, கூறீர். அறிவை ஆரியத்துக்கு இறையாக்கும் காரியத்துக்குப் பயன்படும் கவி, காவியம், கலை, சுவையுடைத்து என்று எமது செவியும் சிந்தனையும் ஏற்க மறுக்கிறது. விவேகமெனும் மாதை வேதியக் கூட்டத்துக்கு விபசாரக் கருவியாக்கிடும் வெண்பா, எமது செவிக்கு வேம்பாகத்தான் இருக்கிறது. பார்ப்பனியத்தின் பாதந்தாங்கிகளாகப் பலரையுஞ் செய்விக்கும் பதிகம், எமது செவிக்கு நாராசமாகத்தான் இருக்கிறது, புலவரீர்! உமக்கு அவை சுவைதரலாம்; ஆனால் அவற்றிலே சுவை காணா நாங்கள் மாக்களல்ல!

நர்த்தனமாடும் நாகத்தை நளின மாது என்று எண்ணி அருகே சென்றால், என்ன நேரிடும்? அதுபோலவே ஆரிய நச்சரவு கவிதை ரூபத்திலே ஆடுகிறது, அந்த நச்சரவின் விஷப் பல் தீண்டியதால், உமக்கு கண் மங்காவிட்டாலும் கருத்து மங்கிவிட்டதால், நாங்கள், மாக்களாகத் தென்படுகிறோம் போலும். புலியின் தோல் ஆசனத்துக்கு உதவும், அதற்காக புலியை வீட்டிலே வளர்த்து, பூசை நேரத்திலே அதன்மீது சவாரி செய்து கொண்டு சர்வேஸ்வரனைத் தியானம் செய்ய யாரும் இசைய மாட்டார்கள். இசைந்தால், அவர்கள் இறைவனுடன் உடனே இரண்டறக் கலப்பர்! அதுபோல், ஆரியமத போதனைக்காகப் புனையப்பட்ட ஏடுகளிலுள்ள, கவிதை அழகு, தமிழ் வளர்ச்சிக்கு, இலக்கியச் சுவை ஆக்கத்துக்குப் பயன்படும். அதற்காக, அந்த ஏடுகளைப் போற்றிக் கண்களில் ஒத்திக்கொண்டு களிப்பது

தோல்வேண்டிப் புலி வளர்ப்போன் கதைபோல் முடியும்! புலியைக் கொன்று தோலை ஆசனமாக்குவது போல, சுயமரியாதைக்காரர்களாகிய நாங்கள், ஆரிய ஏடுகளைக் கொளுத்துவதன் மூலம், அதிலே புதைந்துள்ள மூடக்கருத்துகளைக் க¬விடுமாறு வலியுறுத்துகிறோம். எமது செயலின் விளைவாக, அந்த ஆரிய நச்சுக் கொள்கை அழிந்தொழிந்திடின், புலி செத்தபின் தோலை உபயோகிப்பது போல, நீங்கள் ஆரியம் அழிக்கப்பட்ட பிறகு, ஏடுகளின் இலக்கண இலக்கிய எழிலை எடுத்துத் தழுவிக் கொண்டு பூரித்து வாழுங்கள்; தடுப்பார் இல்லை இதைக்கூறும் நாங்கள் மாக்களா என்ன துணிவய்யா, உங்கட்கு? எங்களிடம் அகராதி கிடையாதென்று எண்ணியா, எம்மை மாக்களென்று கூறுகிறீர்? நால்வரின் பாடல்கள் நர்த்தனமாட வேண்டிய நாவினருக்கே கோபம், மாக்கள் என்ற கடுமொழியைத் தந்தது என்றால், நாங்கள் எமது நாவுக்கு அன்பு காரணமாக போட்டு வைத்துள்ள தடையுத்தரவை ரத்து செய்து விட்டால், நிச்சயமாகக் கூறுகிறேன், செவிச்சுவையுணரும் செம்மல்களே! நீவிர் தேள்கொட்டிய மந்திரியாவீர். ஆனால், இந்த ‘மாக்கள்’ இன்னமும், உம்மைத் தோழராகவே கருதுவதால், சுடுசொல்லுரைக்கவில்லை. செய்யாதிருப்பது, முடியாததால் அன்று; மனம் இல்லாததால்.

சுவை, சுவை என்று பேசுகிறார்கள் புலவர்கள்! கம்ப இரசம் எவ்வளவு இனிமை தெரியுமா என்று கூறுகிறார்கள். வர்ணனைகள் எவ்வளவு நேர்த்தி தெரியுமா என்று வாதாடுகிறார்கள். சரி! ஒரு உயர்தரமான கவியிலே, இருக்கவேண்டியது, வெறும் காமச்சுவை தானா, என்று கேட்கிறேன். கம்பன் கவிதைகளிலே, வரும் வர்ணனைகளை விட, காமச்சரக்கு வேறு எங்காவது கிடைக்குமா! கம்பன், கதாபாத்திரங்களை வர்ணித்திருப்பது, தங்கபஸ்பம் சாப்பிட்டுக் கொண்டிருக்கும் தடிதாங்கியின் படுக்கையறை அலங்காரத்துக்கு உபயோகமாகும் பாரிஸ் நிர்வாண போட்டோவுடன் போட்டியிடுவதாக இருப்பதைப் புலவர்கள் மறுக்க முடியுமா? ஒரு “தேவகதை” - “நீதிநெறி” -

பாடப்போந்த கம்பர், கதைப்பாத்திரங்களை வர்ணிக்கையில், அளவுக்கு மீறியது, இடக்கரடக்கல் எனும் நியதியை மறந்ததுமான, காமச்சுவை மிகுந்த வார்த்தைகளை உபயோகிப்பது, அழகா? அதைப் படிக்கும் உள்ளம் பாழகாதா? அவை "பக்தி"யை ஊட்டமுடியுமா, அல்லது இச்சையை மூட்டுமா? என்பதை நடுநிலை நின்று கூறுமாறு வேண்டுகிறோம். சீதை இலட்சுமியின் அவதாரமாம், சரி, அந்த அம்மையை வர்ணிக்கையில், அருளொழுகும் கண்கள், அபயஸ்தம், பொன் உருக்குமேனி, பூங்கொடிச் சாயல், அன்ன நடை, கன்னல் மொழி என்று வர்ணிக்கட்டும்; கலசக் கொங்கை முதல் அல்குலழகு வரையிலுமா, அங்கம் அங்கமாக, கவியின் ஆசைதீர வர்ணிக்க வேண்டும். "வணக்கத்துக்குரிய மாதாவை" இப்படிச் சித்தரிப்பதுதான், செந்தமிழ் கற்றதனாலாய பயனா? இதைத்தானா, நமது புலவர்கள் சுவை, சுவை, என்று கூறிக் கண்ணீர் சொட்டுகின்றனர். சோகமான சம்பவத்தைப்பற்றி எழுதும்போதுங் கூட, மாதர் என்ற உடனே, கம்பரின் கவிதை எவ்வளவு விறு விறுப்புடன், வேலை செய்கிறது பாருங்கள்! துரௌபதி வஸ்திரா மரணந்தான்! இல்லையேல் கம்பருக்குத் திருப்தி பிறப்பதே யில்லை. சர்வாங்க இலட்சண வர்ணனையிலே, கம்பர் சளைக்கவேயில்லை. அந்தச் சுவை சுயமரியாதைக்காரருக்குக் கவித்திறமை என்றும் தோன்றவில்லை, கடவுட் கொள்கையையும். இலட்சணமாகவும் அது இல்லை. மற்ற மதக்காரர்கள் ஆண்டவனுக்கு உருவம் அமைத்து, குடும்பம் ஏற்படுத்தி வைத்து கும்பிடவில்லை ஆண்டவனை உருவமாக்கிய சில மதத்தினரும் தமது கிரந்தங்களிலே கம்பன்போல தமது ஆண்டவன், ஆண்டவனின் மனைவி, ஆகியோரை நிர்வாண கோலமாக்கிக் காட்டும் வர்ணனைகளைத் தீட்டினதில்லை. காமச் சேட்டைக்குரிய கருத்துகளைப் புகுத்தினாரில்லை, கடவுட் கதையிலே மட்டுமன்று, உயர்தரமான இலக்கியத்திலே உத்தம புருஷர்கள் மாது சிரோமணிகள் என்று கவிகள் தீட்டிடும் கதாபத்திரங்களைக் கம்பன்போல நிர்வாணமாக்கிய கவி கிடையாது. உயர்தரமான ஆங்கில இலக்கியத்திலே, ரெயினால்ட்ஸ் நாவல்களில் காணப்படும் காமச்சுவை

குழைந்து கிடக்கும் வர்ணனைகள் கிடையாது; ரெயினால்ட்ஸ், இலக்கியப் பட்டியிலே இடம் பெறவில்லை. சங்க நூற்களிலும், கம்பனின் காமரசத்துக்கு இணையான ரசத்தைக் காண முடியாது, ஆனால், இங்குள்ள புலவர்கள். சங்க நூற்களை இழப்பினும் சகிப்போம்; கம்பனை இழக்கமாட்டோம் என்று கூறுகின்றனர். தமிழகத்தின் தாழ்ச்சிக்கு அதுவோர் எடுத்துக்காட்டு என்பேன்.

கொலம்பஸ், அமெரிக்காவைக் கண்டுபிடித்தான், வாஸ்கோடகாமா, இந்தியாவைக் கண்டுபிடித்தான், கெலீலியோ பூதத்துவத்தை விளக்கினான், டார்வின் மனித உற்பத்தி விளக்கங் கண்டுபிடித்தான். நியூடன் காந்த சக்தியையும், அதன் விளைவுகளையுங் கண்டறிந்தான். நீராவியந்திரம், தந்தி, டெலிபோன், கம்பியில்லாத் தந்தி, நிழற்படம், பேசும் படம், வான ஊர்தி, வானொலி, கப்பல், கடலுள் செல்லும் கப்பல், காற்றில் மிதக்குங் கூடு என்று எத்தனையோ அதியற்புதப் பொருள்களையும் கருத்துகளையுங் கண்டு பிடித்த செய்திகளைக் கேட்டுச் செவிச்சுவையுணரும் மக்கள், இந்தப் புண்ணிய பூமியிலன்று, வெளிநாடுகளிலே உள்ளனர். இங்கோ! கடலைத்தாண்டிய அனுமன் கதை, மூலிகைதேட நேரமின்றி மலையையே பெயர்த்தெடுத்து வந்த மாருதி புராணம், எதிரியைக் கொன்று, அவன் மார்பைத் தடவிப் பார்த்துவிட்டு, ஏழு கடல்களிலும் ஸ்நானம் செய்து பிறகு அம்புறாத் தூணியிலே வந்து புகுந்து கொள்ளும் பாணம், அலைகடலில் ஆலிலைமேல் அரிபள்ளி கொண்டிருக்கும் கதை, ஆயிரந்தலை கொண்ட ஆதிசேஷன் அண்டச்சராசரங்களையும் தாங்கும் கதை, முக்கண்ணன், ஆறுதலையோன், நாலுமுகத்தோன், நந்தி முகத்தோன், நாவிலே உறைபவள், நாட்டிய மாடுபவள், மார்பிலே மங்கை கொண்டோன், மதகரி வருவோன், என்ற இன்னோரன்ன பிறகடவுட் கொள்கைகளும், ஆசிரமங்களிலே நடைபெற்ற விபசாரங்கள், அவற்றை வெளிப்படுத்திக் கலகமூட்டும் நாரதத் திருவிளையாடல், அதற்கு விமோசனம், அந்த நேரத்திலே

அசரீரி, என்ற கதைகளும், கேட்டுக் கேட்டுச் சுவை உணரும் மக்கள் உள்ளனர். அவர்களின் தீர்ப்புத்தான், பொய்யும் புனைசுருட்டும் போகப்புழுவும் பார்ப்பனிய நச்சரவும் நெளியும் புராண இதிகாசங்களை நம்ப மறுத்து, நெருப்பிலிடுக என்று கூறும் நம் தோழர்களை, செவிச்சுவை உணராமாக்கள்" என்று கூறுவது. இது பகுத்தறிவு மன்றத்திலே இடம் பெறக்கூடிய தீர்ப்பா என்று கேட்கிறேன். கெடுமதி புகட்டும் ஏடுகளிலே சுவை காணும் நெடுஞ்செவியராக இருக்க நாங்கள் மறுக்கிறோம். எமது செவியிலே, ஆரியத்தால் தாக்குண்டு தவிக்கும் தமிழரின் அழுகுரல் வைதிகத்தால் வாழ்க்கையைக் கெடுத்துக்கொண்ட தமிழரின் வேதனைக்குரல், பரம்பரைத் தொழிலாளராக இருந்து பாடுபடும் தமிழ் இனத்தின் பரிதாபக்குரல் கேட்கிறது! அது எமக்குச் சுவையை ஊட்டவில்லை. எமது உள்ளம்பற்றி எரிகிறது. எமது கண்களிலே தீப்பொறி கிளம்புகிறது. அந்தப் பொறி, நிச்சயமாக ஆரிய ஆபாச ஏடுகளை எரித்தொழிக்கும்! விலகி நில்லுங்கள்! தூரச் செல்லுங்கள்! தீ பரவுகிறது என்று எச்சரிக்கிறேன்! செவிச்சுவை உணரச் சுவடி புரட்டும் அன்பர்கள், இந்த எச்சரிக்கைக் குரலைச் செவி மடுக்கா திருப்பின், விளையக்கூடிய விபரீதத்துக்கு நான் ஜவாப்தாரியன்று!

9.5.1943

# சோவியத் சிங்கம் லெனின்

உலகில் ஒப்பற்ற மாறுதலைக் காட்டி, ஜாரின் வேட்டைக் காட்டினை மக்களின் பூந்தோட்டமாக்கிய, மாபெரும் புரட்சி வீரன் லெனின் பாட்டாளி உலகின் தலைவன், அவர் வரலாற்றுச் சுருக்கம், மே முழக்கம் மேதினியெங்கும் கிளம்பிய இக்கிழமை, ஒவ்வொருவர் நெஞ்சிலும் பதிய வேண்டும்; படித்தோர் புதியதோர் சக்தி பெறுவர்; கோழைகளும் வீரராகும் விதமானது அவருடைய வாழ்வு. அவர் சித்தரித்த சோவியத் நாட்டுக்குச் சொல்லொணாக் கஷ்டம் ஏற்பட்டுள்ள இந்நாளிலே லெனின் வரலாறு, படித்திடல் அவசியம். எத்தகைய வீரனின் சித்திரத்தை இன்று நாஜி வெறியன் நாசமாக்க நினைக்கிறான் என்பதை உணர்ந்து, தோள்தட்டி, எழுந்து போரிடத் தக்க புத்துணர்ச்சி தரும் புரட்சிப் பானம், அவர் வரலாறு.

ருஷ்யாவில் ஜனங்களைத் துன்புறுத்திவந்த முடியரசை வீழ்த்தி, உண்மையான குடியரசை ஸ்தாபித்த லெனின் ஹிம்பர்ஸ்க் என்ற ஊரில் கீர்த்தி வாய்ந்ததோர் குடும்பத்தில் 1870ம் வருஷம் பிறந்தார். சிறுபிராயமுதல் தேசமக்களின் பரிதாபகரமான நிலைமையைக் கண்ணுற்றுக் கலங்கினார். அப்பொழுது எல்லாத் துறைகளிலும் அவர்களை வாட்டிவந்த இன்னல்களைப் போக்க வேண்டுமென்ற விடுதலை வேட்கை அவருடைய இளம் காதில் வேரூன்றிவிட்டது. சொந்த ஊரில் ஒரு தேகப் பயிற்சி சாலையிற் சேர்ந்தார். அவருடைய திறமையைப் பாராட்டி ஒரு தங்கப் பதக்கமும் அளிக்கப்பட்டது. பிறகு காஜான் சர்வகலாசாலையிற் சேர்ந்து கல்வி கற்கலானார். சர்க்காருக்கு எதிராக ஏற்பட்ட மாணவர்களின் கிளர்ச்சியில் சேர்ந்ததற்காக வெளியேற்றப்பட்டார். பதினேழாவது வயதில் அவருடைய சகோதரனாகிய அலெக்ஸாண்டர், ஜார் மன்னனை (மூன்றாவது அலெக்ஸாந்தரை)க் கொல்ல முயற்சித்ததாக தூக்கிலிடப்பட்டார். அதையும் வெகுவாய்ப் பொருட்படுத்தாது, தம்முடைய உயரிய நோக்கத்திலேயே ஊக்கங்கொண்டு உழைக்க ஆரம்பித்தார். பிட்ரோகிராட் சர்வகலாசாலையைச் சேர்ந்து 1891இல் சட்டம் பொருளாதாரம் முதலியவைகளைக் கற்கலானார். பிறகு காரல் மார்க்ஸ் இயற்றிய நூல்களிலேயே அதிக கவனம் செலுத்தலானார். ரஷ்யாவின் இராஜீயப் பொருளாதார அபிவிருத்திக்கும் பொதுவாக உலகின் முன்னேற்றத்திற்காக மார்க்ஸியக் கொள்கைகள் எவ்வாறு இன்றியமையாதனவென்று ஆராய்ச்சி செய்யலானார்.

1894 முதல்தான் தீவிரமான முறையில் பிரசாரத்தி லீடுபட்டார். அப்பொழுது ஆதிக்கத்திலிருந்து கக்ஷியாரை எதிர்த்து, இரகசியமாகப் பிரசுரங்களை வெளியிட்டார். அச்சுக்கூடங்கள் அவை

களை அச்சிட மறுக்கவே, கையினாலெழுதப்பட்டு அப்பிரசுரங்கள் பரவின. அத் தருணந்தான் சட்டவிரோதமான "தொழிலாளரின் விடுதலைச் சங்கம்" அவரால் ஸ்தாபிக்கப்பட்டது. அடுத்த வருஷம் ஜெர்மனிக்குச் சென்று திரும்புங்கால் சமூக சமதர்மவாதத்தில் அவர் ஈடுபட்டதற்காகக் கதைசெய்யப்பட்டுக், கிழக்கு ஸைபீரியாவில் சிறைவைக்கப்பட்டார். சிறைவாசம் கழிந்தபின்னர் ருஷ்யாவிலுள்ள பெரிய நகரங்களிலாவது தொழிற்சாலைகளுக்கருகிலாவது சர்வகலாசாலை

களிருக்கும் நகரங்களிலாவது அவர் வசிக்கக்கூடாதென்ற உத்தரவு பிறப்பிக்கப்பட்டது.

1898ஆம் வருஷத்தில் தொழிலாளரின் விடுதலைச் சங்கத்தில் அரிய தொண்டாற்றிய க்ருப்ஸ்காயா என்ற மாதை மணம்புரிந்தார். உயிருள்ளவரை பொதுஜன சேவையில் லெனினுக்கு அப் பெண்மணி அளித்த உதவி மிகவும் போற்றத்தக்கது.

சைபீரியாவில் சிறைவாசம் செய்யுங்கால் ஏராளமான புள்ளி விவரங்களை ஆதாரமாய்க்கொண்ட "ரஷ்யாவில் முதலாளிகளின் முன்னேற்றம்" என்ற அபூர்வ நூலை இயற்றினார். 1899ல் 'சிறுபொறி பெருந்தீ' என்ற கொள்கையைக் கொண்ட 'ஸ்பார்க்' என்ற புரட்சிப் பத்திரிகையை ஆரம்பித்து நடத்தலானார். ஜார் அரசரின் அதிக்கிரமத்தை யொழிக்கவேண்டி நேர்முகமாய்ப் போராட ஒரு மத்திய கட்சியும் ஸ்தாபிக்கப்பட்டது.

1906ம் வருஷம் ஏற்பட்ட ரஷ்ய ஜப்பானியப் போரில் தொழிலாளர் ஈவிரக்கமின்றி சுட்டுக்கொல்லப்பட்டனர். அதனால் விவசாயிகளுக்குள் பரபரப்பு ஏற்பட்டது. இராஜீய வேலை நிறுத்தங்களும், அமைதியின்மையும் நாடெங்கும் அதிகரித்தன. 'காற்றுள்ளபோதே

தூற்றிக்கொள்’ என்றவாறு லெனின் அக்குழப்பத்தினிடையிலேயே ஜார் அரசருக்கு விரோதமான கிளர்ச்சிகளைத் தூண்டிவிட்டு, பலாத்காரமாய் அவருடைய அநியாய ஆட்சிக்கு உலைவைத்துத் தேசத்தையும் ஜனங்களையும் சீர்திருத்த வேண்டித் தொழிலாளரையும், விவசாயிகளையுங் கொண்ட பெரியதோர் இயக்கத்தின் மூன்று முக்கிய நோக்கங்களைத் தெளிவாகக் கீழ்க்கண்டவாறு வெளியாக்கினார்.

1. உண்மையான இராஜிய சுதந்தரத்தை ஜனங்கள் தற்காலிகமாகவாவது கைப்பற்ற வேண்டும்.

2. வலுவுள்ளனவாயும், தொழிலாளர், விவசாயிகள், இராணுவ வீரர்கள் இவர்களைக் கொண்டவாயுமுள்ள, கட்டுப்பாடுள்ள சோவியத் புரட்சி ஸ்தாபனங்களை ஏற்படுத்த வேண்டும்.

3. ஜனங்களிடம் பலாத்காரத்தைப் பிரயோகிப்பவர்களை, பலாத்கார முறையிலேயே ஜனங்கள் நசுக்கிவிட வேண்டும்.

புரட்சி ஸ்தாபனங்கள் வளர்ந்தோங்கின. அவ் வருஷத்தினிறுதியில் (டிசம்பர்) மாஸ்கோவில் பெரியதோர் புரட்சி கிளம்பியது. ஆனால் மற்ற நகரங்களிலும் ஏககாலத்தில் புரட்சிகளில்லாததாலும், இராணுவத்தினரின் பரிபூரண ஆதரவு இல்லாமையாலும், அப்புரட்சியைச் சர்க்கார் சிரமமின்றி அடக்கிவிட்டனர்.

இப்புரட்சிகளில்தான் லெனினுக்கு எதிர்ப்பு அதிகரித்து, அதுவரை சகாக்களாயிருந்த சிலர் பலாத்காரப் புரட்சிக்குப் பயந்து, அவரை எதிர்த்தனர். அரசாங்கத்தாரின் அடக்குமுறை ஒருபுறம், மென்ஷிவிக்குகள் என்று அழைக்கப்பட்ட கோழைவீரர்களின் எதிர்ப்பு ஒருபுறம். இவை இரண்டையும் எதிர்த்துப் போராடிய லெனின் பட்டபாடு கொஞ்சநஞ்சமன்று. 1912ஆம் வருஷம் தொழிலாளரியக்கம் புத்துயிர் பெற்றுத் தழைத்தோங்கியது. அப்பொழுது அவர் ஸ்தாபித்த ‘பிராவ்டா’ என்ற பத்திரிகை போலீசாரின் கோபாக்கினியையும், சர்க்காரின் பறிமுதலையும் மீறி ஜனங்களிடையே புரட்சிக் கொள்கைகளைப் பரப்பிவந்தது. அவ்வருஷத்திலேயே ஆஸ்டிரியா தேசத்துப் போலீசார், அவரை ஓர் இரஷ்ய வேவுகாரனென்று கருதி, ஸ்விட்ஜர்லாந்துக்குப் பிரஷ்டம் செய்தனர்.

சென்ற மகாயுத்தத்தின் ஏகாதிபத்தியக் கொள்கையை அவர் தீவிரமாய் கண்டித்தார். ஒவ்வொரு வல்லரசும், தன்னுடைய பொருட்களையே அன்னிய தேசங்களில் விற்பனை செய்து இலாபமடையும் பொருட்டும், மற்றவர்களுடைய போட்டியைத் தகர்த்தெறியும் கெட்ட எண்ணத்துடனுமே, யுத்தத்தில் முனைந்து நிற்பதை விளக்கிக் காட்டினார். தேசியம், தேசியம் என்று முதலாளிகள் கூறுவதெல்லாம் தொழிலாளரை வஞ்சிப்பதற்காகவே யல்லாமல் வேறல்ல வென்றும், அம்மாதிரி பிறரை வஞ்சிப்பதற்காகவே ஏகாதிபத்யமுறை ஏற்பட்டிருப்பதால் என்றும் தலைக்காட்டாதவாறு அதைக் குழி தோண்டிப் புதைத்துவிடப் புரட்சி இன்றியமையாதது; அதை விடுத்து, அஹிம்சை அஹிம்சையெனப் பின் வாங்குவது சற்றுத் தகாதென்றும் பொருள் படுமாறு எடுத்துரைத்தார்.

சில இராஜீய வாதிகளும், ஆசிரியர்களும் அவரை அராஜக வாதியெனத் தாக்கியுள்ளார்கள். பலாத்காரத்தை அவர் ஆதரிக்க வில்லை. ஆனால் அப்போதைய சமூக அமைப்பில், வேறு எவ்விதத் திலும், அவருடைய லட்சியத்தை யடையக்கூடாததால் அம்முறை யைக் கையாளவேண்டியது அவசியமாய் விட்டது.

1915ல் ஐரோப்பாவிலுள்ளவர்களும், யுத்தத்திற்கு ஆதரவளிக்காதவர்களுமான, சமூக சமதர்மவாதிகளின் மாநாடொன்று கூட்டி சர்வதேச பொதுவுடைமைச் சங்கத்தை ஸ்தாபித்தார்.

தொழிலாளரின் இயக்கம் சர்வதேச நோக்கமுடையது. எல்லாத் தேசங்களிலும் தொழிலாளர்களுக்குரிய குறைகள் ஒன்றேயாகும், எத்தேசத்தில் பிறந்து எம்மதத்தினனாயினும் சரி, தொழிலாளி என்றால் அவனை உய்விக்க மற்ற வகுப்பாரில் எவரும் கிடையாது. ஆகையால் முன்னேற்றமடைய வேண்டுமாகில் அவர்கள் ஒன்று சேர்ந்து முற்பட வேண்டுமென்று சந்தேகமறத் தெரிவித்தார். காரல் மார்க்ஸின் தத்துவங்களை நன்குணர்ந்து அவைகளின் சாஸ்வதமான உண்மையை உலகிற்கெடுத்துரைத்தார். ரஷ்யப் புரட்சி இயக்கங்களில் அவருக்கேற்பட்ட அனுபவங்களும், உலகெங்கும் தொழிலாளரின் நிலைமையைப் பற்றிய தகவல்களை அறிந்திருந்தாலும், இங்கிலீஷ், ஜெர்மன்,

பிரெஞ்சு, இத்தாலியன், போலீஷ் போன்ற பாஷைகளில் அவருக்கேற்பட்ட பாண்டியத் தியத்தின் உதவியாலும், சர்வதேச தொழிலாளரியக்கத்திற்கு அவர் சேவை புரிவதில் அதிகமான கஷ்டங்கள் தோன்றவில்லை. ஒவ்வொரு தேசத்திற்கும் ஆங்காங்குள்ள நிலைமைகளை யுத்தேசித்துத் தனிப்பட்ட திட்டங்களின் அவசியத்தையும், எல்லாத் தேசங்களுக்கும் பொதுவாக ஏற்பட வேண்டிய இயக்கத்தின் நோக்கத்தையும் திட்டமாக எடுத்துக் கூறியுள்ளார்.

1917ஆம் வருஷம் ரஷ்யாவில் புரட்சி இயக்கம் அதிதீவிரமாய்க் கிளம்பி, ஜாரின் ஆதிக்கத்தை ஒழித்து விட்டது.

புரட்சியாரம்பத்தில் லெனின் சுவிட்சர்லாந்திலிருந்தார். முன்னேற்றத்திற்கெல்லாம் முட்டுக்கட்டை போடும் பிரிட்டிஷ் அதிகாரிகள், ரஷ்யாவிற்கு அவர் செல்வதைப் பலமாக எதிர்த்தனர். ஆகையால் ஜெர்மனி மார்க்கமாய்த் திரும்ப வேண்டி நேரிட்டது.

ஜாரின் ஆட்சியை ஒழித்துவிட்டதால் மட்டும் பயனில்லை. இனி நடக்க வேண்டிய முறைகளைப்பற்றியே யோசிக்க வேண்டும். பாமர ஜனங்கள் ஆயுதந்தரித்து, சோவியத்து சபைகளைப் பலப்படுத்த வேண்டும். கிராமந்தரங்களில் வேலை செய்து கிளர்ச்சிகளைப் பெருக்கி, முதலாளிகளின் அதிகாரத்தைப் பிடுங்கிச், சமூக சமதர்மத்தை அடிப்படையாய்க் கொண்டு ஜன சமூகத்தை நிர்ணயிக்க வேண்டுமென்று தீவிரப் பிரசாரத்தை மேற்கொண்டனர்.

நாற்புறமும் அவருக்கு விரோதிகள் கிளம்பினர். ஏழை, பணக்காரன், முதலாளி, தொழிலாளி என்ற பேதமற்ற தர்மத்தைப் பணக்காரர்களும் பிரபுக்களும் ஒத்துக்கொள்ளவில்லை. லெனின் ஜெர்மனியின் ஆட்சியை ரஷ்யாவில் ஸ்தாபிக்க முற்படுவதாகவே பொய்ப் பிரசாரங்கள் எங்கும் கிளம்பின. லெனினுக்கு ஏற்பட்ட விரோதிகளுக்குக் கணக்கில்லை தோல்வியும் ஏற்பட்டது.

ஆனால், லெனின் அதனால் சோர்வடையாமல் ஒரே ஊக்கத்துடன் பிரசார வேலையிலீடுபட்டதன் பயனாக அதே வருஷம் ஜுலை மாதம் நடந்த தேர்தலில் அவருடைய போல்ஷிவிக் (தீவிர பொதுவுடமை)

கட்சியாருக்கு அதிகப்படியான ஸ்தானங்கள் கிடைத்தன. அதிகாரம் கிடைத்தவுடன் தாமதமின்றி, முன்வைத்த காலைப் பின் வைக்காது எடுத்த காரியத்தை முடித்தாக வேண்டு மென்ற பிடிவாதத்துடன் சுறுசுறுப்பாய் வேலை துவக்கினார்.

உடனே "பாமர ஜனங்களுக்கே சர்வாதிகாரம் உரித்தானது" என்று பறைசாற்றி ஜனங்களுக்கிடையில் தாண்டவமாடிப் பேதம் விளைவித்துக் கொண்டிருந்த ஏழை, பணக்காரன் என்ற வகுப்புவாத உணர்ச்சியை அடியோடு ஒழித்துவிட முற்பட்டார்.

மகாயுத்த உடன் படிக்கையின் காரணமாய்ச் சமாதானம் நிலைத்தவுடன், சர்க்காரின் தலைமை ஸ்தானத்தை மாஸ்கோவிற்கு மாற்றினார். தம்முடைய கட்சிக்கும், இதரர்களுக்கும், இனி ருஷியர், எவ்விதங்களில் முன்னேற்றத்திற்காகப் பாடுபட வேண்டுமென்று எடுத்துரைத்தார்.

ஜெகோஸ்லோவேகியாவில் அவருக்கு விரோதமான கிளர்ச்சிகள் வலுத்தன. யுத்தக்கடனை மறுத்துவிட்டதற்காகப், பிரிட்டிஷார் சொற்படி ரஷ்யாவுக்கு ஆகாராதிகள் மற்றத் தேசங்களிலிருந்து அனுப்பப்படவில்லை. எனினும் லெனின் ஊக்கங் குறையாது ஜனங்களிடையே தமது கொள்கையைப் பற்றிப் பிரசாரம் செய்வதை மும்முரமாய்க் கைக்கொண்டார், உள் நாட்டில் கிளர்ச்சிகளுக்கு காரணபூதமாயிருந்து தொந்தரவு விளைவித்து வந்த மென்ஷிவிக்குகள் 1921இல் இறுதியாக முறியடிக்கப்பட்டனர்.

ரஷ்யாவை மின்சாரமயமாக்குவதைப் பற்றி ஒரு விரிவான யதாஸ்தை லெனின் 1920ல் சமர்ப்பித்தார். ஆலைப் பண்டங்களை சிக்கன முறையில், ஏராளமாய்த் தயாரிக்க வேண்டியதன் அவசியத் தையும், தனிப்பட்ட நபர்கள் வேளாண்மையில் ஈடுபடுவதைக் காட்டிலும் சிலாக்கியமானதான சமூக வேளாண்மையில் சுலபமாய் அனைவரும் விளைபொருட்களைத் தயாரிப்பதற்கான வழிகளையும் விரிவாக அந்த யாதாஸ்தில் குறிப்பிட்டார்.

தன்னுடைய சௌகரியங்களைக் கொஞ்சமும் கவனியாது, சதா ஜன சேவையில் ஈடுபட்டு வேளைக்குணவின்றி உழைத்ததன் பயனாய் அவருடைய சரீர சுகம் கேடுற்றது. 1923ஆம் வருஷத்தில் வலது புறம் பாரிச வாய்வினால் பாதிக்கப்பட்டு, 1924ஆம் வருஷம் ஜனவரி மாதம்

21ஆம் தேதி உயிர் நீத்தார்.

அவரிடம் ரஷ்யர் கொண்ட அன்பு அளவற்றதென்பது, கோடிக்கணக்கான மக்கள் அவருக்குக் காட்டிய கடைசிக் கல்லறை மரியாதையிலிருந்து புலப்படுகின்றது. மாஸ்கோ காட்சிச் சாலையின் இன்றைக்கும் அவருடைய உடல் அழிந்துபோகா வண்ணம் காப்பாற்றி மயக்கப்பட்டிருக்கின்றது.

தாய் நாடு மட்டுமன்று, ஜனசமுகத்திற்கே தம்முடைய தத்துவங்களைப் பறைசாற்றி ஏழைகளுக்குத் தன் ஆவியையே அர்ப்பணம் செய்த லெனினை எவரும், என்றைக்கும் மறக்க முடியாது. இராஜீய சுதந்திரம் மட்டுமல்லாது பொருளாதார சுதந்திரத்தின் அவசியத்தை உலகிற்கெடுத்துக் காண்பித்த லெனின் அழியாப்புகழ் பெற்றுவிட்டார். ரஷ்யாவில் இப்பொழுது கையாளப்பட்டு வரும் இரண்டாவது ஐந்து வருஷ திட்டம் என்பது லெனினுடைய யாதாஸ்தைப் பின்பற்றியதே யாகும். முதலாளி மயமான உலகெங்கும் பொருளாதார நெருக்கடியின் காரணமாய் ஜன சமூகம் தத்தளித்துக் கொண்டிருக்க லெனினைப் பின்பற்றிய ரஷ்யாவில் மட்டும் எவருக்கும் சௌகர்யக் குறைவேயில்லை என்று நாம் கண்கூடாகக் காண்பதிலிருந்து லெனின் போதித்த கொள்கைகள் அனுபவ சாத்தியமில்லாத பகற்கனவன்று வென்பது வெளியாகிவிட்டது.

9.5.1943

## மே தின முழக்கம்

(அடைக்கலமே - அடைக்கலமே என்ற மெட்டு)

கனவு கண்டேன் கனவு கண்டேன்
களிக்கடல் மிதந்திடும் புதுக்குவலயங்கண்டேன் (கன

மனஇருள் விழுங்கிடும் தினகரன் கண்டேன்
மதிஒளி பரப்பிடும் புதுமுறை கண்டேன் (கன

ஆண்டை அடிமையெனும் அவலச் சொல்லங்கில்லை
ஆண் பெண் பேதம் பாராட்டும் அழிகிறுக்கில்லை
வேண்டும் சுயேச்சைப் பேச்சில் விதிவிலக்கில்லை
மீறுஞ்சட்ட திட்டங்கள் கூறுவோரில்லை (கன

மனித சமாஜத்தார் வாழ்வினைக் கண்டேன்
மன்னும் அபேதவாத நன்னிலை கண்டேன்
புனித வாலிபக்காட்சி இனிதுறக் கண்டேன்
பொங்கும் போகபோக்கியம் எங்கணுங் கண்டேன் (கன

கடவுளைக் காத்திடுங் கசடரங்கில்லை
கவைக்குதவாத மதக் கற்பனையில்லை
அடஞ்செயும் புரோகிதத் தடியரங்கில்லை
அநியாயப் பணக்காரச் சனியனங்கில்லை (கன

கவலையில்லா வாழ்க்கைச் சுவைமிகக் கண்டேன்

கருத்தில் துணிவில்யாவும் உருப்படக் கண்டேன்

நவநவமாக இன்பம் தவழ்வதைக் கண்டேன்

நாகரிக உச்சியில் நடனங்கள் கண்டேன் (கன

கசடரின் கனவுகள், தூக்கத்தில் துடிப்பையும், விடிந்ததும் வம்பளப்பையுமே தரும். மேலே நாம், தந்துள்ள கீதம், சமதர்மியின் கனவு. இதனைத் தீட்டிய தோழர் ஜீவானந்தம், இங்கு அக்கனவு இன்னமும் உண்மைக் காட்சியாகவில்லையே என்று உள்ளம் உருகிக் கிடப்பார்; அவர் போன்றே புது உலகங்காண வேண்டுமென்ற நோக்கமுடைய நாமும், உலகிலே பன்னெடு நாட்களாகத் தோன்றி, இன்றும் இடுக்கணின் விளைநிலமாக இருக்கும் கொடுமைகள், களையப்படவில்லையே அநீதி அழிந்து படக்காணோமே, அக்ரமம் அடக்கப்படக் காணோமே என்று ஏங்குகிறோம். கனவு கண்டேன் என்று கூறிடும் சமதர்மத் தோழர்கட்கும் நமக்குமிடையே உள்ள ஒரே வித்தியாசம், நோக்கத்திலேயன்று, நெறியில் இருக்கிறது. நமது பாதை, சமுதாயக் கொடுமை ஒழிப்பு எனும் சுங்கச் சாவடியிலே தாலமுத்துக்களைத் திறையாகச் செலுத்திவிட்டுப் பிறகே, சமதர்மபுரிக்கு நம்மைக் கொண்டுபோய்ச் சேர்க்கக் கூடியது. இஃதன்றி மற்றவை சனாதனச் சுடுகாட்டுக்கோ, ராமராஜ்யமெனும் தர்ப்பைக் காட்டுக்கோ போக உதவுமேயன்றி, உண்மையான உழைப்பாளி ஆட்சி செய்யும் உத்தமபுரிக்குப்போக உதவாது என்ற கருத்துடன், நாம் காரியமாற்றி வருகிறோம்.

இன்பக் கனவுகள் கண்டவர் பலர்; அவைகளை வாழ்விலே உருவாக்கினோர் சிலர். வீணரின் நினைவுகளை உலகு வேண்டாது; வீரரின் கனவை வேண்டி வரவேற்கும். பலப்பல பெரியார்கள், கண்ட கனவுகள், இன்று நடைமுறை உண்மைகளானதைக் கண்டு களிக்கிறோம்.

மேதினியெங்கும் மே தினவிழா கொண்டாடப்படுகிறது. எதன் பொருட்டு? பாட்டாளி மக்களின் விடுதலையைக் குறிக்கோளாகக் கொண்டு, உரிமைக்காக, உழைப்பாளிகள், குருதி கொட்டிடுவர், என்ற உண்மையை ஊராள்வோருக்கும், உதவாக்கரைத் திட்டங்களால் மக்களை உன்மத்தர்களாக்கிடும் உலுத்தர்களுக்கும் உணர்த்துவிக்கும் உன்னதத் திருநாள், மே தினம். பாடுபட்டால், பலன் உண்டு, என்ற பாடத்தைப் பாரிலே, பஞ்சையும் பராரியும், பகல் பட்டினியும், உணரத்

தொடங்கினால், உலகில் ஓடப்பர், எப்படி இருக்க முடியும்? கதிரோன் கிளம்பிய பிறகு, மூடுபனி நிற்குமா! மே தின விழா, மக்களின் மேன்மைக்குரிய, சுகவாழ்வுக்குரிய, இன்பத்துக்குத் தேவையான, வசதிகள் நிரம்பிய இவ் உலகிலே, இல்லாமை இருப்பது ஏன்? என்ற புரட்சிப் பொறிக் கேள்வியைத் தோழர்களின் உள்ளத்திலே உலவ வைக்கும் பெருநாள். இயற்கையின் கோபத்தை அடக்கி, இன்பம் வழியச் செய்யும் பாட்டாளிகளின் கண்களிலே நீர்வழியச்செய்து, முதலாளிக் கூட்டம், இலாபமெனும் கோட்டை கட்டிப், போகமெனும் உப்பரிகை அமைத்து, செருக்கெனும் சிங்காரியுடன் சரசமாடிக்கொண்டு, முன் வாயற்படியிலே மதமெனும் கரியைக் கட்டிவைத்து, மற்ற வாயற்படிகளிலே அரசியல் அதிகாரமெனும் சூலாயுதக்காரரை நிறுத்திவைத்து, வெளியே வேதாந்தி எனும் வேவுகாரரை ஏவி மக்கள் மனதில், மாய்கை, மறு உலகு, கர்மம், என்ற விதைகளைத்தூவி கோழைத்தனம் எனும் பாசக்கொடி படரச்செய்து, தமது குதூகல வாழ்க்கையை நடத்துகின்றனர், என்ற அறிவுரையை, உழைப்பவர் உணரச் செய்து உறுதி தரும் நாள், மே விழா. செங்கொடி தாங்கிய வீரர்கள் பல்வேறு இடங்களிலே இவ்விழாவினைக் கொண்டாடினர். சோவியத் நாட்டிலே, இவ்விழா, பீரங்கி வேட்டுச் சத்தத்தைப் பின்னணிக் கீதமாகக்கொண்டு நடந்தேறியது. விண்ணிலே நாஜி விமானங்கள் பறந்திடினும், மண்ணிலே ரஷிய மக்களின் இரத்தம் குழம்பிடினும், நாஜியின் நாசக்கருவிகள் நாட்டை நானாவிதத்திலே நலிய வைத்தாலும், அந்த வீரமக்கள், பாட்டாளியின் விடுதலை விழாக் கொண்டாட மறக்கவில்லை. மாஸ்கோவில் மே விழா, மனோஹரமான காட்சியாக இருந்ததாம். மாளிகைகளிலே மலர்மாலை சூட்டப்பட்டுத் தலைவரின் உருவப்படங்கள் காட்சி தந்தனவாம். மக்கள், செங்கொடி ஏந்தி, முழக்கமிட்ட வண்ணம் ஊர்வலம் சென்றனர்.

மாஸ்கோவுக்கு வெளியே, க்யூபாவிலே, குற்றுயிராகச் சோவியத் வீரர் கிடக்கக்கூடும், சிகிச்சைச் சாலைகளிலே செஞ்சேனை வீரர்கள், நோயுடன் போராடிக் கொண்டிருக்கக் கூடும். ஆம்! சொல்லொணாத் துக்கத்துக் கிடையேயுங்கூட அந்தச் சோர்விலாச் சூரர்கள் மே தின விழாவை மறக்கவில்லை, எப்படி மறக்கமுடியும்!

மூச்சை அடக்கிக் கடலுள் மூழ்குவோர், குடல் நோகக்குன்று மீதேறுவோர், கைகால் அலுக்கக் காடுகளைவோர், விலாநோக வயலிலே வேலை செய்வோர், உடலும் உள்ளமும் வெந்திடத்

தொழிற்சாலையிலே உழைப்போர், எனும் இன்னோரன்ன பிற தோழர்களின் இருதய கீதமல்லவா, மே விழா! அதனை எங்ஙனம் மறக்க முடியும்?

அவன் குளித்தெடுத்த முத்து ஒரு குமரியின் செவியிலே கூத்தாடுவது காண்பான், வீட்டிலேயோ அந்தத் தொழிலாளியின் குமரி குளிர்போக்கும் போர்வையின்றி உடல் நடுங்கிடக் காண்பான், அவன் உள்ளம் குமுறும், எரிமலைபோல்! அவன் வெட்டி எடுத்த தங்கத்தை ஆபரணங்களாக அணிந்த ஆடலழகிகளை அவன் வேலிக்கு அப்புறம் இருந்தே பார்ப்பான், அவன் வீட்டிலேயோ தரித்திரமன்றி வேறோர் அணி இல்லை. அவன் கட்டிய மாளிகையை அண்ணாந்து பார்த்து விட்டு, குடிசைக்குள் அவன் குனிந்து நுழைவான். வெப்பத்தைப் போக்கிக்கொள்ளச், சீமான்கள், நந்தவனம் அமைக்கத் தொழிலாளியை ஏவுவர்; அதைச் செய்து முடித்த தொழிலாளியின் உள்ளும் புறமும் தாங்கொணா வெப்பத்தால் தவிக்கும்.

அவன் செவியிலே, வேத ஒலி கேட்கிறது, வீட்டிலே வறுமையால் வாடிடும் குடும்பத்தின் அழுகுரல் கேட்கிறது. அவன் காணும் கோயில்கள் வானை முட்டுவது போலக் கெம்பீரமாக இருக்கிறது, அவன் வாழுமிடத்திலேயோ சரிந்த சுவரைத் தாங்க மூங்கிற்கொம்பு, அது முறிந்தால், அதற்குக் கயிற்றுச் சுருளைக் காப்பு! அவன் காணும் கோயில்களிலே மணியோசை கணீர் கணீர் எனக் கேட்கிறது, அவன் மனைவியோ, பசியால் அழும்பாலகனுக்குப் பால் தர இயலாததால், குழந்தையின் முதுகில் பளார், பளார் என்று தரும் அறைச்சலின் சத்தம் காதிலே விழுகிறது. அவன் வணங்கும் தேவனும் தேவியும், பொன்னாபரணமும் நவரத்தினாபரணமும் பூண்டு, பட்டுப் பீதாம்பரம் அணிந்து, பரிவாரம் புடை சூழ, பவனி வருவதைக் காண்கிறான். அவனும் அவனுடைய குடும்பமும், கந்தல் ஆடையுடன், கூலி தருவாருண்டோ வேலை செய்கிறோம் என்று கூவித்திரிய வேண்டியிருக்கிறது. அவன் திகைக்கிறான்! அந்தத் திகைப்பின் விளைவு தான், கூப்பிய கரத்தோனை குமுறிய

நெஞ்சிலனை, நீர் சுரக்கும் கண் கொண்டோனை, கோழையை, வீரனாக்கி விட்டது - மற்ற இடங்களிலே - இங்கோ, அவனுக்கு நாலு வேதம், ஆறு சாஸ்திரம், பதினெண் புராணம், 64 கலை, சைவ வைணவ நூற்கள்; துவைதம், அத்வைதம் விசிஷ்டாத்வைதம், என்பன போன்றவைகள் தரப்பட்டு, எழுச்சிக்குப் பதில் விசாரமும், வீரத்தகுப் பதில் கிரகசாரச் சிந்தனையும் உண்டாகும் படி செய்து, நடைப்பிணங்களாக்கப் பட்டனர். காந்தீயம், அவர்களைத் "தேசீயம்" எனும் தொட்டிலிலிட்டு ஆட்டித்தூங்க வைக்கிறது! இந்நாட்டுப் பாட்டாளிகள் நிலை இது. எனவே, மே தின விழாக்களை ஆண்டுதோறும் விமரிசையாகக் கொண்டாடினாலும், மார்க்சின் கொள்கையைப் படித்தாலும், லெனினைப் புகழ்ந்தாலும், இங்குள்ள தொழிலாளர்களின் உள்ளத்திலே, புதுமை உணர்ச்சியோ, புரட்சிகரமான எழுச்சியோ இன்று வரை ஏற்படக்காணோம்.

உலக மக்கள் யாவரும் நல்வாழ்வு நடத்தத்தக்க இயற்கை வசதிகளும், அவைகளைப் பயனுள்ளதாக்கிடும் தொழில் சத்தியம், அமோகமாக இருந்தும், கஷ்டமனுபவிப்போரின் தொகை ஏராள மாகவும், சுகமனுபவிப்போர் சிறு கூட்டமாகவும் இருக்கும் பேதக் கொடுமை இருக்கிறது. களஞ்சியங்களிலே தானியங்கள் குவிந்து கிடக்க, காய்ந்த வயிற்றுடன் கஷ்டப்படும் தோழர்கள் வேறோர் புறம் குமுறுகின்றனர். தேக்கம் ஓரிடத்தில், தவிப்பு மற்றோரிடத்தில்; ஒரு சிலர் பூந்தோட்டத்தில் பாலைவனத்திலே மிகப் பலர் என்றுள்ள இம்முறையை உலக முரண்பாடு என்றுரைத்தார், காரல் மார்க்ஸ். ஆனால், இந்த முரண்பாட்டினைக் கண்டு கலங்கி, அவர் ஒடுங்கி விடவில்லை. கைவிரிக்கவுமில்லை. கடவுளாணை என்று சூதுரைக்க வில்லை. பொறுத்துக் கொள்க என்று போதனை புரியவுமில்லை - உழைத்திடும் தோழர்களே! உங்கள் உழைப்பின் பலனை, ஒரு சிறு கூட்டம் இடையே நின்று தடை செய்து, தேக்கிக் கொள்கிறது, எனவேதான், உங்களுக்கு வரவேண்டிய பலன் உங்கட்குக் கிடைப் பதில்லை, எனவே, இந்த "இடைச்செருகல்களை" அப்புறப்படுத் துங்கள் என்று கூறினார். பாட்டாளியின் பரணி இடிமுழக்க மென்றெழுந்ததும் நச்சரவுபோன்ற போகப்பிரியர்கள் பிடரியில் கால்பட ஓடினர். இங்கோ, பிரபஞ்ச முரண்பாடு, ஏன் இருக்கிறது என்பதற்கு, வேதாந்தம் பதில் கூறிவிட்டது;

சுகமும் துக்கமும் மாறி மாறித்தான் வருமப்பா, இந்த லோகத்திலே கஷ்டமனுபவித்தால் அடுத்த லோகத்திலே சுகம் உண்டு என்று நயவஞ்சகம் பேசி, மக்களை நலியச் செய்தனர்.

எனவேதான், நமக்குச் சமதர்மத்திலே ஆர்வம் நிரம்ப இருப்பினும்; அதற்காக உழைக்கச் சளைக்க மாட்டோம் என்றாலும், காந்தீய வேதாந்திகளும், மத போதகர்களும், பார்ப்பனியப் பாதுகாவலரும், பீடங்களில் இருக்கும்வரை, வழி மறைத்திருக்குதே என்றே குமுற வேண்டும் என்பதை உணர்ந்து, இந்தக் கூட்டத்தின் கொட்டத்தை அடக்கும் பணியாற்றி வருகிறோம். ஜார்சாயுமுன் ரஸ்புடீன் சாயவேண்டும் என்பது எமது நோக்கம்; அதற்கேற்பவே, எமது போர் முறையை அமைத்துள்ளோம்.

துப்பாக்கிக்கும் ஈட்டிக்கும், தடியடிக்கும் மார்பு காட்டியே, மேதின விழாவின் காரணகர்த்தர்கள், மேதினியில், இந்நாள் தோன்றிடச் செய்தனர். 16, 12, 10 மணி நேரங்கள் செக்கு மாடுகள்போல் உழைத்து அலுத்த தோழர்கள், நாளொன்றுக்கு 8 மணி நேரமே வேலை செய்வோம் என்று உறுதியுடன் கூறினர். 1880ஆம் ஆண்டு மே மாதம் முதல் தேதி, இச் சூள் உரைத்த, அமெரிக்கத் தொழிலாளர் கூட்டம் கிளர்ச்சி நடத்திற்று. கிளர்ச்சியை அடக்கக் கடுமையான தண்டனைகள் தரப்பட்டன. கஷ்ட நஷ்டம் அதிகம். ஆனால், தோழர்கள் துளியும் அஞ்சாது கிளர்ச்சியில் உறுதியுடன் நின்றனர், வென்றனர், அவர்கள் அன்று சிந்திய இரத்தத்தை ஆண்டுதோறும் மேதின விழாவில், பாட்டாளி மக்கள் தமது நினைவினில் இருத்துவர். அதனால் உண்டாகும் உணர்ச்சியே ‘கவைகளை’ உண்மைக் காட்சிகளாக்கும். இவ்வாண்டு மே விழாவில் ஸ்டாலின் பேசுகையிலே இதுபோது உலகுக்கும், சோவியத் நாட்டுக்கும் ஏற்பட்டுள்ள இடுக்கணைத் தீர்க்கத் தீரமாகப் போரிட வேண்டும் என்பதனை வலியுறுத்திச் செஞ்சேனையின் வீரத்தையும் தியாகத்தையும் பாராட்டியதுபோல, மேதின விழாவன்று, பொதுவான இலட்சியத்தை பற்றி அறிந்து கொள் வதுடன், திராவிடத் திருநாட்டினைக் கெடுத்துவரும் ஆரியத்தை அழிப்போம், என சூள் உரைத்து சோர்வின்றி உழைக்கத் திராவிடத் தோழர்கள் முன் வேண்டுகிறோம். ஏனெனில், ஆரியம் அழிந்தாலன்றி இங்கு அபேதவாதம் ஏற்படாது. புகுத்தப்படினும் நிலைக்காது. எனவே மே தினவிழா முழக்கமாகத் திராவிடத் தோழர்கள்,

ஆரியம் அழிக,

அபேதவாதம் வாழ்க

சனாதனம் வீழ்க

சமதர்மம் வாழ்க

என்ற சூளுரைகளைக் கொள்ள வேண்டுகிறோம்.

(9.5.1943)

# விடுதலை வீரன் ரூஸோ !

(மேதினி எங்கும் கொண்டாடப்படும், மேதின விழா வாரத்தில், குறிப்பாக பிரான்சுக்கும், பொதுவாக ஐரோப்பாவுக்கும், விடுதலை உணர்ச்சியை ஊட்டிய விடுதலை வீரன் ஜீன் ஜாகஸ் ரூசோவின் வரலாறு, பயன்தரும் விருந்தாகுமென்று அதனைத் தந்திருக்கிறோம்.)

* * *

பேனா, வாளைக்காட்டிலும் அதிக வல்லமை வாய்ந்தது என்றார் ஒரு மேனாட்டு மேதாவி. எத்தனையோ அறிஞர்கள் தங்களுடைய எழுத்து வன்மையால் அரசாங்கங்களை கவிழ்த்திருக்

கிறார்கள்; பொது மக்களுடைய எண்ணங்களை அசைத்து ஆட்டி இருக்கிறார்கள்; சிறியார்களைப் பெரியார்களாக்கி இருக்கிறார்கள். பெரியார்களைச் சிறியார்களாக்கியிருக்கிறார்கள். அமெரிக்காவில் எழுதப்பட்ட ‘அங்கிள் டாம்ஸ் காபின்’ (ஹிஸீநீறீமீ ஜிஷீனீ’ண் சிணீதீவீஸீ) என்னும் நாவல், நீக்ரோ அடிமைகளை விடுதலை செய்வதற்காகப் பெரிய உள் நாட்டுக் குழப்பத்தை உண்டு பண்ணியது. ‘மார்க்ஸ்’ எழுதிய நூல் இன்றைய ருஷ்யாவின் நிலைமைக்கும், ருஷ்யப் புரட்சிக்கும் காரணமாகும். ‘வால்டேர், ரூஸோ’ என்பவர்களால் இயற்றப்பட்ட புத்தகங்கள் பிரஞ்சுப் புரட்சியைத் தோற்றுவித்தன. எண்ணங்கள் அபாரசக்தி வாய்ந்தவை. அவைகளால் ஜனங்களுடைய நிலைமை தலைகீழாக மாறி இருக்கிறது. இத்தகைய வல்லமை வாய்ந்த எண்ணங்கள் வெளியிட்டுப் பிரஞ்சு தேசத்துப் புரட்சியை உண்டாக்கியவர்களில் ரூஸோவாக ஒருவர். அவர் பெரிய இராஜீய ஞானி. அவருடைய புத்தகங்களைப் பிரான்சு தேசத்து மக்கள் ஆரஞ்சிப் பழங்களை வாங்குவதைப்போல் வாங்கினார்கள். ‘சன்யாட்சென்’ என்னும் வீரரால் சைனா சுதந்திரமடைந்ததைப் போலும், ஜக்லுல் பாட்சாவால் எகிப்து இன்பமடைந்ததைப் போலும், திவாலராவால் அயர்லாந்து சுயேச்சை பெற்றதுபோலும், வாஷிங்டனால் அமெரிக்கா பூரண விடுதலை அடைத்ததைப் போலும், பிராஞ்சு நெப்போலியனால் கொடிய அரசர்களின் உடும்புப் பிடியிலிருந்து விடுபட்டுச் சுபிட்சம் அடைந்தது. நெப்போலியனுக்குப் பக்கத் துணையாயிருந்தவைகளில் ரூஸோவின் நூல்களும் சிலவாகும்.

ரூஸோ பிறப்பதற்கு முன் ஐரோப்பாக் கண்டத்திலுள்ள நாடுகளில் கிறிஸ்து மதப் பித்தம் அதிகரித்திருந்தது. மதத்தின் பெயரால் கத்தோலிக்கக் கிறிஸ்தவர்கள் செய்த அக்கிரமங்கள் கணக்கிலடங்காதவை. மத குருவாகிய போப்பும், இதர குட்டிப் பாதிரிகளும் இட்டதுதான் கட்டளை. இது போதாதென்று அரசர்களும், பணக்காரர்களும் ஏழைகளை இம்சித்து வந்தனர். மக்கள் எல்லாச் சுதந்திரங்களையும் இழந்து, மூடநம்பிக்கைகளில் ஆழ்ந்து அடிமைகளுக்கும் கேவலமாய், விலங்கினத்துக்கும் தாழ்ந்தவர்களாய் காலத்தைக் கடத்தி வந்தனர்.

இத்தகைய நிலையில், ரூஸோ 1712-வது வருஷத்தில் பிறந்தார். இவருடைய தந்தை ‘ஜினிவா’ நகரத்தில் காலத்தை அளக்கும் கருவிகள் தயார் செய்பவர். சிறுவயதில் ரூஸோ கல்வி கற்காது, எத்தொழிலிலும் பழகாது நன்னெறியற்றவர்களோடு சுற்றித்திரிந்து கொண்டிருந்தார். இதனால் அவர் ஆரோக்கியம் குன்றி மனோவியாகூலத்தில் மூழ்கியிருந்தார். இத்தனை கஷ்டங்களைப் பெற்றிருந்த போதிலும் யாரையும் அலட்சியம் செய்யாது வாழ்ந்து வந்தார்.

அவர் நூல்கள் இயற்றத்தொடங்கியவுடன், அவருடைய தீவிர எண்ணங்களைக்கண்டு அரசர்களும் முதலாளிகளும், மத குருக்களும் நடுநடுங்கினர். பொது ஜனங்களோ அத்தியந்த அன்போடு அவரை ஆதரித்தனர்.

அவர் நூல்களில் அரசர்கள் ஆகாயத்தைப் பொத்துக்கொண்டு ‘பொத்’தென்று பூமியில் குதித்து விடவில்லையென்றும், மனிதர் யாவரும் சரிசமமானவர்களே யென்றும், ஒருவருக்கிருக்கும் சுதந்திரங்கள் எல்லோருக்கும் இருக்க வேண்டுமென்றும் எழுதினார். கிறிஸ்து மதத்திலுள்ள அக்கிரமங்களைத் தீவிரமாகக் கண்டித்தார். ஆயிரக்கணக்கான நூல்கள் சில மணிநேரத்தில் வியாபாரமாயின.

‘நியூஹெலாயிலா’ என்ற நாவலே அவருடைய நூல்களில் முதலாவதாகும். பிராஞ்சு தேசத்தில் மாத்திரமின்றி, ஜெர்மனியிலும் அவருடைய கீர்த்தி பரவிற்று.

பெண்கள் அவருடைய கைப்பட்ட காகிதத்தை முத்தமிடவும், அவர் நீர் அருந்திய பாத்திரத்தில் நீர் அருந்தவும் ஆசைப்பட்டனர். அவருடைய

எழுத்துக்கள் மக்களுடைய நெஞ்சில் எழுச்சியையும், வீரத்தையும் மூட்டிவிட்டன. 1762வது வருஷத்தில் அவர் 'சோஷியல் கான்ட்ராக்ட்' என்ற நூலை எழுதினார். அதுதான் அவருடைய நூல்களில் முதன்மையானதாகும். ஜனங்களுடைய சித்தமே சட்டமாகும். எவ்வரசாங்கத்தில் மக்கள் விருப்பம் குறைகிறதோ, அப்போது அவ்வரசாங்கத்தை அழித்துத் தங்கள் இஷ்டம்போல் வேறு அரசாங்கத்தை அமைக்கலாம்; பிரஜைகளுக்காக அரசாங்கமேயொழிய அரசாங்கத்துக்காகப் பிரஜைகள் இல்லை என்பது அவருடைய ராஜீய தத்துவம் ஒரு கிறிஸ்தவனுக்குக் குழந்தையாய்ப் பிறந்ததினால் அதுவும் கிறிஸ்து மதத்திலேயே இருக்க வேண்டும் என்னும் நிர்ப்பந்தம் கூடாது என்று முழங்கினார்.

இத்தகைய தலைகீழ்ப் புரட்சியை உண்டாக்கும் அவர் நூல்களைப் பறிமுதல் செய்யவும் அவரைக் கைது செய்யவும் அரசாங்க ஆணை ஏற்பட்டது. ரூஸோ உடனே பிரான்சு நாட்டை விட்டு வெளியேறினார். அவர் எந்த எந்த தேசத்துக்குப் போனாரோ, அந்த அந்த தேசத்து அரசர்களும், பாதிரிகளும் அவரைக் கைது செய்யும்படி உத்தரவு போட்டனர். ஆகவே அவர் ஓர் இடத்தில் நிலைத்திராமல் எட்டு வருஷங்கள் நாடோடியாகத் திரிந்தார். பிறகு தன் நாட்டில் வசிக்கலாமென 'பிரஷ்யா' அரசன் அனுமதித்தான். 'பிரடரிக் - தி - கிரேட், என்னும் அவ்வரசன் பரந்த நோக்குடையவன், ரூஸோவுக்கு வேண்டிய உதவிகள் செய்வதாகவும் வாக்களித்தான். ஆனால் ரூஸோ அவ்வரசனுக்கு எழுதிய கடிதத்தில் 'நான் அரசர்களுக்கு விரோதமானவன்' அவர்களைக் கண்டித்து எழுதியுள்ளேன். இன்னும் எழுத உத்தேசித்திருக்கிறேன். ஆகையால் உங்களுடைய உதவி எனக்குத் தேவையில்லை. அரசர்களிட மிருந்து ஒரு சல்லியும் கை நீட்டிப் பெறமாட்டேன். எனக்குச் சம்பாதித்துக் கொள்ளத் தெரியும் என்று குறிப்பிட்டார். கடைசியாக 'மோடியா' என்ற கிராமத்தில் ஒரு சிறிய குடிசையைக் கட்டிக்கொண்டு தன்னுடைய வாழ்க்கைத் துணைவியோடு வசிக்கலானார். அவருடைய புத்தகங்களை அச்சிட்டு வெளியிடுபவர் மாதம் ரூ. 16 அனுப்பிக் கொண்டிருந்தார், அத்துடன் அவரும் அவருடைய வாழ்க்கைத் துணைவியாரும் ஜரிகை தயார் செய்து விற்று மாதம் 5 அல்லது 6 ரூபா சம்பாதித்து வந்தனர்.

அந்தச் சிறிய குடிசையிலும் எளிய வாழ்க்கை நடத்தவிடாது கிறிஸ்துவ மத குருக்கள் துரத்தியடித்தனர். ரூஸோவுக்கு

நாஸ்திக னென்னும் பட்டஞ்சூட்டிப் பாமர ஜனங்களிடையே அவருக்கு விரோதமாக ஆவேசத்தைக் கிளம்பி அவரை வெளிக்கிளம்பும்படி செய்தனர். ரூஸோ அதைவிட்டு ஒரு தீவில் வசிக்கச் சென்றார். அத்தீவிலுள்ள அரசாங்கத்தாரும் பதினைந்து நாட்களில் வெளியேற வேண்டுமென அவருக்கு உத்தரவிட்டார்கள். ரூஸோ அதையும் விடுத்து எங்கேயோ புறப்பட்டுப் போகும் வழியில் பாரிஸ் நகரில் தங்கினார். பொது ஜனங்கள் இடித்துத் தள்ளிக்கொண்டு அவரைப் பார்க்க வந்தார்கள். அரசர், ரூஸோவுக்கு விரோதமாயிருந்தாலும் மந்திரிகள் அவரை இரகசியமாக வந்து கண்டு தரிசித்தனர்.

இருபது நாட்களுக்குப் பின் ரூஸோ இங்கிலாந்து சென்றார். அங்கே வித்வான்களும், பொது மக்களும் குதூகலத்துடன் வரவேற்று கௌரவமளித்தனர். அங்கும் பல பேரோடு சச்சரவேற்படவே மீண்டும் பிரான்சுக்குத் திரும்பினார்.

அப்போது பிரான்சு தேசத்தில் ரூஸோவுக்கு அளவு கடந்த மதிப்பு ஏற்பட்டுப் போயிருந்தது. தலைவர்களும், பொது ஜனங்களும் ரூஸோவின்பால் கொண்டுள்ள அத்தியந்த அன்பைக் கண்டு அரசர் அவர் விவகாரத்தில் தலையிடுவதை மறந்தார். ரூஸோவும் பிரான்சிலேயே தங்கினார். கடைசியாக ஆரோக்கியங்குன்றி அவர் 1778-ம் ஆண்டு ஜுலை மாதம் 2-ந் தேதி ‘எர்மினன் வில்லி’ என்னும் கிராமத்தில் காலமானார். அவர் சவத்தைப் புதைக்க கிறிஸ்தவக் கோவில்களில் ஒரு மத குருவும் இடந்தரவில்லை. சவத்தைப் புதைக்கவும் ஒரு மதாச்சாரியும் வரவில்லை. ரூஸோவின் சிநேகிதர்களாகக் கூடி ஒரு தீவில் அவரை அடக்கஞ் செய்தனர்.

ரூஸோவைத் நெருப்புக் கொழுந்து விட்டு எரிந்து ஜனங்களுடைய உள்ளத்தில் கொதிப்பை உண்டாக்கி அதன் பயனாய்ப் பெரும் புரட்சியொன்று பிரான்சில் தோன்றியது. அவர் இறந்த 16 வருடங்களுக்குப் பின் அரசர் அழிந்து, அவர் கொள்கைகளை அனுசரித்த ஆட்சி தோன்றியபோது, பொது ஜனங்கள் விருப்பத்தின் படி பீரங்கிகளின் முழக்கத்துடனும், வாத்திய கோஷங்களுடனும், ஜெய கீதங்களுடனும் அவர் எலும்புகளைத் தீவினின்றும் எடுத்து வந்து பாரிஸ் நகரத்தில் பெரிய மகான்கள் அடக்கம் செய்யப் பட்டிருக்கும் இடத்தில் அரசாங்கத்தார் புதைத்தனர்.

ரூஸோவின் உடல் அழிந்துபோய் விட்டாலும், அவருடைய எண்ணங்கள் இன்னும் உயிரோடிருக்கின்றன. அவைகள் என்றென்றும், மனிதர் ஹிருதயங்களில் உயிரள்ளவையாக விளங்கும். இன்று ரூஸோ உயிருடனிருந்தால் தன்னுடைய கொள்கை உலக முழுதும் பரவி விளங்குவதைக் கண்டு ஆனந்த மடைவார், அவர் எழுதிச் சென்ற ஒவ்வொரு வார்த்தையும் பெரும் மந்திரங்களாகத் தற்போது விளங்குகின்றன பழைய மந்திரங்களுக்குப் பதிலாக உலகமெங்கும் இப்போது இவைகள்தான் ஜபிக்கப் படுகின்றன.

9.5.1943

# அந்தக் கணபதிக்கு ..!

“அந்தக் கணபதிக்குத் தொந்தி பெருத்தவிதம் அறியச் சொல்லும் எந்தன் முன்னே, முன்னே.”

“அந்தக் கணபதிக்குத் தொந்தி பெருத்தவிதம், கொழுக்கட்டை தின்னதினால் அண்ணே, அண்ணே.”

இந்த விகடப் புரட்டை, நகைச்சுவை விருந்தூட்டும் நண்பர் என்.எஸ். கிருஷ்ணன், தாம் நடித்த திருநீலகண்டரிலே பாடக் கேட்டிருப்பீர்கள். கொழுக்கட்டை தின்றதால் கணபதிக்குத் தொங்கு வயிறு ஏற்பட்டது என்பதனைக் கூறுமுன் அவர் தத்தளிக்கக் கண்டிருப்பீர்கள். சரியான பதில் கூறு முடியாமல் அவர் அவ்விதம் தவிக்கிறார் என்றே எண்ணி இருப்பீர்கள். எனக்கு அவ்விதம் தோன்றவில்லை. கணபதியின் வயிறு அவ்விதம் வீங்கிக் கிடப்பதன் காரணத்தைப் புராண ஆதாரத்தன்படி கூறலாமா, கூடாதா, கூறினால் மக்கள் என்ன நினைப்பார்களோ என்று யோசித்துக் கொண்டிருந்ததாலேயே என்.எஸ். கிருஷ்ணன் பதில் பாட்டுப்பாட அவ்வளவு நேரம் பிடித்தது என்று கருதுகிறேன். உண்மையாகவே கொழுக்கட்டை தின்றதால், கணபதியின் வயிறு பெருத்து விட்டதாகக் கூறுவதைவிடப் புராண ஆதாரத்தைக் கூறியிருந்தால், வேடிக்கை வேந்தனே விலா நோகச் சிரித்தாக வேண்டும், அவ்வளவு விசித்திரமான வரலாறு இருக்கிறது புராணத்திலே.

கணபதியின் தொந்தி பெருத்திடக்கூடிய சம்பவம் ஒன்று நடந்தது. அதாவது, ஒரு கொடிய அரக்கன், பிள்ளையாரின் வயிற்றிலே கிடப்பதால், தொந்தி பெருத்துவிட்டது. அந்த அரக்கன், சாமான்யமானவனல்லன், தேவரை வாட்டி வந்தவன். குடிப் பிறப்போ உயர்தரமானது, யமனுக்கும் திலோத்தமைக்கும் பிறந்தவன் அந்த அசுரன். எப்போது இந்தத் திருமணம் நடந்தது என்று ஆராயத் தொடங்கி எமது அடுத்த படம் “திலோத்தமை திருமணம்” என்று பட முதலாளிமார்கள் எவரேனும் விளம்பரப்படுத்துவார்களோ, என்னமோ நானறியேன். ஆனால் புராணத்தின்படி பார்த்தால், யமனுக்கும் திலோத்தமைக்கும், திருமணம் நடக்காமலேயே, இந்த அசுரக்

குழந்தை பிறந்ததாகத் தெரியவருகிறது. எங்ஙனம்? சரி, அதனை நான் கூறினால், இப்படி ஆபாசங்களைச் சொல்லாதே பரதா! என்று என்மீது அன்பர்கள் கோபித்துக் கொள்ள வேண்டாம், நான் கூறுவது, புராணம், பக்தகோடிகளின் சிரவணாபரணம்!

ஒருநாள், தேவநடன மாதர்களிலே ஒருவளும், மகாசுந்தரியும், லலிதமான குணவதியும், நடனக் கலையிலே வல்லவளுமான திலோத்தமை, யமனுடைய தர்பாரிலே நடனமாடிக் கொண்டிருந் தாள். அன்று அவளுடைய ஆடல், அழகு, அழிவுத் தேவனின் மன உறுதியை அழித்துவிட்டது. திலோத்தமையின் சுழலும் கண்கள், யமனுடைய மனதைச் சுழலவைத்தது. அவன் மோகவயத்தனானான். காமக்குரோதிகளை அடக்குவதுதானே ஞான மார்க்கம், சத்புருஷர்கள் செய்யவேண்டிய காரியம் என்று கேட்பீர்கள். ஆமாம் தோழர்களே! ஆனால், அது, நரருக்கு! தேவர்களுக்கு, தேவ மாதருடன், லீலாவிநோதமாக இருப்பது உரிமை!! எனவே, யமன், திலோத்தமையின் அழகிலே சொக்கியது, தேவருலகச் சட்டப்படி குற்றமாகாது! அங்கே, இதைவிட விபரீதமான சம்பவங்கள் நடந்ததாகக் கூறுவர், தண்டனை கிடையாது, ஏதேனும் இருப்பினும் சாதாரணமானதாக இருக்கும், இந்தியன் பினல்கோட் அங்கு கிடையாது. நடன சுந்தரியாம் திலோத்தமையைக் கண்டு காமங்கொண்ட யமன், எவர் மீதும் பாசக்கயிறு வீசும் தன்மீது, திலோத்தமையின் அழகெனும் பாசம் வீசப்பட்டது கண்டு, நெஞ்சு நெகிழ நின்றான். நின்றதும், வீரியம் வெளிப்பட்டது. வெளிப்பட்டதும், ஒரு குழந்தை ஜெனித்தது. அக்குழந்தையே அரக்கன். அவன் பிறகு செய்த அக்ரமத்தைக்கண்ட விநாயகர், அவனைத் தூக்கி, விழுங்கி விட்டார். கணபதிக்குத் தொந்திவந்த விதம் இது! புராணத்திலிருப்பது, மகா ஆபாசம், என்பீர்கள், கேவலம்; கேட்கவே பிடிக்கவில்லை, என்று கூறுவீர்கள். செவிச்சுவை உணராத உங்களுக்கு எப்படி இவை இனிக்கும். நீவிர் வெறும் வாயுணர்வின் மாக்கள் என்று முன்பே முத்தமிழ் கற்ற பக்தர்கள் கரந்தையில் கூறிவிட்டனரே! கடவுட்கொள்கையுணராத நமக்கு இக்கதைகளின் சுவை தெரியாது, அந்தக் கல்விமான்கள் அறிவர், இத்தகைய புராணங்களின் சுவையை!!

தோழர்களே! இவைபோன்ற எண்ணற்ற நிகழ்ச்சிகளைப் புராண ஏடுகள், வெண்பாவாகவும், விருத்தமாகவும், அறுசீர் எழுசீர் அகவல் அந்தாதி, கொச்சகக் கலிப்பா என்று பல்வேறு

விதமான உருவங்களுடன் தாங்கிக் கொண்டுள்ளன. என்ன பேதமை ஐயா! இப்படி ஒரு தேவலோகமா! நடனமாடுபவளைக் கண்டதும், விந்து வெளிப்படுவதா, அது குழந்தையாக மாறுவதா, அது கொடுஞ்செயல் புரிவதா, அதனை மூலக்கடவுளின் மூத்த மகன் வாழைப்பழம்போல எடுத்து விழுங்குவதா இத்தகைய ஆபாசம் எவ்வளவு அணி சிறந்த பாக்களால் அமைக்கப்பட்டிருப்பினும், அதைப்படித்து அறிவு என்ன பெறக்கூடும்? என்று நாம் கேட்கிறோம். செவிச்சுவையைச் தேடிடும் செந்தமிழன்பர்களோ, அறிவுச்சுவைபற்றி அக்கரைகாட்ட மறுக்கின்றனர். ஆண்டவனைப்பற்றி இவ்வளவு ஆபாசமான கதைகளிருக்கின்றனவே, என்று தெரிந்து, வெட்கத்தால் தலை குனிந்து துக்கத்தால் கண் துடைத்துக் கொண்டு, வெளிநாட்டு விரோதிகள் முன்நிற்கக் கூசி வேதனைப் படவேண்டிய நமது அன்பர்கள், "இவனென்ன கண்டான் கவிச்சுவையை! கதையைக் கூறினானே

யன்றி, கவி இலட்சணத்தைக் கண்டானோ, அணியழகைத் தெரிந்து கொண்டானோ, இவன் செவிச்சுவை உணராதவன்" என்று கூறி நம்மீது சீறுகின்றனர். இவர்களை என்னென்பது தோழர்களே! இத்தன்மையான இழிவும் மடைமையும், ஆபாசமும் அறிவீனமும், கடவுட் கதைகளாக்கப்பட்டுள்ளனவே, என்று இவர்கள், வெட்கித் தலை குனிந்து, அந்த ஏடுகளை வீசித் தீயிலிட்டாலன்றி, இந்த நாட்டிலே அறிவு ஆட்சி செய்ய முடியுமா கூறுங்கள். அறிவு ஆட்சி செய்யாமுன்பு ஆண்மை இருக்குமா? ஆண்மை இல்லையேல், வேறு எது இருந்தும் என்ன பயன்? ஏன், இவர்கள் இதனைச் சிந்தித்துப் பார்ப்பதில்லை என்று கேட்கிறேன். ஒரு கடவுளுக்கேனும், ஒழுங்கான, யோக்யதையான, ஆபாசமில்லாத, நீதிநெறிக்கேற்ற கதையைக் கூறினரோ! ஒரு கடவுளையேனும், கட்குடியன், காமச் சேட்டைக்காரன், கள்ளன், பிறன்மனைவிழைபவன் எனும் கொடிய குற்றங்கள் செய்தவனாகவன்றி, வேறு, சத்புருஷனாக்கிக் காட்டியுள்ளனரோ. உண்மையில் பார்க்கப்போனால், கவிதா இலட்சணத்துக்காக என்ற சாக்குக்காகவாகிலும் புராண இதிகாசங்களைப் படித்தால், படித்தவனின் மனம், மான ரோஷத்தை மதிக்கக்கூடிய நிலையிலே இருக்குமானால், அவன், இத்தகைய புராணங்களை "என் மார்க்க

ஏடுகள் - என் கடவுள் காதைகள் - என் இலக்கியங்கள்” என்று கூறக்கூசுவான். அவ்வளவு அநாகரிக ஆபாசங்கள், புராணங்களிலே நெளிகின்றன. அவைகளைக் கைவிட, இவர்களுக்கு மனமில்லை, இவர்களை என்ன வென்று கூறுவது!

* * *

ஆமாம் தம்பீ! இப்படிப் புராணங்களிலுள்ள ஆபாசங்களை எடுத்துக் கூறிக்கொண்டே இருப்பதால், கோரின பலன் கிடைக்குமா? மக்கள் ஏதேனும் ஒரு கருத்தைத்தானே தழுவிக் கொள்வர். நீங்கள் கம்ப இராமாயணம் கூடாது, பெரிய புராணம் கூடாது, என்று புராண இதிகாசங்களைக் கண்டித்து ஒதுக்கித்தள்ளச் சொன்னால் போகாதே! சரி இவைகள் வேண்டாமென்றால், வேறு எதனை நாங்கள் கொள்வது, எங்களுக்கு ஏதேனும் வேண்டுமே, என்று மக்கள் கேட்பரே அதற்கென்ன செய்வீர்! என்று என் நண்பரொருவர் என்னைக் கேட்டார். அவர், அக்கேள்வியை மிகச் சமர்த்தானதென்றுதான் கருதியிருப்பார், இல்லை என்றால் அக்கேள்வியைக் கேட்கும்போது அவருடைய முகத்திலே ஒரு களையும், கண்களிலே பூரிப்பும் ஏற்பட்டிருக்காதல்லவா!

* * *

ஒரு கதை! கண்கள் கொல்லைப் பழமாகக் காணப்பட்டது, குடிவெறியால். வைதீகனின் மந்திர ஒலி தமிழருக்கு எங்ஙனம் புரியாதோ, அதுபோல யாருக்கும் புரியமுடியாதபடி அவன் குளறினான், போதை தலைக்கேறியதால் சக்தியைத் தோற்கடித்து அவர் ஆடினாராமே, இவன் அந்தத் தில்லையம்பலத்தான்போல் ஆடினான், ஆனந்தத்தால். கன்னத்தில் கையை வைத்துக் கலங்கி நின்று கொண்டிருந்த அவன் மனைவி, புருஷன் நிலை தெரிந்து கொண்டாள், சற்று அடக்கமாகவே பேசினாள். அவன் ஏசினான். அவள் காதில் போட்டுக்கொள்ளவில்லை. பொழுது விடிந்தால், அவன் பூனையாவான் என்பது அவளுக்குத் தெரியும். இலை போட்டாள். ஏற இறங்கப் பார்த்தான். எச்சிலை உமிழ்ந்தான், என்ன இது? என்று கேட்டான்.

“இலை.”

“உன் தலை.”

"உட்காருங்கள்."

"நீ சொன்னதை நான் செய்யணுமா."

"வேண்டாம், அப்படியே எவ்வளவு நேரம் நிற்கிறீர்களோ, நில்லுங்கள்."

"ஏண்டி! மணி பனிரண்டாகுதே, பசிக்காதா."

"அதைத் தெரிஞ்சதான் இலை போட்டேன்."

"நான் என்னடி மாடா, இலையைத் தின்ன."

"உட்காருங்கள், சாதம் போடுகிறேன்."

இந்தப்பல்லவிக்குப் பிறகு அவன் உட்கார்ந்தான். சாதம் வட்டித்தாள், கீரை கடைந்திருந்தது, அதை இலையில் இட்டாள்.

வந்தது கோபம், குடிகாரக் கணவனுக்கு. "இதுதானா? வேறு கறி கிடையாதா?"

"இருந்தால் வைக்க மாட்டேனா?"

"நீ குடித்தனமாடி செய்கிறே."

"இல்லை, இல்லை, நீங்கள் சம்பாதித்த சீமையிலே துரைத்தனஞ் செய்கிறேன். கிடைத்த காசைக் குடிச்சுத் தீர்த்து விட்டு, வெறிச்சி கிடக்கிறதுக்கு, இதுவும் பேசுவிங்கோ, இதற்கு மேலேயும் பேசுவிங்கோ. நீங்களா, பேசறிங்க இப்ப."

"வேறே ஏதாகிலும் இருக்கா, இல்லையா."

"இல்லை, இல்லை."

"கீரை வேண்டாம்."

"அதுதான் இருக்கு, அதுவும், நம்ம தோட்டத்திலே கிடைத்தது. மூன்றணா கொடுத்து விட்டீர்களே, போதுமா குடும்பத்துக்கு."

இந்த அநுபல்லவிக்குப் பிறகு, குடியன், கோபமாகக் கீரையை இலையிலிருந்து வழித்தான். வீசி எறிந்தான் எதிரே இருந்த சுவரின் மீது! இலையை முறைத்தான், மனைவியை முறைத்தான், கனைத்தான், குளறினான், கொண்டு வா வேறே கறி என்று கூவினான். இருந்தால்தானே அவன் எடுத்துவர. நெடுநேரத்துக்குப் பிறகு நிலைமை

தெரிந்து, மனைவியைக் கூப்பிட்டான், “சொரணை கெட்டவளே! சுவரிலே இருக்கும் கீரையை வழித்து வையடி இலையிலே” என்று உத்தர விட்டான். சொரணை யாருக்கு இல்லை, உனக்கா, எனக்கா, என்று அந்த மாது கேட்கவில்லை; கேட்பானேன், நமக்குத் தெரியவில்லையா, அந்தக் குடியனின் சொரணை கெட்ட தன்மை.

சுவரிலிருக்கும் கீரையை வழித்துப் போடச் சொன்ன கதைபோல, அவர், சுயமரியாதை இயக்கக்கொள்கைகளை ஜீரணிக்காத நேரத்தில், ஆத்திரத்தை மட்டும் கொண்டு, கீரையை வீசி எறிந்தவன் போலப் புராணங்களை வீசி எறிந்தனர். குடியனுக்கு வேறோர் கறியும் கிடைக்காததால், வீசி எறிந்ததை வழித்து வைக்கச் சொன்னான், இந்தத் தோழர்கள், காரணத்தை வெறுத்துத் தள்ளிய பிறகு, வேறோர் பொருளையும் பெறாததால், மீண்டும், வழித்துவா, என்று கூறின குடியன் போல, பழையபடி புராணத்தைத் தூக்கிக் கொண்டு பாராயணம் செய்கின்றனர்.

என்னைக் கேள்விகேட்ட தோழர் ஒரு காலத்திலே ஓங்காரக் கூச்சலிட்டு, ஒழிப்பேன் மதத்தை! உடைப்பேன் வைதிகத்தை! பொசுக்குவேன் புராணாதிகளை! என்று முழக்கமிட்டவர். இப்போது, சுவர்க் கீரையை வழித்துவைத்துக் கொண்டார். ஏதோ கதை சொன்னேன் என்பதற்காக உவமானத்தைக் கடைசிவரை வளர்த்திக்கொண்டே போய் அப்படியானால், அவர் சொரணை கெட்டவரா? வெறியரா? என்று கேட்டு விடாதீர்கள். உவமானம், எதற்கென்றால், கீரை தவிர வேறு கறி கிடைத்திருந்தால், சுவரிலே ஏறிய கீரை மறுபடியும் சோற்றுக்குச் சேர்ந்திராது என்பதுபோல, புராணதிகளைக் குப்பை மேட்டிலே வீசிவிட்ட அந்த என் நண்பருக்கு, புத்துலகக் கருத்துரைகள் கிடைத்திருந்தால், அவர் மீண்டும், பழைய ஏடுகளைக் கட்டிப் புரண்டிருக்க மாட்டார் என்பதைக் கூறவே கதை கூறினேன்.

ஆகவேதான், என் நண்பர், மக்கள் பற்றிக்கொள்ள ஏதேனும் வேண்டுமே, அதற்கென்ன தருகிறீர். ஏதுந்தராவிடில், நீங்கள் எளக்காளமிட்டுப் பயன் என்ன? இது வேண்டாம், அது வேண்டாம் என்று கூறினால் மட்டும் பயன் வருமோ, என்று என்னைக் கேட்டார். வெறும் வசனத்தோடு விட்டார் என்று எண்ணிவிடாதீர்கள், பதிகமும் பாடினார், “பற்றுக, பற்றற்றான் தாளினை” என்று பக்தர் ஒருவர் பாடினாராம், அதை மேற்கோள் காட்டினார், கேள்விப் பாணத்தைப் பூட்டினார்.

“தோழரே! நாங்கள், இது வேண்டாம், அது வேண்டாம் என்று கூறுகிறோம், இதன் பயனாகத் தமிழருக்கு ஆகாத பண்டங்கள் ஒழிக்கப்பட வேண்டும். அதே நேரத்தில், மக்கள் பற்றிக்கொள்ள, ஆபாசமற்ற, அறிவுக்குப் பொருத்தமான, அநாகரிகமற்ற, புத்துலக வாழ்வு தரக்கூடிய கவிதை, காவியங்களை முத்தமிழ்கற்ற விற்பன்னர்கள், இயற்றி அளிப்பதை யார் தடுக்கிறார்கள்? ஏன் அவர்கள் அக்காரியத்தைச் செய்யக்கூடாது. குண்டு வீச்சினால் ஏற்படும் சேதத்தைப் பரிகாரம் செய்ய ஏ.ஆர்.பி. இருக்கிறது. இதில் என்ன பயன், குண்டு வீசாமலே இருக்க வழி செய்தால்தானே சுகங்கிடைக்கும் என்று கேட்கும் ஐந்தாம் படையின் பேச்சுப் போலிருக்கிறதே உமது வாதம். நாங்கள் நாட்டு மக்களை நாசமாக்கும் நச்சுக்கொள்கை ஏடுகளை ஒழிக்கிறோம், நற்றமிழைக் கற்று நாவலராயுள்ள நீவிர், நாலாறு நூல் இயற்றுவதுதானே?” என்று நான் கேட்டேன். அவர், அதற்கு என்ன கூறினார் பதில்!

“நாங்கள் செய்வது கிடக்கட்டும், புராணாதிகளைக் குறைகூறும் நீங்கள், வேறு இலக்கியத்தை தயாரித்து விட்டுத்தானே, இக்காரியத்திலே இறங்க வேண்டும்” என்று சொன்னார்.

“நண்பா! வீணாக எம்முடன் வாதிட்டு நரிக்குண இனத்த வருக்குத் துணையாக நிற்கும், (மனமின்றி நிற்கும்) தமிழ்ப் புலவர்கள், இச்சமயத்திலே எதுகைமோனை போய்விடுமோ எழுசீர் விருத்தம் வீழ்ந்திடுமோ, அம்மானையும் அந்தாதியும் அழிந்திடுமோ என்று எண்ணி வீணாக வருந்துவதைவிட, ஆபாசத்தை அழிக்க தன் மதிப்பு இயக்கத்தார் பாடுபடட்டும், நாம், அவர்கள் அழிக்கும் நேரத்திலேயே, பாழ்வெளி உண்டாகாத விதத்திலே, புதிய கருத்துடன்கூடிய அருங்கலைகளை இயற்றுவோம், என்று மட்டும் மனமுவந்து எண்ணி, அந்தத் துறையிலே இறங்கினால், இரண்டு துறைகளிலும், வேலை அழகுற நடக்குமே, என்று நான் சற்று ஏக்கத்துடன் சொன்னேன். என் நண்பர், இதோ பார்! இந்துமதக் கோட்பாடு சரியில்லை, விக்ரக வணக்கம் கூடாது, புராணம் கூடாது, என்று கூறினார்கள், கிருஸ்தவர்கள். இவைகளை நம்பாதீர்கள், இதோ எமது மெய்ஞான வேதமாம், பைபிள் இருக்கிறது, படித்துப் பயன் பெறுங்கள், என்று கூறினர். அதுகேட்ட மக்கள், “சரி! பழையமதம் வேண்டாம், இப்புது

நெறி புகுவோம்" என்று கூறினர், புதுக்கருத்தும் கிருஸ்தவமும் வளர்ந்தது. அதைப்போலவே, மற்றவை வேண்டாம், கொரானை ஓதுங்கள் என்று முஸ்லீம்கள் சொல்லக் கேட்டுப் பலர் புதுமார்க்கம் தழுவினர். அதுபோல சுயமரியாதைக்காரர், ஏதேனும் ஒரு நூலைக் காட்டவேண்டாமா?" என்று கேட்டார்.

"நல்ல கேள்வி நண்பா நீ கேட்டது! கிருஸ்தவ மார்க்கமும், இஸ்லாமும், ஏற்பட்டபோது, பைபிளையும், கொரானையும் கையிலே, ஏசுவும், முகமதுவும் ஏந்திக்கொண்டு, மக்களைப் பார்த்து, "ஏ! மக்களே மற்ற மத ஏடுகளை விட்டொழியுங்கள். அவை மாசு படிந்தன. இதோ எமது வேதம், இதைப்படித்து இம்மை மறுமை இரண்டிலும் சுகம் பெறுக! ஓம், சாந்தி, சாந்தி, சாந்தி! என்றா போதித்தனர். கொரானும், பைபிளும் முறையே முகமது, ஏசு, ஆகியோர், அவர்கள் காலத்திலே மக்கள் கொண்டிருந்த காட்டு மிராண்டிக் கருத்தை அழித்த பிறகு ஏற்பட்ட அரிய விளைவு! அது போலவே, சுயமரியாதைக்கார் இன்று ஆரியக் கள்ளியை அழித்த பிறகு அந்த நிலத்திலே அறிவெனும் விதை ஊன்றி, கல்வி எனும் நீர்ப் பாய்ச்சி, கற்பனை எனும் களை முளைத்தால் களைந்துவிட்டு, வீணர் மொழி எனும் விலங்கினம் புகாதபடி பாதுகாத்தால், புதுக்கலை எனும் கதிர் காணலாமே! இதைத் தடை செய்பவர், யார்? என்றேன்.

"என்ன இருந்தாலும்...." என்று என் தோழர் இழுத்தார். வாதம் முடிந்து விட்டது, பிடிவாதம் பிறந்து விட்டது என்று கண்டு கொண்டேன். அவரும், நமது நோக்கத்தை நாம், அச்சம் தயை தாட்சணியமின்றிக் கூறுகிறோம் என்பதைக் கண்டு கொண்டார்.

இதுபோன்ற குறுக்குக் கேள்வியிலே காலந்தள்ளும் குணாளர்கள், எந்தக் காவியத்தின் குளிர்ச்சியிலே சொக்கிக் கிடக்கின்றனரோ, அக் காவியங்கள், கடவுள், மதம், மக்கள் கடமை, பக்தி, நீதி எனும் இலட்சியங்களுக்குத் தரும் இலட்சண விளக்கம், இந்த இருபதாம் நூற்றாண்டிலே அறிவு உலகிலே, எவரேனும் ஏற்பரோ என்பதை யோசிக்க வேண்டுகிறேன். இன்னமும் அந்த கணபதிக்குத் தொந்தி பெருத்த விதத்துக்கு" ஆதாரம் தேடவும், அந்தாதி பாடவுமே நம்மவர் அறிவு பயன்பட்டு வருமானால், நாம், மற்ற மக்கள்போல் மண்ணையும் விண்ணையும் அடக்குவது என்று! மானமும் வாழ்வும், மணமும்

மலரும்போல் கலந்திடக் காண்பது என்று!

16.5.1943

# யூதன் துலாக்கோல் !

ஆமாம்! நானோர் யூதன் ஆனால், யூதனுக்குக் கண்களில்லையா! உடலுறுப்புகள், உணர்ச்சி, உள்ளம், இவையில்லா மரக்கட்டையா, யூதன்! பசித்தால் யூதன் புசியானா! அவனை நெருப்பு சுடாதோ! நீர் அவனுக்குக் குளிர்ச்சியூட்டாதோ? கதிரோன் அவனைக் காயானோ, மாரி அவனைத் தாக்காதோ! யூதனானால், என்னய்யா! எம்மைக் குத்தினால், உமது உடலிலிருந்து குருதி வராதா! நஞ்சிட்டால் நாங்கள் சாகமாட்டோமா? கிருஸ்தவருக்குள்ள உடலமைப்பு, உள்ள அமைப்பு, எமக்கு இல்லையோ! யூதன் என்றால், தனிப்பிறவியா? சொரணை கெட்டாகிடப்போம்? வெறும் சோற்றுத் துருத்தியா நாங்கள். சோகம், வீரம், ஹாஸ்யம், கோபம், எனும் உணர்ச்சிகள் யூதர்களை அண்டிடாவோ! என்னதான் யூதனானால் என்னய்யா நாங்களும், மனிதப் பிறவிதானே?

வேனிஸ் நகர யூதன், வியாபாரி, சைலக், யூதரும் மற்ற மக்கள் போன்றாரே, என்பதை உருக்கமாக எடுத்துக் கூறினான், கேட்போர் மலைக்கும்விதமாக, ஐயோ, பாபம்! நாம் அநியாயமாகத்தான் இந்த யூதர்களிடம் வெறுப்புக் காட்டுகிறோம் என்று பலரும் நினைக்கும்படி! இந்த “மனித நீதி” பேசிய ஷைலக், வேறோர் இடத்திலே, நீதிமன்றத்திலே, யூத இயல்பைக் காட்டுகிறான். யூதர் மற்ற மக்கள்போல, மக்களேதான், ஆனால் கனியெல்லாம் சுவை தருவனவுமல்ல, உண்ணக் கூடியனவுமல்ல, எட்டியும் கனி வகையைச் சேர்ந்ததே, பலாக்கனிபோல் அதற்கு முட்போர்வை இல்லை, ஆனால், பசப்பும் பார்வையுடனுள்ள அப்பழமோ, ஒரு பயங்கர உயிர்போக்கி, ஓங்கி வளர்ந்திருப்பினும் ஒதிய மரம் பயன்படாது, என்பதேபோல, யூதரும் மனிதப் பிறவியே என்றாலும், தனியான சில இயல்பு டைத்தோர் என்பதை ஷைலக் தன் செயலால் காட்டியதை, ஆங்கிலக் கவி, ஷேக்ஸ்பியர், வேனிஸ் நகர வர்த்தகன் எனும், நாடகத்திலே அழகுறத் தீட்டியுள்ளார்.

மனிதநீதி பேசிய ஷைலக்கிடம், பணியாள், “ஊர்ச்சேதி” கூறுகிறான். அதுபோது ஷைலக்கின் உள்ளப்பாங்கு, தெளிவாக விளங்குவதைக் கேளீர்!

ஷைலக் : என்னப்பா, டூபால்! ஜினிவா நகரிலிருந்து என்ன சேதி

கொண்டு வந்தாய்? என் மகளைக்கண்டு பிடித்தாயோ!

டூபால் : நான் சென்ற இடமெல்லாம், உமது மகள் தங்கியிருந்து விட்டுப் போய்விட்ட இடங்களே! நான் அவளைக் கண்டுபிடிக்க முடியவில்லை.

இந்தப் பதிலைக் கேட்டதும், மகளை இழந்த தகப்பன், மார்பினில் அடித்துக்கொண்டு, “ஆசைக்கோர் மகளே! என் செல்வமே! உன்னை இழந்து நான் எங்ஙனம் வாழ்வேன்! கிளை முறிந்த மரமானேன். பாய்மரம் பாழ்பட்ட மரக்கலமானேன்” என்று கோவெனக் கதறித் தரையிலே கடகடவெனப் புரண்டழுதான், என்றே கேள்விப்படுவோம், அதுவே மனித இயல்பு! ஆனால், மனிதக் கூட்டத்திலே ஒரு பகுதியினராம் யூத இனத்தின் வர்த்தகனின் வாய்மொழி கேண்மின்.

ஷைலக் : ஐயோ, அட, அட, அடா! போச்சே என் அருமையான வைரம்! இரண்டாயிரம் டுகாட் (நாணயம்) போட்டு வாங்கின பொருள் போச்சே வேறுபல ஆபரணங்களும் போயினவே.

அந்த யூதனுக்கு மகள் மீதிருந்த நினைப்புக்குக் காரணமே, அவள் அணிந்திருந்த நகைகள்தான். மகளின் விலை அவனுக்குக் கவலையில்லை, அவள் அணிந்திருந்த வைரம், அணிபணிகளின் விலைமதிப்பே அவனுக்குத் தெரிந்தது. அவன் அழுதது, தன் மகளை இழந்ததற்காக அல்ல! நகைகள் போய்விட்டதே, பொருள் நஷ்டமாகிவிட்டதே என்பதை எண்ணித்தான். ஷைலக் பேசுவதை மேலும் கேளுங்கள்!

ஷைலக் : என் காலடியில் என் மகள் பிணமாகி விழுந்து கிடப்பினும் பரவாயில்லை. அந்த வைரம் மட்டும் அவன் செவியிலே இருந்தால் போதும்.

இதுதான் யூதனின் இயல்பு என்று எண்ணாதீர்கள். பெண் போச்சு, நகை போச்சு, இந்த நஷ்டத்துடன் பறிபோனதைத் தேடப்போனதன் செலவு இருக்கிறதே, அதை நினைத்து வேறு கதறுகிறான்.

ஷைலக் : ஒரு துப்பும் துலங்கவில்லை, குதிரை செத்ததுடன் குழி தோண்டச் செலவு வேறு. பொருள் போச்சு! அதைத்தேட வேறு பணம் செலவாச்சு, அட, அடா, என்ன பொல்லாத வேளை, எவ்வளவு கஷ்ட

காலம்.

இந்த இயல்பு கொண்ட ஷைலக், தன்னிடம் கடன்பட்டு, கை முதலை இழந்து கலங்கிய அண்டோனியோ என்பானிடம், கடன் தொகைக்காக, அவன் மார்பிலிருந்து, ஒரு பவுண்டு இறைச்சி அறுத்தெடுத்துக்கொள்ள, பத்திரம் இருந்ததைக் காட்டி நீதிமன்றத்திலே சட்டத்தைத் துணைக்கழைத்தான்.

யூதனானால் என்ன, அவர்கள் மனிதப் பிறவியல்லவா என்று நீதி பேசிய ஷைலக்கின் செயல், அவனை மனிதப் பிறவியிலே நேர்த்திடுவதற்கு, அவனுடைய உடலமைப்பு ஆதாரமாக இருக் கலாமே யொழிய உள்ளப்பாங்கு இடந்தராது என்பதை எடுத்துக்காட்டி விட்டது. நெடுநாட்களாகவே, ஐரோப்பாவிலே, யூத வகுப்பாரின் பணப்பித்து, வியாபார தந்திரம் ஆகிய குணவிசேஷங்களைக் குறித்துக் கண்டித்து கேலி செய்தும், வந்தனர். ஹிட்லரின் காட்டு மிராட்டித்தனமான போக்கின் பயனாக, ஏளனம் செய்யப்பட்டுவந்த யூதருக்குப் புகலிடமும், ஆதரவும் ஓரளவு கிடைத்திருக்கிறது, எனினும், செல்வத்தைச் சேர்ப்பதிலே யூதர் காட்டும் அக்கரை, ஆசை, திறமையை, உலகம் அடியோடு மறந்து விடுமென்று நாம் கருதவில்லை.

## இங்கேயும் யூதர்

அன்று ஷைலக் பேசிய நீதிபோல் இந்த உபகண்டத்திலே, சென்ற கிழமை நடைபெற்ற மார்வாரி மாநாட்டிலே மார்வாரி வகுப்பினர் மீது, விணாகக் கோபிப்பதும், அவர்களைக் கண்டிப்பதும் கூடாதென்று, அம்மாநாட்டுத் தலைவர், திருவாய் மலர்ந்தருளியிருக்கிறார். மார்வாரி வகுப்பினர், இந்த உப கண்டத்திலே, எந்தப் பிரதேசத்திலும், வியாபாரக் கோமான் களாகவே இருக்கின்றனர். வங்கத்தார் சிங்கமென்று கர்ஜிப்பர், பரங்கியை விரட்டுவோம் என்றுரைப்பர், “வார்தா தேவனைத் தொழுவர்” ஆனால் தொழிலரசு, மார்வாரிகளிடமே இருக்கும் பஞ்சாபிலே, பட்டாளத்துச் சூரர் உண்டு, உழுது பிழைக்கும் ஜாட் வகுப்பு உண்டு, கூலிகளுண்டு; ஆனால் பஞ்சாபில் வியாபார பீடங் களிலே அமர்ந்திருப்போர், மார்வாரி வகுப்பினரே. அசாமிலே, ஆட்சி மார்வாரியிடமே! சிந்து மாகாணம், இஸ்லாத்தின் முதல்

ஜெயஸ்தம்பம் நாட்டப்பட்ட இடம், அங்கே, மார்வாரி வகுப்பினரே வியாபாரத் துறையிலே செல்வாக்குடன் உள்ளனர். சென்னை மாகாணம் என்ற சிறுமைப் பெயருக்கு ஆளாகி விட்ட திராவிட நாட்டின் தகவலோ சொல்லத் தேவையில்லை. ஆமதாபாத், ஷோலாப்பூர், பம்பாய், பூனா, மில்கள், இரவு பகல் ஓய்வின்றி வேலை செய்து கொண்டிருப்பதே, சென்னையின் உல்லாச உலகுக்கு உடை தரும், உத்தம கைங்கரியத்தைச் செய்வதற்குத்தான்! கப்பல் கட்ட ஒரு மார்வாரி, விமானத் தொழில் துவக்க ஒரு மார்வாரி, சுரங்கத் தொழிலுக்கு ஒரு மார்வாரி, சுகந்தச் சாமான்களுக்கு மார்வாரி, வட்டிக்கடைக்கு மார்வாரி, எதற்கும் எங்கும், மார்வாரி மயம்!! இதன்பயனாக, மார்வாரி பிரதேசம் கால் நூற்றாண்டிலே பூந்தோட்டமாகிவிட்டது. தலையிலே பாகையும், உடலிலே நமைச்சலும், உள்ளத்திலே இலாப ஆசை எனும் குடைச்ச லுங் கொண்டு தமிழகத்திலே கால் வைக்கும் மார்வாரி, நம் கண் முன்பாகவே, கடைவைத்து முதலாளியாகி, இலாபத்தைக் குவித்துச் சேட்ஜீயாகி, பணந்திரட்டி, மார்வாரின் மாளிகை கட்டி, 'மகாத்மாவுக்கு' காணிக்கை தரும் தேசபக்தனாகி விடுவதைக் காண்கிறோம். "ஆண்டவனே! என்னை அழைத்துக்கொள்ள இன்னமும் மனம் வரவில்லையோ" என்று அண்ணாந்து பார்த்துத் தமிழன் கேட்கிறான். ஏழாவதடுக்கிலே, உறுப்புகளின் அமைப்புகள் கெடும்விதமாக மாமிச மலை போலாகிவிட்ட மார்வாரி சீமான், ஏஜண்ட் தபாலுக்கு ஏங்கி நிற்கிறார், ஆறாவது மாடியிலே, அவருடைய மூன்றாவது மனைவி சிதார் வாசித்து மகிழ்கிறாள், மகன், மாளிகை வாயற்படியிலே நிற்கிறான், ரோல்ஸ் ராய்ஸ் மோட்டாருக்காகக் காத்துக்கொண்டு! பாலைவனம் பழத் தோட்டமாகி விட்டது, பழத்தோட்டமாக இருந்த தமிழகம் பாழ் வெளியாகி விட்டது! இதனை மாற்றி, திருத்தியமைக்க, தமிழர் இயக்கம் தன் வலிவு முழுவதையும் திரட்டும் வேலையில் ஈடுபட்டிருக்கும் வேளை இது.

மார்வாரி வகுப்பினருக்குக் "காந்தி பக்தி" அமோகம். அந்தப் பக்தி, நந்தமிழ் நாட்டுப் பக்தியைப்போல, நஷ்டக் கணக்கில் சேர்க்கப்பட வேண்டிய புள்ளியன்று, இலாபக் கணக்கில் சேரும் புள்ளி. காந்தி பக்தராக இருப்பது, மார்வாரிகளுக்கு மகத்தான இலாபந் தருகிறது. காந்தியாரும், அதே வகுப்புத்தான்! எனவே, தங்கள் "சமூக சிரேஷ்டரும்" தங்கள் "வாழ்வுக்கு இரட்சகரும்" - "இலாபத்தைத்தரும் வழிகண்டு சொன்ன தாதாவுமான" காந்தியாரின் திருப்பெயர் சூட்டப்பட்ட மைதானத்தில், துரைத்தனத் தலைமைக் காரியாலயம் உள்ள டில்லி

நகரிலே மே 11ந் தேதி கூடிற்று அகில இந்திய மார்வாரி மாநாடு. சேத்ராமகோபால் தலைமை வகித்தார். அவர் சோகத்தோடு, பேசியிருக்கிறார், இனிவரும் இக்கருத்துக்களை.

1. மாகாணப்பற்று அதிகரிக்கிறது, இது மிகக் கஷ்டங்களைத் தரும்.

2. ஒரு மாகாணத்தவர் மற்றோர் மாகாணத்துக்குத் தேவையில்லை என்று பேசப்படுவது தவறு.

3. மார்வாரிகள் எல்லா மாகாணங்களுக்கும் போய் இலாபமடைவதாகச் சொல்லப்படுவது கேட்டு வருத்தம் பிறக்கிறது.

4. இதனால், அந்தந்த மாகாணத்துக்கு மட்டுமேயன்றி இந்தியா பூராவுக்கும் நஷ்டம்.

5. மார்வாரிகள் தமது சொந்த முயற்சியால், சென்றவிடமெங்கும் முன்னுக்கு வருகிறார்கள்.

6. சென்று தங்கியுள்ள இடங்களில் தர்மம் செய்கிறார்கள்.

ராமகோபாலர் சொற்பொழிவுச் சாரம் இதுவே.

மார்வாரிகளைக் கண்டிக்கிறார்கள், அவர்கள் இந்தியா பூராவிலும் சென்று இலாபமடிக்கிறார்கள் என்ற விஷயத்தையும் மற்றோர் மாகாணத்தான் சுரண்டும் கொடுமை ஒழிய வேண்டும் என்ற உணர்ச்சி பரவிவிட்டது, என்ற உண்மையும், ராமகோபால் ஜீயின் சொற்பொழிவிலிருந்து விளங்குகிறது. அவரது துயரங்கலந்த “தொகையறா” கேட்கும்போது, நமது இயக்கக் கொள்கைகள் எனும் கணைகள், மர்வாரி ஆதிக்கத்தைத் துளைக்கின்றன என்பது தெரிகிறது, எனவே மகிழ்ச்சியே பிறக்கிறது. வீரம், சோகம், சாகசம், பயமுறுத்தல், பரிதாப உணர்ச்சியைத் தட்டிப்பார்த்தல், தானந்தருவதாகக் கூறி ஆசையூட்டுதல், எனும் பல்வேறு ரசங்கள் ததும்ப, மார்வாரி மாநாட்டுத் தலைவர், பேசி இருப்பதன் காரணம் என்ன?

பலவர்ண நச்சரவுபோல் நீண்டு வளைந்த அங்கியைத் தலையிலே பாகையாகச் சுற்றிக்கொண்டு தலையணை போன்ற கணக்கு ஏடுகளை அடுக்கி வைத்துக்கொண்டு, "திண்டு திமாசு" மீது சாய்ந்துகொண்டு, தொழில் நடத்தும், இந்தத் தர்மப்பிரபுக்களின் யோக்யதை இதனை வெளிவந்து விட்டது என்பது தான் மக்கள் உணரும்படி செய்து, வியாபாரத் தொழில் துறையில் அவர்கள், திராவிட நாட்டுச் செல்வத்தை அரிக்கிறார்கள் என்பதை ஆதாரபூர்வமாக எடுத்துக்காட்டி, வாணிப உலகினரின் விழியைத் திறந்த பெருமை, பெரியார் ஈ.வெ. இராமசாமி அவர்கட்கே உண்டு. அவர் வியாபாரத்துறையிலே இருந்தபோதே தமிழ் நாட்டில் பல்வேறு இடங்களில் பொதுவாகவும், கோவை ஜில்லாவிலே குறிப்பாகவும் மார்வாரி படை எடுப்பு ஏற்பட்டு, தென்னாட்டு வியாபாரக் கோமான்களைத் தேயவைத்த வரலாற்றையும், பாடுபட்டுப் பொருள் ஈட்டி, தென்னாட்டு வணிகர், வடநாட்டு மார்வாரியிடம் வாங்கிய கடனுக்கு வட்டி செலுத்திச் செலுத்திக் குட்டிச்சுவரானதும், பலப்பல பிரபல விலாசங்கள், விலாசமிழந்ததும் ஆகிய தகவல்களை நன்கு அறிந்ததால், அவர் இது விஷயமாக எடுத்துரைப்பதை இல்லையென்றுரைக்க ஆச்சாரியாராலும் முடியாது. கடந்த முப்பதாண்டுகளுக்குள், தமிழகத்திலே, மார்வார் படையெடுப்பு எவ்வளவு பலமாகிவிட்டதென்பதைக் கடைவீதிகளைக் காண்போர் நன்கறிவர். சென்னையிலே காணக் கண்ணுள் ளோருக்குப் பாடம் பளிச்சென்றிருக்கிறது. எத்தனை "ஜீ"க்கள், எத்தனை "சேட்ஜீ"க்கள் என்னென்ன விதமான வியாபாரம், உலோகம் முதல் உணவுப் பொருள் வரையிலே, மார்வாரி வகுப்பிடம் சிக்கி விட்டதைக் காணலாம்.

தர்மப்பிரபுவாம்!

"திராவிட நாடு" தனி நாடாக வேண்டும் என்ற கிளர்ச்சியின் வளர்ச்சியே, இன்று ராம கோபால சேட்ஜி மனதில் மருட்சியை உண்டாக்கி விட்டது. ஆழமாக உழுது வருகிறோம், என்ற அக மகிழ்ச்சியே நமக்கு வருகிறது.

சேட்ஜீ! சோகித்துப் பயன் இல்லை, சுடுசொல் பேசி ஆகப்போவதொன்றுமில்லை, சபித்தாலும் பலிக்காது, தர்மம் செய்வதாக உரைத்தாலும் போதாது, நாமறிவோம், தர்மப் பிரபுக்களின் நடவடிக்கைகளை.

பருந்துகளுக்குப் பகலில் மாவுப் பண்டம் அளிக்கும் மார்வாரி பிரபுக்கள்,

நடத்தும் வியாபாரம், தமிழன்னையின் இரத்தத்தை வற்ற வைப்பதை அறிந்த நமக்கு, வட்டமிடும் வல்லூறுகள் சிறகடித்துக் கொண்டு, இச்சீமான்கள் வீசும் சிற்றுண்டித்துண்டுகளைத் தின்பது கண்டு, திருப்தியா, ஏற்படும்? கண்களிலே நீர் சுரக்கிறது. பசுவுக்குப் புல்லிடுவர், அதன் வாலுக்கு மஞ்சள் பூசி குங்குமமிட்டுத் தொழுவர், கூலிகளான தமிழர் கூடையைத் தலை மீது சுமந்து வீதி வழி வரக்கண்டு, உக்கா பிடித்துக்கொண்டு, உயர்ந்த திண்டின் மீது இந்த உத்தமர்கள் உல்லாசமாக அமர்ந்திருப்பர். எறும்புப்புற்றுக்குக் கோதுமை மாவு போடுவர், எலும்புந் தோலுமான ஏழை மக்கள் தமிழகத்தில் அதிகமாகக் கண்டு, கூலி குறையும், செலவு மட்டாகி விடும் என்று மகிழ்வர் இம்மார்வாரி மகான்கள். இவை நாமறிவோம், எனவே மார்வாரிகள் சென்ற இடமெல்லாம், தர்மம் செய்கின்றனர், என்று நீர் மாநாட்டிலே பேசியிருப்பது கேட்டு, மகிழோம், மயங்கோம், மகானுபாவரே, இன்னும் சில மார்வாரி பிரபுக்களை இங்கே அனுப்பி எம்மை ரட்சியுங்கள் என்று வேண்டிக்கொள்வோம் என்று எண்ணாதீர்.

ஏழ்மை இருக்கும் வரை தர்மம் தேவையாக இருக்கும் நோய் இருக்கும்வரை மருந்து தேவை என்பது போல். மருந்து இருக்கிறது என்ற மகிழ்ச்சியை விட, நோய் வாட்டுகிறதே என்ற வருத்தமே எமக்கு. இங்குள்ள செல்வமும், தொழில் செய்திறனும், தமிழகத்துக்குப் பயன்பட்டு வெளி இடங்கட்குச் செல்வது தடுக்கப்பட்டு விட்டால், இங்கு, தர்மசாலைகள் தேவையிராது, தங்களைப்போன்ற தர்மப் பிரபுக்களும் தேவையிராது என்று தமிழர் சார்பாக, மார்வாரி மாநாட்டுத் தலைவருக்குக் கூற விழைகிறோம்.

## முதலாளித்தனம்

மார்வாரி வகுப்பினர், ஒரு முதலாளிக் கூட்டம். அவ்வகுப்பினர் யாவரும் செல்வவான்கள் என்பதன்று அதன் கருத்து. மற்றப் பிரதேசங்களைப் பண்ணைகளாக்கி இவர்கள் மிராசுதாரராக வாழ்வு நடத்துவதிலும், மற்ற மண்டலங்களை மார்க்கட்டாக்கி இவர்கள் தமது தேசச் சரக்குகளை விற்பனை செய்வதிலும், மற்றவரின் கஷ்ட காலத்தைப் பயன்படுத்தி இவர்கள் பணத்தைப் பெருக்குவதிலும், உடலுழைப்பைக் குறைத்துக் கொண்டு, இறகும் ஏடும் கொண்டு இளித்தவாயரிடம் இலாபமடிப்பதிலும், யூதரையும் விஞ்சும் இக்கூட்டம், பாடுபடுவோரின் பலனைப் பல வழிகளாலும் குறுக்கிட்டுப் பெற்றுக் கொழுக்கும் வகை நோக்கியே, இக்கூட்டத்தை நாம் முதலாளிக் கூட்டம் என்று

கூறுகிறோம்.

“இந்தியா” ஒரே நாடு என்ற கற்பனை நிலைத்து விட்டால், இந்த மார்வாரி வகுப்புக்கு, பரந்த மார்க்கட் கிடைக்கும், இலாபம் கொழுக்கும். இனவட்டார அரசுகள் ஏற்படின், மார்க்கட் அளவு குறைந்து விடும், இலாபம் குறையும். இதனாலேயே, மார்வாரி பிரபுக்கள் காங்கிரசையும் இந்துமகா சபையையும் தமக்கு “ஜீவாமிருதமாகப்” போற்றி, ஊட்டி வளர்க்கின்றனர், ஊராளும் உரிமையைக் காங்கிரசுக்குத் தாருங்கள் என்ற “தேசபக்தி” பேசுகின்றனர்.

இந்தியா எனும் இந்த உபகண்டம், இனவட்டாரங்களாகப் பிரித்து அமைக்கப்பட்டு விட்டால், ஒவ்வோர் வட்டாரமும், அதனதன் வளப்பத்தை வளர்க்கவும், செல்வத்தைப் பெருக்கவும், தொழில் அபிவிருத்தி உண்டாக்கவும் முனையும். ஒரு மாகாணத்தார் மற்றோர் மாகாணத்தின் செல்வத்தை உறிஞ்ச வேண்டிய அவசியமே இராது. தேவைக்கேற்ற உற்பத்தியும் உழைப்புக்கேற்ற ஊதியமும், ஊதியம், பொருள் செய்வகைச் செலவு ஆகியவைக்கேற்ற அளவு, பண்டங்களின் விலையும் அமைந்து இலாப உணர்ச்சி குன்றி, சேவை உணர்ச்சி வலுப்படும். இது சமதர்ம வாழ்வின் அடிப்படை என்பதை மார்க்சை மனனம் செய்யும் தோழர்கள் அறிவர் என நம்புகிறோம். சில வியாபாரச் சீமான்கள் தரும் பணத்தால் காங்கிரஸ் நடத்தப்படுகிறது என்று முன்பு கூறினார் சர்ச்சில். அவர் இன்னம் சற்றுக்கூர்ந்து நோக்கினால், மார்வாரி சீமான்களின் பணமே காங்கிரசுக்கு இன்று தங்கபஸ்பமாக இருக்கிறதென்பதைத் தெரிந்து கொள்வார்.

மாகாண சுயாட்சி என்ற அரசியல் திட்டம் கிடைத்துப் பயனில்லை. ஒரு மாகாணம், மற்றோர் மாகாணத்தை அரிக்கும் முறையைத் தடுக்கும் உரிமை, மாகாணங்கட்கு வேண்டும். பிரிட்டிஷாரும் காங்கிரசும் சேர்ந்து வற்புறுத்தும் சமஷ்டி திட்டம், இந்த உரிமையை மாகாணங்கட்குத் தராது. எனவேதான், தனிநாடு தனி அரசு தேவை என்று ஜனாப் ஜின்னாவும், பெரியாரும், கேட்கின்றனர். மார்வார் படை எடுப்பைத் தடுக்க இதைத்தவிர வேறு வழி கிடையாது. மாகாண உணர்ச்சி கெடுதி தரும் என்று ராமகோபாலர் எச்சரிக்கிறார். எச்சரிக்கிறார் என்று கூறுவதைவிட

ஏங்குகிறார், என்றுரைப்பது பொருத்தமாக இருக்கும், ஏனெனில் மாகாண உணர்ச்சி பரவினால், அது மார்வாரி ஆதிக்கத்துக்கே கேடாக முடியும், இதை உணர்ந்தே மாகாண உணர்ச்சி கூடாது என்று சத்வகுண போதனை புரிகிறார், சேட்ஜீ. இதை இன்று கஷ்டமனு பவிக்கும் மக்கள் ஒப்ப மாட்டார்கள், என்பதைக் கூறுகிறோம்.

இங்குள்ள ஒவ்வோர் மாகாணமும், ஐரோப்பிய நாடுகள் பலவற்றைவிடப் பெரியது. அங்கு ஒவ்வோர் நாடும் தனி அரசும், தனி வாழ்வும் பெற்று, அதனதன் இயற்கை வளத்தைச் செவ்வனே பெருக்கிக்கொண்டு சீர்பெறுகின்றன. அதைவிட, வளமான வாழ்வு கிடைக்கும் இங்கு ஏற்படவேண்டுமென்று நாம் வற்புறுத்தும் இனவட்டாரங்கள் கிடைத்து விட்டால், பாகிஸ்தான் பிரச்னையைத் தீர்க்க முஸ்லீம்கள் பெருவாரியாக உள்ள பிரதேசங்களில், முஸ்லிம் பொதுமக்களின் ஓட் எடுக்க வேண்டுமென்றும், அந்தப் பிரச்னையை தீர்க்கா முன்பு, அரசியல் நெருக்கடி தீராதென்றும், டாக்டர் அம்பேத்கார் கூறுகிறார். ஆகவே, இனவட்டாரமெனும் இலட்சியம், பெரிய இடத்தின் கவனத்தை இழுத்து விட்டதைக்கண்டு கிவி கொண்டே, மாகாணப்பற்று கேடு பயக்கும், இந்தியாவுக்கு அது நஷ்டம் என்றெல்லாம், மார்வாரித் தலைவர் பேசுகிறார். இவருடைய ஜால மொழியை இனி நாடு ஏற்காது என்பதை அவர் உணரட்டும். விளைந்த காட்டுக்குருவிகளாக இனி வட்டமிட்டுக் கொண்டு மார்வாரி கூட்டம், வாழ்வதை இனி நாடு ஒப்பாது என்பதையும், யூதனின் துலாக்கோல் போல மார்வாரித் தலைவரும் நீதி நியாயம், தேசாபிமானம், மனிதாபிமானம் என்று பேசிய போதிலும், மார்வாரி மனப்பான்மை என்ற இயல்பை, மக்கள் அறிவர், அதனை அவர்கள் அழுத்தமாகக் கண்டிக்கின்றனர் என்பதையும் அந்தத் தலைவருக்கு அறிவுறுத்துகிறோம்.

16.5.1943

# ஸ்லட் நதிக்கரையில் !

எத்தனை ஆண்டவன்? ஏனிந்த ஆபாசம்? ஆண்டவனுக்கு உருவம் கற்பிப்பது கயவர் செயல். சாத்திரமும் சடங்கும் சாமியாட லும் சழுக்கரின் சூது. தல யாத்திரை என்பது சோம்பேறிகளைப் பிழைக்கச் செய்யும் சூட்சி, ஜாதி பேதம் என்பது அநீதி அக்ரமம், பக்தியின் பேரால் பாரமார்த்தீகத்தின் பேரால் வீரத்தை இழந்தோம், கோழைகளானோம். பேதத்தால் கெட்டோம். மூட நம்பிக்கையால் அழிகிறோம். இந்துக் கடவுள்களை விட்டொழியுங்கள். விக்ரகங்களை வணங்க வேண்டாம். வீணருரையான புராணாதிகளைப் படிக்க வேண்டாம். சமத்துவராக, சன்மார்க்க நெறியினராக வாழுங்கள். மும்மூர்த்தியும் இல்லை, அதற்குத் தரகு செய்ய முப்புரியுந் தேவையில்லை, தலங்கள் தேவையில்லை, அங்கு தர்ப்பைகள் தேவையில்லை, அவை வெறும் சூது, ஏமாற்று வித்தை பாஞ்சாலத்து வீரர்களே! இனி இப்படுமோசத்தை நம்பாதீர், சிங்கமென வெளிக் கிளம்புங்கள், சேர்ந்து வாழுங்கள், வாளை ஏந்துங்கள். மானத்தை இழக்க மறுக்கும் மாண்பு பெறுங்கள்.

மேலே காணப்படும் வீர, விவேக உரைகள், பதினைந்தாம் நூற்றாண்டிலே பாஞ்சால நாட்டிலே, சாதாரணக் குடும்பத்தில் தோன்றி இந்துமதக் கொடுமையை வெறுத்துப் புரட்சி செய்த குருநானக் முழக்கமிட்டவை. அவருடைய வீர உரை கேட்டு விழிப்புற்ற எண்ணற்ற மக்கள், சீக்கிய மார்க்கத்தைத் தழுவினர். அவருக்குப் பிறகு வந்த பல குருமார்கள், சீக்கிய மார்க்கம், பரவி, பலமான ஸ்தாபனமாகும்படி செய்தனர். ரன்ஜித்சிங் என்ற குருவின் வீரதீரம் வரலாற்றிலே இடம் பெற்றிருக்கிறது.

அத்தகைய பகுத்தறிவு மார்க்கமான சீக்கியமதத்தைக் கண்டு அஞ்சினர் வைதீகர்கள். ஏகதெய்வக் கொள்கையும் ஒரே குலம் என்ற கோட்பாட்டையும் கொண்ட சீக்கியர், சிங்கமெனச் சீறிப் போரிடத் தொடங்கியதுகண்டு இஸ்லாமியர், வியந்தனர்.

அத்தகைய சீக்கியரை, இன்று, இந்துமகா சபையினர், தமது வலையிலே விழவைக்க முயலுகின்றனர் சட்லஜ் நதிக்கரையிலே அன்று நடந்த புரட்சியைக் கெடுக்கின்றனர்.

பித்தர் விடுதியிலே சில காலம் தங்கியிருந்து, சிகிச்சை செய்து நோய்

நீங்கப்பெற்ற, வெளி வந்தவர், தாம் முன்பு பித்தர் விடுதியில் இருந்ததாகக் கூறிக்கொள்ளவோ, உறவு கொண்டாடவோ மனம் இசையார். அங்கனம் எண்ணிடின் அவர்களுக்குப் பித்தம் முழுதும் போகவில்லை என்றே எண்ணவேண்டி நேரிடும்.

காவி உடுத்திக்கொண்டு கள்ளச்சாரயங் குடித்து வெறித்து, வீதி வழியே நடந்து தன்னை விற்கும் தையலைக் கூடிக் காலந்தள்ளும், சாமி வேடமும் காம நாடகமும் கொண்ட ஆண்டிகள் கூட்டத்திலே கலந்திருந்து பிறகு விவேகம் உதயமானதால், அவ்வீணரின் கூட்டுறவை அறுத்துவிட்டு, நாணயமான நல்வாழ்க்கை நடத்தப் புகுவோர், நமது முன்னாள் சகாக்கள் தங்கும் சாவடிப்பக்கமாகப் போகவும் கூசுவர். பழைய உறவை எண்ணினால் நெஞ்சம் குமுறுவர்; நினைத்து வருந்துவர்.

கெட்ட செயலும் கெடுமதியுங் கொண்டோரின் கூட்டுறவு நீங்கற்பெற்றால், மீண்டும் அத்தொல்லை தொடர முடியாத தொலை தூரத்தில் சென்று தங்குவதே மனித இயல்பு.

அதைப்போலவே, தூய்மையானவர்களின் புகழைக் கெடுக்க நல்வாழ்வைக் குலைக்க புதிய ஏற்பாட்டைக் கெடுக்க, தீயர்கள் "ஓ! இந்த ஆசாமியா? இவன் எம்மோடு இருந்தவனன்றோ! இது போது ஏதோ, மகாபெரியவனாகக் காட்சி தருகிறான். அவன் எங்கள் கூட்டத்தைச் சேர்ந்தவன்" என்று கூறிடுவர்; அவனிடம் உண்டான அன்பின் காரணமாக அன்று; அசூயை காரணமாக.

சீக்கியர்களுக்கும் இந்துக்களுக்கும் உள்ள தொடர்பு, இது போன்றதாகவே இருக்கிறது. வைதீக வெறி ஒழிந்து, இந்து போதை குறைந்து, சமத்துவ வாழ்வு தேவை என்பதை உணர்ந்து, புதிய முறையான சீக்கிய மார்க்கத்தைப் பின்பற்றிய கூட்டத்தினரை, இந்துக்கள், இன்றும், "எம்மவர்; எமது கூட்டத்தினர்; இவர்களும் இந்துக்களே" என்று கூறிக்கொள்கின்றனர். இதற்குக் காரணம் பல. முக்கியமானது, சீக்கியமார்க்கக் கோட்பாடுகளைத் தெரிந்தவர்கள், அந்த உன்னதமான கொள்கைகளைக் கொண்ட மக்களைப் போற்றாதபடி தடுக்க, அவர்களும் இந்துக்களே என்று கூறிட அவாவுகின்றனர்.

இஸ்லாமியர் எழுச்சியைத் தடுக்கவும், அரசியலிலே, இந்துக்களின் எண்ணிக்கையை அதிகமாக்கிக் காட்டவும், சீக்கியரையும், இந்துக்களின் பட்டியிலே சேர்த்து உலகை ஏய்க்கின்றனர். இந்துமத ஆபாசங்களைக் கண்டு இடித்துரைப்போரிடம், "எமது இந்து மதம், பலவர்ண மலர்த் தோட்டம். அதிலே வர்ணாஸ்ரமம் மட்டுமே இருக்கிறதென்று எண்ணாதீர், ஜாதி ஒழிந்த சமத்துவம், வீரம் நிரம்பிய சீக்கிய மார்க்கமும் இந்து மார்க்கத்திலே சேர்ந்ததுதான் என்று கூறி உலகை ஏய்க்க முனைவர். பூங்கொத்தைத் தின்று புதுப்புனல் பருகி கீதமிசைக்கும் கிளி வாழும் தோட்டத்திலேயே, பச்சைப் பாம்பு வாழினும், நீயும் நானும் நிறத்தில் ஒன்றே - இருப்பிடமும் ஒன்றே - சேர்ந்து வாழத் தடையுளதோ என்று பச்சைப் பாம்பு, கிளியிடம் கூறினால், நம்பும் கிளியின் கதி என்னாகும்? அதுபோல, இந்து வைதீகரின் உறவு கொண்டாடும் முறையை நம்பும் சீக்கியரின் கதியுமாகும் என்போம். எனவே, சீக்கியத் தலைவர் தோழர் பலதேவசிங் 'சீக்கியர்களை இந்துக்களுடன் சேர்த்துப் பேசுவதையும், இந்துக்களுக்கும் சீக்கியருக்கும் பேதமில்லை என்று கூறுவதையும், சீக்கியரை இந்துக்களின் பட்டியிலே சேர்ப்பதையும் நான் பலமாகக் கண்டிக்கிறேன்" என்று உறுதியுடன் உரைத்திருப்பதுகேட்டு, நானக் பரம்பரை இன்னமும் நலிந்துவிடவில்லை என்று மகிழ்கிறோம். கூடத் தகாதவர்களின் கூட்டுறவை நீக்குவது அறிவு உடைமை மட்டுமன்று, தற்காப்பு முறையுமாகும். இதனை உணர்ந்ததுகண்டு உளம் பூரிக்கிறோம்.

சீக்கியமதமே, இந்து வைதீகத்தை எதிர்த்தெழுந்த புரட்சி மலர். அதன் மணம், புண்பட்ட பல இலட்சம் மனதுக்கு மருந்தூட்டியது. அதன் வாடை, வைதீகவெறியை ஓரளவு தெளிய வைத்தது. இந்துமத மெனும் இடுக்கியில் சிக்கிச்சிதைந்த சமுதாயத்தைச் சீர் செய்து சேற்றிலிருந்த செந்தாமரையை வெளியே எடுத்ததுபோல, முள்நீக்கி ரோஜாவைப் பறித்ததுபோல், கனியில் சென்று கட்டித் தங்கமெடுத்ததுபோல சீக்கியக் குரு, இந்து மதமெனும் சேற்றிலே புதைந்து கிடந்த மக்களை வெளியேற்றினார். அடிமைகளாகக் கிடந்தோரை, அரசாள்வோராக்கினார்; கோழைத்தனத்தை ஒரு கோட்பாடாக்கிக் கொண்டிருந்த கூட்டத்திலிருந்த மக்களின் ஒரு பிரிவினரை வீரராக்கினர்.

போரிட அஞ்சிய போகப்பிரியர்களில் ஒரு பகுதியினரை, சீறிப்போரிடும் சிங்கக்களாக்கினார். வெளியான் எவன் வரினும் வீழ்ந்து வணங்கவும், கங்கா ஜலத்தைத் தெளிக்கவுமே கற்றுக்கொண்டிருந்த கையாலாகாதவர்களிலே, சில இலட்சம் மக்களை அஞ்சா நெஞ்சராக்கினார். சீக்கிய மத குருமார், வைதீகத்தை வீழ்த்தி, சடங்குகளைச் சாய்த்து, விக்ரக வணக்கத்தை வீணாட்டம் என்று வெறுத்தொதிக்கி, பல தெய்வ வணக்கத்தைப் பலமாகக் கண்டித்து, ஜாதி பேதமெனும் பித்துப்பிள்ளை விளையாட்டை ஒழித்து, சீலம், வீரம், சமத்துவம், எனும் நற்குணங்களுக்கு இருப்பிடமான மார்க்கத்தை வகுத்தனர். மும்மூர்த்திகள், மூர்த்திஸ்தலங்கள், முப்புரியினர் எனும் மூடமதிக் கோட்பாடு சீக்கியர்கட்குக் கிடையாது. உருவமற்ற ஒரே ஆண்டவன், குருமார்களின் வாக்குகளின் தொகுப்பான கிரந்தம், அவர்களின் வேதம். சீக்கியர்களுக்குள் ஜாதி வித்தியாசம் கூடாது என்பது அவர்களுடைய சட்டதிட்டம். வீர வாழ்வு அவர்களின் இலட்சியம்.

இஸ்லாமியருக்கு ஒரு அல்லா, ஒரு நபி, ஒரு கொரான், ஒரே இனம், என்ற திட்டம் இருப்பதுபோல், சீக்கியர்களுக்கும் அமைந்திருக்கிறது. இதன் பயனாகவே, இந்துக்களிடையே காணப்படாத, உண்டாக முடியாத, உத்வேகம், சமத்துவ உணர்ச்சி, வீரம், சீக்கியரிடம் இருக்கிறது. மொழியுங்கூட சீக்கியருக்குத் தனி. குர்முகி என்பது அவர்தம் மொழி.

ஒரு பேராசிரியர் கூறியிருப்பது போல், இஸ்லாத்தின் குர்முகி பதிப்பே சீக்கிய மார்க்கம்.

இவ்விதமான ஒப்புவமை உள்ள இருசாராருக்கு மிடையே, அணையாத விரோதம் மூட்டி விட்டு, அதனால் பயனடைந்தவர்கள், பஞ்சாங்கக் கூட்டமே என்பதை வரலாற்றைக் கூர்ந்து படிப்போர் உணருவர். மராட்டியர், ரஜபுத்ரர், சீக்கியர், எனும் போர்ப் பரம்பரையினர் வரையும், முஸ்லீம்கள் மீது மோதவிட்டு இடையே ஆரியம், இரத்தம் உறிஞ்சி வாழ்ந்தது. அந்தப்போக்கை மாற்றிக்கொள்ளாமல், இன்றும், வீரசவர்க்கார் எனும் மராட்டியப் பார்ப்பனர், இந்துமகா சபைத் தலைவராக இருந்து கொண்டு, பாகிஸ்தானை எதிர்க்கப் பச்சை இரத்தம் பரிமாற வாரீர் என்று சீக்கியரைத் தூண்டிவிடுகிறார்.

மொகல் சாம்ராஜ்யத்தின் மீது மராட்டியரை மோதவைத்த தன் பலனாகப் பீஷ்வாக்கள் எனும் பார்ப்பன அதிபர்கள் உண்டாயினர். சீக்கியரை, இஸ்லாத்தின் மீது மோதவைப்பதாலும், இந்துக்களே இலாபம் பெற முடியும். சீக்கியர் இந்தச் சூதினை உணர்ந்து விடுவதால், இஸ்லாமியருடன் சரிசமமான உத்தமக் கொள்கைகளைக் கொண்ட தாங்கள் இழுக்கு நிரம்பிய இந்துமதக் கரடியில் விழக்கூடாது என்பதை உணருவர்.

தோழர் பலதேவ சிங்கின் பேச்சு, இத்தகைய விழிப்பை சீக்கியரிடையே உண்டாக்கியிருப்பதைக் காட்டுகிறது. இது வரவேற்கத்தக்கது.

இஸ்லாமிய ஆட்சி ஏற்படாதபடி தடுக்கும் சூரர்கள், சிங்கங்கள் நீவிரன்றோ! ரஞ்ஜித்சிங் எனும் தலைவன் தயாரித்தான் களச்சூரர் நீவிரல்லவோ! பாகிஸ்தான் என்றோ வந்து வேண்டும்” என்று தூண்டிவிடும் காரியத்தை இந்துமகாசபை செய்து வருகிறது. இதனால், சிந்தும் இரத்தம் பாஞ்சாலத்துச் சடலம் நதியைக் கெடுக்குமே யன்றி கரை வாசிகள் கவலையற்று கிடப்பர் என்பதைச் சீக்கியர் தெரிந்துகொள்ள வேண்டும்.

“வீர மரபினரான உமக்கு ஒரு தனி அரசு கேளுங்கள். சீக்கியர்கள், பஞ்சாப் பிரதேசத்தில் மட்டுமே பெருவாரியாக உள்ளனர். இங்கு அவர்களின் தொகை 30 இலட்சம். இந்த 30 இலட்சம் பேருக்குத் “தனிநாடு” தேவை என்றால், பாகிஸ்தானில் இடம்பெறாத ஐக்கிய மாகாணத்தில் மட்டும் உள்ள 50 இலட்சம் முஸ்லீம்கள் தனிநாடு கேட்க உரிமை பெற்றவராவர் என்பதை, இந்து மகாசபையினருக்குக் கூறவிரும்புகிறோம். சீக்கியரைத் துண்டி விடுவதன் விளைவாக, பாகிஸ்தானின் எல்லை விஸ்தரிக்குமேயன்றி, கோரிக்கை அடங்கிவிடாது. சீக்கியரும், சட்லட்ஜ் நதிக்கரையிலே முன்னாளில் உலவிய தமது குருமார்கள், இந்துக் கொடுமையை விட்டு விலகவே, வீரசீக்கிய மார்க்கத்தை வகுத்தனர் என்பதை உணர்ந்து, கோழைத்தனமே குடி கொண்ட இந்து வைதீகக் கும்பலின், எடுபிடிகளாகாமல், நானக்கும், ரஞ்சித்தும், வகுத்த வழியைப் பின்பற்ற வேண்டுகிறோம்.

சிரோமணி குருத்வரா பிரபுதன்தாக் கமிட்டி எனும் சீக்கியக் குழு, “யாரொருவர் தன்னை இந்துவென்று கூறிக் கொள்கின்றனரோ, அவர்கள் சீக்கியராகக் கருதப் படமுடியாது” என்று தீர்மானித்துள்ளனர்.

ஓரியன்ட் பிரஸ் நிருபர் இதுபற்றி லாகூரிலிருந்து தெரிவிப்பதாவது, “இனி அரசியலிலே சலுகைகள் பெற வேண்டுமானால் அதனை முஸ்லீம்களிட மிருந்தே பெற முடியும் என்பதையும் இந்துக்களிடமிருந்து இதனைப் பெற முடியாது என்பதையும், இப்போது சீக்கியர் தெரிந்து கொண்டனர்!”

அகாலித் தலைவர்கள், இனி சீக்கிய இஸ்லாமிய ஒற்றுமைக்கான வழிவகை செய்ய ஒரு குழு அமைக்கவும், அதனைத்துவக்கி வைக்க ஜனாப் ஜின்னாவை அழைக்கவேண்டு மென்றும் தீர்மானித்துள்ளனர் என்றும் தெரிய வருகிறது. எனவே, சட்லஜ் நதிக்கரையில் இனி இந்து ஆதிக்கம் அடங்கிவிடும் என்பதுறுதி.

23.5.1943

# நான்கு இலட்சம் காணிக்கை !

வீராவேசக்காரன், வெந்தழல் விழியினன், வெற்றியன்றி வேறொன்றறியா வீரன், ஹிட்லர், பாலைவனத்திலே, தனது பெரும்படையொன்றை அனுப்பி, அதற்குப் பக்குவமான பயிற்சி தந்து; பலமான பாதுகாப்பு அரண்கள் அமைத்துக் கொடுத்ததுடன், சூரன் என்ற விருதுகொண்ட ரோமல் என்பானைத் தலைவனாக்கி, அவனுக்கு அடுத்த படியில், ஆங்கிலரென்றால் சீறி விழும் துவேஷி ஆர்னீ என்பானைப் படைத்தளபதியாக்கி, வட ஆப்பிரிக்காவை வளைத்து, ஈஜிப்டைப் பிடித்து, மத்யதரைக்கடலைக் கலக்கிவிடு, என்று உத்தர விட்டான். வட ஆப்பிரிக்கப் போரும், பல்வேறு மாற்றங்கள், திட்டங்களுடன் நடைபெற்றது.

கடைசிக் கட்டம் என்று கருதப்பட்ட நேரத்திலே, ஜெனரல் ரோமல், புலியெனப் பாய்ந்து, கோட்டைகளைப் பிடித்துக் கொத்தளங்களைத் தூளாக்கி, ஆங்கிலப்படையை ஆட்டிப் படைத்ததுடன், அலெக்சாண்டிரியா துறைமுகத்தைப் பிடிப்பதற்காக, ஈஜிப்ட் தேசத் தாழ்வாரத்திலே நடமாடினான்.

கெய்ரோவிலே கழுகுகள் வட்டமிடுமோ, ஈஜிப்ட் பிடிபடுமோ, மத்யதரைக்கடல் இத்தாலிய ஏரியாகுமோ, சூயஸ் கால்வாயின் மீது சுவஸ்திகக் கொடி பறக்குமோ, என்று உலகிலே, எண்ணி ஏங்காதார் மிகச்சிலரே.

“அஞ்சாதீர்! ஈஜிப்ட் காப்பாற்றப்படும்” என்று சர்ச்சில் உறுதி கூறினபோதுகூட, ‘ஆமாம், மலேயா காப்பாற்றப்படும் என்று கூடத்தான் இவர் கூறினார்; நடந்ததோ வேறு” என்று கூறி வருந்தினர் சிலர். கேலி செய்தனர் பலர். ஆனால் சர்ச்சிலின் மொழியைத் தமது வழியாகக்கொண்டு, நேசநாட்டுத் துருப்புகள் நிமிர்ந்து நின்று போரிட்டு ரோமலின் படையை விடாது துரத்தலாயின. இதற்குள், விஷி சர்க்காரைவிட்டு விலகினேன் என்று ஜெனரல் ஜிராடு கூறிவிட்டார், அப்படையும் போருக்குக் கிளம்பி அச்சுப்படையைக் கொட்டத் தொடங்கிற்று. அமெரிக்கப்படையும் வந்து சேர்ந்துவிட்டது,

உடனே மகத்தான "வேட்டை" ஆரம்பமாயிற்று. மாயாவாதிபோல், மறைவதும் தலைகாட்டுவதும், ஓடுவதும் ஒதுங்கி நிற்பதும், திடீரெனத் தாக்குவதும் திசைமாறிப் பாய்வதுமான, பல சூது புரிந்தும், அச்சுப் படையினால், அவிழ்ந்த கச்சையை வரிந்து கட்ட முடியாது போய்விட்டது, கடலிலிருந்து, கப்பலின் பீரங்கிகள் கனலைக் கக்கின; தரையிலே டாங்கிகள் தாக்கின; விண்ணிலிருந்து விமானங்கள் குண்டுகள் பொழிந்தன. ஈஜிப்ட்டிலிருந்து பிரிட்டிஷ், இந்தியப் படைகள் தாக்கியபடி துரத்தின. அதற்கு எதிர்ப்புறத்திலிருந்து அமெரிக்கத் துருப்புகள், ஓடிவரும் அச்சுப்படையைக் குண்டு பொழிந்து வரவேற்றன. இடையே புகுந்து, வீரபிரான்சு மக்களின் விடுதலைப்படை, அச்சுப்படையின் இடுப்பை முறித்தன. வெற்றி முழக்கமிட்ட வண்ணம் பாய்ந்து வரும் நேச நாட்டுப் படைகள் முப்புறமும், மற்றோர்புறமோ கடல், அதிலேயோ, பிரிட்டிஷ் கடற்படை, விண்ணிலோ, பிரிட்டிஷ், அமெரிக்க விமானப்படை, புண்பட்ட புலி புதரிலே பதுங்கிப் பயன் உண்டோ! வேல் பாய்ந்து வாராதோ! ஜெர்மன், இத்தாலியப் படைகளின் நிலையும் அதுபோலவே முடிந்தது. டியூனிஸ் என்னும் கடைசிக்களத்திலே ஜெர்மானியர் தாம் கற்ற வித்தையத்தனையையும் காட்டிப் பார்த்தனர். தோற்றனர், சரண் புகுந்தோரும் செத்தவரும் போக, மற்றையோர், பான் தீபகற்பம் என்னும் இடத்திலே புகுந்து கொண்டனர், அவர்கள் நிலைமை, கூண்டிலே சிக்கிய எலி போன்றதாகி விட்டது. கேப்பான் தீபகற்பத்தைச் சுற்றிலும் நேசநாட்டுப் படைகள் குவிந்தன. குலைநடுக்கங்கொண்ட அச்சுப் படைத்தலைவன், வான்ஆர்னிம், புதன்கிழமை இரவு 8.15 மணிக்கு, ஆயுதத்தைக் கீழே போட்டுவிட்டு, "அபயம்" கோரினான் இந்தக் கடைசிக்காட்சியைக் காணாது, ரோமல், ஜெர்மனியிலே தங்கிவிட்டார். அவருக்கு ஏதோ நோயாம்! நோய் வருவது சகஜந்தான்!! பனிரண்டு தளபதிகள் உட்பட மே 5-ந் தேதி முதல் ஒரு வாரத்திலே மட்டும் ஒரு இலட்சத்து ஐம்பதாயிரம் அச்சுப் படையினர் கைதிகளாயினர். பிடிபட்ட

பீரங்கிக்குவியலும். துப்பாக்கிக் குன்றுகளும், டாங்கி வரிசைகளும், ஒடிந்துபோன விமானங்களும், கணக்கிடமுடியாது. நேசநாட்டினருக்கு வட ஆப்பிரிக்காவிலே மகத்தான வெற்றி கிடைத்துவிட்டது. ஜெர்மன் படையை எதிர்த்துப் போரிட்டு நொறுக்க முடியும் என்பதை உலகுக்கு உணர்த்திய பெருமை, சோவியத் நாட்டுக்குக் கிடைத்தது. இரண்டாவது பரிசு, இப்போது நேசப் படைகட்குக் கிடைத்தது. இந்த வட ஆப்பிரிக்கப் போரிலே, நடந்த ஒவ்வோர் சமரும், சரிதக் கீர்த்தி வாய்ந்தனவாகும். இவைகளிலே, நமது துருப்புகள் மிக்க கீர்த்திபெற்றன. முக்கியமான கோட்டைகள் பிடிபட்ட போதெல்லாம் நமது துருப்புகளின் வீரத்தியாகமே வெற்றிக்குக் காரணமாக இருந்ததென்பதை ஏகாதிபத்திய இலட்சியத்தைப் பூஜிக்கும் சர்ச்சில் உள்படப் பலரும் பாராட்டக் கேட்டுப் புகழ்கிறோம். வட ஆப்பிரிக்காவை விழுங்குவதற்குத் திட்டமிட்ட ஹிட்லர், இந்த முனையில் போர் துவக்கி இரண்டு ஆண்டு, பதினோறு திங்கள், இருபத்தாறு நாட்களாயின, இறுதி வெற்றி நேசநாடுகளுக்குக் கிடைத்துவிட்டது. இந்தப் போரிலே இதுவரை கைதியான அச்சுப்படையினரின் தொகை 4 இலட்சம். பதினொரு ஜெர்மன் பட்டாளங்களும், இருபத்தாறு இத்தாலியப் படையும் படுசூரணமாயின. பொருள் நாசமோ ஏராளம். பாலைவனத்தின் வெண்மணல், கா ஏறிவிட்டது. ஜெர்மன் பேராசையும், இத்தாலியரின் சாம்ராஜ்யப் பித்தமும் மலை ஏறிவிட்டது. நாலு இலட்சம் வீரரைக் காணிக்கையாகத் தந்த ஹிட்லர், இனியேனும் சரண்புகுவாரா, கேப்பான் தீபகற்பத்திலே கடைசி நேரத்திலே ஒளிந்து கொண்டு போரிட்டுப்பார்த்தது போல் பெர்லின் கதவைச் சோவியத் படை தட்ட, கோட்டையை நேசநாட்டு விமானங்கள் தாக்க, பிரன்சுக் கடலோரம், நார்வே கடலோரம், இத்தாலி ஆகிய இடங்களிலே எங்கேனும் நேசப்படைகள் இறங்கி, ஜெர்மனிடையே நோக்கிப் பாய்ந்து வரும்வரை காத்திருக்கப் போகிறாரா, என்பதுபற்றிய கவலை, ஜனநாயக வாதிகளுக்கு

இல்லை. ஜெனரல் பிராங்கோவுக்கு அக்கவலை பிறந்துவிட்டது. ஆகவே அவர், பட முடியாதினித்தயரம் எனும் பதிகம் பாடிச் சமாதானந்தேடக் கோருகிறார். நிபந்தனையின்றிச் சரண்புகுந்தாலன்றி இனி ஜெர்மன் வெறியர்கள் தப்ப முடியாது. இதற்காவன செய்யும் நோக்கத்துடனேயே சர்ச்சில் - ரூஸ்வெல்ட்டுடன் கலந்து பேசி வருகிறார்.வி

# மாஸ்கோ மறந்தாலும் !

அந்தக் கொடுங்கோலனா, இங்கு வருகிறான்? அவன் கெட்ட கேட்டுக்கு வரவேற்பாம், வைபவமாம். சொரணை கெட்ட சோற்றுத் துருத்திகளல்லவா, இதைச் சரி என்று கூறும்.

“ஆமாம், அந்த அக்ரமக்காரன் இங்கு வரக்கூடாது.”

“அவனுக்கு விருந்து, வைபவம், வரவேற்பு நடக்கக்கூடாது.”

“கிளர்ச்சி செய்வோம்! வரவேற்பைத் தடுப்போம். ஜார் இங்கு நடமாட விடமாட்டோம். ஒழிக ரஷிய ஜார்! ஏழைகளை வதைக்கும் கயவன் ஒழிக!!

“எடுங்கள் செங்கொடியினை! நடவுங்கள், ரஷ்ய அதிகாரியின் மாளிகை நோக்கி! மக்களின் கொதிப்பை அவன் காணட்டும், மாநிலம் அறியட்டும், நாம் மமதை கொண்டோனை வெறுக்கிறோம் என்ற செய்தியை. கிளம்புங்கள்.”

ஜாரின் கொடுங்கோலாட்சியிலே சிக்கிச் சிதைந்தது ரஷிய மக்களன்று, மேலே நாம் தீட்டியபடி, தீப்பொறி பறக்கப் பேசியது, ரஷியாவிலே, ஜார், படாடோபமாகப் பவனிவந்து கொண்டிருந்த நாட்களிலேயே, அவன் தீயன் - அத்தீயனைக் காண்பது தீது - அத் தீயனின் வருகையைத் திருவிழாவாகக் கொண்டாடுவது அதனினுந் தீது - என்று கோபித்துக்கூறிப், புயலென ஒரு கூட்டம் கிளம்பிற்று, ரஷியாவில் அன்று!

ஏககாலத்திலே ஆறு கண்டனக் கூட்டங்கள், ரஷிய ஜார், நிக்கோலஸ், வருகை கூடாது என்று முழக்கம் - மாஸ்கோவிலன்று, இம்மாபெருங் கூட்டங்கள், இலண்டனில்! சொற்பொழிவாளர்கள், ரஷியரல்ல, பெர்னார்டுஷா, போன்ற பிரிட்டிஷ் அறிஞர்கள் 1905-ல், ரஷிய மன்னன் ஜார் நிக்கோலஸ், இலண்டனுக்கு விஜயம் செய்ய ஏற்பாடாகி இருந்தது, மாரிகாலம். மன்னனை மகத்தான முறையிலே

வரவேற்கப், பிரிட்டனிலே அரசாளும் கூட்டம், ஏற்பாடு செய்து வைத்தது, ஜார், இரத்தக்கரை படிந்த கரத்துடன் இலண்டன் வர இருந்தான். ரஷியாவிலே, ஜாராட்சியை எதிர்த்தவர்களைச் சுட்டுக் கொல்லும்படி உத்தரவு பிறப்பித்த, அந்தத் தூர்த்தனின் வருகைக்கு இலண்டனில் துந்துபி முழங்குவதா, அதை நாம் கேட்பதா, என்று கூறிச்சீறி எழுந்த பிரிட்டிஷ் மக்கள், பெருங்கிளர்ச்சி செய்து, வெளிநாட்டு அலுவல்களைக் கவனிக்கும் பணிமனை முன்சென்று, முழக்கமிட்டு ரஷியத்தூதர் மாளிகைமுன் நின்று ஆர்ப்பரித்தனர். போலீஸ் தடியடியும், சட்டச் சவுக்கும், கிளர்ச்சிக்காரர்மீது வீழ்ந்தது - ஆனால், அவர்கள் வெற்றி பெற்றனர், ஜார், இலண்டன் வரவில்லை - வந்து ரசாபாசம் நேரிடுவதைவிட, வராதிருப்பது மேல் என்று கருதினான், வீரத்தைவிட விவேகமே மேல், என்று தீர்மானித்தான்.

புரட்சிக்கு முன்பே, ரஷிய மக்களிடம் அக்கறை காட்டியும், ஜாரின் ஆட்சி முறையைக் கண்டித்தும், மனித விடுதலை உணர்ச்சிக்கு ஆக்கந்தேடியும், இலண்டனில் கிளர்ச்சி நடைபெற்றது. ஆனால்...

எந்தப் பிரிட்டனிலே ஜார் காலடி வைக்கக்கூடாதென்று மக்கள் கூறினரோ, அதே பிரிட்டனிலே ரஷியப் புரட்சியின் முதல் கூட்டம் முடிந்து, சீமான்கள் விரண்டோடியபோது, வெளிநாடுகளிலே அடைக்கலம் புகுந்து ரஷியாவிலே நிறுவப்பட்ட பொது உடைமை ஆட்சியைக் கவிழ்க்கச், சீமான்கள் சதிசெய்தபோது, அந்த வெள்ளை ரஷியருக்கு, அபயமளிக்கவும், ஆயுதந்தரவும், படைபலம் தரவும், பொதுஉடைமை ஆட்சிக்கு உலை வைக்கவும், முனைந்து வேலை செய்ததும், பிரிட்டனே! இந்நாள் முதலமைச்சர், மிஸ்டர் சர்ச்சில், வெள்ளை ரஷியருக்காகப் பரிந்து பேசினார், கச்சை கட்டினார், படை திரட்டினார், பணம் உதவினார். 28,000,000 பவுன், கோல்சாக், டெனிகின் எனும் இரு வெள்ளை ரஷ்யருக்குப் பிரிட்டிஷ் சர்க்காரால் கடனாகத் தரப்பட்டது. ஜெர்மன் சண்டையிலே பிரிட்டன் வெற்றி பெறச், சர்ச்சில், அது சமயம், போர் மந்திரியாக இருந்து உழைத்துக் கீர்த்தி பெற்றார். போர் முடிந்ததும் பொது உடைமைமீது சர்ச்சில் பாயத் தொடங்கியதும், முன்பு அவரை மாலையிட்டு வாழ்த்தியவர்கள், கண்டிக்கலாயினர். இப்பெரும்பொருளை வீணுக்கு இறைக்கலாமா? என்று, பார்லிமெண்டிலே சரமாரியான கேள்விகள் கிளம்பின.

எந்தச் சர்ச்சில், நாடோடிகளாக வந்த இரு ரஷியச் சுயநலமிகளுக்காகப் பண உதவியும் படை உதவியும் செய்தாரோ, அதே சர்ச்சில்,

முதலமைச்சராக இருக்கும் இதுபோது, ரஷியாவுக்குத் தளவாட உதவி செய்யும் நிலைமை ஏற்பட்டதை, உலக மாறுதலால் விளையும் விசித்திரங்களில் ஒன்று என்போம்.

எந்தப் பிரிட்டன், காரல் மார்க்சுக்கும், லெனினுக்கும், புரட்சி முறை பற்றித் திட்டம் வகுக்கும் மாநாடுகள் நடத்த இடமளித்ததோ, அதோடு, புரட்சிக்குப் பிறகு, லிட்வினாப்பை, நாட்டை விட்டு வெளி ஏற்றியது. இங்ஙனம், ரஷிய மக்கள் கஷ்டப்படும்போது, அனுதாபமும் அக்கறையும் பிறப்பது, ரஷியக் கொள்கையிடம் மட்டும் வெறுப்பு உண்டாவதுமான நிலைமை இருக்கக் காரணம், ரஷியா, பொதுஉடைமைக் கொள்கையை உலகெங்கும் பரவச் செய்யும், பல்வேறு நாடுகளிலேயும், பொது உடைமை அரசு அமைப்பதற்கான புரட்சியை மூட்டிவிடும், பல்வேறு நாட்டுப் பாட்டாளி மக்களையும், அந்தந்த நாட்டு அரசியலுக்கு விரோதமான காரியத்தைச் செய்யும்படி தூண்டிவிடும், என்ற கிலியேயாகும். இந்தப் பீதி, வல்லரசுகளிடையே வலுக்கவலுக்க, அவைகளுக்கு ரஷியாவிடம் சந்தேகமும், வெறுப்பும் வளரலாயிற்று. அந்த வல்லரசுகளின் மனதை மிரட்டும் ஒரு ஸ்தாபனம் ரஷியாவிலே ஆரம்பிக்கப்பட்டது, அச்சம் பதின் மடங்கு அதிகரித்தது.

கோமின்டர்ன் - அகில உலக பொது உடைமைக் கழகம் - மாஸ்கோவிலே, நிறுவியதன் காரணம், மற்ற நாடுகளிலே, இரத்தப் புரட்சியை உண்டாக்கவே என்று, வல்லரசுகள் நினைத்தன.

அச்சம் பிறந்திடக் காரணமாக இருந்த மற்றோர் சம்பவம், டிராட்ஸ்கீ - ஸ்டாலின் தகராறு.

சுற்றிலும் முதலாளி அரசுகள் இருக்குமானால், இடையே ரஷியா மட்டும், பொது உடைமை அரசாக இருக்க முடியாது, ஆகவே ரஷியாவின் இலட்சிய பூர்த்திக்காக, உலகெங்கும் முதலிலே, பொது உடைமை அரசு காணப் புரட்சிகளை மூட்டிவிட வேண்டும், என்பது டிராட்ஸ்கியின் கருத்து. அவருடைய இலட்சிய ஆவேசம் ஸ்டாலினுக்குப் பிடிக்கவில்லை. ரஷ்யாவிலே, முதலிலே பொது உடைமை அரச¬ப் பலப்படுத்த வேண்டும், இதற்கு, ரஷ்யாவைச் சுற்றிலும், முதலாளி அரசுகள் இருப்பது பெருந்தடையாகாது,

உலகெங்கும் பொது உடைமைக்கான புரட்சியை மூட்டிவிடும் வேலையை ரஷ்யா செய்து கொண்டிருந்தால், ரஷ்யாவே, பொது உடைமை அரசை இழக்க வேண்டி நேரிடும், என்பது, யூகமிக்க ஸ்டாலின் எண்ணம், இந்த இருதலைவர்களின் போராட்டத்தின் போது ரஷ்யாவிடம், வல்லரசுகளுக்கு இருந்த சந்தேகம், பலப்பட்டது. கோமின்டர்ன், ஒரு விஷப்புகைச்சாலை என்று வீணாகச் சந்தேகிக்கலாயினர்.

இன்றையப் போரிலே, பிரிட்டன், அமெரிக்கா, ஆகிய நேசநாட்டுக் கூட்டு முன்னணியைக் குலைக்கக் கருதிய ஜெர்மன் பிரசாரகர், கோமீண்டர்ன் இருப்பதைக் காட்டி, ரஷியாவின் நோக்கம், எங்கும், பொது உடைமையை நிறுவுவதற்கான புரட்சி மூட்டுவதுதான் என்று கூறிக் கலகமூட்டவே, பிரிட்டனிலே சில சீமான்களுக்குச் சஞ்சலமும், அமெரிக்காவிலே சில பூமான்களுக்குப் பீதியும் உண்டாயிற்று. ஜெர்மன் பிரசாரகர் இதுதான் தக்க சமயம் என்று கருதி, இந்தச் சந்தேகத்தை மேலும் மேலும் வளர்க்கவே, ஸ்டாலின் தீரமாகக் கோமீன்டர், கலைக்கப்பட்டுவிட்டது என்று தெரிவித்துவிட்டார். இனி, ரஷ்யாவிடம், இந்தப் பணக்கார நாடுகளுக்குச் சந்தேகம் எழக்காரணம் இல்லை. ஜெர்மன் பிரசாரமும் இனிப் பயன்பட மார்க்கமில்லை.

ஆனால் கோமின்டர்ன், கலைக்கப்பட்டதால், உலகில் பல்வேறு நாடுகளிலே, தோன்றியுள்ள சமதர்ம அரும்பு, கருகிவிடும் என்று பித்தரன்றி மற்றவர் கருதிடார், மாஸ்கோ, மாநிலத்தை மறக்கினும், மாநிலம் மாஸ்கோவை மறக்காது. சமதர்மத்தைச் சாய்த்திடக் கோமீண்டர்னைக் கலைக்கச் செய்ததுபோதும், என்று முதலாளிகள் எண்ணுவார்களானால், அவர்களின் மந்தமதிகண்டு நாம் பரிதாபப் படுகிறோம். சமதர்மம், இனி, கோமின்டர் உதவியின்றியே, உலகெங்கும், பரவிவிடும், அதைத்தடுக்க இனி எவராலும் முடியாது, என்பது ஸ்டாலினுக்குத் தெரியும்.

கோமீன்டர்ன் கலைந்தது; சமதர்மம் நிலைத்தது.

30.5.1943

# ஊரார் உரையாடல் !

இடம் : கோவில் குளம்.

பாத்திரங்கள் : வரதாச்சாரியார், வத்சலா, சுதாசனாச்சாரி, ஜனகா, கோபாலன்.

வத்சலா: அடி அத்தே! கொளத்திலே கொழந்தையா, விழறதுக்கு.

ஜனகா: வெறுமனே, கூவாதேடி, நானென்ன கொழந்தையா, விழறதுக்கு.

வரதாச்சாரி : ஏண்டி, மொட்டை முண்டே, அவ சொன்னது நல்லதுதானேடி. நீ விழுந்து தொலைச்சா இங்கே கோயில் காரியமன்னா கெட்டுப்போகும்.

சுதர்சனாச்சாரி : நன்னா சொன்னேன். இந்தச்சண்டைச் சனியனாலே முதலிலே சங்கடம் நேரிட்டது. பிறகு பாருங்கோ இந்த ஏ.ஆர்.பி. பசங்க உயிரை வாட்டிண்டு இருந்தா. பிறகு, ஏமீப வரதராஜப் பெருமாள், யார் மனசிலேயோ பூந்துண்டு, உத்சவம் நடக்க உத்தரவு பிறப்பிக்கச் செய்தாராம். திவ்யமாக நடந்தது.

ஜனகா : என்ன திவ்யம், மகாதிவ்யம். உத்சவமா நடந்தது? ஒப்புக்கு அழற மாதிரி, ஏதோ நாலு தெரு சுத்திண்டிருந்தா, கூட்டம் உண்டா, கடை உண்டா, கருட சேவைக்கு என்ன இருந்தது, யார் வந்தா.

வரதாச்சாரி : போதும் வாயை மூடிண்டுகிடடி, மொட்டை முண்டே. பிரதி தினமும், ஸ்வாமி கங்கனா மண்டம் போனாறானா நோக்குத் திருப்தியா இருந்திருக்கும், உன்னை யாரோ தாம்பூலம் வைச்சி அழைக்கறமாதிரி அங்கே போயிண்டிருப்பே, இப்போ அது கெட்டுப்போச்சேன்னோ, அதுதான் அவளுக்குக் கவலை.

வத்சலா : அப்பா! நேத்து கடைவீதியிலே நான் யாரைப்பார்த்தேன் தெரியுமோ?

ஜனகா : யாரைப் பார்த்தே?

வத்சலா : நீ ஏண்டி குறுக்கே பேசறே, நான் அப்பாவைத்தானே கேட்டேன்.

வரதாச் : அவ, வாய் மூடுமோ, போடி, போய் மடப்பளியிலே ஏதாவது பிரசாதம் வாங்கிச் சாப்டுட்டு வாடி, ஏண்டிவத்சு, யாரைப்

பார்த்தே மாப்பிள்ளை வந்தாரா என்ன?

வத்சலா: அவரை இல்லைப்பா. என்னை முதலிலே கேட்டா பாருங்கோ, மைலாப்பூர் டாக்டர், அவரைத்தான் பார்த்தேன்.

சுதர்சனம்: யாரு, சந்தானமா? ஏண்டி, அவனோடு, ஒல்லியா, செகப்பா ஒரு பொண்ணு இருந்தாளோ.

வத்சலா : ஆமா சித்யா, இருந்தா, டிராமாக்காரி போலன்னோ இருந்தா.

சுதர்ச : டிராமாக் காரியுமன்று, சினிமாக்காரியுமன்று, அவதான் அவனுக்கு ஆத்துக்காரி. ராவ்பகதூர் ராமச்சந்திரய்யர் மகளேன்னோ அவ. டான்சு ஆடறாடி அவ.

வத்சலா : அவ நடந்த நடையிலேயிருந்தே நான் நினைச்சேன்.

சுதர்ச : இன்னும் கொஞ்ச நாளிலே ருக்மணி அருண்டேலைத் தோற்கடித்து விடுவாளாம். அவ பேருகூட அருமையா இருக்கும், நினைப்பில்லே.

வரதாச் : நளினி என்று பேராம்.

ஜனகா : அது என்ன பேருடா அது. வாயிலேயே நுழையாது போலிருக்கே.

வத்ச : ஏண்டி அத்தே! உன்வாயிலே வடை தோசை தவிர வேறென்ன

பிடிக்கும்.

சுதர் : பேஷாச் சொன்னேடி வத்சு.

வரதா : ஆமாம், சந்தானம் உன்னோடு பேசினானோ?

வத்சலா : இல்லை, வெறுமனே பார்த்துச் சிரிச்சேன். நான், சௌக்கியந்தானென்னு அப்பா உம்மை விசாரிக்கச் சொன்னார்னு சொன்னேன். நான் நாளைக்கு வந்து அப்பாவைப் பார்க்கிறேன்னு அவர் சொல்லிண்டிருக்கிறதுக்குள்ளே, அவ என்ன செய்தா தெரியுமோ...

ஜனகா : ஆட்டக் குதிரை மாதிரி ஆடினா, அவளின்னோடே அவன் போனான், இவ இஞ்சி தின்ன குரங்காட்டம் விழிச்சா.

சுதர் ; ஏண்டி ஜானு, இப்படி வளவளன்னு பேசறே.

வரதா : அவளுக்கு வாயும் அறுதல், கழுத்தும் அறுதலேன்னோ.

(ஒரு வாலிபன் அப்பக்கம்வர)

ஜனகா : அட கட்டேலே போறவனே, கொஞ்சம்தூரம் விலகக் கூடாதோ, பிராமணா இருக்காளேன்னு கொஞ்சமாவது எண்ணப்படாதோ (குளத்திலே இறங்கிய கோபாலன், ஜானகியை முறைத்துப் பார்த்து)

கோபாலன் : ஏன் பெரியம்மா இவ்வளவு கோபம்? நான் என்ன மேலேயா விழுந்தேன்.

ஜானகி : (வரதாச்சாரியைப் பார்த்து) கேட்டயளோ, அவன் பேசறதை - மேலே விழுவானாமே.

கோபாலன் : அட யாரம்மா பெரிய அடாவடிப் பேர்வழியா இருக்கே. மேலே விழுவேன் என்றா சொன்னேன்.

சுதர் : விழுந்து பாரேன். பாரேன்னேன், அப்போ தெரியறது.

கோபா : சரிதான் நிறுத்ததய்யா, சும்மா மிரட்டாதே, கோயில் கொளம் உங்க சொத்துபோலப் பேசறே.

வத்சலா : அவா சு.ம. போலிருக்கு. அவாளுக்கு நம்மவாளைக் கண்டாலே பிடிக்காதே, இப்படித்தான் அவா பேசுவா.

கோபா : போதும். அம்மா, நிறுத்துங்கோ, நீங்க வேற பிரசங்கம் செய்யறிங்களா. உங்க பேரிலே தப்பு இல்லை, எங்களவங்களைச் சொல்லணும்.

வத்சலா : இதுக்குத்தான் சு.ம. கட்சியின்னு பேரு. பிராமணா வேறே, இவா வேறேன்னு பேசுவா. ராமசாமி நாயக்கர் கட்சியேன்னோ.

ஜானகி : அவாதான் கோயில் கொளம் கூடாதுன்னுவாளே, இங்கே ஏன் வந்தாளாம்?

கோபாலன் : உங்களைப் பார்க்கத்தான்.

ஜானகி : அட கட்டேலே போறவனே, என்னைப்பாக்கவா, திமிரே பார்த்தேயேளோ, மரமாட்டம் நின்றுண்டிருக்கேளே. அவன் என் கையைப் பிடித்து இழுத்தாகூட வெறுமனேதான் இருப்பீர் போலிருக்கே. அவர் இப்போ இருந்திருந்தா, இந்த அல்பாயுசு தாடையிலே ஒரே அறையா அறைஞ்சிருக்க மாட்டாரோ. இப்ப இந்த மொட்டச்சியை யார் என்ன செய்தாலும் கேப்பார் யாரிருக்கா? வரதா! நீதாண்டா கவனிக்கணும்.

வரதர் : சும்மா கிடடி. அழறே கொழந்தையாட்டம். ஏதோ விஷக்கடி வேளை. அந்தப் பிள்ளையும் போக்கிரியன்று, பரமசாதுவாகத்

தானே இருக்கான். ஏதோ கோபமா இருந்தான் போலிருக்கு, பேசிவிட்டான். கோயிலுக்கு வந்த இடத்திலே, சகோதரர் போலே இருக்காமே சண்டை போடுவதா. ஏனப்பா முதலியார் வகுப்போ?

கோபாலன் : இல்லைங்க நாயுடு.

வரதா : ரொம்ப நன்னாயிருக்கு, நாயுடுன்னா, வைஷ்ணவ பக்தாளேன்னோ, அவா எப்பவும் பிராமணாளே தூக்ஷிக்கவே மாட்டாடி, ஜானு. வாயை மூடு இருப்பிடம், சென்னைப் பட்டிணமோ?

கோபாலன் : ஆமாங்க.

வரதாச் : வியாபாரமாக்கும்.

கோபாலன் : ஆமாம் வேணு நாயுடு ஷாப் சைனா பஜாரிலே இருக்கே, வைர வியாபாரம், அது எங்க கடைதான்.

வத்சலா : அங்கேதான் இந்த லோலாக்கு வாங்கினது.

கோபாலன் : நான்தான் உங்க கையிலே கொடுத்தேன். 315-க்குத் தம்படி கூடக் குறையாதுன்னு அப்பா சொன்னாரே, நான் 15 குறைத்தேன் - உங்களைப் பார்த்ததும் நான் தெரிந்துக்

கொண்டேன், நீங்கள் மறந்துவிட்டிங்க.

வத்சலா : பார்த்தாயடி அத்தே. நமக்குத் தெரிந்தவர், நீ சண்டைக்கு நின்றாயே.

ஜானகி : நேக்கென்ன தெரியும். யாரோ சூத்ராவாராளேன்னு பார்த்தேன்.

வத்சலா : நகைக்கடை இங்கே உற்சவத்துக்கு உண்டோ.

கோபாலன் : கடை இல்லை, ஆனா, கையிலே கொஞ்சம் நகைமட்டும் கொண்டு வந்திருக்கேன்.

வரதா : இங்கேயே பேசிண்டு நிற்பானேன், ஆத்துக்குப் போவமே. கோபால நாயுடு, நீங்களும் வரலாம், இங்கே எங்கே தங்கியிருக்கேள்?

கோபாலன் : ஓட்டலிலே.

வத்சலா : வைரநகை வைச்சிண்டு, ஓட்டலிலே தங்கலாமோ? ஏண்டி

ஜானி, நம்ம ஆத்து மாடி அறைக்காலியாத்தானே இருக்கு.

வரதாச் : திவ்யமாத் தங்கலாம்.

கோபால் : ரொம்ப சந்தோஷங்க.

வத்சலா : புறப்படு ஜானி, நேக்குத் தலைவலிக்கிறது.

வரதாச் : ஏண்டி வத்சு, சிவகவி போகணும்னு சொன்னேயே.

வத்சலா : இல்லைப்பா, நேக்குத் தலை ரொம்ப வலியா இருக்கு.

ஜானகி : அடேயப்பா, அவர், வந்தா வரட்டும், இல்லை, ஆத்திலே தூங்கிண்டிருக்கட்டும், நான் சிவகவி பாத்தாகணும்.

வரதாச் : சரி, போறது, ஏன் நீர் வருவது உறுதிதானே.

சுதர்ச : ஆஹா! டிக்கட்டு பணம் நம்முடையது.

கோபால் : டிக்கட் வேண்டாம், எனக்கு அந்தச் சினிமாப் படக்காரர் தெரியும், சீட்டு தருகிறேன் றிபிரியாறீ போகலாம்.

வரதா : ரொம்ப நன்னா போச்சு. அப்போ வாரும் நம்ம ஆத்தையும் அடையாளம் தெரிஞ்சிண்டு, சீட்டும் எழுதித்தரலாம்.

வத்சலா : ரொம்ப தூக்கம் வர்ரது வாடி ஜானு, இன்னிக்கி ஆத்துக்கு வரச்சே நகை எடுத்துண்டு வருவீரோ? பார்க்கணும்.

கோபாலன் : ஒரு கைப்பெட்டிதானே, இப்பவே எடுத்துவந்து விடுகிறேன். (யாவரும் போகின்றனர்)

## உரையாடல் கற்பனை

(திராவிடநாடு - 6.6.1943)

# அடுத்த கிழமை

பூதேவர் விஷயமாக விடாமல் எழுதுகிறாயே பரதா! அவர்கள் இஷ்டம் அதுவானால், அதனால் உனக்கென்ன கஷ்டம், யாருக்கு என்ன நஷ்டம், என்று அன்பரொருவர் கேட்கிறார்.

நான் ஆல்கபோன் பரம்பரை என்று கூறினால், அவன் நடவடிக்கைகளை ஜாக்ரதையாகக் கவனிக்கும்படி, போலீஸ் உத்தரவு பிறக்கும். அதுபோல, பூதேவர் என்ற பரம்பரைப் பெருமையைக் கூறினால், சுயமரியாதைக்காரன், "ஓஹோ! அந்தப் பரம்பரையா," என்று கூறிடத் துணிகிறான். ஆல்கபோன் எனும் கள்ளனின் பரம்பரை யென்றால் அமெரிக்கர் அலட்சியப்படுத்துவர், ரஸ்புடீன் சந்ததி என்றால் ரஷ்யர் காரியுமிழ்வர், போர்கியா பரம்பரை என்றால் கிருஸ்தவர் யாவருமே அவனை அணுகவிடார், அதுபோலவே, பூதேவர் என்றுரைத்தால் தேவரின் யோக்யதையைப் புராணங் கூறுவதைக்கேட்டுப் பூஜிக்கும் மக்களைப்போலன்றி, ஆரியக் கற்பனையின் ஆபாசத்தை அலசிப்பார்க்கும் சுய மரியாதைக்காரர்கள், "அந்தக் கூட்டந்தானா ஐயர்மாரே" என்று கூறிடுவர். குலப்பெருமையைக் கூறிக்கொள்வதுபோலப் பார்ப்பனர், தம்மைப் பூதேவர், என்று கூறிக்கொள்கின்றனர். அசல் தேவர்களின் இலட்சணம் என்ன தெரியுமோ? அதைத் தெரிந்தால், பூதேவர் என்பவர் மக்களின் வணக்கத்துக்குரியவரல்ல, என்பது மட்டுமன்று, இன்றுள்ள நிலைக்குத் துளியும் அருகதையுடையரல்லர் என்பதை மக்கள் அறிந்துக்கொள்ளலாம். தேவருலகத்து நடவடிக்கைகளைப் பற்றிய புராணங்களைப் பக்திக்குரியன என்று நம்பும் நமது மக்கள், அவைகளின் ஆபாசத்தை அறிவதில்லை. அறிந்தால், குடியும் கொலையும், விபசாரமும், விபரீதச் சேர்க்கைகளும் தலைவிரித்தாடும் காட்டுமிராண்டி வாழ்க்கையே சித்தரிக்கப்பட்டிருப்பதையும், அவ்வித வாழ்க்கையையே, சிலாக்கியமானது, புண்ய வசத்தால் கிடைப்பது,

கடவுளுக்கருகேயிருக்கும் பேறு, என்று ஆரிய மதம் போதிக்கிற தென்பதையும், 'அந்த உலக' ஆபாசங்களிலே ஆயிரத்திலொரு பாகம், இந்த உலகிலே எங்கும் காணமுடியாதென்பதையும் உணருவர். "தேவன்" என்று பூஜிக்கத்தக்க உருவங்களாக்கப்பட்டுள்ள ஒரு கற்பனை ஆசாமியாவது, சத்புருஷனாக இருந்ததாகத் தெரிய வில்லை. அந்தக் கோலாகலக் காட்சி, காமவெறியர்களின் கூத்து மடத்தையும் தோற்கடிக்கும் விதமானது. தேவர்களுக்கெல்லாம் தலைவனாம் தேவேந்திரன், இவனுடைய யோக்யதை என்ன? இந்திராணி இருக்க, கூப்பிட்டால் கொஞ்சிடத் தயாராக ஆட லழகிகள் பலரிருக்க, ஆஸ்ரமத்திலே இருந்த அகலிகையைக் கற்பழித் தான். தேவர்களின் அரசனின் யோக்யதை இது. இந்தத் தேவர்கள் போன்றவர்கள் இது. இந்தத் தேவர்கள் போன்றவர்கள் நாங்கள், நாங்கள் பூதேவர்கள் என்றுகூறிப் பூரிப்பதானால், நான் பார்ப் பனரைத் தடுக்கவில்லை. ஆனால், தேவலோகத்திலே நடந்ததாகக் கூறப்படும் ரசமான சம்பவங்களைத் தமிழர்கள் அறியும்படி செய்வேன். அந்தத் தேவரின் யோக்யதையை விளக்க, இக்கிழமை, நாடக வேலையிலே நாட்டங்கொண்டதால், நான் சொல்ல வேண்டியதை நிறுத்தி வைக்கிறேன், அடுத்தவாரம் தொடுக்கிறேன்.

6.6.1943

